# திருமுருகாற்றுப்படை விளக்கம்




கி.வா. ஜகந்நாதன்




அல்லயன்ஸ்

(125-வது ஆண்டை நெருங்கும் முதல் தமிழ் புத்தக நிறுவனம்)

முதற் பதிப்பு : 1978
இரண்டாம் பதிப்பு : 2013
மூன்றாம் பதிப்பு : 2018



**விலை : ரூ.340.00**

அல்லயன்ஸ்
கம்பெனி
ப.எண்.244.பு.எண்.64,ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபாற் பெட்டி எண்: 617
மயிலாப்பூர், சென்னை - 600004.
தொலைபேசி : 2464 1314
இணைய தளம் : www.alliancebook.com
மின்னஞ்சல் : books@alliancebook.com

Laser Typeset by : Amaravathi, Chennai - 33
Printed at : The Print Park, Chennai - 117

3/5

# முன்னுரை

திருமுருகாற்றுப்படை சங்க இலக்கியத்தைச் சார்ந்தது. அதே சமயத்தில் அது முருக பக்தர்கள் பாராயணம் செய்யும் நூலாகவும் விளங்குகிறது. சைவத்திருமுறைகளில் பதினோராந் திருமுறையில் உள்ள நூல்களில் ஒன்று அது.

சங்ககால நூலாதலின் இந்த நூலின் நடை எளிதில் யாவருக்கும் புலனாவதில்லை. ஆனாலும் பக்தர்கள் பன்னெடுங் காலமாக இதைப் பாராயணம் செய்து வருகின்றனர். மந்திரங்களைச் சொல்வது போலச் சொல்பவரே பலர். என்றாலும் இதன் பொருளைத் தெரிந்து கொண்டு பாராயணம் செய்தால் இதனிடம் உள்ள ஈடுபாடு மிகுதியாகும். திருவாசகத்தில் சிவபுராணத்தின் இறுதியில், ''சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப், பல்லோரும் ஏத்தப் பணிந்து'' என்று வருகிறது. சிவபுராணமும் பலரால் பாராயணம் செய்யப்படுவது. அதைப் பொருள் உணர்ந்து ஓதினால் அதற்குத் தனிப் பயனுண்டு என்று அந்த அடிகளால் அறியலாம்.

திருமுருகாற்றுப்படையை யாவரும் எளிதில் உணரும் வகையில் விரிவுரை எழுதித் தெளிவுபடுத்தினால் பலரும் படித்துப் பயன்பெறுவர் என்று எண்ணினேன். பல ஆண்டுகளாகத் தொடர்ந்து இந்த நூலின் விரிவுரையை ஆற்றி வந்தேன். அதைக் கேட்டவர்கள் நூல் வடிவில் எழுத

வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள் விருப்பப் படி 'வழிகாட்டி' என்ற பெயரில் விரிவுரையை எழுதினேன். அதற்கு அமரர் திரு.வி.க. அவர்கள் சிறப்புரை வழங்கினார். இலக்கியச் செய்திகளை மிகுதியாகக் காட்டி அந்த நூலை எழுதினேன்.

அதன் பின்பும் பல இடங்களில் திருமுருகாற்றுப் படையின் விளக்கத்தைத் தொடர் சொற்பொழிவுகளாக ஆற்றி வந்தேன். சமயத் தொடர்பான பல கருத்துக்களை இணைத்து விளக்கினேன். அந்தச் சொற்பொழிவுகளையே நூலாக்கினால் பின்னும் பலர் படித்துப் பயன் பெறுவார்கள் என்று அன்பர்கள் கூறினார்கள். பிறகு அந்தச் சொற்பொழிவு களை அடியொற்றிய விளக்கவுரையைத் திருமுருக கிருபானந்த வாரியாரவர்கள் நடத்திய 'திருப்புகழ் அமிர்தம்' என்ற பத்திரிகையில் தொடர்ச்சியாக எழுதி வெளியிட்டு வந்தேன். திருமுருகாற்றுப்படைக்குப் பின்னாலே பத்து வெண்பாக்கள் பிற்காலத்தில் சேர்த்து எழுதி வைத்திருக் கிறார்கள். அதற்கும் விரிவுரை எழுதினேன்.

இந்த விளக்கவுரையில் 'வழிகாட்டி'யில் இல்லாத பல வேறு செய்திகளைக் காணலாம். முக்கியமாகச் சமயசம்பந்த மான கருத்துக்களின் விளக்கங்கள் விரிவாக இந்த நூலில் உள்ளன. சில செய்திகளை விளக்கும் உவமைகள் இந்த நூலில் புதியனவாக இருக்கும். நச்சினார்க்கினியர் உரை, வேறு ஒரு பழைய உரை ஆகியவற்றில் உள்ள பல பகுதி களை இடையிடையே காட்டியிருக்கிறேன்.

ஓரளவு தமிழ் தெரிந்தவர்களும் இதைப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதும், இதைப் படித்த பிறகு திருமுருகாற்றுப்படையின் மூலத்தைப் படித்தால் ஒருவாறு விளங்க வேண்டும் என்பதும் என் எண்ணம்.

3/5

இந்த நூலைப் படித்த அன்பர்கள், ''திருமுருகாற்றுப் படையின் பொருள் ஓரளவு தெளிவாகத் தெரிகிறது'' என்று சொன்னதைக் கேட்டு, ஆண்டவன் என் எண்ணத்தை ஒருவாறு நிறைவேற்றியருளுகிறான் என்றுணர்ந்து அவன் திருவருளை வாழ்த்தினேன். தமிழ் மக்கள் இதைப் படித்துப் பயன் பெறுவார்கள் என்ற நம்பிக்கையும் உண்டாயிற்று.

இந்தக் கட்டுரைகளைத் 'திருப்புகழ் அமிர்தத்'தில் வெளியிட்டுதவிய திருமுருக கிருபானந்தவாரியாரவர்களுக்கு நன்றியறிவு கூரக் கடமைப்பட்டிருக்கிறேன்.

கி.வா.ஜகந்நாதன்

# பொருள் அடக்கம்

# திருமுருகாற்றுப்படை விளக்கம்

## முதற் பாட்டு

தமிழ் மொழியை அடைகளாலே சிறப்பித்துப் பேசுவது ஒரு வழக்கம். வண்டமிழ், தண்டமிழ், செந்தமிழ் என்பன போலத் தமிழின் பெருமையைப் புலப்படுத்தச் சில அடைகளைச் சேர்த்துப் புலவர்கள் நூல்களிலே வழங்கியிருக்கிறார்கள். முத்தமிழ் என்றும் சொல்வது உண்டு. சங்கத் தமிழ் என்பது ஒருவகைத் தொடர்.

''சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே'' என்று ஆண்டாள் திருப்பாவையில் பாடியிருக்கிறாள்.

### சங்கத் தமிழ்

சங்கத்தில் வளர்ந்தது சங்கத்தமிழ். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நெடுங்காலமாகத் தமிழ் நாட்டில் தமிழ்ச்சங்கம் வளர்ந்து வந்தது. பாண்டிய அரசர்கள் அதனை வளர்த்து வந்தார்கள். மூன்று சங்கங்கள் இருந்தன என்றும், அவற்றைத் தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்று குறிப்பது வழக்கமென்றும் அறிகிறோம். கடைச்சங்கம் என்பது இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் பாண்டிநாட்டுத் தலைநகராகிய மதுரையில் இருந்து வந்தது. அதில் பல புலவர்கள் இருந்து தமிழை ஆராய்ந்தார்கள். தாங்களே பல நூல்களை இயற்றியதோடு, வேறு எந்தப் புலவர் நூல் இயற்றினாலும் அதனைப் பார்த்து நல்லதாக இருந்தால் நல்ல

நூல் என்று சொல்லி வந்தார்கள். தமிழ்ச்சங்கத்தில் எந்த நூலையும் அரங்கேற்ற வேண்டுமென்ற நியதி அந்தக் காலத்தில் இருந்தது. சங்கத்தில் ஏறியபோதுதான் தமிழ் நூலுக்கே மதிப்பு உண்டாயிற்று. ஆகவே, தமிழ்நாட்டில் உலவிய தமிழ் நூல்கள் அத்தனையும் சங்கத்தினாலே அங்கீகாரம் பெற்றனவாகவே உலவின. இந்தக் காரணத்தினால் தமிழைச் சங்கத் தமிழ் என்று சொன்னார்கள்.

## மூன்று வரிசைகள்

கடைச்சங்க காலத்தில் எழுந்த பல நூல்கள் இப்போது கிடைக்கவில்லை. புலவர்கள் அவ்வப்போது பாடிய தனிப்பாடல்கள் ஆயிரக்கணக்கில் இருந்தன. இடையிலே அவற்றையெல்லாம் தமிழ்நாடு இழந்து விட்டது: பின்பு வந்தவர்கள், கிடைத்த பாடல்களைத் தொகுத்து வகைப் படுத்தியிருக்கிறார்கள். நீண்ட பாடல்கள் சில கிடைத்தன. சிறிய பாடல்கள் பல கிடைத்தன. இவற்றையெல்லாம் பிரித்து மூன்று வரிசையாக ஆக்கினார்கள். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என்பன அவை. அந்த மூன்றில் பத்துப்பாட்டு என்ற வரிசையில் பத்து நீண்ட பாடல்கள் இருக்கின்றன. எட்டுத்தொகை என்ற வரிசையில் எட்டு நூல்கள் இருக்கின்றன; பல சிறிய பாடல்களைக் கொண்டவை அவை; அதனால் எட்டுத்தொகை என்ற பெயர் வந்தது. பதினெட்டு நூல்களை ஒன்றாகச் சேர்த்த தொகுதியே பதினெண்கீழ்க்கணக்கு என்பது. திருக்குறள் அதில் சேர்ந்ததுதான். பிற்காலத்தில் எழுந்தது இந்த வரிசை என்று (ஆராய்ச்சியாளர்) சொல்வார்கள்.

பாட்டு, தொகை, கீழ்க்கணக்கு என்று இவற்றை முறையாக எடுத்துச் சொல்வார்கள். இந்த நூல்கள் முப்பத்தாறும் கடைச்சங்க காலத்து நூல்கள் என்று இப்போது

வழங்கப்படுகின்றன. பழங்காலத்து நாகரிகம் எப்படி இருந்தது, தமிழர்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள், அவர்களுடைய பழக்கவழக்கங்கள் எவையெவை என்பன போன்ற பல செய்திகளை இந்த முப்பத்தாறு நூல்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

## பத்துப் பாட்டு

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்று முறையாகச் சொல்வது ஒரு வழக்கம். இந்த மூன்று வரிசைகளில் முதல் வரிசையாக அமைந்திருப்பது பத்துப்பாட்டு. அந்தப் பெயரே பத்துப் பாடல்களை உடைய தொகுதி அது என்பதைத் தெரிவிக்கிறது அல்லவா? பத்து நெடிய பாடல்களையுடைய அந்தத் தொகுதியில் ஐந்து பாடல்கள் ஆற்றுப்படைகள். ஒருவனை ஒரு புரவலனிடத்தில் போகும்படியாகச் சொல்வது ஆற்றுப் படை. திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப்படை என்ற ஐந்து ஆற்றுப் படைகள் பத்துப்பாட்டில் இருக்கின்றன. சரிபாதி ஆற்றுப் படைகளால் அமைந்த தொகுதி அந்தப் பத்துப்பாட்டு. அதில் முதல் பாட்டாக நிற்பது திருமுருகாற்றுப்படை.

## முதலில் வைத்தது ஏன்?

தமிழர்களுக்கு எப்போதுமே கடவுள் பக்தி மாறாமல் இருந்து வருகிறது; நூல்களைப் பாடும் காலத்தில் அந்த நூல்களில் கடவுள் வணக்கத்தை அமைத்துப் பாடினார்கள். இப்போது சொன்ன வரிசையில் ஒவ்வொரு நூலுக்கும் கடவுள் வாழ்த்து இருக்கிறது. எட்டுத்தொகை நூல்களில் ஒவ்வொரு நூலுக்கும் ஒவ்வொரு கடவுள் வாழ்த்தை அமைத்திருக்கிறார்கள். பத்துப்பாட்டு என்ற தொகுதியில்

தனியே கடவுள் வாழ்த்து என்ற ஒன்று இல்லாவிட்டாலும் முதலாவது பாட்டாக இருப்பது திருமுருகாற்றுப்படையே. அந்தத் தொகுதிக்குரிய கடவுள் வாழ்த்தாகவே அது நிற்கிறது. அதனைப் பாடியவர் நக்கீரர் என்பவர், அவர் பெரிய புலவர்.

திருமுருகாற்றுப்படையை முதலில் வைத்துப் பத்துப் பாட்டைத் தொகுத்ததற்குக் காரணம் என்ன என்பதை ஆராயவேண்டும், 'நக்கீரர் பெரும்புலவர்; ஆகையால் அவருடைய பாட்டை முதலாக வைத்தார்கள்' என்று ஒரு காரணம் கூறலாம். ஆனால், அந்த நக்கீரர் பாடிய மற்றொரு பாட்டாகிய நெடுநல்வாடை என்ற நூல் ஏழாவதாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது. நக்கீரருக்காக மரியாதை காட்ட வேண்டுமானால், அவர் பாடிய இரண்டு பாடல்களையும் முதலில் வைத்துத் தொகுதித்திருக்கலாம்; அப்படிச் செய்யாமையினால் நக்கீரருடைய சிறப்புக் காரணமாகத் திருமுருகாற்றுப்படை முதலில் வைக்கப்பட்டிருக்கிறது என்று சொல்ல இயலாது. இனி, நூல் தோற்றிய காலத்தைக் கொண்டு வகுத்தார்கள் என்று ஒரு காரணம் சொல்லலாம். நக்கீரருக்கு முன்பு இருந்த புலவர்களுடைய பாடல்களும் பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படைக்குப் பின்னே வருகின்றன. ஆகையால் கால அடைவை எண்ணி இவற்றை முறைப்படுத்தினார்கள் என்று சொல்வதும் பொருந்தாது.

## தமிழரின் முருக பக்தி

அப்படியானால் எதனால் திருமுருகாற்றுப்படையை முதலாவதாக அமைத்தார்கள்? முருகனைப்பற்றிய நூலாதலின் அதை முதலில் வைக்க வேண்டும் என்று கருதியே வைத்திருக்கிறார்கள். தமிழர்களுக்கு முருக பக்தி அதிகம். முருகனைச் செந்தமிழ்க் கடவுள் என்று சொல்வார் கள். ஒரு மாவட்ட அளவில் ஆட்சி செலுத்துகின்ற கலெக்டரைப் போல, தமிழ்நாட்டில் மட்டும் அருளாட்சி

நடத்துகின்ற கடவுள் என்று அதற்குப் பொருள் கொள்ளக் கூடாது. தமிழ்நாட்டவர்களாலே நன்றாகத் தெரிந்து கொள்ளப்பட்ட கடவுள் அவன். உலகம் எல்லாம் தன்னுடைய அருளாணையின் வழிப்படுத்துகின்றவன் முருகன். அவனுக்குரிய சிங்காதனமாக இருப்பது தமிழ் நாடு. சிங்காதனத்தில் இருக்கும் அரசனைத் தலைநகரில் உள்ளவர்கள் அடிக்கடி தரிசித்தும், அடிக்கடி புகழ்ந்து பாடியும் ஆனந்தம் அடைவார்கள். நெடுந்தூரத்தில் இருப்பவர்களுக்கு அரசனைப் பற்றிய நினைப்பு மறந்து போனாலும் போகும். அதிகாரிகளைக் கண்டாலும் அரசனது பிரதிநிதி என்ற நினைவு இல்லாமல் போகலாம். ஆகவே தமிழ்நாட்டில் இருக்கும் முருகனைத் தமிழர்கள் சிறப்பாக வணங்குகிறார்கள். என்றாலும் முருகன் உலகம் முழுவதற்குமே தனிப்பெருங் கடவுளாக உள்ளவன் என்பதில் ஐயம் இல்லை. ஆனாலும் அவனை முருகுத் திருவுருவத்தில் வழிபட்டுக் கோயில் அமைத்து, நூல்கள் பாடி அதனால் இன்பம் பெற்றவர்கள் தமிழர்கள். இதனைக் கருதியே அவனைத் தமிழ்க் கடவுள் என்று சொல்கிறார்கள்.

தமிழர்கள் முருகனை எப்படியெல்லாம் போற்றினார் கள் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் பழைய நூல்களைப் பார்க்க வேண்டும். அப்போது நமக்கு மிக்க வியப்பு உண்டாகும். முருகனை எல்லோருக்கும் மேலாகத் தமிழர்கள் வைத்து வழிபட்டு வந்தார்கள். அவர்களுக்கு மற்றத் தெய்வங்களைப் பற்றிய செய்திகள் எல்லாம் நன்கு தெரியும். சிவபெருமானையும், திருமாலையும், கலை மகளையும், திருமகளையும், மலைமகளையும் அவர்கள் வழிபட்டார்கள். வருணன், இந்திரன், சூரியன், சந்திரன் ஆகியவர்களையும் பணிந்து போற்றினார்கள். இப்படித் தெய்வத்தின் பல வடிவங்களைப் போற்றிக் கொண்டாடினா

லும், முருகனுக்குத் தனிச்சிறப்பு அளித்தார்கள். இது எவ்வாறு தெரிகிறது?

## ஐந்து திணைகள்

தமிழர் நிலத்தை ஐந்து பகுப்பாகப் பிரித்தார்கள். இலக்கியங்கள் இயற்றும்போது அவற்றில் வரும் வருணனைகள், செய்திகள் இவற்றை வரையறையாக அமைக்க வேண்டும் என்ற நினைவோடு இந்தத் திணைப் பகுப்பைச் செய்திருக்கிறார்கள். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பன அவை. அவற்றை நாம் எளிதில் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டுமானால் ஓர் ஆற்றை நினைவுபடுத்திக் கொண்டால் போதும். ஆறு ஒன்று மலையிலிருந்து தோன்றி அருவியாக விழுந்து, சமவெளிக்கு வருகிறது. வரும் வழியில் வறண்ட பூமி வழியாக வந்து, பின்பு மரங்கள் அடர்ந்த காட்டுக்குள் நுழைந்து, பிறகு வயல்கள் நிறைந்த ஊருக்குள் புகுந்து, முடிவில் கடலோடு கலக்கிறது. இந்த ஆறு வரும் நிலப் பகுதிகளை நினைந்து பார்த்தால் ஐந்து திணைகளும் தெரியும்.

ஆறு உற்பத்தியாகும் மலையையும். மலையைச்சார்ந்த இடத்தையும் குறிஞ்சித்திணை என்றார்கள். ஒன்றும் வளராமல் வறண்டு கிடக்கிற பகுதியைப் பாலை என்றார்கள். பாலை என்றால் நமக்கு ராஜஸ்தான் பாலைவனமும், சகாராப் பாலைவனமும் நினைவுக்கு வரும். அவை பல காலமாகப் பாலைவனமாகவே கிடக்கின்றவை. தமிழ் நாட்டில் இயற்கையாகப் பாலை நிலம் இல்லை. எப்போதாவது மழையற்று, நீர் இல்லாமல் வறண்டு போனால் அப்போது அந்தப் பிரதேசம் மட்டும் புல் பூண்டு எதுவும் இல்லாமல் தீய்ந்து கிடக்கும். அதையே பாலை என்றார்கள். ஆகையால் குறிப்பிட்ட ஒரு காலத்தில் செயற்கையாகப் பாலை தோன்றுமேயொழிய, எப்போதுமே

வறண்டு கிடக்கும் நிலமாகிய பாலை இந்த நாட்டில் இருந்தது இல்லை. ஆகையால்தான் நிலத்தை ஐந்து திணை என்று வகுத்திருந்தாலும் 'நானிலம்' என்றே சொல்வது வழக்கம். நானிலம் என்பது பொதுவாகப் பூமிக்குப் பெயர். ஐந்நிலம் என்று சொல்லாமல் 'நானிலம்' என்று சொல்வதற்குக் காரணம், இயல்பாக நான்கு நிலங்களே இருப்பதுதான். மழை பெய்யாமல் போனால் சில இடங்களில் பாலைநிலம் தோன்றும். சில காலம் பாலையாக இருக்கும். அப்படி யிருக்கிற நிலம் எவ்வாறு தோற்றம் அளிக்கும் என்பதைப் புலவர்கள் கண்டு அதனை வருணித்திருக்கிறார்கள்.

ஆறு மலையில் தோன்றி, மலையை அடுத்திருக்கிற வறண்ட பாலை நிலத்தில் வந்து, பின்பு காடுகளுக்கிடையே புகுகிறது. காடும் காட்டைச் சார்ந்த இடமும் முல்லை என்று பெயர் பெறும். அதற்குப் பிறகு, மக்கள் நெருங்கி வாழ்ந்து வேளாண்மை செய்கிற வயல்களில் பாய்ந்து வளம் பெருக்கும் இடம் மருத நிலம் என்று பெயர் பெறும். கடைசியில் கடலும் கடலைச் சார்ந்த இடமுமாக இருக்கிற பகுதிக்கு நெய்தல் திணை என்று பெயர். இவ்வாறு குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்று ஐந்து திணைகள் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு திணையிலும் அந்த அந்த நிலத்திற்கு ஏற்றபடி விலங்குகள், மக்கள், தொழில், பூ முதலியன இருக்கின்றன. அந்த அந்தத் திணையிலே இருக்கும் சிறப்பான சில மரங்களையும், பூக்களையும் வேறொரு திணையில் பெரும்பாலும் காண முடியாது. மலை நிலமாகிய குறிஞ்சித் திணைக்கே உரிய பூக்களும் மரங்களும் இருக்கின்றன. அப்படியே மக்களுடைய பழக்க வழக்கங்களும் வேறுபட்டிருக்கின்றன. இவற்றைத் தமிழ்ப் புலவர்கள் நன்றாக வரையறை செய்து சொல்லியிருக் கிறார்கள்.

## முதல் திணை

திணைகளில் உள்ள பொருள்களைக் கருப்பொருள் என்று சொல்வார்கள். கருப்பொருள் வரிசையில் முதலில் நிற்பது தெய்வம். ஐந்து திணைகளுக்கும் ஐந்து தெய்வங் களை வரையறை செய்திருக்கிறார்கள். உயர்ந்ததாக முதலில் தோற்றும் திணை குறிஞ்சி. அதற்குத் தெய்வம் முருகன், பாலைக்குத் தெய்வம் துர்க்கை, முல்லைக்குத் திருமால், மருதத்திற்கு இந்திரன், நெய்தலுக்கு வருணன் என்று வகுத்தார்கள். குறிஞ்சித் திணை முதல் திணை என்பது உயர்ந்து நிற்பது என்பதனால் மாத்திரம் அன்று. உலகம் தோன்றும்போது முதலில் தோன்றியது மலை என்று சொல்வார்கள். உலகம் முழுவதும் கடல் சூழ்ந்து மூழ்கி இருக்கும்போது நீர் வடிய ஆரம்பித்தால், முதலில் மலை யின் உச்சிதான் தன் தலையைக் காட்டிக்கொண்டு எழும்,

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி."

என்று வீரர்கள் தங்கள் குடியின் பழமையைப் பற்றிச் சொல்லிக்கொள்வார்களாம். மற்ற இடங்கள் தோற்றுவதற்கு முன்னாலே மலை தோற்றியதாம். அப்படி முதலில் தோற்றிய திணையாகிய குறிஞ்சிக்குத் தலைவனாக முருகனை வைத்தார்கள். மனிதனுக்கு முதலில் கடவுள் என்ற நினைவு வரும்போது அவன் முருகனாகத்தான் இருக்க வேண்டுமென்ற நம்பிக்கை தமிழர்களுக்கு இருந்ததை இது காட்டுகிறது.

## குறிஞ்சித் தலைவன்

முருகனை எப்போதும் முதலில் வைத்துப் போற்றி னார்கள். முதல் திணையாகிய குறிஞ்சி மிக உயர்ந்தது. பெரியவர்களை மதிப்பான உயர்ந்த இடத்தில் வைத்துப்

போற்றுவது மனிதர்கள் வழக்கம். வடமொழியில், ''பூசைக்குரியவன் உச்ச ஸ்தானத்தில் இருப்பான்'' என்று ஒரு வாக்கியம் உண்டு. தமிழர்கள் முருகப் பெருமானை மிக உயர்ந்த இடத்தில் வைக்கவேண்டுமென்று விரும்பினார்கள். மனிதன் கட்டும் கட்டிடங்கள் உயரம் என்று சொல்லலாம். ஆனால் பிற்காலத்தில் வருகிறவர்கள் பின்னும் உயரமாக வேறு கட்டிடத்தை அமைத்து விடலாம். இயற்கையாகவே உலகத்தில் உயரமான இடமாக இருப்பது மலை. உலகத்திற்கே உச்சிக்கூரை என்று சொல்கிற இமாசலம் நமது இந்திய நாட்டில் இருக்கிறது. அதன் உயரத்தை எட்டிப் பிடிக்க மனிதன் எத்தனையோ முயன்று பார்க்கிறான். ஆகவே, இயற்கையில் மிக உயர்ந்து நிற்கிற மலைகளே முருகப் பெருமானுக்கு ஏற்ற இடமென்று கருதி, முதல் திணையிலே, மிக மேடாக இருக்கிற மலையிலே, அவனை வைத்து வணங்கினார்கள்; மலைகிழவன் என்றும், குறிஞ்சித் தலைவன் என்றும் போற்றினார்கள். அவனை முதல் திணையில் முதல் கடவுள் என்று வைத்து வழிபட்டார்கள்.

## கடியுண் கடவுள்

வேறு ஒரு வகையிலும் முருகன் முதலில் நிற்கிறான். குறிஞ்சி நிலத்தில் வாழ்கின்ற குறவர்கள் மற்றத் தெய்வங்களைக் கொண்டாடினாலும் கொண்டாடா விட்டாலும் முருகனை வழிபடுவதை நிறுத்த மாட்டார்கள். அவர்களுடைய மலையில் எது விளைந்தாலும் முதல் விளைச்சலை முருகனுக்குப் படைத்து விடுவார்கள். சுரைக் கொடி படர்ந்திருக்கிறது என்றால், முதலில் காய்த்த சுரைக்காயை முருகனுக்கு என்று கொடுத்து விடுவார்கள். புனத்தில் முற்றிய முதல் தினைக் கதிரை அவன் சந்நிதானத்தில் கட்டி விடுவார்கள். இப்படிப் புதியதாகத் தோன்றியவற்றையெல்லாம் இறைவனுக்கே நிவேதனமாகச் செய்த தமிழர்கள்

அவனுக்கு ஒரு பெயரையும் கொடுத்திருக்கிறாகள். புது விருந்துண்ணும் மாப்பிள்ளை என்று சொல்வதில்லையா? அப்படி அவர்கள் 'புதிய பொருள்களை உண்ணுகின்ற கடவுள்'' என்று முருகனைச் சொன்னார்கள். ''கடியுண் கடவுள்'' என்பது குறுந்தொகையில் வருகிறது. கடி - புதுமை. புதியதாகத் தோன்றின்வற்றையெல்லாம் முருகன் ஏற்றுக் கொள்கிறானாம். முதலில் விளைந்த பொருளைக் கொள்கின்றவன் முருகன்.

சங்க நூல்களில் முதல் தொகுதியாக இருப்பது பத்துப் பாட்டு. அந்தப் பத்துப்பாட்டில் முதல் பாட்டாக இருப்பது திருமுருகாற்றுப்படை. திருமுருகாற்றுப்படை முருகன் பெருமையைச் சொல்வது. ஆகவே முருகன் சங்க நூல் களிலும் முதலில் நிற்கிறான். நிலத்தில் முதல் திணையாக நிற்பது குறிஞ்சி. அந்தக் குறிஞ்சிக்குத் தலைவனாக முருகன் இருப்பதனால் அந்த நூலைப் பத்துப்பாட்டின் முதலில், சங்க நூல்களுக்கு எல்லாம் முதலிலே வைத்துப் போற்றி னார்கள். சிவப்பிரகாச சுவாமிகள்,

''பாவுள், முந்துற வந்து நிற்கும்
முருகாற்றுப் படைமொ ழிந்தான்.''

என்று சொல்கிறார். எல்லாப் பாடல்களுக்கும் முதல் பாட்டாகத் திருமுருகாற்றுப்படை நிற்கிறது என்ற கருத்தை அவர் தெரிவிக்கிறார்.

கடைச்சங்க நூல்கள் முப்பத்தாறு; அவற்றில் முதலில் நிற்பது திருமுருகாற்றுப்படை. தத்துவங்கள் முப்பத்தாறில் முதலில் நிற்கும் சிவ தத்துவம் போல அது விளங்குகிறது.

# திருமுருகாற்றுப்படை

## திருமுறையில்

பத்துப்பாட்டுள் முதல் பாட்டாக வைக்கப் பெற்ற திருமுருகாற்றுப்படையைச் சிவபக்தர்கள் வேறு ஒரு வகையில் போற்றிப் பாதுகாக்கிறார்கள், இலக்கியப் புலவர்கள் சங்க நூல்களில் ஒன்றான அதைத் தொகை நூல்களில் வைத்துப் போற்றி வருவதை முன்பு பார்த்தோம். சைவர்கள் பாராயணத்திற்குரிய நூல்களாகவும், வேதத்தைப் போன்றனவாகவும் போற்றிப் பாதுகாத்து வருவன சைவத் திருமுறைகள். அவை பன்னிரண்டு. அந்தப் பன்னிரண்டில் ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாவும், பதினோராம் திருமுறையும் பல பெருமக்கள் பாடிய பாடல்களின் தொகுதிகளாகும். பதினோராம் திருமுறையில் இறைவன் பாடிய திருமுகப் பாசுரம் முதல் நம்பியாண்டார் நம்பி பாடிய திருநாவுக்கரசர் திருவேகாதச மாலை வரையில் பலருடைய நூல்கள் அடங்கியிருக்கின்றன. காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்களும், பட்டினத்தார் பாடல்களும், வேறு பல பெரியோர்களுடைய பாடல் களும் இத்தொகுதியில் இடம் பெறுகின்றன. இந்தத் திருமுறையில் கோக்கப் பெற்ற நூல்களில் திருமுரு காற்றுப்படையும் ஒன்று. நக்கீரதேவ நாயனார் இயற்றிய திருமுருகாற்றுப்படை என்ற அடையாளத்தோடு அதனைப் பதினோராம் திருமுறையில் காணலாம்.

இடைக் காலத்தில் சங்க நூல்கள் இருக்கிற இடம் தெரியாமல் மங்கிக் கிடந்தன. தமிழ்நாட்டில் கம்பராமாயணம், நைடதம், மகாபாரதம் முதலியவற்றையே படித்தவர்கள் மிகுதியாக இருந்தார்கள். சங்க நூல்கள் இன்னவை என்பது சில காலத்திற்குப் புலவர்களுக்கே தெரியாமல் இருந்தது. மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் தோன்றிப் பழந்தமிழ் நூல்களைக் கண்டெடுத்து ஆராய்ந்து விளக்கம் எழுதி நல்ல முறையில் பதிப்பித்து வெளியிட்டார்கள். அதன் பிறகே சங்க நூல்களின் ஒளி எங்கும் பரவலாயிற்று, இன்று பள்ளிக்கூடத்து மாணவர்கள் முதல் புலவர்கள் ஈறாக எல்லாரும் சங்க நூல்களைப் பற்றிப் பேசிப் பெருமை அடைகின்றனர். ஐயரவர்கள் காலத்திற்கு முன் பல ஆண்டுகள் சங்க நூல்கள் மங்கியிருந்தாலும் திருமுருகாற்றுப் படை மாத்திரம் ஏனையவற்றோடு மறைந்து போகாமல் தமிழ் நாட்டினரால் பாராயணம் செய்வதற்குரியதாக இருந்து வந்தது. இதற்குக் காரணம், அதனைப் பதினோராம் திருமுறையில் ஒரு நூலாக வைத்துக் கோத்ததுதான்.

பத்துப்பாட்டிலும், பதினோராந் திருமுறையிலும் பெருமை பெற்று இலங்கும் திருமுருகாற்றுப்படையை இலக்கிய நூல்களில் சிறந்த இலக்கியமாகவும், முருகன் பெருமையை உரைக்கும் நூல்களில் பழம்பெருமை வாய்ந்த நூலாகவும் கருதிப் புலவர்களும், பக்தர்களும் இன்றும் போற்றி வருகிறார்கள்.

## இலக்கணம்

சங்கத் தொகை நூலாகிய பத்துப்பாட்டில் ஐந்து பாடல்கள் ஆற்றுப்படை என்பதை முன்பே சொன்னேன். ஆற்றுப்படை என்பது பழங்காலத்தில் புலவர்கள் அரசர்களையும் வள்ளல்களையும் பாராட்டுவதற்காக அமைத்துக்

கொண்ட நூல் வடிவம். தமிழ் நாட்டில் பல வகையான ஆற்றுப்படைகள் இருந்தன என்பதை அதன் இலக்கணத்தால் தெரிந்துகொள்ளலாம். தொல்காப்பியம் என்னும் பழைய இலக்கணத்தில் ஆற்றுப் படையின் இலக்கணம் தனியே அமைந்திருக்கிறது. அதைப்பற்றி வேறு இடங்களிலும் சில செய்திகளைத் தொல்காப்பியர் கூறுகிறார். இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதல் மரபாதலின், ஆற்றுப் படைகள் பலவற்றைக் கண்டு அவற்றின் இலக்கணத்தைத் தொல்காப்பியர் வகுத்தார் என்று கொள்ளவேண்டும். பிற்காலத்தில் தோன்றிய வேறு பல நூல் வகைகளுக்கு இலக்கணம் தொல்காப்பியத்தில் காணவில்லை. ஆற்றுப் படையின் இலக்கணம் நன்கு அமைந்ததைக் கொண்டு, பழங்காலத்தில் ஆற்றுப்படை பெருக வழங்கியிருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ளலாம்.

கவிஞர்கள் ஏதேனும் ஒன்றைச் சொல்ல வேண்டுமானால் ஏனையவர்கள் சொல்கிற மாதிரி சொல்ல மாட்டார்கள். அப்படிச் சொன்னால் அது சுவையற்றுச் சப்பென்று இருக்கும். ''காசிக்குப் போனான், காவடி கொண்டு வந்தான்'' என்று சும்மா சொன்னால் அதில் நயம் இல்லை. அதனைப் பல படியாக வருணித்துப் பல நிகழ்ச்சிகளை எடுத்துச் சொன்னால் சொல்கின்ற முறையில் இன்பம் உண்டாகும். ஆற்றுப்படை என்பது சுவை பயக்கும் படி ஒருவருடைய புகழ் நலத்தைச் சொல்லும் வகை. அதன் இலக்கணம் பின்வருமாறு:

''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்.''

- தொல்காப்பியம்

பழங்காலத்தில் தமிழ்நாட்டில் புலவர்களும், கலைஞர்களும் எப்போதும் பல ஊர்களுக்குச் சென்றுகொண்டே இருந்தார்கள். யார் யார் தம்முடைய கலைத்திறனைப் பாராட்டுவார்களோ அவர்களைத் தேடிச் சென்றார்கள். தமக்கென்று ஓர் ஊர் இருந்தாலும் அவர்கள் எப்போதும் தமிழ் நாடு முழுவதும் உலவிக் கொண்டிருந்தார்கள். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற உள்ளப் பாங்கு உடையவர்கள் ஆதலின் எங்கே சென்றாலும் அவர்கள் பாராட்டப் பெற்றார்கள்; தங்களிடத்திலுள்ள கலையினால் சிறப்பை அடைந்தார்கள். செல்வர் புலவர்களைப் பாதுகாத்தலும், கலைஞர்களுக்குப் பரிசு அளித்தலும் சிறப்புத் தரும் செயல்கள் என்று நம்பி இடைவிடாமல் அவ்வாறு செய்து வந்தனர். ஆகவே அந்தக் கலைஞர்கள் யாவரும் ஓரிடத்தில் தங்காமல் அங்கங்கே உள்ள செல்வர்களை நாடிச் சென்று தங்கள் கலைத்திறத்தைக் காட்டிப் பரிசு பெற்று வாழ்ந்தார்கள். இயல் தமிழில் வல்லவர்கள் புலவர்கள். இசைத்தமிழில் வல்லவர்கள் பொருநர், பாணர், விறலியர்கள். நாடகத் தமிழில் வல்லவர் கூத்தர். இவர்கள் யாவரும் எப்போதும் தமிழ் நாட்டில் உலவிக் கொண்டிருப்பார்கள். கலை நயம் தேரும் புரவலர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று நாடியபடியே இருப்பார்கள்.

பெரும்பாலும் இந்தக் கலைஞர்களும், புலவர்களும் தாம் பெற்ற பரிசில்களை உடனுக்குடன் செலவழித்து விடுவார்கள். நாளைக்கு வேண்டுமே என்ற கவலை இல்லாமல் கிடைத்த பொருளை அவ்வப்போது தாம் பயன்படுத்திக் கொள்வதோடு பிறருக்கும் தந்துவிடுவார்கள். கற்றோர் உலகத்தில் உலவுகின்ற அவர்களுக்கு உண்மை உலகத்தைப் பற்றிய கவலை இருப்பது இல்லை. ஆதலால் பாணர்களையும், புலவர்களையும், பிற கலைஞர்களையும்

வறியவர்களாகவே பார்க்கிறோம். இலக்கியங்களில் அவர்களைப் பற்றிய வருணனை வரும்போதெல்லாம் அவர்களுடைய வறிய நிலையைப் பற்றிய செய்திகளே வருகின்றன.

ஏழைகளாகிய அவர்கள் சென்றுகொண்டிருக்கும் போது ஒரு வள்ளலிடத்தில் பரிசு பெற்ற வேறு ஒருவன் எதிர்ப்படுவான். அவனைக் கண்டு எதிர் வரும் வறிய பாணனோ, புலவனோ அவனைப் பெரிய செல்வன் என்று கருதி வணங்கி நிற்பான். வளமான தோற்றத்தோடு வரும் புலவன் தன்னுடைய தோழர்கள் வறிய நிலையில் இருப்பதைக் கண்டு, 'நானும் உங்களைப் போலத்தான் இருந்தேன், இன்ன செல்வரைச் சென்று அடைந்தேன். என் அறிவுத் திறமையைக் காட்டினேன். அவரால் பரிசு பெற்றேன். நீங்களும் அவரிடம் போனால் சிறந்த பரிசு களைப் பெறலாம்' என்று சொல்வான். இப்படிச் சொல்லும் வகையில் அமைந்திருப்பதுதான் ஆற்றுப்படை என்ற நூலாகும்.

ஆறு என்பது வழி; படை என்பது படுத்துதல், செலுத்துதல், வழிகாட்டுதல் என்று பொருள்படும். இப்படி ஆற்றுப்படுத்துகிறவர்கள் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்ற நால்வர் என்று தொல்காப்பியம் சொல் கிறது. இலக்கியங்களைக் கொண்டு புலவரையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். தாம் பெற்ற பெருவளத்தைப் பெறாத வர்களுக்கு அறிவுறுத்தி, அவர்களையும் சென்று பயன் அடையும்படி சொன்னது ஆற்றுப்படை என்பது தொல் காப்பியச் சூத்திரத்தின் பொருள்.

ஆகவே, ஆற்றுப்படைக்கு மூன்று வகையினர் இன்றி யமையாதவர்கள். வறியவன் ஒருவன்; பரிசு பெற்றுவரும் ஒருவன்; பரிசு தருபவன் ஒருவன், ஆற்றுப்படை பரிசு

தருபவனுடைய பெருமையைச் சொல்வது; பாடுகிற புலவன் கூத்தனோ, புலவனோ, பாணனோ பரிசுபெற வழிகாட்டும் வகையில் பாடுவான்.

## ஆற்றுப்படை

திருமுருகாற்றுப்படை என்ற நூல் புலவர் ஆற்றுப் படை வகையைச் சார்ந்தது. பாணனுக்கு வழிகாட்டுவது பாணாற்றுப்படை என்றும், கூத்தருக்கு வழிகாட்டினால் கூத்தராற்றுப்படை என்றும், விறலியர், பொருநர் ஆகியவர் களுக்கு வழிகாட்டினால் விறலியாற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை என்றும் பெயர் பெறும். புலவரை ஆற்றுப் படுத்தும் நூலுக்குப் புலவர் ஆற்றுப்படை என்று பெயர்.

பத்துப்பாட்டில் தனி நூல்களாக உள்ள ஆற்றுப் படைகளே யன்றி புறநானூற்றில் சில பாடல்கள் ஆற்றுப் படைகளாக அமைந்துள்ளன. பிற்காலத்தில் கச்சியப்ப முனிவர் திருத்தணிகை ஆற்றுப்படை என்ற நூலைச் செய்திருக்கிறார். ஏட்டுச்சுவடியில் பாணாற்றுப் படை என்ற நூல் ஒன்று உண்டென்று மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயர் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். பிற்காலத்தில் ஆற்றுப்படை பாடும் வழக்கம் குறைந்து விட்டது. ஆதலின் மிகச் சில ஆற்றுப்படைகளே உள்ளன.

பெரும்பாலும் யார் பயன்பெற முயல்கிறார்களோ அவர்கள் பெயரால் ஆற்றுப்படைக்குப் பெயரிடுவது வழக்கம். பாணனுக்கு வழிகாட்டினால் பாணாற்றுப் படையாகும். புலவருக்குக் கூறுவது புலவராற்றுப்படை. திருமுருகாற்றுப் படைக்கு அந்த முறையில் பெயர் சொல்வதானால் புலவ ராற்றுப்படை என்றே சொல்ல வேண்டும். சில உரையாசிரி யர்கள் இதை அவ்வாறே குறித்திருக்கிறார்கள்.

## நக்கீரர்

''முருகனைக் காணவேண்டும். கண்டு பயன்பெற வேண்டும்'' என்று ஆர்வம் உடைய புலவன் ஒருவன் இருக்கின்றான். அந்தப் பெருமானுடைய அருளைப் பெற்ற மற்றொரு புலவர் அவனைக் கண்டு, இன்ன வழியில் சென்று, இன்ன இடத்தில் கண்டால் முருகனுடைய தரிசனம் கிட்டும், அவன் திருவருளையும் பெறலாம் என்று சொல்லும் வகையில் அமைந்தது திருமுருகாற்றுப்படை. இதனைப் பாடியவர் நக்கீரர் என்னும் பெரும் புலவர். அவரை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று வழங்குவது பழைய மரபு. நக்கீரருடைய தந்தையும் பெரும் புலவர். அவர் மதுரை மாநகரத்தில் பெரிய ஆசிரியராக இருந்தவர். கணக்காயனார் என்பது ஆசிரியருக்குப் பெயர். அவருடைய இயற்பெயர் இன்னது என்று தெரியவில்லை. அந்தக் காலத்தில் ஆசிரியர்களுக்குப் பெரு மதிப்பு வைத்து அவர்களுடைய இயற் பெயரைச் சொல்லாமல் ஆசிரியர் என்றே சொன்னார்கள். ''ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லக் கூடாது'' என்பது இந்த மரியாதை பற்றி எழுந்த பழமொழி. ஆகையால் மதுரைக் கணக்காயனாருடைய பேரைச் சொல்லாமல் ஊரைச் சொன்னார்கள். மதுரையில் இருந்த ஆசிரியர் என்ற அளவில்தான் அவரைப் பற்றி நாம் இப்போது தெரிந்து கொள்கிறோம்.

அவருடைய திருப்புதல்வர் நக்கீரர். புலவருடைய பிள்ளை புலவராகவே இருப்பது அரிது. ஓரளவு அறிவு பெறலாமேயன்றி நூல்களை இயற்றும் புலமை எல்லாப் புலவர்களுடைய பிள்ளைகளுக்கும் கிடைப்பது இல்லை. ஆனால் மதுரைக் கணக்காயனாருக்குப் பிறந்த புதல்வராகிய நக்கீரர் சிறந்த புலவராக விளங்கினார். மதுரையில் இருந்த கடைச்சங்கத்தில் நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்து தமிழை ஆராய்ந்தனர் என்றும், அவரில் நக்கீரர் சிறந்தவராக இருந்தார் என்றும் தெரிய வருகிறது.

நக்கீரர் என்ற சொல் இன்ன பொருளையுடையது என்று திட்டமாகத் தெரியவில்லை. கீர் என்பதற்குச் சொல் என்று பொருள். சிறப்பான சொல்லை உடையவர் என்று ஒருவாறு பொருள் கொள்ளலாம். 'ந' என்ற எழுத்து, சிறப்பைக் குறிப்பதற்கு வருவது. நப்பூதனார், நப்பாலத்த னார், நச்செள்ளையார், நத்தத்தனார் என்று உள்ள சங்க காலத்துப் பெயர்களில் சிறப்பைக் குறிக்கும் 'ந' என்னும் எழுத்து இருப்பதைக் காண்கிறோம். ஆகவே, பல வகையில் சிறப்பை அடைந்த கீரர் என்று அந்தச் சொல்லுக்குப் பொருளைக் கொள்ளலாம். நக்கீரரைக் கீரர் என்றே வழங்குவதும் உண்டு.

நக்கீரர் பத்துப்பாட்டிலுள்ள நெடுநல்வாடையையும் இயற்றியவர். அவர் இயற்றிய பல பாடல்கள் பிற சங்க நூல்களில் இருக்கின்றன. அவர் சங்கு அறுக்கும் அந்தணர் குலத்தில் பிறந்தவர் என்று சிலர் கூறுவர். வேதம் ஓத வராத அந்தணர்களை மாடு மேய்க்கவும், சங்கு அறுக்கவும் ஈடுபடுத்துவது பழைய வழக்கம். ''வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை'' என்று அகநானூற்றில் வருகிறது. வேள்வி செய்யாத அந்தணர்கள் அரத்தினாலே வளை அறுப்பார்கள் என்பது அதனால் தெரிய வருகிறது. வங்காளத்திலும் இப்படிச் சங்கு அறுக்கும் தொழிலில் அந்தணர்கள் ஈடுபட்டிருந்தார்களாம். கல்கத்தாவில் சங்கு அறுக்கும் சந்து என்று ஒரு சந்தே இருக்கிறதாம்.

நக்கீரர் பாடிய தனி நூல்களாகத் திருமுருகாற்றுப் படையும், நெடுநல்வாடையும் இப்போது கிடைக்கின்றன. 11-ஆம் திருமுறையில் அவருடைய பெயரால் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, திரு ஈங்கோய் மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப் பிரசாதம், கார் எட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப் படை, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் பத்து நூல்கள்

உள்ளன. திருமுருகாற்றுப்படையையன்றி மற்ற நூல்கள் சங்க காலத்தில் வாழ்ந்த நக்கீரருடைய வாக்கு அல்ல என்று ஆராய்ச்சிக்காரர்கள் சொல்வார்கள்.

நக்கீரர் புராணங்களில் வருகிற புண்ணிய புருஷராக விளங்குகிறார். திருமுருகாற்றுப்படை தோன்றியதற்குக் காரணமாக ஒரு கதை உண்டு. அந்தக் கதையில் வரும் நிகழ்ச்சிகள் மதுரையிலும், காளத்தியிலும், திருப்பரங் குன்றத்திலும் நிகழ்ந்தன. அதனால் மதுரைத் திருவிளை யாடல் புராணங்களிலும், திருப்பரங்குன்றப் புராணத்திலும், காளத்திப் புராணத்திலும் நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிய வரலாறு இடம் பெறுகின்றது. இந்த வரலாற்றில் ஒவ்வொரு புராணத்திலும் சில வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் நக்கீரர் சிவபெருமானுடைய சாபத்தைப் பெற்று அதனை நீக்கிக்கொள்ளும் பொருட்டுக் கைலாச யாத்திரை சென்றார் என்றும், இடையில் ஒரு மலைக்குகையில் அடைபட்டு முருகப் பெருமான் மேல் திருமுருகாற்றுப் படை பாடி விடுதலை பெற்றார் என்றும், பின்பு காளத்தி மலை சென்று கைலாச தரிசனம் செய்து சாபத்தினின்றும் விடுதலை பெற்று மீண்டும் மதுரையை அடைந்தார் என்றும் உள்ள செய்தி எல்லாவற்றுக்கும் பொதுவானது.

கதைக்கு ஆதாரமான செய்தி சிறியதாக இருந்தாலும், புலவர்கள் தங்கள் தங்கள் கற்பனை வளத்தினால் விரிவாகப் பெருக்கிச் சொல்லியிருக்கிறார்கள். திருமுருகாற்றுப் படை மிகச் சிறந்த நூல் என்பதும், பெரிய பயனைத் தருவது என்பதும், ஆற்றுப்படைகள் எல்லாம் தோன்றியதுபோலத் தோன்றியது அன்று என்பதும், உணர்ச்சிக் கொந்தளிப்பின் உருவமாக அது எழுந்தது என்பதும் மேலே சொன்ன புராணங்களிலுள்ள வரலாறுகளால் ஊகித்துத் தெரிந்து கொள்வதற்குரியன. இனி அது பிறந்த கதையைப் பார்ப்போம்.

# கவி பிறந்த கதை

பாண்டிய அரசன் மாலை நேரத்தில் தன்னுடைய அரண்மனையின் மேல்மாடத்தில் அமர்ந்திருந்தான். அப்போது ஒரு நறுமணம் அவனுடைய மூக்கில் பட்டது. அந்த மணத்தைத் தென்றல் தாங்கி வந்தது என்பதை அவன் உணர்ந்தான். அது அவனுக்குப் புதிய வகையான மணமாகத் தோன்றியது. அவன் பலவகை மணமலரைத் தெரிந்தவன்; வாசனைத் திரவியங்களை நன்றாக நுகர்ந்தவன். இந்த மணமோ அவன் அறிந்த மணங்களுக்குள் ஒன்றாக இராமல், புதியதாக இருந்தது. இந்த மணம் எங்கேயிருந்து வருகிறதென்று திரும்பிப் பார்த்தான். அரண்மனையின் வேறு ஓர் கோடியில் தன்னுடைய பட்டத்துத்தேவி தலையை ஆற்றிக்கொண்டு நின்றிருப்பதைக் கண்டான். அவளுடைய கூந்தலிலிருந்து வந்த மணந்தான் அது என்பதை உணர்ந்து கொண்டான். கூந்தலுக்கு மலராலும், தைலத்தாலும் மணம் ஏறுவது உண்டு. ஆனால் இந்த மணமோ செயற்கையில் ஊட்டியதாக இல்லாமல் கூந்தலுக்கே உள்ள இயற்கையான மணம் போலத் தோன்றியது.

அப்போது பாண்டியன் உள்ளத்தில் கிளுகிளுப்பு உண்டாயிற்று. தன்னுடைய மாதேவியின் கூந்தல் இயற்கையில் மணமுடையதாக இருக்கிறது என்ற நினைப்பினால் உண்டான கிளுகிளுப்பு அன்று. இறைவனுடைய படைப்பில் நல்ல மகளிர்களுடைய கூந்தலுக்கு இயற்கை மணம் அமைந்திருக்கிற என்ற உண்மையை அறிந்ததனால்

அந்தக் கிளுகிளுப்பு அவனுக்கு உண்டாயிற்று. உடனே இறைவன் திருவருளை எண்ணி வியந்தான். பத்மினி சாதிப் பெண்களுக்கு இயற்கையாகவே உடம்பில் ஒரு தனி மணம் இருக்கும் என்றும், அவர்களுடைய கூந்தலும் இயற்கை மணம் உடையது என்றும் நூல்கள் கூறுகின்றன. அந்த உண்மையை இதுகாறும் பாண்டியன் அநுபவத்தில் உணரவில்லை. இப்பொழுது அதனைத் தெளிவாக உணர்ந்து கொண்டான்.

ஆண்டவனுடைய படைப்பில் இப்படி ஒரு வியப்பான உண்மை நிலவுவதை உள்ளத்தால் உணர்ந்தவுடன் அதனை யாவரும் அறியச் செய்ய வேண்டு மென்ற அவா பாண்டியனுக்கு எழுந்தது. தன்னுடைய மனையாளின் கூந்தல் மணமுடையதாக இருக்கிறது என்பதைப் பிறர் அறியச் செய்யவேண்டுமென்று அவன் எண்ணவில்லை. இயற்கையில் நல்ல மங்கையர்களுடைய கூந்தலில் இறைவன் நறுமணத்தைப் படைத்திருக்கிறான் என்ற உண்மையை உலகம் அறிய வேண்டுமென்பதே அவன் ஆர்வம். 'எப்படி அறிவிப்பது? குறிப்பாக இதனை வெளிப்படுத்தும் ஆற்றல் உள்ளவர் யார்?' என்று சிந்தனை செய்தான்.

பாண்டியனுடைய ஆதரவில் மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்தது. அதில் 49 புலவர்கள் இருந்து தமிழை ஆராய்ந்தார்கள். நக்கீரர் முதலிய புலவர்கள் சங்கத்தில் இருந்து பல நூல்களை இயற்றியும், நூல்களை இயற்று வாருக்கு ஆதரவு தந்தும் வந்தார்கள். பாண்டியனுக்கு அந்தச் சங்கத்துப் புலவர்களின் நினைவு வந்தது. உடனே அப் புலவர்களை அழைத்து, ''ஒரு நறுமணத்தை மாலையில் நான் நுகர்ந்தேன். அதைப் பற்றி நீங்கள் பாடவேண்டும்'' என்று குறிப்பாகச் சொன்னான்.

சில புலவர்கள் ஆராய்ச்சி செய்து பாடத் தொடங்கி னார்கள். எப்போது, எங்கே, அந்த மணத்தை அரசன் நுகர்ந் தான் என்பதைத் துப்பு அறிந்து, மாதேவியின் கூந்தலிலிருந்து மணம் வந்தது என்பதை உணர்ந்துகொண்டு அவர்கள் பாடினார்கள். அந்தப் பாடல்கள் பாண்டிமா தேவி யினுடைய சிறப்பையும், அழகையும் பாராட்டுவனவாக அமைந்தன. பாண்டியன் எதனை விரும்பவில்லையோ அதனையே அவர்கள் செய்தார்கள். தன் மனைவியைப் பற்றிய குறிப்பே இல்லாமல் பொது வகையில் நன்மங்கையர் கூந்தலுக்குள்ள இயற்கை மணத்தை அழகுக் கவிதையாகச் சொல்லவேண்டு மென்பதே அவன் விருப்பம். புலவர்களோ பாண்டியனுடைய உள்ளத்தை உவகையுறச் செய்ய வேண்டுமென்று அவனுடைய மனைவியைப் பாராட்டத் தொடங்கினார்கள். குறிப்பாகவும், நுட்பமாகவும் ஒன்றைச் சொல்வதிலுள்ள இன்பம் வெளிப்படையாகச் சொல்வதில் இருப்பது இல்லை. இலக்கியத்தில் எத்தனைக்கு எத்தனை குறிப்பு அமைந்து கிடக்கிறதோ அத்தனைக்கு அத்தனை இன்பம் கிடைக்கும். அந்த வகையில் சங்கப் புலவர்கள் பாட்டு அமையாமையினால் பாண்டியனுடைய உள்ளம் உவகை அடையவில்லை.

'இவ்வளவு சிறந்த புலவர்கள் இருந்தும் நம் உள்ளக் கிடக்கையைத் தெரிந்து உண்மையை நுட்பமாகச் சொல்ல யாரும் முன் வரவில்லையே!' என்று அவன் வருந்தினான். 'இனி என்ன செய்வது?' என்ற ஆராய்ச்சி பிறந்தது. 'உலகில் வேறு அறிவாளிகளே இராமல் போவார்களா? தமிழ்நாடு முழுவதிலும் இந்தச் செய்தியைப் பறைசாற்றுவித்து யாரேனும் பெரும் புலவர் நுட்பமான இந்தக் கருத்தைக் கவிதையில் அமைத்தாரானால் அவருக்குச் சிறந்த பரிசை அளிக்கலாமே' என்று எண்ணினான். உடனே ஆயிரம்

பொன்னை எடுத்து ஒரு கிழியில் கட்டித் தமிழ்ச் சங்க மண்டபத்தின் முன்னால் ஒரு கோலை நட்டு அதில் அதைத் தொங்கவிட்டான். ''என்னுடைய கருத்துக்கு இசைந்த பாட்டை யார் பாடுகிறாரோ அவர் இந்தக் கிழியைப் பெறுவார்'' என்று சொல்லி அந்தச் செய்தியை முரசு அறைவித்தான். இந்தச் செய்தி எங்கும் பரந்தது.

மதுரையிலுள்ள திருக்கோயிலில் சுந்தரேசப் பெருமானுக்கு வழிவழி அடிமை செய்து பூசை இயற்றி வந்த ஆதி சைவனாகிய தருமி என்பான் பிரம்மசாரி. அவனுக்கு ஆண்டவனிடத்தில் மிகவும் முறுகிய பக்தி இருந்தது. தனக்கு மணமாகவேண்டு மென்ற ஆர்வம் அவனுக்கு உண்டாயிற்று. அதற்குக் காரணம் தான் சுகம் அடைய வேண்டுமென்பது அன்று. தொடர்ந்து பரம்பரை பரம்பரை யாக, தகப்பனுக்குப் பின் மகனாக, இறைவனுடைய திருத்தொண்டைச் செய்துவரும் குலம் அது. தருமி என்னும் அந்த ஆதி சைவன் வரையில் இறைவனுடைய திருத் தொண்டு முட்டின்றி நடந்து வந்தது. இனி அவனும் மணம் செய்துகொண்டு மகனைப் பெற்றால்தான் இந்தக் திருத்தொண்டுப் பரம்பரை வளர்ந்து வரும். அப்படியின்றி அவன் மணம் செய்து கொள்ளாமல் இருப்பானானால் அந்தப் பரம்பரை அற்றுவிடும். ''உனக்குத் திருத்தொண்டு செய்கின்ற இந்தக் குலம் அறாமல் தொடரவேண்டுமே; அதற்காகவே திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன்'' என்று இறைவனிடம் முறையிட்டுக் கொண்டான் தருமி. அந்தக் காலத்தில் ஆதி சைவர்களுக்குத் திருமணம் ஆக வேண்டுமானால் பெண்களுக்கு நிரம்பப் பணம் கொடுக்க வேண்டும். பணத்தை ஈட்டும் வழி அறியாத தருமி இறைவன் திருவருளை மாத்திரம் ஈட்டிக் கொண்டு வந்தான். ஆகையால், ''எம்பெருமானே! திருமணத்திற்குரிய பொருள்

என்னிடம் இல்லையே!'' என்று விண்ணப்பித்துக்கொண்டு வந்தான்.

இறைவன் அவனுக்குத் திருமணம் செய்து வைப்ப தற்குத் தக்க நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் போலும்! பாண்டியன் தன் கருத்தை வைத்து நுட்பமான முறையில் பாடல் பாடுகிறவர்களுக்கு ஆயிரம் பொன் வழங்குவதாக முரசு அறைந்தவுடன், சிவபெருமான் ஒரு காரியம் செய்தான். ஒரு பாடலை எழுதி அதனைத் தருமியிடம் கொடுத்து, ''இதைக் கொண்டு போய்ப் பாண்டியனுக்குக் காட்டினால் அவன் ஆயிரம் பொன் தருவான். அதனைப் பெற்று நீ திருமணம் செய்து கொள்வாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினான்.

''கொங்குதேர் வாழ்க்கை'' என்று தொடங்கும் அந்தப் பாட்டு, ஒரு தலைவன் தன் தலைவியினுடைய அழகைப் பாராட்டிக் குறிப்பாக அவள் கூந்தலுக்குள்ள இயற்கை மணத்தைச் சொல்வதாக அமைந்தது. அந்தப் பாட்டைத் தருமி பெற்றுக் கொண்டு நேரே பாண்டியனிடம் சென்றான். பாண்டியன் அந்தப் பாடலைப் பார்த்தான். பல காலமாகத் தன்னுடைய கருத்து, கவிதை உருவில் வரவில்லையே என்ற ஏக்கமும், சங்கத்தில் இருந்த புலவர்கள் யாரும் தன்னுடைய கருத்தைத் தெரிந்துகொள்ள வில்லையே என்ற வருத்தமும் பெற்றிருந்த பாண்டியன் அந்தப் பாட்டுத் தன் கருத்தை மிக நன்றாகச் சொல்வதை உணர்ந்தவுடன், அவனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. வேறு சமயமாக இருந்தால் ஆளை அனுப்பித் தருமியை அழைத்துக்கொண்டு சென்று அந்தக் கிழியை எடுத்துக் கொள்ளச் சொல்லி யிருப்பான். இப்பொழுதோ அந்தப் பாட்டினால் உண்டான பேருணர்ச்சி இன்ன முறையில் செய்ய வேண்டும் என்பதை மறக்கச் செய்தது. சட்டென்று, ''நீ போய்ப் பொற்கிழியை

எடுத்துக் கொள்'' என்று வேகமாகச் சொன்னான். அதற்காகவே காத்திருந்த தருமியும் மிக்க விரைவில் சென்று சங்க மண்டபத்தின்முன் தொங்க விட்டிருந்த பொற்கிழியை அவிழ்க்கத் தொடங்கினான்.

மண்டபத்தில் அமர்ந்திருந்த புலவர்கள் இதைப் பார்த்தார்கள். அவர்களுக்குத் தலைவராக வீற்றிருந்த நக்கீரர் தருமியிடத்தில், ''நீ யார்? என்ன செய்கிறாய்?'' என்று கேட்டார். ''பாண்டியன் என்னை இந்தப் பொற்கிழியை அறுத்துக்கொள்ளச் சொன்னான்'' என்று பதில் அளித்தான் தருமி. ''நீ என்ன செய்தாய்?'' என்று புலவர் கேட்க, ''நான் கொண்டு வந்து காட்டிய பாட்டைப் பாண்டியன் கண்டு இதனை எடுத்துக் கொள்ளச் சொன்னான்'' என்று சொன் னான். ''எங்கே, அந்தப் பாட்டை இங்கே கொடு'' என்று நக்கீரர் சொல்லவே தருமி அந்தப் பாட்டைக் கொடுத்தான்.

நக்கீரர் தருமியை மேலும் கீழும் விழித்துப் பார்த்தார். அந்தப் பாடலை இயற்றும் ஆற்றல் அவனுக்கு இல்லை யென்பதை அவனுடைய முகக்குறிப்பினால் தெரிந்து கொண்டார். முன்பே பொறாமைக்கு ஆளாகிய நக்கீரருக்கு இப்பொழுது கோபமும் உண்டாயிற்று. உடனே, ''இந்தப் பாட்டுப் பிழையானது'' என்று சொன்னார். ''என்ன பிழை?'' என்று தருமி கேட்டான். ''பிழையைத் தெரிந்து கொள்வதற் கும் அறிவு வேண்டும். உன் முகத்தைப் பார்த்தால் இந்தப் பாட்டைப் பாடியவன் நீ என்று தோன்றவில்லை. உனக்கு யாரோ ஒரு புலவன் பாடிக்கொடுத்திருக்கிறான், அவனைக் கூட்டிக்கொண்டு வா. பிழை இன்னது என்று சொல்கிறேன்'' என்று சொன்னார்.

நக்கீரர் பெரும்புலவர். பல அருமையான நூல்களை எல்லாம் இயற்றியவர். இறைவனிடம் பக்தி உடையவர். ஆனாலும் இப்போது அவருடைய இயற்கையான நிலை

மாறியிருந்தது. 'யாரோ ஒருவன் நாம் பெறாத பரிசைப் பெறுவதா?' என்று அவரது உள்ளம் தீய்ந்துகொண்டிருந்தது. ஆகையால் பாட்டு நன்றாக இருந்தாலும் அதனைக் கவனிக்காமல் பிழையே கண்டார். பாண்டியன் உள்ளத்துக்கே இனிமை தந்த அந்தப் பாட்டு, புலவர் உள்ளத்துக்கும் இனிமை தருவது இயல்பு. ஆனால் பொறாமை உள்ளம் மகிழ்ச்சி கொள்வதைத் தடுத்தது. அவர் உள்ளம் நல்லதுதான். அதன்மேலே பொறாமையென்னும் புழுதி படர்ந்திருந்தது. அதனால் வெளியே சினத்தோடு பேசியது.

இந்த நிலையைப் பழைய திருவிளையாடற் புராணத்தை இயற்றிய பெரும்பற்றப் புலியூர் நம்பி ஒரு பாட்டில் அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

"பொற்புறும் அவனைக் கண்டு
பொறாமையால் இருந்த கீரன்
சொற்பொருள் அறியாப் பார்ப்பான்,
நீஇதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் தன்னைக்
கொண்டுவா நாடி; உன்றன்
முற்கவி தைக்குக் குற்றம்
உண்டுபோ எனமு னிந்தான்."

என்று நக்கீரர் கூறியதாக அவர் பாடுகிறார். நக்கீரர் சொல் கிற வார்த்தையில் அவருடைய கோபம் புலப்படுகிறது.

"சொற்பொருள் அறியாப் பார்ப்பான்."

என்று அந்தக் கோபத்தை நன்கு தெரிவிக்கிறார். உண்மை யில் நக்கீரர் பாட்டைக் கண்டு கோபம் கொண்டவரானால், "அந்த முட்டாள் புலவனை அழைத்து வா" என்று சொல்லியிருக்க வேண்டும். கோபத்திற்குரிய சொற்கள் எல்லாம் தருமியைச்

சார்ந்து வருகின்றன, பாட்டைப் பற்றியும் புலவனைப் பற்றியும் சொல்லும்போது,

"நீ இதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் தன்னைக் கொண்டுவா நாடி."

என்கிறார். "இந்த நல்ல கவியைப் பாடிய புலவனை அழைத்து வா" என்பது பொருள். அவர் தம் உள்ளத்துள் அதை நல்ல கவி என்று உணர்ந்தார். ஆனாலும் வெளிப் படையாக அதை ஒப்புக்கொள்வதற்கு அவருடைய அகந்தை இடம்கொடுக்க வில்லை. அதனால் பிழை இருக்கிறது என்று சொன்னார்.

தருமி இதனை எதிர்பார்க்கவில்லை. பாண்டியனே உத்தரவிட்டபோது வேறு யார் தடுக்க முடியும் என்று எண்ணினான். ஆனால் புலவர் பெருமான் நக்கீரர் தடுத்ததை அறிந்து அவன் பயந்துபோனான். புலவர்களுக்கு அரசனை விட மிக்க பெருமை உண்டு என்பது அந்தக் காலத்து மக்களுக்கு நன்கு தெரியும். ஆகையால் பாண்டியன் சொன்னாலும் புலவர் தடுத்தமையினால் தருமி வருத்த முற்று உடனே கோயிலுக்கு ஓடினான். ஆண்டவனை வணங்கி, "எம்பெருமானே! உன்னுடைய பாட்டுக்குப் பிழை சொல்லிவிட்டான் ஒரு புலவன். என்னுடைய திருமணம் நடந்தாலும் நடக்காவிட்டாலும் உன் மானத்தை நீ காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்று புலம்பினான். 'ஆண்டவன் சொன்ன பாட்டுக்கு மனிதன் குறை கூறுவதாவது?' என்ற கோபம் அவனுக்கு.

இறைவன் இந்த நிகழ்ச்சியெல்லாம் தெரியாமலா இருந்திருப்பான்? உடனே நக்கீரரோடு வாதிடலாம் என்று புறப்பட்டான். ஒரு புலவனைப் போலக் கோலம் கொண்டு, உடன் கற்றுச் சொல்லிகள் வர, மிடுக்குடைய நடையோடு சிவபெருமான் புறப்பட்டான். சங்க மண்டபத்திற்கு எதிரே

வந்து, ''என் பாட்டுக்கு யார் தவறு சொன்னார்கள்?'' என்று கேட்டான்.

நக்கீரர், ''நான்தான்'' என்று சொன்னார்.

''இதிலே என்ன பிழை இருக்கிறது? சொல்லில் பிழையா? பொருளில் பிழையா?'' என்று கேட்டான் சிவபெருமான். வந்தவன் சிவபெருமான் என்பது யாருக்கும் தெரியாது.

நக்கீரர், ''சொற்பிழை யாதும் இல்லை. பொருளிலே தான் பிழை இருக்கிறது'' என்று துணிந்து சொன்னார்.

''என்ன பிழை?''

''மகளிர் கூந்தலுக்கு இயற்கையாக மணம் உண்டென்பது பிழை'' என்றார் நக்கீரர்.

எத்தனையோ நூல்களில் இந்தச் செய்தி பலகாலமாக அடிபட்டு வழங்கி வருவதுதான். ஆனால் அகந்தை காரணமாக அந்த உண்மையை மறந்து நக்கீரர் மறுத்தார்.

''நூல்கள் நன்மங்கையர்கள் கூந்தலுக்கு மணம் இயல் பாக உண்டென்று சொல்கின்றனவே; அது பொய்யா?''

''இயற்கையாகக் கூந்தலுக்கு மணம் இல்லை. மயிர்ச் சாந்தினாலும், மலரினாலும், தைலத்தினாலும், புகையினா லும் மணம் ஊட்டுவதனால் கூந்தல் மணம் பெறுகிறது. அதற்கு இயற்கையாக ஒரு மணமும் இல்லை'' என்று நக்கீரர் தம் கருத்தையே சாதித்தார்.

''உலகில் பத்மினி சாதிப் பெண்களுக்குத் திருமேனி யில் மணமும், கூந்தலில் நறுமணமும் உண்டென்று நூல்கள் சொல்லுகின்றனவே; அது பொய்யா?''

''அது வெறும் கற்பனை.''

''அப்படியானால் தெய்வ மகளிர்களுடைய கூந்தலில் நறுமணம் இல்லையா?''

''இல்லை; அவர்களுடைய கூந்தலின் மணமும் செயற்கையால் அமைந்ததே.''

சிவபெருமான் நக்கீரருடைய நிலையைக் கண்டான். மேலும் மேலும் அகந்தை வளர்ந்துகொண்டு போயிற்று. தன்னுடைய பாட்டுக்குக் குற்றம் சொன்னதற்காக நக்கீரரைத் தண்டிக்க மனம் வரவில்லை, அந்தப் பெருமானுக்கு. உத்தமமான பெண்களின் கூந்தலுக்கு மணம் இல்லையென்று சொல்லி அவர் அபசாரியாகிறார்; உண்மையை மறுக்கிறார். 'இப்போது இவன் செய்து வரும் குற்றம் மிகப் பெரிது, இவனைத் தண்டிக்க வேண்டும்' என்று இறைவன் நினைத்தான். ஆனாலும், 'இன்னும் இவனுக்குச் சிறிது போக்குக் காட்டி உண்மையை உணர்கிறானா, பார்க்கலாம்' என்று எண்ணினான்.

''இந்திரன் மனைவியாகிய இந்திராணி பேரழகியாயிற்றே, அவளுடைய கூந்தல் இயற்கை மணம் உடையது அல்லவா?'' என்று ஆண்டவன் கேட்டான்.

''அவளுடைய கூந்தலும் செயற்கையினால் மணம் பெறுவதே.''

''கலைமகளுடைய கூந்தலோ?''

''அதுவும் அப்படித்தான்?''

''திருமாலின் மனைவியாகிய திருமகளுடைய கூந்தல் இயற்கை மணமுடையது அல்லவா?''

''அல்ல.''

''அப்படியானால் பராசக்தியாகிய அம்பிகையின் கூந்தலோ?''

''அதுவும் அப்படித்தான்'' என்று முரட்டுத்தனமாக விடை சொன்னார் நக்கீரர். ஆண்டவன், 'தேவி திறத்தில் இவன் தவறு செய்துவிட்டான். இவனைத் தண்டிக்க வேண்டும். ஆனாலும் நாம் இன்னார் என்பதைச் சிறிது காட்ட வேண்டும்' என்று கருதித் தன் நெற்றிக் கண்ணைச் சிறிது திறந்து காட்டினான். கோபத்தினாலோ, பொறாமை யினாலோ பற்றப்பட்டவருக்கு அதற்குத் தடை வருங்கால் அவை மேலும் மேலும் கிளர்ந்து எழும். ஆகையால் நெற்றிற் கண்ணைக் காட்டியவுடன் நக்கீரர், ''நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே!'' என்று சாதித்தார். அறிவினால் சிறந்த நக்கீரர், அகந்தையினால் கீழ்நிலைக்கு வந்து விட்டார். 'இவன் இப்போது இகழத்தக்க கீழ்மகன் ஆகிவிட்டான். அறிவு இவனிடத்திலிருந்து அகன்று விட்டது. அகந்தை கண்களை மறைக்க இவன் உண்மையை எண்ணவில்லை. உத்தம மகளிருடைய பெருமையை நினைக்கவில்லை. உயர்ந்த பண்பும் அச்சமும் போய் விட்டன. ஆகவே இவனுக்குத் தண்டனை கொடுப்பதுதான் சரி' என்ற தீர்மானத்திற்கு வந்தான் இறைவன். உடனே நெற்றிக் கண்ணை நன்கு விழித்துப் பார்க்க அதிலிருந்து புறப்பட்ட தீ நக்கீரரை வெதுப்பியது. உடம்பெல்லாம் தொழுநோய் உண்டாயிற்று. அங்கிருந்த பொற்றாமரைக் குளத்தில் போய் வீழ்ந்தார். வீழ்ந்தவுடன் அவருக்கு உணர்வு தோன்றியது. தாம் செய்த குற்றம் இன்னது என்று தெரிந்தது. ''எம்பெருமானே, நான் அறியாமல் செய்த பிழையை மன்னிக்கவேண்டும். அகந்தையினால் பல பாவங்களைச் செய்துவிட்டேன். உன் பாட்டுக்குக் குற்றம் சொன்னது மாத்திரம் அன்று; உண்மையை மறுத்த பாவமும் என்னைச் சார்ந்துவிட்டது. உலகத்திலுள்ள கற்புடைய மகளிரையும், தேவமகளிரையும், பராசக்தியையுமே நான் இழிவாகப் பேசிவிட்டேன். இந்தப் பாவம் ஏழேழு பிறவிக்கும்

தொலையாது. கருணாநிதியே, என்னைப் பாதுகாத்து என்னுடைய பிழையையும் பொறுத்து அருளவேண்டும்'' என்று புலம்பினார். இறைவன், ''நீ எனக்குக் குற்றம் செய்ததனால் பெரிய தவறு நேரவில்லை. நான் பொறுத்துக் கொள்வேன். ஆனால் நன் மகளிருக்கு அபசாரம் புரிந்தவர் எளிதிலே நலம் பெற இயலாது. நீ கைலாச தரிசனம் செய்தால் உன் நோய் நீங்கும்'' என்று சொல்லி மறைந்து போனான்.

உடனே நக்கீரர் எழுந்து, தாம் செய்த பிழைக்கு மிகவும் வருந்திப் புலம்பினார். மதுரைமாநகரத்தையும், பாண்டிய மன்னனையும்; சங்கப் புலவர்களையும் விட்டுப் பிரிவதற்கு அவர் உள்ளம் இடம் தரவில்லை. பலகாலம் நெருங்கிப் பழகிய புலவர்களுடைய நட்பு இல்லாமல் போய்விடுமே என்று வருந்தினார். 'கைலாசம் எங்கே? நாம் எங்கே?' என்று நினைக்க நினைக்க அவருக்குத் துக்கம் குமுறிக்கொண்டு வந்தது. இறைவன் ஆணையை மறுப்பதற்கில்லையே! ஆதலின் அவர் தம் விதியை எண்ணி இரங்கி எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு மதுரையை விட்டுப் புறப்பட்டு விட்டார். அவர் புறப்பட்டபோது இரங்கியதைச் சிவப்பிரகாச சுவாமிகள் பின்வருமாறு சீகாளத்திப் புராணத்தில் பாடுகிறார்:

''என்றினி மதுரை காண்பேம்!
எப்பகல் சவுந்த ரேசன்
தன்திரு வடிகள் காண்பேம்!
தாயைஎஞ் ஞான்று காண்பேம்!
வென்றிவேல் தரும வேந்தர்
வேந்தனை எந்நாட் காண்பேம்!
ஒன்றுயிர்த் துணையாம் சங்கத்
துறவைஎப் பொழுது காண்பேம்!''

திருப்பரங்குன்றத்திற்குப் பக்கத்தில் வந்து சேர்ந்தார் நக்கீரர். அப்போது பூசை செய்யும் நேரம் ஆயிற்று. அவர் ஒவ்வொரு நாளும் சிவபூசை செய்கிறவர். அங்கே ஒரு பொய்கைக் கரையில் அமர்ந்து சிவபூசை செய்யத் தொடங்கினார். அந்தக் கரையில் பெரிய ஆலமரம் இருந்தது. அவர் பூசை செய்யும்போது அந்த ஆலமரத்திலிருந்து ஒரு பழுப்பு இலை கீழே விழ, அதன் ஒரு பகுதி நீரிலும், மற்றொரு பகுதி நிலத்திலும் கிடந்தன. திடீரென்று நீரில் கிடந்த பகுதி மீனாகவும், நிலத்தில் கிடந்த பகுதி பறவையாகவும் மாற, ஒன்றினை ஒன்று இழுத்துக்கொண்டது. இதனை நக்கீரர் கண்டார். சிவபூசை செய்யும்போது வேறு ஒன்றிலும் மனம் செல்லாமல் செய்வது முறை. அப்படியின்றி இந்த அதிசயத்தின் மேலே கண்ணை ஓடவிட்டார். அந்தச் சமயம் பார்த்து அங்கே யிருந்த கற்கிமுகி என்ற பூதம் நக்கீரரை எடுத்துச் சென்று அருகிலிருந்த குகையில் அடைத்து விட்டது. அந்தப் பூதத்திற்குக்கூட ஓர் உண்மை தெரிந்திருந்தது. காரணம் இல்லாமல் யாரையும் தண்டிக்கக் கூடாது. ஏதாவது ஒரு குற்றத்தைச் சுமத்தியே தண்டிக்க வேண்டுமென்று எண்ணி இந்தக் காரியத்தைச் செய்தது. சிவபூசை செய்யும்போது மனம் திரும்பிய குற்றத்திற்குரிய தண்டனை போல அது அமைந்தது.

குகைக்குள் சென்ற நக்கீரர் தமக்கு முன்னே அங்கே ஒரு பெரும் கூட்டம் இருந்ததைக் கண்டார். அவர்கள் எல்லாம் அவரைக் கண்டவுடன் ஆரவாரித்துக் கூக்குரல் இட்டனர். ''படுபாவி! நீ வந்து சேர்ந்தாயே!'' என்று அழுதார்கள். ஆர அமர விசாரித்தபோது உண்மை தெரிந்தது. கற்கிமுகி என்ற அந்தப் பூதம் இப்படியே பலரை ஏமாற்றிக் குகைக்குள் அடைத்து வந்தது. ஆயிரம் பேர்கள் நிரம்பியவுடன் ஒரு நாளில் அவர்களை எல்லாம் ஒரேயடியாக உண்டு

இன்புறுமாம். இப்போது 999 பேர்கள்தாம் சேர்ந்திருந்தார்கள். நக்கீரர் ஆயிரம் என்ற கணக்கை நிரப்பி விட்டார். ''இனிமேல் எங்களுக்கு இங்கே வேலை இல்லை. அந்தப் பூதத்தின் வயிற்றில் போக வேண்டியதுதான். அந்தக் காரியத்தைச் செய்வதற்கு நீ காரணமானாயே!'' என்று அங்கிருந்தவர்கள் யாவரும் நக்கீரரிடம் கோபத்துடன் பேசினார்கள்.

நக்கீரர் சிந்தனை செய்தார். 'நாம் செல்லும் இடத்தி லும் இப்படித் தீங்கு நிகழ்கின்றதே!' என்று வருந்தினார். ''எம்பெருமானே, உன் திருவுள்ளக் கிடக்கையை நான் அறியேன், இப்போது இந்தப் பாவியினால் இத்தனை பேர்களுக்குத் துன்பம் வந்து விட்டதே!'' என்று இரங்கினார். பின்பு முருகப் பெருமானின் நினைவு வந்தது. அவர் இருந்த இடம் குகை அல்லவா? அதுவே இருதய குகையில் இருக்கிற முருகப் பெருமானது நினைவை உண்டாக்கியது. எல்லாருடைய இருதய குகையாகிய தகராகாசத்திலும் இருப்பதனால் முருகனுக்குக் குகன் என்னும் திருநாமம் உண்டாயிற்று. உடனே அந்தப் பெருமானை எண்ணிப் பாட ஆரம்பித்தார். பாட்டு எழுந்தது. 317 அடிகளாக வளர்ந்து திருமுருகாற்றுப்படையென்னும் பெயரைப் பெற்ற அந்த நூலைப் பாடியவுடன் முருகன் எழுந்தருளிப் பூதத்தை மாய்த்து, நக்கீரரோடு அந்தக் குகையில் அடைபட்டுக் கிடந்த எல்லோரையும் விடுவித்தான்.

நக்கீரர் முருகப் பெருமானுடைய திருவடிகளில் வீழ்ந்து, ''எம்பெருமானே, நாயேன் செய்த பாவம் கணக்கு இல்லாதது. சிவபெருமானுக்குப் பிழைசெய்து தொழுநோய் பெற்றுக் கொண்டேன். அது நீங்க வேண்டுமானால் கைலாச தரிசனம் பெறவேண்டுமென்று அந்தப் பெருமான் ஆணையிட்டார். அதனைத் தரிசிக்க நான் புறப்பட்டேன். புறப்படுகிற அடியிலேயே இந்தத் தொல்லை வந்து

சேர்ந்தது. எம்பெருமானே, நான் எப்போது கைலாசத்தைப் பார்ப்பது? எப்போது உடல்நலம் மீண்டும் பெறுவது? மீண்டும் புலவர்களோடு நெருங்கிப் பழகும் காலம் வருமா? நீதான் அருள் செய்ய வேண்டும்'' என்றார்.

முருகப் பெருமான் நக்கீரருடைய விண்ணப்பத்தைக் கேட்டான். ''என் தந்தைக்குச் செய்த பிழை பிழைதான். அவர் சொன்ன ஆணையின்படியே நீ கைலாச தரிசனம் செய்தால்தான் உன் நோய் தீரும். அதனை மாற்றுவது முறையன்று. ஆனாலும் என்னைப் பாடி என்னுடைய தரிசனத்தைப் பெற்றமையினால் உனக்கு ஓரளவு உபகாரம் செய்கிறேன். நீ பாதி தூரம் கைலாசத்தை நோக்கிச் செல். அது உன்னை நோக்கிப் பாதி தூரம் வரும். நீ காளத்தி சென்றால் அங்கே உனக்குக் கைலாச தரிசனம் கிடைக்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்து போனான்.

நக்கீரர், 'இந்த அளவிலாவது நமக்கு நன்மை கிடைத்ததே' என்று முருகப் பெருமானைப் போற்றி அங்கேயிருந்த நண்பர்களை எல்லாம் வழி அனுப்பிவிட்டு மீண்டும் தம் யாத்திரையைத் தொடங்கினார். வடக்கே காளத்தி சென்றார்.

முருகப் பெருமான் நக்கீரரைக் காளத்திக்குப் போகச் சொன்னதில் ஒரு பொருத்தம் இருக்கிறது. உமாதேவியாரின் கூந்தலுக்கு இயற்கையில் மணம் இல்லையென்று வாதிட்ட குற்றத்தைச் செய்தவர் நக்கீரர். காளத்தியிலே எழுந்தருளி யிருக்கும் அம்பிகையின் திருநாமம் ஞானப் பூங்கோதை என்பது. ஞானப் பிரசூனாம்பிகை என்று வடமொழியில் சொல்வார்கள். அம்பிகையினுடைய கூந்தல் ஞானமணம் வீசியது என்ற கருத்தை அந்தப் பெயர் புலப்படுத்துகிறது, தன் கூந்தலில் இயற்கை மணம் உண்டென்பதை நன்கு தெரிவிக்கிற

விலாசத்தோடு அந்தத் தலத்தில் அம்பிகை எழுந்தருளி யிருக்கிறாள். ஆகையால் அங்கே சென்றால் அந்தப் பெருமாட்டியின் திருவருளால் உணர்வு பெற்றுப் பாவம் நீங்கும் என்ற எண்ணத்துடன் முருகப் பெருமான் நக்கீரரைக் காளத்திக்குப் போகச் சொன்னான்.

நக்கீரர் காளத்திக்கு வந்து அங்கே ஓடும் பொன்முகலி என்னும் ஆற்றில் நீராடி எழுந்தபோது அவருக்குக் கைலாச தரிசனம் கிட்டியது: ஆற்றை விட்டுக் கரையேறியவுடன் அவர் மீட்டும் தம்முடைய பழைய உருவத்தைப் பெற்றார். ஆண்டவன் திருவருட் சிறப்பை எண்ணி வியந்து மனம் உருகிப் பாராட்டினார். இறைவன் கோபத்திற்கு ஆளானமை யினால் சிலருக்கு உண்டான தீங்குகளையும், அவன் திருவருளைப் பெற்றமையினாலே சிலருக்கு உண்டான நன்மைகளையும் தொகுத்து, ‘கோபப் பிரசாதம்’ என்ற நூலைப் பாடினார். ‘கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி’ என்று ஒரு நூல் பாடினார். ஒரு பாட்டுக் காளத்தியையும் அடுத்தது கைலையையும் பாராட்டுவதாக அமைந்தது அது. பின்னும் காளத்தியிலே ஆண்டவன் திருவருளைப் பெற்ற கண்ணப்ப நாயனாரைத் தரிசித்தார். அவரைப் பற்றி, ‘திருக்கண்ணப்ப தேவர் திருமறம்’ என்ற நூலைப் பாடினார். இவ்வாறு சில நூல்களைப் பாடிவிட்டு அங்கேயிருந்து புறப்பட்டு மீட்டும் மதுரை வந்து சேர்ந்தார்.

ஆண்டவன் பாடின ‘‘கொங்குதேர் வாழ்க்கை’’ என்ற பாடலுக்குக் குறை கூறினதில் தொடங்கிய இந்த வரலாறு, திருமுருகாற்றுப்படையையும் காளத்தி சம்பந்தமான பிற நூல்களையும் நக்கீரர் இயற்றிப் புகழ்ந்ததோடு நிறைவடை கிறது. பெரியவர்கள் தவறு செய்தால் அது நன்மையாகவே விளையும் என்ற உண்மையை இந்த வரலாற்றினால் நாம் உணர்கிறோம்.

இந்தக் கதையை வெவ்வேறு புராணங்கள் சொல்கின்றன. கற்கிமுகி என்ற பூதம் குதிரை முகம் உடையது என்று பெரியவர்கள் சொல்வார்கள். இந்தக் கதையை அருணகிரிநாதப் பெருமான் தம்முடைய பாடல்களில் பலவிடங்களில் குறித்திருக்கிறார்.

"இவுளிமுகி யைப்பொருத ராவுத்த னானவனும்"

என்று திருவகுப்பில் வருகிறது.

"துரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கீரர்க்குத வியவேளே."

என்று திருப்புகழில் பாடுகிறார்.

---

# உதயம்

## மங்கலச் சொல்

எந்த நூலைத் தொடங்கினாலும் மங்கலச் சொல்லில் தொடங்குவது ஒரு வழக்கு. இன்ன இன்ன சொற்கள் நூல்களின் முதலில் மங்கலச் சொற்களாக ஆள்வதற்குரியன என்று சொல்லும் இலக்கணம் ஒன்று பிற்காலத்தில் உண்டாயிற்று. அப்படி வரும் மங்கலச் சொற்கள் பலவற்றில் முக்கியமானது உலகம் என்பது. உலகம் என்ற மங்கலச் சொல்லில் தொடங்கும் நூல்கள் பல இருப்பதைப் பார்க்கலாம். கம்பராமாயணம், ''உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்'' என்று தொடங்குகிறது. பெரியபுராணம், ''உல கெலாம் உணர்ந்து'' என்று ஆரம்பிக்கிறது. திருமுரு காற்றுப் படையும், ''உலகம் உவப்ப'' என்று தொடங்குகிறது.

## உலகம்

தமிழ்நாட்டில் வாழ்ந்த புலவர்கள் இந்தியாவையோ, தமிழ் நாட்டையோ தனித்துப் பார்ப்பது வழக்கம் அன்று. பொதுவாகப் பாரத நாட்டுப் பண்பாடு, உலகம் எல்லாம் வாழவேண்டுமென்பதே. தன் வீடு, தன் நாடு என்ற குறுகிய எண்ணத்தோடு இல்லாமல், உலகம் அனைத்தும் இறைவனுடைய படைப்பு, அதிலுள்ள உயிர்க் கூட்டங்கள் எல்லாம் இறைவனுடைய குழந்தைகள் என்ற எண்ணம் பெற்று வாழ்வதே இந்த நாட்டுப் பண்பாடு. ஆதலால்தான்

தமிழில் உள்ள சிறந்த நூல்கள் யாவுமே உலகம் முழுவதும் வாழவேண்டுமென்பதை அங்கங்கே சொல்லியிருப்பதைக் காணலாம். ''உலகம் முழுவதும் வாழ்க'' என்று சொல்வார்கள். ஞானசம்பந்தப் பெருமான் சமணர்களோடு வாதிடும்போது வைகையை எதிர்த்துச் செல்லும் திருப் பாசுரத்தைப் பாடினார். அதில், ''வையகமும் துயர்தீர்கவே!'' என்று அருளினார்.

அந்த வகையில் முருகப் பெருமானுடைய திருவருளை எண்ணி, அவன் இருக்கும் தலங்களை அடைந்து தரிசிக்க விரும்புகின்ற புலவனுக்கு, நக்கீரராகிய பெரும் புலவர் உபதேசம் செய்யத் தொடங்கும்போது முதலில் உலகத்தை நினைக்கிறார். முருகப்பெருமானுடைய திவ்வியத் திருமேனி செஞ்சுடர்ப் பிழம்பாக இருக்கிறது. அதற்கு ஓர் உவமை சொல்ல வருகிறார். பாலசூரியனுடைய நினைவு வருகிறது. சூரியனுக்கும், முருகப் பெருமானுக்கு பல வகையில் ஒப்புமை உண்டு. பால சூரியனின் ஒளி சிவப்பு என்றும் இளைய பிரானாகிய முருகப் பெருமானின் திருமேனி செக்கச் செவேல் என்றும் இருப்பது. பொதுவாக இறைவனைத் தேஜோமய விக்கிரகன் என்று சொல்வார்கள். அதனால் தான் சின்ன வாகனத்தில் பெரிய வடிவம் இருப்பதாகக் கற்பனை பண்ணியிருக்கிறார்கள்.

## தேஜோமய விக்கிரகம்

விநாயகப் பெருமான் யானைமுகம் உடையவன். அவன் உருவம் மிகப் பெரியது. அவனைத் தாங்கும் வாகனமோ மூஷிகம். அது மிகச் சின்ன உருவம் உடையது. ஒரு நண்பர் என்னைக் கேட்டார்: ''யானையின்மேலே மூஷிகத்தை வைக்காமல் மூஷிகத்தின் மேலே யானையை வைத்தார்களே. இது பொருத்தமா?'' என்று கேட்டார். அந்த

யானை நம்மைப்போன்ற புலால் உடம்பினாலானது என்றால் பொருத்தமில்லாமல் இருக்கும். ஆனால் இறைவனுடைய திருமேனி அத்தனையும் சுடர்த்திருமேனி; திவ்ய தேஜோ மயமானது. நெருப்புக் கொழுந்துக்குக் கனம் உண்டா? சினிமாவில் பெரிய கோட்டை கொத்தளங்களை எல்லாம் அட்டையினால் பண்ணி நிறுத்தி வைக்கிறார்கள். தோற்றத்திற்குப் பெரிய மாளிகை போலத் தோன்றுகிற அவைகள் கனம் இல்லாமல் இருக்கும்போது, வெறும் சுடர்க் கொழுந்துக்குக் கனம் இருக்குமா? மூஞ்சூறின்மீது யானை இருப்பது ஆச்சரியம் அன்று. எறும்பின் மேலே கூட இருக்கலாம் அல்லவா? நம்முடைய புலால் உடம்புக்குக் கனம் உண்டு. இதில் கனம் ஏறுவதை நிறுத்தப் பார்க்கின்ற இயந்திரங்களை வைத்திருக்கிறார்கள். நம்முடைய வாழ்க்கைப் பயணத்தில் நாம் சரீரத்தை மறப்பதே இல்லை. ரெயில் பிரயாணம் செய்பவர்கள் சரீரத்தை மறந்து விடாமல் அதை நிறுத்துப் பார்த்து, எத்தனை பவுண்டு கனம் என்று தெரிந்துகொள்ளும்படி அங்கங்கே பொறிகளை வைத்திருக்கிறார்கள். இறைவன் கருணையினால் திருமேனி கொள்கிறான். அது திவ்ய தேஜோமயமான விக்கிரகம். ஒளி படைத்த திருமேனி அது. தேவர்கள் யாவருமே ஒளி படைத்த திருமேனி உடையவர்கள். இறைவன் திருமேனி அகக் கண்ணினால் பார்ப்பதற்குரியது. ''அருட் பெரும் சோதி'' என்று இராமலிங்க வள்ளலார் அடிக்கடி பாடியிருப்பது அந்தக் கருத்தைக் கொண்டுதான்.

ஆகவே முருகப்பெருமான் சோதிகளில் பெரிய சோதி.

''அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகி''

என்று கந்தபுராண ஆசிரியர் பாடுகிறார்.

அத்தகைய பெருமானுடைய திருமேனிக்குச் சூரியனை உவமை சொல்வது போதாது. ஆனாலும் முருகப் பெருமானைத் தரிசனம் செய்ய வேண்டுமென்ற வேட்கை உடையவனுக்கு அவன் அறிந்த சோதியுள் பெரிய சோதியை உவமையாகக் காட்டுகிறார் நக்கீரர்.

## சுடர் உவமை

நாம் அறிந்த சோதி மூன்று. சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றையும் முச்சுடர் என்று சொல்கிறோம். அக்கினி நெருப்பாகவும், விளக்காகவும் நமக்குக் காட்சி தருகின்றது. சந்திரனையும், சூரியனையும் வானத்தில் பார்க்கிறோம். இந்த மூன்று வகைச் சுடர்களிலும் மிகப் பெரிய சுடராக நிலவுவது சூரியன். தெரிந்தவற்றைக் கொண்டு தெரியாத ஒன்றைக் காட்டுவது முறை.

நாம் அறிந்த சுடர்களுள் மிகப் பெரிய சூரியனை உவமையாக்குகிறார் நக்கீரர். முருகப் பெருமான் சூரியனைப் போல இருக்கிறவன் என்று சொல்ல வருகிறார்.

சூரியனை எப்போதும் கண்ணார உற்று நோக்க முடியாது. உச்சி வானத்தில் இருக்கும்போது அவனைப் பார்த்தால் கண் கூசும். இளஞாயிறாக இருக்கும் போது செக்கச் செவேல் என்று வட்ட வடிவமாகக் கண்ணால் காணும் வகையில் காட்சி அளிப்பான். முருகப் பெருமான் சிவந்த திருமேனி உடையவன். மந்திர ஜபம் பண்ணுகிற வர்களுக்கு அவனுடைய தியான சுலோகம் நினைவுக்கு வரலாம். அவன் குங்குமம் போன்ற சிவப்பு நிறம் உடையவன் என்று அது தொடங்குகிறது. அத்தகைய பெருமான் உண்மையான அன்பர்களுடைய உள்ளத்தில் செக்கச்செவேல் என்று தோற்றுவான். அப்போது உதய ஞாயிறுபோல அவனுடைய திருமேனி சோதி வீசும் என்கிறார் நக்கீரர்.

இளவள ஞாயிறு போல முருகப் பெருமான் எழுந்தருளுகிறான் என்று சொல்ல வருகிறார்.

## கதிரவன் புகழ்

கதிரவன் கண்கண்ட தெய்வம். மற்றத் தெய்வங்களைத் தியானம் செய்து தரிசனம் செய்ய வேண்டுமே யொழியச் சூரியனைப்போல யாவரும் காண அவை உலா வருவது இல்லை. சூரியன் எழுந்தால் உலகம் முழுவதும் ஒரு தனிக் கிளர்ச்சி அடைகிறது. உயிருள்ள பொருள்களும் உயிர் இல்லாத பொருள்களும் சிறப்பை அடைகின்றன. இராக் காலத்தில் உலகம் முழுவதற்கும் சேர்ந்தாற்போல் ஒரு சாவு வந்தாற்போல யாவும் அமைதியாக இருக்கும். அவரவர்கள் கைகால்கள் அசைவு இன்றி, மூச்சு மாத்திரம் வரப் படுக்கையில் கிடக்கிறார்கள். அப்போது அவர்களுடைய கண் கண்ணாகப் பார்ப்பது இல்லை. காது காதாக இருப்பது இல்லை. கருவி கரணங்கள் எல்லாம் தங்களுக்குரிய செய்கைகளைச் செய்யாமல் ஒடுங்கிக் கிடக்கின்றன. அது ஒரு வகையில் இறப்பது போன்றது. வள்ளுவர், ''உறங்குவது போலும் சாக்காடு'' என்று சொல்லுவார்.

ஒவ்வொரு நாளும் எல்லோரும் உறங்கும்படியாக வருகிற இரவைத் தினப்பிரளயம் என்று திருமூலர் சொல்வார். அப்படி உயிர்கள் தம்முடைய இயல்பினின்றும் மாறிச் செயல் இழந்து கிடக்கிற இராக்காலம் மாறினவுடன் சூரியன் தோன்றுகிறான். கதிரவன் தோன்றியவுடன் மனிதன் மனிதனாகின்றான். பறவை பறவையாகிறது. பறவைக்குச் சிறப்பாக உள்ள சிறகுகள் அப்பொழுது தொழில்படு கின்றன. தம் கூட்டிலிருந்து சிறகை அடித்துக் கொண்டு வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்குகின்றன. மனிதன் படுக்கையிலிருந்து எழுந்த பிறகு என்ன என்ன செய்ய வேண்டுமென்று எண்ணிப் பேசிச் செயலைத் தொடங்குகிறான்.

தவறான காரியங்கள் யாவும் பெரும்பாலும் இரவில் நடக்கின்றன. இரவு போன பிறகு காலையில் உதயமாகும் சூரியனுடைய ஒளியில் ஊக்கமும், முயற்சியும், நன்மையும் அதிகமாகின்றன. இத்தகைய சூரியனை உலகம் முழுவதும் வரவேற்கிறது. அவன் எழுந்து வானத்தில் உலா வரும்போது உலகம் முழுவதுமே உலா வருகிறது. ஆகவே சூரியனைப் பற்றிச் சொல்ல வந்த நக்கீரர் அவன் உலகம் எல்லாம் உவக்கும்படியாக வானத்தில் எழுந்தருளுகிறான் என்பதைச் சுட்டுகிறார்.

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு

என்று திருமுருகாற்றுப்படை உதயமாகிறது.

எல்லாப் பொருளுக்கும் உரத்தைத் தந்து வளத்தைத் தருவது கதிரவன். வானத்தில் மிக்க வெற்றியோடு எழுந்து உலாவுகிறான், வலமாக எழுந்து திரிதருவதாக நக்கீரர் பாடுகிறார்.

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு

சூரியனைப் புகழாதார் யாரும் இல்லை. சாதி சமயம் கடந்து யாவராலும் புகழப்படுபவன் அவன்; அறிவாளி களும் அறிவற்றவர்களும் கதிரவனைப் புகழ்கின்றார்கள். இந்து சமயத்தில் சூரியனைக் கடவுளாகக் கும்பிடும் சமயம் ஒன்று உண்டு; அதற்குச் சௌரம் என்று பெயர். பஞ்சாயதன பூசை என்று சொல்கிற வழிபாட்டில் சூரிய வழிபாட்டுக்கு ஓர் இடம் உண்டு. சிவ பூசையிலும் இடம் உண்டு. கோயில்களில் சூரியனுக்கு என்று தனியே ஓர் இடம் இருக்கிறது. சூரியனுக்கு என்று தனிக் கோயில்கள் உண்டு. தமிழ்நாட்டில் சூரியனார் கோயில் என்ற ஒரு தலம் இருக்கிறது. வடக்கே கோணார்க்கம்

என்ற தலத்தில் சூரியனுக்குத் தனிக் கோயில் இருக்கிறது. பிற நாடுகளில் சூரியனை வழிபட்டு நலம் பெறுகிறவர்கள் பலர்.

சூரியனுடைய வணக்கத்தைப் பழங்கால நூல்கள் நன்கு தெரிவிக்கின்றன. வேதத்திலுள்ள ஆருணம் என்பது சூரிய வணக்கத்துக்குரியது. அகத்தியர் இராமபிரானுக்கு ஆதித்திய இருதயம் என்ற கதிரவன் துதியை உபதேசம் செய்தார். தமிழில் சிறந்த காப்பியமாகிய சிலப்பதிகாரம் முதலில் சந்திரனையும், பின்பு சூரியனையும் புகழ்கிறது.

''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்''

என்று தொடங்கும் கதிரவனது வாழ்த்துப் பாடல் அமைந்திருக்கிறது. இப்படிப் புலவர்கள் பலரும் புகழ் பேச விளங்குவது ஞாயிறு.

பலர் புகழ் ஞாயிறு.

## உதய ஞாயிறு உவமை

சூரியன் கீழ்கடலில் உதயமாகிறான். நக்கீரர் பாண்டிய நாட்டில் வாழ்ந்தவர். அவர் கீழ் கடலுக்குச் சென்று உதயத்தைக் கண்டிருக்க வேண்டும். கண் கொள்ளாப் பேரழகோடு செக்கச்செவேல் என்று அவன் தோன்றும் போது அந்த அழகில் அவர் ஈடுபட்டிருக்கிறார். அது அவருக்கு நெஞ்சில் நின்றிருக்கிறது. இருள் கப்பிய குகை யில் இருக்கும்போது அதற்கு நேர் மாறான கதிரவனது நினைவு வருகிறது. ஞானசூரியனாகிய முருகப்பெருமா னுக்கு அவனை உபமானமாகச் சொல்ல வேண்டுமென்று தோற்றுகிறது. பால சூரியன் எல்லோரும் கண்ணிலே காணும் வண்ணம் நீலப் பெரும் பரப்பாகிய கடலின் மேலே தோன்றினாற்போல முருகன் தோன்றுவான் என்ற கருத்தை முதலில் தெரிவிக்கிறார். நீல வானம் மேலே இருக்க,

நீலக்கடல் கீழே பரந்து நிற்க, அவற்றினிடையே சூரியன் தோன்றுகிறான். நீலத் தோகை விரிந்து இருக்க, நீல உடம்பையுடைய மயிலின் மேல் செக்கச் செவேல் என்று முருகன் எழுந்தருளுகிறான். உதய சூரியனும், உலாவரும் முருகனும் உவமையாகிறார்கள்.

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்கு.

முருகப் பெருமானை நம்முடைய உள்ளக் கண்ணில் தரிசனம் செய்வதற்குரிய வழியைக் காட்ட வருகிறார் நக்கீரர். தெரிந்ததைக் கொண்டு தெரியாததைச் சொல்வது பெரியவர்களுடைய இயல்பு. திருவள்ளுவர் முதல் குறளில் தெரிந்த உலகத்தைக் கொண்டு தெரியாத ஆதிபகவனைப் பற்றிச் சொன்னார். அதுபோல் இங்கு மயில்மேலே எழுந்தருளி வரும் முருகப் பெருமானை நமக்கு நினைப்பூட்டுவதற்குக் கடலின்மேல் உதயமாகும் கதிரவனை உவமையாக எடுத்துச் சொன்னார் நக்கீரர். அந்த உவமையைக் கொண்டு இந்த ஞாயிற்றுக்குரிய கால எல்லை, இட எல்லை ஆகியவை முருகனுக்கும் உண் டென்று எண்ணக்கூடும் அல்லவா? ஆகையால் முதலில் ஒப்புமை கூறிய பின்பு வான சூரியனுக்கும், ஞான சூரிய னாக உள்ள முருகப்பெருமானுக்கும் உள்ள வேறுபாட்டைச் சொல்ல வருகிறார்.

## வேறுபாடு

முருகப்பெருமான் தேசு நிறைந்த திருமேனியன், சூரியன் சுடர் உருவன். சூரியனுடைய சுடர் புறக் கண்ணுக்குப் புலனாவது. முருகப்பெருமானுடைய திருவுரு வம் அகக்கண்ணுக்குப் புலனாவது. இரண்டுக்கும் வேறு பாடு உண்டு. சூரியன் தன்னுடைய சுடரை வீசும் போது ஒரு

குறிப்பிட்ட பகுதியில்தான் வீசலாம். நாம் இருக்கும் உலகத்தின் பக்கத்தில் கதிரவன் சுடர் வீசும் போது அமெரிக்க நாட்டில் இரவாக இருக்கும், சூரியன் இட எல்லைக்குள் அடங்கியவன். அப்படியே அவன் கால எல்லைக்குள்ளும் அடங்குபவன், சூரியனை ஒரு மேகம் மறைத்துவிடலாம். சூரிய கிரகணம் உண்டாகும்போது அவன் ஒளி மறைகிறது. எல்லாம் அடங்கிய மகாப்பிரளய காலத்தில் சூரியனும் அழிந்துவிடுவது உண்டு. ஆகையால் அவன் கால எல்லைக்கும் இட எல்லைக்கும் அகப்பட்டவன். முருகனோ சூரியனைப் போல ஒளியுடையவன் என்றாலும் கால எல்லை, இட எல்லை இரண்டுக்கும் அப்பாற்பட்டு விளங்குபவன். இந்தக் கருத்தை நக்கீரர் சொல்ல வருகிறார். முருகப் பெருமானுடைய அற்புதமான தேசு எப்படி இருக்கிறது என்பதை மூன்றாவது அடியில் சொல்கிறார்.

**ஓஅற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி**

அந்த ஒளி தியானம் பண்ணுவாருடைய உள்ளத்தில் விட்டு விளங்குகிறது. யார் யார் முருகன் திருவுருவத்தைக் காணும் பாக்கியம் பெற்றார்களோ அவர்களுடைய உள்ளத்தையும், கண்ணையும், வாழ்வையும் ஒளி மயமாக்கு வது அவனுடைய திவ்ய தரிசனம். அந்த ஒளி ஓஅற இமைக்கின்றது. ஓஅற என்பதற்கு இடைவிடாமல், நீக்கம் இல்லாமல் என்பது பொருள். கால எல்லை இல்லாமல் அவிர்கின்ற ஒளி ஆதலின் இடைவிடாது ஒளி வீசுகின்றது. இறைவனுடைய திருவருளால் ஒளி பெறுகின்ற பொருள்கள் மூன்று, அவற்றை மூன்று சுடர்கள் என்று சொல்வார்கள். சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய இந்த மூன்று சுடர் களுக்குள் சூரியன் மிகப்பெரியவன். அவனினும் சிறியது சந்திரன். இந்த இரண்டையும் விடச்சிறியது அக்கினி. இந்த

மூன்றும் முற்றும் மங்கும் காலம் உண்டு. அந்தக் காலத்திலும் ஒளிவீசுவது இறைவன் திருவுருவம். அதற்குக் கால எல்லை இல்லை. துளக்கமின்றி ஒளிர்கின்ற சோதி அது. அதனால் அதை, ''ஓவற இமைக்கும் அவிர் ஒளி'' என்று சொன்னார்.

இட எல்லையையும் கடந்து விளங்குவது அப்பேரொளி என்று மேலே சொல்ல வருகிறார்.

## சேண் விளங்கு அவிர்ஒளி

சேண் என்பதற்கு நெடுந்தூரம் என்று பொருள். சூரியனுடைய ஒளி கதவை அடைத்தால் உள்ளே புகுவது இல்லை. கண்ணை மூடிக்கொண்டால் உள்ளே புகுவது இல்லை. பூமியின் மற்றொரு பாகத்திலும் சாருவது இல்லை.

மனிதனுடைய உள்ளத்தில் இருக்கும் அறியாமை என்னும் இருளைப் போக்குவதற்கு இந்த மூன்று சுடர் களாலும் முடியாது. எத்தனை ஒளியுடனும் வெப்பத்துட னும் சூரியன் கதிரை வீசினாலும் மனிதனுடைய அறியாமை இருட்டைப் போக்குவதற்கு அந்தக் கதிரினால் ஆகாது. முருகப் பெருமானுடைய அவிர் ஒளியோ எல்லை கடந்தது. நுட்பமான பொருள்களிலும் புகுந்து வீசுவது. உண்மையைச் சொல்லப்போனால் ஆண்டவன் மனிதனுடைய இதய குகைக்குள் ஒளியாக இருக்கிறான். அதனால் குகன் என்ற பெயர் வந்தது. வேறு எந்த ஒளியினாலும் அடைவதற்கரிய அந்த உள்ளிடத்தை அவனுடைய ஒளிதான் அடைந்து நிற்கிறது. அதனை நாம் உணர்வதில்லையேயொழிய அந்த ஒளி எப்போதும் அங்கே விட்டு விளங்குகிறது. விளக்கை மரக்காலைப் போட்டுக் கவிழ்த்துவிட்டால் அதனுடைய வெளிச்சம் வெளியில் தெரியாது. அது போல் நம்முடைய இதய குகையில் ஒளிர்கின்ற அந்தப் பேரொளியை அகந்தை

என்னும் மரக்காலால் மறைத்து வைத்திருக்கிறோம். அதனால் அந்த ஒளி வெளிப்படுவதில்லை.

"குகையில் வளரும் கனலே"

என்று பாரதியார் பாடுகின்றார்.

மலையின்மேலே ஒரு விளக்கைப் போட்டால் அதன் கதிர் பல விடங்களுக்கு வீசும். மலையின் உள்ளே இருக்கும் குகைக்கு நடுவில் கொண்டுபோய் அதை வைத்து விட்டால் அதன் ஒளி வெளியில் பாயாது. அப்படி நம்முடைய உள்ளக் குகையில் அந்தப் பேரொளியை வெளியே பரவவிடாமல் வைத்திருக்கிறோம். அப்படிச் சொல்வதைவிட அந்த ஒளி வெளியில் பரவாமல் நாம் நம்முடைய அகந்தையினாலும், மமகாரத்தினாலும் அடக்கி வைத்திருக்கிறோம் என்று சொல்வது பொருத்தம்.

முருகப்பெருமானுடைய பேரொளியானது காலம் கடந்து, இடம் கடந்து ஒளிர்வது என்பதை ஓர் அடியில் நக்கீரர் விளக்குகிறார்.

ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி.

முருகன் உலகம் எல்லாம் உவக்கும்படியாக எழுந்து, மயில்மேல் உலா வருகிற தோற்றத்திற்குச் சூரியனை உவமையாக எடுத்துச் சொல்லலாம். ஆனால் முருகப் பெருமானுடைய பேரொளி காலம் கடந்து. இடம் கடந்து விளங்குவதாதலின் அந்த ஒளிக்குச் சூரியனை உவமையாக்க முடியாது என்ற குறிப்பு இந்த அடிகளால் நமக்கு விளங்குகிறது.

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி.

(உலகில் உள்ள உயிர்களெல்லாம் மகிழும்படி வலமாக எழுந்து வானத்தில் உலாவும், பல வகையான அறிஞர்களும் புகழும், கதிரவனைக் கடலின் மேலே உதய மாகும் போது கண்டாற்போல, இடையீடு இல்லாமல் சுடர் விடுகின்ற, நெடுந்தூரத்திலும் சென்று விளங்கும், பரவிய ஒளி - இதை உடைய முருகன் என்று சொல்ல வருகிறார்.)

---

# வாணுதல் கணவன்

## திருவுருவம்

நெடுந்தூரத்திலிருந்து அழகிய மனிதன் ஒருவன் வருகிறான். அவன் வரும்போது அவனுடைய முழு உருவமும் விளங்குமேயன்றி அவனுடைய அங்க அடையாளங்கள் தெளிவாக விளங்கா. நெடுந்தூரத்தில் எழுந்தருளியிருக்கிற முருகப் பெருமானை நமக்குச் சுட்டிக் காட்டுவார் போல அவனுடைய ஒளிப் பிழம்பான திருமேனியை முதலில் சொன்னார் நக்கீரர். பின்பு அந்தப் பெருமானுடைய அங்க அடையாளங்களைக் காட்ட வருகிறார். முருகன் ஒளிப் பிழம்பாக நின்றாலும் திருவுருவம் கொண்டு விளங்குகிறான். குறி குணம் கடந்த இறைவன் எண் குணத்தானாகவும், தாள் முதலிய அங்க அடையாளங்கள் உடையவனாகவும் எழுந்தருளுவது, ஆருயிர்கள் எல்லாம் உய்ய வேண்டுமென்ற பெரும் கருணையினால் தாள்.

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

என்று திருக்குறளில் இந்தத் தத்துவத்தைப் புதைத்து வைத்திருக்கிறார் வள்ளுவர். தனக்கெனக் குணமும், குறியும் இல்லாத எம்பெருமான் திருமேனியும் குணமும் கொண்டு வருவது உயிர்களைக் காப்பாற்றும் பொருட்டு. எண்குணம் உடையவனாகவும், தாள் முதலிய அங்கங்கள், உருவ

அடையாளங்கள் உடையவனாகவும் எழுந்தருளுகிறான். அதனால் மக்கள் அவனைச் சார்ந்து வணங்கி நலம் பெற முடிகிறது.

## திருவடிச் சிறப்பு

இப்படி எண்குணத்தானாக, குணமும் குறியும் பெற்று ஆண்டவன் எழுந்தருளுவதை நக்கீரர் இங்கே காட்டுகிறார். ஆண்டவனுடைய திருமேனியில் அடிமுதல் முடிகாறும் பல அங்கங்கள் உள்ளன, எல்லாம் அழகின் பகுதிகள்தாம். திருமேனி முழுவதும் பெரும் சோதிப் பிழம்பானால் ஒவ் வோர் உறுப்பும் அந்தச் சோதிப் பிழம்பின் சுடர்க் கீற்றுகள். அவை எல்லாமே பேரழகு பொருந்திய அங்கங்கள்.

அந்த உறுப்புகளுக்குள் எது சிறந்தது? இந்தக் கேள்வி சற்றுச் சங்கடமானது. மனிதனுடைய உடம்பில் 32 அங்கங் கள் இருக்கின்றன. அவற்றில் தலைமையானது தலைதான். தலை என்ற பெயரே அது சிறப்பான அங்கமாதலால் அமைந்திருக்கின்றது. வடமொழியில் அதை உத்தமாங்கம் என்று சொல்வார்கள். நம்முடைய உடம்பில் ஐந்து வகையான இந்திரியங்கள் இருக்கின்றன. காண்பதற்கும், கேட்பதற்கும், மணம் நுகர்வதற்கும், சுவை நுகர்வதற்கும், பரிசத்தைப் பெறுவதற்குமாக ஐந்து இந்திரியங்கள் நாம் பெற்றிருக்கிறோம். கழுத்துக்கு மேலே இந்த ஐந்து பொறிகளும் இருக்கின்றன. கழுத்துக்குக் கீழே பஞ்சேந்திரி யங்களில் ஒன்றுதான் இருக்கிறது. ஆதலின் எல்லா இந்திரியங்களும் ஒருங்கே அமைந்திருக்கிற தலை சிறந்ததாயிற்று. அறிவின் நிலையமாகிய மூளை தலையில் இருக்கிறது. அதோடு மனிதன் நிமிர்ந்து நிற்கிறவன். ஆகையால் அவன் உடம்பில் உயரமாக இருப்பது தலை. இத்தனை காரணங்களால் அதனை உத்தமாங்கம் என்று சொல்வார்கள்.

இறைவனுடைய திருமேனியில் மிகச் சிறந்த அங்கம் எது? மனிதனைப்போல இறைவனுக்கும் தலைதான் உத்தமாங்கம் என்று சொல்லலாமா? அது பிழை. இறைவனைக் காட்டிலும் அவன் திருவடி சிறந்தது என்பதைப் பரிபாடலில் ஒரு புலவர் பாடுகிறார்.

"நின்னிற் சிறந்தநின் தாளிணையவை."

அடியார்களுக்குப் பற்றுக்கோடாக இருப்பது அவனுடைய தாள். அவன் மிக உயரமானவன். அவனைப் பற்றிக் கொள்வது என்பது எளிய காரியம் அன்று. தேவர்களுக்கு அடி பூமியில் பாவாது என்று சொல்வார்கள். தேவர்களுக்கு எல்லாம் சிறந்த தேவனாக ஆண்டவன் இருக்கிறான். அவன் இந்த உலகத்தில் தன் தாள் படிய வருகிறான். அதற்குக் காரணம் நாம் இந்த உலகத்தில் பிறந்து வாழ்வது தான். நம்மை ஆட்கொள்ள வேண்டு மென்று நமக்கு அண்மையில் உள்ள திருவடியைப் பற்றிக்கொள்ளும் படி வந்து அருளுகிறான். நமக்காகவே தாள் படைத்து நம்மை அணுகி வருகிறான். ஆதலால் அவன் திருத்தாள் அடியார்களுடைய பற்றுக் கோடாக நிலவுகிறது. இறைவ னுக்குப் பல வகை அங்கங்கள் இருந்தாலும், அவற்றை எல்லாம் அடியவர்கள் கண்டு இன்புற்றாலும், அவர்கள் பெரும் பயன்பெறுவது அவனுடைய திருவடியில்தான். அடியார் என்ற பெயரே அதனைக் குறிப்பிக்கிறது.

## தாங்கும் தாள்

ஆகவே, ஒளிப்பிழம்பாகிய முருகனைக் காட்டிய நக்கீரர் அவனுடைய அழகிய அங்கங்களைச் சுட்டிக் காட்டத் தொடங்கி, முதலில் அவனுடைய திருத்தாளைப் பற்றிச் சொல்ல வருகிறார். அது மிகவும் வலிமை பெற்ற தாள், தன்னை அடைந்தார்க்கு நலம் செய்கின்ற தாள்.

உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன் தாள்

என்று அதைப் பாராட்டுகிறார். அந்தத் தாள் தன்பால் அடைந்தவர்களை எல்லாம் தாங்குகிறதாம். அவர்கள்பால் உள்ள அறியாமையை உடைத்து ஒழிக்கிறதாம். உறுநர் என்றால் அடைவர் என்று ஒரு பொருள்.

உலகத்தில் வேறு ஒரு காப்பும் இல்லாமல், தாம் அடையும் துன்பங்களைப் போக்குவதற்கு உலகிலுள்ள யாரும் துணையில்லை யென்பதனை உணர்ந்து, இறைவன் ஒருவன்தான் பாதுகாப்பு என்ற உண்மை அறிவு வரப் பெற்றவர்கள் அவனை அடைகிறார்கள்.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது."

என்று வள்ளுவர் சொன்னார்.

உலகிலுள்ள மக்களுக்குள் அறிவாலும், ஆற்றலாலும், திருவாலும் உயர்ந்தவர்கள் பலர் இருக்கிறார்கள். இவற்றில் படிப்படியாக உயர்ந்து நிற்கிறவர்களைப் பார்க்கிறோம். கீழ்ப் படியில் உள்ளவர்கள் மேல்படியில் உள்ளவர்கள் சிறந்து நிற்பதாக எண்ணுகிறார்கள். ஆகவே கீழ்ப்படியில் உள்ளவர்களுக்குக் குறை உண்டானால் அடுத்த படியில் உள்ளவர்களைச் சாருகிறார்கள். அந்தச் சமயத்தில் அவர் களுக்கு மேல்படியில் உள்ளவர்கள் சிறிது நலம் செய்தாலும், அவர்களும் குறைபாடு உள்ளவர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய குறைகளைத் தம்மிலும் மேற்படி யிலுள்ளவர்களை அண்டிப் போக்கிக் கொள்ளலாம் என்று நினைக்கிறார்கள். இந்த வகையில் ஒவ்வொருவரும் தத்தமக்கு மேல் உள்ளவர்களைச் சார்ந்து தம் குறைகளைப் போக்கிக்கொள்ளலாமே என்று நினைக்கிறார்கள். ஆனால் யாரும் எல்லோருடைய குறையையும் போக்க முடியாது.

குறைவிலா நிறைவுடையவனாகிய ஆண்டவன் ஆருயிர் களுக்கு நலம் செய்யும் ஆற்றல் உள்ளவன். அவனே எத்தகைய குறையையும் போக்க வல்லவன்; எல்லாம் வல்லவன்; எல்லாவற்றையும் அருளுகிறவன். அவன் அருளால்தான் உலகம் இயங்குகிறது; ஆருயிர்கள் உய்கின்றன.

இந்த உண்மையை உணர்ந்து அடியார்கள் உலகில் உள்ள செல்வரையும் மற்றவரையும் சார்ந்து அடைக்கலம் புகாமல், இறைவன் ஒருவன்தான் நமக்குப் புகலாக இருப்பவன் என்று உணர்ந்து அன்போடு சாருகிறார்கள். அப்படிச் சாரும்போது ஆண்டவன் அவர்களைத் தாங்கி நிற்கிறான். தாங்குதல் என்ற சொல்லே பாரத்தைத் தாங்குதல் என்ற பொருளைத் தருகிறது. தான் தாங்குவதாக நினைத்து மனிதன் பற்றை வளர்த்துக் கொள்கிறான். மனைவி, மக்கள், உடம்பு முதலியவற்றைப் பாதுகாக்க வேண்டுமென்று பலபல செயல்களைச் செய்கிறான். ஆனால் அந்தப் பாது காப்புகளால் அவை காப்பாற்றப்படுவதில்லை. தாங்கும் திறன் மனிதனுக்கு இல்லை. வண்டியில் செல்கிறவன் ஒருவன் தன்னுடைய கைப்பொருளைக் கீழே வைக்காமல் தலையின் மேலேயே தாங்கிக்கொண்டிருந்தால் அது எத்தனை மடமையோ, அத்தகையதே உலகத்தார் தாம் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருப்பதாக நினைப்பது. உண்மையில் எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டு நிற்கிறவன் ஆண்டவன். இறைவனைப் பற்றிக்கொண்டு நம்முடைய மனத்திலுள்ள கவலையைப் போக்கிவிட்டால் தலையில் தூக்கிக்கொண்டு வந்த பாரத்தை வண்டி ஏறின வுடன் அதில் வைத்து நலம் பெற்றவனைப் போலாகிறான்.

ஆண்டவனுடைய அடியார்கள் தம்முடைய கடமை இறைவனைச் சரணாகதி அடைவது ஒன்றுதான் என்பதை நன்கு உணர்ந்தவர்கள், எந்த விதமான செயலும் இல்லாமல்

அவனுடைய திருவடியைப் பற்றிக்கொண்ட படியே கிடப்பது அடியார்கள் நிலை. வண்டியைப் பிடிக்கும் மட்டும் நாம் ஓடவேண்டுமே யன்றி வண்டியில் ஏறிக் கொண்ட பிறகு ஓடவேண்டிய அவசியம் இல்லை. அது போல் இறைவனைப் பற்றுக்கோடாகப் பெறும் மட்டும் அவனுடைய திருவடியைச்சாரப் பல முயற்சிகளைச்செய்ய வேண்டும். அவன் திருவடித் தொடர்பு பெற்றுவிட்டோமா னால், எனக்கு இனிச் செயல் இல்லையென்று எல்லா வற்றையும் அவனிடம் ஒப்படைத்துச் சும்மா கிடத்தல்தான் முறை. அப்படிக் கிடந்தோரை ஆண்டவன் தாங்கிக் கொள்வான்.

"தன்க டன்அடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே."

## திரௌபதியின் கதை

திரௌபதியின் கதை இதனை நன்கு தெரிவிக்கும். அறிவும், திருவும், ஆற்றலும் உள்ள கணவர் ஐந்து பேரை அவள் பெற்றாள். உலகம் போற்றுகின்ற பெருவீரர், அறம் நிறைந்த நெஞ்சினர், புகழுடையோர் அவளுடைய கணவர் கள். ஆயினும் நூற்றுவர் தலைவனாகிய துரியோதனன் அவளை மானபங்கம் செய்ய எண்ணினான். துச்சாதனனை விட்டு அவள் துகிலை உரியச் செய்தான். அரசர்கள் பலர் அந்த அவையில் அமர்ந்திருந்தார்கள். உறவினர்களும், கணவர்களும் அங்கு இருந்தார்கள். அறிவும், நீதியிலிருந்து பிறழா நேர்மையும் நிறைந்த நெஞ்சினர்கள் இருந்தார்கள். திரௌபதி தன்னுடைய கணவர்களுடைய ஆற்றலால் பாதுகாப்புப் பெறலாம் என்று எண்ணினாள். அவர்கள் வலியிழந்து போனார்கள். அறனும், நேர்மையும் உடைய பீஷ்மர் முதலியவர்கள் தன்னுடைய மானத்தைக்

காப்பாற்றுவார்கள் என்று எண்ணினாள். அவர்களும் பொலிவிழந்து வலிவிழந்து நின்றார்கள். அவர்களிடம் பல பேசித் தர்க்கம் செய்தாள். அவளுடைய அந்த வாய் வன்மையும் வலியிழந்து போயிற்று. தன் கையால் துகிலைப் பற்றிக்கொண்டாள். அதனாலும் பயன் இல்லை. தன் மானத்தைக் காக்கும் தகைமையுடையவன் கண்ணபிரான் ஒருவனே என்று உணர்ந்தாள். அவன்தான் பற்றுக்கோடு என்று தெளிந்து அவனை நினைந்து துதித்துப் புலம்பினாள். அவள் தன் உடையைக் கையினால் பற்றிக்கொள்ளும் வரைக்கும் கண்ணன் திருவருள் அவளுக்குக் கிட்டவில்லை. கடைசியில் அந்தக் கைகளையும் விட்டுத் தலைமேல் கை குவித்து, ''கோவிந்தா, கோவிந்தா!'' என்று அரற்றியபோது தான், கண்ணபிரான் அவளுக்கு அருள் செய்ய முன்வந்தான்; துச்சாதனன் துகிலை உரிய உரிய, மேலும் மேலும் அவளுக்குப் பலபல வண்ண வண்ண ஆடைகளை வழங்கினான்.

இந்தக் கதையில் ஒரு பேருண்மை இருக்கிறது. பிறர் நம்மைத் தாங்குவார் என்று எண்ணியிருந்த திரௌபதி, அவர்கள் தன்னைத் தாங்கும் ஆற்றல் இல்லாதவர்கள் என்பதை உணர்ந்தாள். தன்னைத் தானே தாங்கிக் கொள்ள லாம் என்று கடைசியில் எண்ணினாள். கடைசியில் அதுவும் பயன் அற்றுப் போயிற்று. யாரும் தாங்கமாட்டார்கள், ஆண்டவன் ஒருவன்தான் துணை என்ற நினைவு அவளுக்கு வந்த போதுதான் கண்ணன் அவளைத் தாங்க முற்பட்டான்.

இறைவனுடைய திருவருளில் நம்பிக்கை வைத்து, நம்முடைய வலியின்மையை நன்கு உணர்ந்து, நம்முடைய குறையை வேறு யாரும் தீர்க்க முடியாது என்ற உண்மையை யும் தெரிந்து, அவனைச் சரணாகதி அடையும் போதுதான் அவனுடைய முழு அருளும் நம்மை வந்து சாருகிறது.

நம்முடைய உள்ளத்தில் இறைவனிடம் உறுதியான அன்பு பூண்டு, அவன் நம்மைக் காப்பாற்றுவான் என்ற உறுதியான எண்ணம் வருமானால், நம்மை நாமே தாங்கிக் கொள்ளலாம் என்ற எண்ணமும், பிறர் நம்மைக் காப்பாற்றுவார்கள் என்ற எண்ணமும் போய் விடும். இந்த இரண்டு எண்ணத்தையும் அகற்ற நாம் தெரிந்து கொண்டால் அகந்தை ஒழிந்துவிடும்; இறைவனுடைய பேரருள் உதவியும் நமக்கு உடனே கிடைக்கும். இவற்றையெல்லாம் எண்ணி,

உறுநர்த் தாங்கிய தாள்

என்று சொன்னார். உறுநர் என்பதற்குத் துன்பத்தை அடைந்து தன்பால் வந்தவர்கள் என்று பொருள் கொள்ள வேண்டும். உறுதல் என்பதற்குத் துன்பம் அடைதல் என்றும், அடைதல் என்றும் இரண்டு பொருள்கள் உண்டு. உறு என்பதன் அடியாகப் பிறந்த ஊறு என்ற சொல்லுக்குத் துன்பம் என்ற பொருள் இருத்தலைக் காண்க.

## அறியாமையை அழித்தல்

அடுத்தபடியாக, ''மதன் உடை நோன்தாள்'' என்று சொல்கிறார். தன்பால் வந்தவர்களைப் பாதுகாப்பது மாத்திரம் அன்று. அப்படி வந்தவர்களுக்கு உள்ள இன்னலை அவன் மாற்றிவிடுகிறான். பிறவிக்குக் காரணமாக இருப்பது அவித்தை அல்லது அறியாமை. பிரபஞ்ச மாயையினின்றும் மக்கள் மீளுவது இல்லை. இறைவன் அருளால் ஞானம் பெற்ற பிறகே அவர்கள் பேரானந்தப் பெருவாழ்வை அடைகிறார்கள்.

அறிவுக்கு எதிர்மாறான அறியாமை நம்மிடத்தில் இருக்கிறது. அது பலபல பிறவிகளில் படலம் படலமாக வந்து செறிந்து கிடக்கிறது. கணக்கில்லாத பிறவியைப்

பெற்றுப் பெற்று அந்த அந்தப் பிறவிதோறும் அடைந்த வாசனைகள் எல்லாம் படலம் படலமாகச் சார்ந்ததனால் பாறையைப் போல அறியாமை செறிந்து கிடக்கிறது. அதனை எளிதில் உடைக்க முடியாது. ஆண்டவன் தாள் ஒன்றுதான் அதை உடைக்க வல்லது. தன்னை அடைந்தவர் களை எல்லாம் காலால் தாங்கும் பெருமான் அவன்தான். இறைவன் தாளை நாம் அடையாமல் நிற்பதற்குக் காரணமான அறியாமையையும் அவனுடைய தாளினால் உடைத்து விடலாம். ஆண்டவன் தாள் ஞானமயமானது என்று சொல்வார்கள். பிறரைத் தாங்குவதற்குரிய வல்லமையும் அவர்களுடைய அறியாமையை உடைப்பதற்கு உரிய வல்லமையும் படைத்த தாள் அது; அது ஞானத் தேசு படைத்தது.

''தொண்டர்கண்டு அண்டிமொண் டுண்டிருக்கும் சுத்த
ஞானமெனும்
தண்டையம் புண்டரிகம்.''

என்பது கந்தர் அலங்காரம். அறியாமையை உடைப்பதற்குரிய ஞான சொரூபமாக இருப்பது அந்தத் திருவடி. ஆகையால் தன்பால் அடைந்தவர்களைத் தாங்குவது மட்டுமன்று; அவர்களுடைய அழுக்காகிய அறியாமையை அடியோடு போக்குகின்ற ஆற்றலும் அந்தத் திருவடித் தாமரை பெற்றிருக்கிறது.

சோதிப் பிழம்பாக முருகப் பெருமானை நமக்கு அறிமுகப்படுத்திய நக்கீரர், நம்முடைய கவலை எல்லாம் போக்கி நமக்கு அரணாக நின்று, நம்மிடத்தில் பெரிய நோயாக இருக்கும் அறியாமையைப் போக்குவதற்குரிய புகல் இடமாகிய திருவடித் தாமரையை, இதோ பார் அப்பா என்று காட்டுகிறார்.

உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன் தாள்.

மனிதர்கள் இன்பத்தை விரும்புவார்கள்; துன்பத்தை வெறுப்பார்கள். இன்ப ஆக்கமும், துன்ப நீக்கமும் மனிதர்கள் விரும்புவன. ஆண்டவன் தன்பால் வந்தவர்களுக்கு இன்பத்தைத் தந்து பாதுகாக்கிறான். அவர்களுக்குக் கவலை இல்லாமல் தாங்குகிறான். கண்ணன் கீதையில், ''எல்லாப் பற்றையும் விட்டு என் திருவடியைப் பற்றிக் கொள்கிறதை மட்டும் செய்; நான் உன்னைத் தாங்குகிறேன்'' என்று சொன்னான். அதுபோல் ஆண்டவன் தன்னுடைய திருவடியைப் பற்றிக்கொண்டவர்களுடைய கவலைகளைப் போக்கி, அவர்களுடைய பொறுப்பு எல்லாம் ஏற்றுக் கொண்டு நலம் செய்கிறான், ஆதலின் அவனுடைய தாள் உறுநர்த் தாங்கும் தன்மையுடையது.

## திருக்கரம்

அடுத்தபடியாக முருகப்பெருமானுடைய கையைப் பற்றிச் சொல்ல வருகிறார் நக்கீரர். அது துன்பத்தை நீக்குகிறதாம். தன்பால் வந்து செறுபவர்களை அடியோடு இல்லையாக்கி இடி போல முழங்குகின்ற கை அது.

செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடக்கை

ஆண்டவனுக்குப் பகையும் இல்லை. நட்பும் இல்லை. ஆனாலும் அவனுடன் வந்து போர் செய்பவர்களை அவனுடைய கைகள் தேய்த்துவிடுகின்றன. செல் என்பது இடிக்குப் பெயர். பகைவர்களை அடியோடு அழிக்கும் பராக்கிரமத்தை உடையன அவன் கைகள். அருளும், பராக்கிரமும் அவனுடைய அறக் கருணைக்கும், மறக் கருணைக்கும் அடையாளங்கள். இறைவன் அடியார்களுக்கு அருள் செய்தும், அல்லாதார்களுக்கு மருள் செய்தும் இரண்டு

பேருக்கும் வழிகாட்டுகிறான். இந்த இரண்டும் அவன் கருணைச் செயல்களே. காலால் அறக்கருணை செய்து, கையால் மறக்கருணை செய்கிறான். உறுநர்களைத் தாங்குகிறவன், செறுநர்களைத் தேய்க்கிறான். உறுநரைத் தாங்கிய நோன்றாளையும், செறுநரைத் தேய்த்த தடக்கையையும் உடைய முருகப்பெருமானை நக்கீரர் நமக்கு அறிமுகப் படுத்துகிறார்.

## தாள் தாங்குதல்

இங்கே, தாள் தாங்குகிறது என்றும், தடக்கை தேய்க்கிறது என்றும் சொன்னார். நமக்கோ நம் கைகள் பொருளைத் தாங்கும். கால்தான் தேய்க்கும். இங்கே கால் தாங்குவது என்று சொன்னது எப்படிப் பொருந்தும்? இதனை ஆராயவேண்டும். பெரிய கொட்டகை போட்டிருக்கிறார் கள். அந்தக் கொட்டகையில் பல கால்களை நட்டு மேலே கூரை வேய்ந்திருக்கிறார்கள். ஓரிடத்தில் இரண்டு கால் களுக்கு மேலே விட்டம் போட்டு ஓர் ஊஞ்சல் போட்டிருக் கிறார்கள். அந்த ஊஞ்சலில் நான்கைந்து பேர் உட்கார்ந்து ஆடுகின்றார்கள். ஊஞ்சல் பாரத்தைத் தாங்குகிறது. உண்மையைச் சொல்லப் போனால் ஊஞ்சல் தாங்குகிற தில்லை. அந்தப் பாரத்தைச் சங்கிலியின் வழியாக விட்டம் தாங்குகிறதென்று சொல்லலாம். நன்கு ஆராய்ந்தால் அந்த விட்டமும் தாங்குவதில்லை. விட்டத்தைத் தாங்குகிற கால்களே எல்லாப் பாரத்தையும் தாங்குகின்றன. ஊஞ்சலின் மேலே உட்கார்ந்திருக்கிறவர் ஊஞ்சலில் அமிழ்த்தினாலும் அதனுடைய பாரம் முழுவதும் கால்களினால் தாங்கப் படுகிறது. அதுபோல எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருந்து தாங்குகிற கால்களை உடையவன் ஆண்டவன். அவனுடைய காலுக்குக் கீழே பொருள் இல்லை.

"பாதாளம் ஏழினும்கீழ் சொல்கழிவு பாதமலர்."

என்று மணிவாசகர் பாடுவார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாக இருக்கிறதனால் அது எல்லாவற்றையும் தாங்குகிறதேயன்றி, அது தாங்கப்படும் பொருள் அல்ல. இறைவனுடைய அடி எல்லாப் பொருளுக்கும் அடியில், எல்லாவற்றையும் தன்மேலே நிறுத்தித் தாங்கிக் கொண்டிருக்கிறது. அதனால் தாள் தாங்குகின்றது என்று சொன்னார்.

நமக்கோ நம்முடைய காலைத் தாங்குவதற்குத் தரை வேண்டும். தாங்குவதற்குரிய பொருள் இல்லாவிட்டால் நாம் கீழே விழுந்துவிடுவோம். ஆண்டவனுடைய திருவடி அத்தகையது அன்று. ஆதலின் நம்முடைய கால் தாங்கப் படுவது; ஆண்டவனுடைய கால் தாங்குகிறது.

## தேய்க்கும் கை

அடுத்தபடியாகக் கையினால் ஆண்டவன் தேய்க்கிறான் என்று சொன்னார். தேய்த்தல் - அடியோடு அழித்தல். இத்தகைய காரியத்தில் கையும், தோளும் தொடர்புடையன. பராக்கிரமத்திற்கு இடமாக இருப்பது தாள் அல்ல; கைதான். புஜபலம் என்று சொல்வார்கள். பகைவர்களை அடியோடு அழித்து வீரத்தைக் காட்டுவன இறைவனுடைய புயங்கள் அல்லது கைகள். ஆதலால் தேய்க்கும் தன்மையுடையன அந்தத் தடக்கைகள் என்று சொன்னார். எந்தத் திசையில் பகை இருந்தாலும் அங்கே நீண்டு அதனைத் தேய்த்து இல்லையாக்கும் கைகள் அவை.

ஆண்டவனுடைய திருவடி கருணை பில்குவது. அவன் திருப்புயம் வீரம் மலிந்தது. கருணையும் ஆண்மை யும் ஒருங்கே பொருந்தியவன் முருகன். அவன் திருவடியைப் பற்றிக் கொண்டவர்களுக்கு அவனுடைய கருணை

பயன்படும். அவனை நேருக்கு நேர் நின்று எதிர்ப்பவர்களுக்கு அவன் கைகள் ஆண்மையைக் காட்டி அகந்தையை அழிக்கும்.

உறுநர்த் தாங்கி மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை.

முருகப் பெருமானுடைய ஒளிப் பிழம்பாகிய திருவுருவத்தை முதலில் காட்டி, பின்பு உருவத்தில் முதலில் தரிசனம் செய்வதற்குரிய திருவடியைக் காட்டி, அப்பால் திருக்கரத்தைக் காட்டினார் நக்கீரர்.

## தேவயானை

அடுத்தபடி அந்தப் பெருமானுடைய அருகில் வீற்றிருக்கும் தேவயானையைக் காட்ட வருகிறார். ஆறுபடை வீடுகள் இன்னவை என்று சொல்லப் புகுந்த நக்கீரர் முதலில் தோற்றுவாய் செய்யும்போது திருப்பரங்குன்றமாகிய முதல் படை வீட்டைச் சொல்கிறார். திருப்பரங்குன்றம் தேவயானை திருமணம் நடந்த இடம். ஆதலின் இங்கே ஆண்டவனுடைய தேவிமார் இருவருள் தேவயானையை மாத்திரம் சொல்ல வருகிறார்.

மாறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்

என்று அடையாளம் காட்டுகிறார். எம்பெருமானுடைய அருகில் வீற்றிருக்கும் தேவயானை தன்னுடைய உள்ளக் களிப்பை யாவரும் அறியும்படியாக ஒளிபொருந்திய நெற்றியோடு விளங்குகிறாள். உள்ளத்தில் துன்பம் இருந்தால் முகம் வாட்டமுற்றுத் தோன்றும். உள்ளத்தில் பூரிப்பும் இன்பமும் இருந்தால் முகம் ஒளிபெற்றுத் தோன்றும். இங்கே தேவயானையினுடைய நெற்றி அல்லது முகம் ஒளி பொருந்தியதாக நிலவுகிறது. ஆகவே,

வாள் நுதல்

என்று சொன்னார். பாட்டில் தேவயானை என்று குறிப்பதற்குத் தனியே அடையாளம் இல்லாவிட்டாலும்,

மறுஇல் கற்பின் வாள்நு,நல்

என்ற குறிப்பும், முதலில் பரங்குன்றத்தைச் சொல்வதும் தேவயானையை அடையாளம் கண்டுகொள்ளச் செய் கின்றன. குற்றமற்ற, கற்புடைய தேவயானையின் கணவன் என்று பொருள். கற்பு என்பது இங்கே மணத்தைக் குறிப்பது. களவு மணம், கற்பு மணம் என்று இரண்டுவகை உண்டு. களவின் வழிவந்த மணம் தமிழில் மிகச் சிறப்பாகச் சொல்லப்படும். முருகப்பெருமான் தமிழ் இலக்கணத்திற்கு அமைய வள்ளியம் பெருமாட்டியைக் களவு மண வழிப்படி மணந்து கொண்டிருக்கிறான். களவின் வழியே வள்ளியம் பெருமாட்டியை மணம்புரிந்து கொண்டவன் கற்பு மணத்தைத் தேவயானையின்பால் நிகழ்த்தினான். அவள் குற்றமற்றவள்; கற்புடையவள். மறுவில் என்பது கற்பைச் சிறப்பிக்க வந்தது அன்று. மறுவில்லாத வாள்நுதல், கற்புடைய வாள்நுதல் என்று தனித்தனியே கூட்டவேண் டும். வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றியை உடையவள்; அன்மொழித் தொகை.

உலகத்தாருடைய தொடர்பு இல்லாமல் வானுலகத் தில் வளர்ந்தவள் தேவயானை. இந்திரன் முதலியவர்கள் தங்களுக்கு முருகன் செய்த பேருபகாரத்தை எண்ணித் தங்கள் நன்றி அறிவின் அடையாளமாகத் திருமணம் செய்து கொண்டருளவேண்டுமென்று சொல்ல, அதனால் ஆண்டவன் தேவயானையை ஏற்றுக்கொண்டான். அவள் எல்லாவகையிலும் தூய்மை உடையவள்; மாசு மறு அற்றவள். வள்ளியை அடுப்பாரும் கொடுப்பாரும் இல்லாமல் களவு மணத்தில் முருகன் ஏற்றுக்கொண்டான்.

யாரும் காண அடுப்பாரும் கொடுப்பாரும் இருக்கத் தேவயானையை ஏற்றுக் கொண்டான். ஆதலின் அப்பெருமாட்டி கற்புமணப் பெருமாட்டியானாள். இந்தக் கற்பு மணத்தை நினைந்து,

கற்பின் வாள்நுதல்

என்று சொன்னார். மறு இல்லாத வாள் நுதல், கற்பின் வாள் நுதல் ஆகிய தேவயானையின் கணவனாக விளங்குகிறவன் முருகன். தேவயானை முருகப் பெருமானுடைய அருகில் அமர்ந்திருக்கிறாள். இரண்டு பேரையும் ஒருசேர வைத்து நமக்குக் காட்டுகிறார் நக்கீரர். முதலில் ஒளிப் பிழம்பைக் காட்டி, பிறகு திருவடியைக் காட்டி, திருக்கரத்தைக் காட்டி, அந்தக் கரத்தினால் பற்றிக்கொண்டு மணம் செய்துகொண்ட தேவயானையைக் காட்டி, அந்தப் பெருமாட்டியின் கணவன் முருகன் என்று சொல்கிறார். இனி அடுத்தபடியாக அவன் திருமார்பில் அணிந்துள்ள கடம்ப மாலையையும் காந்தட் கண்ணியையும் சொல்ல வருகிறார்.

---

# மாலையும் கண்ணியும்

## கடம்ப மாலை

எப்போதும் போகத்துக்குரிய மாலையாக முருகன் அணிந்திருப்பது கடம்பமாலை. அவன் போர்க்காலத்தில் அடையாள மாலையாக அணிவது காந்தளங் கண்ணி. மார்பில் அணிகின்ற மாலைக்குத் தார் என்று பெயர். ஆடவர்கள் அணிவது தார். மகளிர் அணிவது கோதை. வீரமும் காதலும் நிறைந்த ஆடவர்கள் எப்போதும் தங்களை அலங்கரித்துக் கொண்டிருப்பார்கள். பல விதமான உடையாலும், அணியாலும் அழகு செய்து கொள்வதோடு மலர் மாலையை மார்பில் அணிந்திருப்பார்கள். முருகன் கடம்ப மலர் மண மாலையை அணிந்து கொண்டிருக்கிறான். எத்தகைய கடம்ப மலர்? இங்கே கடம்ப மரத்தையே வருணனை செய்யப் புகுகிறார் நக்கீரர்.

பெரிய மரத்தில் அருமையாக மலர்ந்தது அந்தக் கடம்பமலர். முருகன் எப்போதும் முதன்மையாக இருக்கிற பொருளை எல்லாம் கொள்கிறவன். ஐந்திணையில் முதல் திணையாகிய குறிஞ்சி அவன் நிலம். அந்த நிலத்தில் கார் காலத்தில் பூப்பது கடம்ப மலர். இதோ கார்காலம் வந்துவிட்டது; மேகங்கள் வெள்ளையாகப் படர்ந்து சென்று கடலில் தண்ணீரை முகந்து கொண்டு நிறைந்த கருப்பத் தோடு வானில் வந்து குளிர்ச்சி பெற்று மழையைப் பொழிகின்றன. கன்னங்கரேல் என்று படர்ந்த மேகத்தில் மின்னல் வீசுகிறது;

ஆகாயத்தையே வாளினால் கிழிப்பதுபோல இருக்கிறது அந்த மின்னல். இடித்து மின்னி மழையைப் பொழிகிறது மேகம்; எடுத்த எடுப்பில் பெரிய பெரிய துளிகளாகச் சிதறுகிறது. இப்போது பெய்கிற மழை முதல் மழை.

அந்தப் பெரிய மழை பெய்ததனால் காட்டிலுள்ள மரங்கள் எல்லாம் நன்றாக வளர்கின்றன. மலர் மரங்கள் நிரம்பிய காடு ஆதலின் அது நறுங்கானகமாக, மணம் வீசும் காடாக விளங்குகிறது. இப்போது மழை பெய்தமையினால் தண்மையாக இருக்கிறது. முதல் மழை பெய்த அந்தக் காட்டிலே பெரிய கடம்ப மரம் செறிந்து வளர்ந்து அடர்ந்து படர்ந்து நிற்கின்றது. தழையின் செறிவு எங்கும் இருளைப் பரப்பியிருக்கிறது. கதிரவனுடைய கதிர்கள் உள்ளே புகமாட்டாமல் அவ்வளவு அடர்த்தியாக இருக்கிறது. எங்கும் இருள் உண்டாகும்படியாகக் கிளையும், கொம்பும், தழையும் படர்ந்திருக்கின்றன. பல காலமாக வளர்ந்த கடம்ப மரம் ஆதலின் அது மிகப் பருத்த அடியை உடையதாக இருக்கிறது; அந்த அடியைக் கண்டு அதனுடைய பிராயத்தை வரையறுத்து விடலாம். பருத்த அரையையுடைய கடம்ப மரம் அது; பரா அரை மரா அம்.

அது தண்ணறும் கானகத்தில் வளர்ந்து நிற்கின்றது. தலைப்பெயல் பெய்தமையினால் அந்த மரம் தழைத்துப் பூத்து அழகுபெற நிற்கின்றது. கடம்ப மலர் உருளை வடிவில் இருக்கும்; வட்டமாக இருக்கும்; மாலை மாலையாகப் பூத்து இருக்கும். அந்த மலரைக் கட்டி அணிந்திருக்கிறான் முருகன். அது அவனுடைய மார்பிலே புரளுகிறது.

கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து

இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத்து
உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்.

(கடலை முகந்த நிறைந்த கருப்பத்தை உடைய கரிய மேகம் மின் ஒளி வெட்டும் வானத்தில் வளப்பமான மழைத் துளியைச் சிதறி முதல் மழையைப் பெய்த தண்ணிய மணம் வீசும் காட்டில், இருள் உண்டாகும்படியாகச் செறிந்து படர்ந்த பருத்த அடிமரத்தையுடைய செங்கடம்பினது உருளும் பூவினால் கட்டிய மாலை புரளும் திருமார்பை உடையவன்.

கார்கோள் - கடல். கம - நிறைவு. வாள் - ஒளி. உறை - துளி. பெயல் - மழை. தலைஇய - பெய்த. பொதுளிய - செழித்த. பராஅரை - பரு அரை; பருத்த அடிமரம். மராஅம் - செங்கடம்பு.)

### காந்தளங் கண்ணி

'கடலில் தோன்றும் ஞாயிற்றைப் போன்று நெடுந்தூரம் விளங்கும் பேரொளியையும், தன்னை அணுகுவாரைப் பாதுகாக்கும் வலிய தாளையும், பகைவரை அழிக்கும் விசாலமான கைகளையுமுடைய, தேவயானை கணவன். உருளுகின்ற பூவாகிய கடம்ப மலர் மாலையை அணிந்த மார்பை உடையவன்' என்று முருகனுடைய அடையாளங் களைச் சொன்னார் நக்கீரர். மார்பிலுள்ள மாலையைச் சொன்ன பிறகு அவனுடைய திருமுடியில் உள்ள காந்தளங் கண்ணியைப் பற்றிச் சொல்ல வருகிறார். முருகன் காந்தட் கண்ணி அணிந்தவன் என்று மட்டும் சொன்னால் அடை யாளம் காட்டின அளவோடு நிற்கும். காந்தளங் கண்ணியின் பெருமையைச் சொல்லும் வாயிலாக அது வளருகிற காட்டின் எழில் ஓவியத்தைக் காட்டுகிறார் நக்கீரர்.

## தேவமகளிரின் ஆசை

முருகப்பெருமானுடைய அடையாள மாலை காந்தள். அது வளரும் காடு எத்தகையது தெரியுமா? தேவலோக மகளிர் தம்மை மலர்களால் அலங்கரித்துக்கொள்ள விரும்புகிறார்கள். தேவலோகத்திலுள்ள கற்பக மரத்தில் பொன்னிற மலர்கள் இருக்கின்றன; ஆனால் பன்னிற மலர்கள் இல்லை. முருகப்பெருமானது ஆட்சிக்குரிய குறிஞ்சி நிலத்தில் மலையின்மேல் பல பல வடிவமும் வண்ணமுமுடைய மலர்கள் இருக்கின்றன. தேவலோகத் தில் காணவொண்ணாத அத்தகைய மலர்களை அணிந்து அழகு பார்த்துக் கொள்ள வேண்டு மென்ற ஆசை அமர லோகத்து அணங்கினர்களுக்கு உண்டாகிறது. தங்களால் வணங்கப்பெறும் முருகப் பெருமானுடைய அருள் ஆட்சி யில் வளம் பெறுகின்ற குறிஞ்சி நிலமாதலின் அவர்கள் உரிமையோடு வானிலிருந்து இறங்கி வருகிறார்கள். இயல்பாகவே அவர்கள் ஒளியும், எழிலுமுடைய திரு மேனியைப் படைத்தவர்கள். ஆடையும் அணியும் தேவலோகத்தில் பெற்று அணிந்து கொண் டிருப்பவர்கள். அங்கே கிடையாத மலரலங்காரத்தை இங்கே செய்து கொள்ள வருகிறார்கள். அவர்கள் தம்மை மலர்களால் அலங்கரித்துக் கொண்டு மிக்க களிப்புடன் முருகப் பெருமானை வாழ்த்தி, மலையிலுள்ள சோலையில் ஆடுகிறார் கள். 'அத்தகைய சோலையில் விளைகிறது காந்தள்' என்று விரிவாகச் சொல்ல வருகிறார் நக்கீரர்.

## அணங்கினர் அழகு

சூரர மகளிர் என்பது தேவப் பெண்களுக்கு ஒரு பெயர். அவர்களைக் கண்டால் அவர்களுடைய அழகே அச்சத்தை உண்டாக்கும்; சூர் என்பது அச்சத்திற்கு ஒரு பெயர். அவர்கள் வந்து தங்களை அலங்கரித்துக் கொள்ளும் இடம் பெரிய

மலை. அந்த மலைகளில் மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்திருக் கின்றன.

மால்வரை நிவந்த சேண் உயர் வெற்பில்

(பெரிய மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்த மிக உயரமாகிய மலையில்.)

அங்கே வருகின்ற அணங்கினருடைய அழகு எத்தகையது? அவர்கள் வரும்போது கிண்கிணென்று அவர்கள் காலிலுள்ள கிண்கிணி ஒலிக்கிறது. அந்தப் பாதம் அழகாக, சிறியதாக, விளக்கம் தருவதாக இருக்கிறது.

கிண்கிணி கவைஇய ஒண் செஞ் சீறடி.

(கிண்கிணியால் சுற்றப்பெற்ற ஒளிபொருந்திய சிவந்த, சிறு அடி.)

அவர்களுடைய கால் திரட்சி பொருந்தியதாக இருக்கிறது. நல்ல வளம் பொருந்திய திருமேனி உடையவர்கள் ஆதலின் அவர்களுடைய உறுப்புக்கள் நல்ல வளர்ச்சி பெற்று விளங்குகின்றன. திரட்சியான காலும், உள் வாங்கிச் சிறுத்திருக்கும் இடையும், பருத்த தோள்களும் உடையவர்களாக அவர்கள் விளங்குகிறார்கள்.

கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்

(திரண்ட காலையும், உள்வாங்கிய இடையையும் பருத்த தோளையும் உடையவர்கள் என்று சொல்ல வருகிறார். கணை - திரட்சி.)

அவர்கள் தம்முடைய இடையில் அழகிய பூந்துகிலை அணிந்திருக்கிறார்கள். அது செக்கச் செவேல் என்று இருக்கிறது. தேவலோகத்து மகளிராதலின் அந்தத் துகில் மனிதர்களின் கைத் திறனால் உண்டானது அன்று. இயற்கையாகவே மென்மையும், சிவப்பு வண்ணமும்

அமைந்த துகில் அது. கற்பகமரம் தந்தது போலும்! வண்ணம் தோய்க்காத பூந்துகில். இந்திர கோபப் பூச்சி என்று ஒன்று உண்டு. அதைப் பட்டுப் பூச்சி என்றும் சொல்வார்கள். கார் காலத்தில் நிலத்தில் ஊர்ந்து கொண்டிருக்கும். அதைப் போன்ற சிவப்பையுடைய துகிலை இந்த அணங்கினர் அணிந்திருக்கிறார்கள்.

கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்

(இந்திர கோபப் பூச்சியைப் போன்ற, வண்ணத்தில் தோய்க்காமல் இயல்பாகவே சிவந்துள்ள மெல்லிய துகில்.)

பெண்கள் தம்முடைய இடையில் மேகலை என்ற அணிகலனை அணிந்திருப்பார்கள். மேகலையில் பல வகைகள் உண்டு; பல வடிவங்கள் உண்டு. அந்த வடிவங்களுக்கு ஏற்றபடி அவை பெயர் பெறும். காஞ்சி என்னும் மேகலை எட்டுக் கோவைகளையுடையது. மேகலை என்ற பெயரையுடையது ஏழு கோவைகளைப் பெற்றது. பதினாறு கோவைகளையுடையது கலாபம் என்று பெயர் பெறும். பதினெட்டுக் கோவைகளையுடையது பருமம். முப்பத்திரண்டு கோவைகளையுடையது விரிசிகை என்ற பெயர் பெற்றது. இங்கே அணங்கினர் மென்மை உடையவராதலின் மிகக் குறைந்த வடங்கள் ஆகிய ஏழு கோவைகளைக் கொண்ட மேகலை என்பதை அணிந்திருக் கிறார்கள். ஏழு வடமாக இருந்தாலும் ஒவ்வொரு வடத்திலும் பற்பல மணிகளைக் கோத்திருக்கிறார்கள்.

பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்.

(பல மணிகளைக் கோத்த ஏழு வடமாகிய மேகலையை அணிந்த இரகசிய உறுப்பை உடையவர்கள் என்று சொல்ல வருகிறார்.)

ஆடைக்குள்ளேயே மேகலையை அணிவது உண்டு. அது அவர்களுடைய இரகசிய உறுப்பை மறைத்து நிற்கும். அவர்களுடைய பேரழகைப் பார்த்தால் யாரோ அலங்காரம் செய்ததுபோலத் தோன்றாது. அவர்கள் செய்துகொண்ட அலங்காரம் அத்தனையும் பிறக்கும் போதே ஒட்டிவந்தன போலத் தோற்றும்.

கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்.

(ஒருவருடைய கையால் அழகாகப் புனைந்து அமைக் காத அலங்காரத்தைப் பெற்ற அழகை உடையவர்கள் அவர்கள்.)

அவர்கள் ஆபரணங்களை அணிந்திருக்கிறார்கள். அந்த ஆபரணங்கள் நல்ல ஒளியுடன் விளங்குகின்றன. பொன்னாபரணங்கள்தாம். பொன்னில் பலவகை உண்டு. இங்கே சாம்பூநதம் என்று பெயர்பெற்ற பொன்னால் அமைந்த அணிகளை அவர்கள் அணிந்திருக்கிறார்கள். சாம்பூநதம் என்பது நாவற்பழத்தின் சார்பு பெற்று விளங்குகின்ற பொன். பாரதநாட்டுக்கு வடக்கே நாவல் மரம் ஒன்று பழையதாக இருக்கிறது என்றும், அதனுடைய பழம் நன்றாகக் கனிந்து சாற்றை ஒழுக விடுகிறது என்றும், அந்தச் சாறு சென்ற இடங்கள் எல்லாம் சிறந்த பொன் ஆகின்றன என்றும் சொல்வார்கள். ஜம்பூ என்பது நாவலுக்குப் பெயர். நாவல் பழத்தின் சாறு ஆறாக ஓட அதனால் சிறப்புற்றதனால் சாம்பூநதம் என்ற பெயர் பெற்றது. நாவல் பழத்தோடு சேர்ந்து பெயர்பெற்ற பொன்னாகிய சாம்பூநதத்தினால் செய்த ஆபரணங்களை அவர்கள் அணிந்திருக்கிறார்கள்.

நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர் இழை.

(சாம்பூநதம் என்று நாவல் பழத்தோடு பெயர் பெற்ற பொன்வால் அமைந்து விளங்கும் ஆபரணத்தை உடையவர்கள்.)

அவர்களுடைய இயற்கையான நிறம் நெடுந்தூரம் விட்டு விளங்குகின்றது. சிறிதளவும் மாசு இல்லாத திருமேனியை உடையவர்கள் அவர்கள்.

சேண் இகந்து விளங்கும் செயிர்தீர் மேனி.

(நெடுந்தூரத்தைக் கடந்து விளங்குகின்ற குற்றம் தீர்ந்த நிறத்தினை உடையவர்கள்.)

இனி அவர்களுடைய தலை அலங்காரத்தைச் சொல்ல வருகிறார். இங்கே மலைச்சாரலில் கிடைக்கின்ற மலர்களை எல்லாம் பறித்துத் தம்முடைய தலையை அலங்கரித்துக் கொள்கிறார்கள். அந்த அலங்காரத்திற்கு ஏற்ற வகையில் அவர்களுடைய கூந்தல் சிறப்பாக விளங்குகிறது. அவர்களுடைய கூந்தலின் சிறப்பை அவர்களுடைய தோழி மார்கள் எடுத்துப் பாராட்டுகிறார்கள். அந்த ஓதி ஈரமாக, கடையொத்து இருக்கிறது.

துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி.

(தோழிமார்கள் நன்றாக ஆராய்ந்து பாராட்டுகிற கடையொத்த, நெய்ப்புடைய கூந்தல்.)

## தலை அலங்காரம்

இனி அந்தக் கூந்தலில் செய்யும் அலங்கார வகைகளை விரிவாகச் சொல்ல வருகிறார். வெட்சிப் பூ என்பது ஒரு பூ. அது சிவப்பாக இருக்கும். அதனுடைய இதழ்கள் சிறியவை. அந்த வெட்சிப் பூக்களைச் சுற்றி வைத்து, அவற்றிற்கு நடுவில் நீலநிறம் பெற்ற குவளை இதழ்களைக் கிள்ளியிடு கிறார்கள். சிவப்புக்குப் பக்கத்தில் நீலம் இருந்தால் விட்டு விளங்கும் அல்லவா? நடுவில் குவளை இதழ்களும், அவற்றைச் சுற்றி வெட்சி இதழ்களும் நன்றாக இணைந்து அமைந்திருக்கின்றன. அதற்கு மேல் தலையின் ஒரு பக்கத்தில்

ஸ்ரீதேவி என்னும் தலையாபரணத்தைச் சூட்டிக் கொள் கிறார்கள். வலம்புரி என்ற மற்றோர் ஆபரணத்தை வேறு பக்கத்தில் வைத்துக்கொள்கிறார்கள். அவர்களுடைய நெற்றியில் மற்றொரு தலைக்கோலம் வந்து தொங்குகிறது. அந்த நெற்றியில் திலகம் இட்டிருக்கிறார்கள். அது நல்ல மணத்தை வீசுகிறது. அங்கே வந்து தொங்கும் தலைக் கோலம் வாயைத் திறந்து கொண்ட மகர மீனைப்போல விளங்குகிறது. இப்போது சுட்டி என்று சொல்கிறார்களே அதைப் போன்ற ஆபரணம் அது. மகர மீனின் அங்காந்த வாய்போல் இருப்பதனால் அதற்கு மகரப் பகுவாய் என்றே பெயர்.

அவர்கள் தம்முடைய கூந்தலை நன்றாக வாரி உச்சியில் கொண்டையாக முடித்திருக்கிறார்கள். அந்தக் கொண்டைக்கு நடுவில் குளிர்ந்த சண்பகப் பூவைச் செருகியிருக்கிறார்கள். கொண்டையின் மேலே கரிய புற இதழையும், மேலே பிசிரையும் உடைய மருதம் பூக்களை அணிந்திருக்கிறார்கள். அவற்றைக் கொத்தாகவே கொண்டையின் மேலே வைத்திருக்கிறார்கள். கொண்டை நடுவில் சண்பகப் பூவும், மேலே மருதம் பூக் கொத்தும் சேர்ந்து ஒளிவிடுகின்றன. இனி அவற்றையும் சுற்றிச் செக்கச் செவேல் என்ற அரும்புகளை மாலையாகக் கட்டி, எல்லை கோலி வைத்தாற்போல அணிந் திருக்கிறார்கள். அந்தச் செவ்வரும்பு நன்றாக மலர்வதற்கு முன் நீருக்குள்ளே இருந்தவை. நன்றாக மலர்ந்தால் அதன் சிவப்புக் கொஞ்சம் குறையும். அரும்புப் பருவத்தில் சிவப்பு மிகுதியாக இருக்கும். அந்த அரும்புகளை மாலையாகக் கட்டிக் கொண்டையின் கீழேயுள்ள பரப்புக்கு எல்லையாகக் கோலிக் கட்டியிருக்கிறார்கள்.

துணையோர் ஆய்ந்த இணைஈர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு

பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇ.

(தோழிமார் சிறந்ததென்று ஆய்ந்து பாராட்டும் கடை ஒத்து நெய்ப்புடன் உள்ள கூந்தலில், சிவந்த காம்பையுடைய வெட்சி மலரின் சிறிய இதழ்களை இடையிலே வைத்து, பசிய தண்டையுடைய குவளைமலரின் தூய இதழ்களைக் கிள்ளி இட்டு, சீதேவி யென்னும் தலைக் கோலத்தோடு வலம்புரி யென்னும் தலைக்கோலத்தையும் பக்கத்தில் வைத்து, திலகத்தை அணிந்த மணங்கமழும் அழகிய நெற்றியில் வந்து மகரவாய் என்னும் அணிகலன் தாழும்படியாகப் புனைந்து, நன்றாக முடித்த குற்றமற்ற உச்சிக் கொண்டையில் பெரிய குளிர்ந்த சண்பக மலரைச் செருகி, கரிய புற இதழையும் பிசிரையும் உடைய மருதம்பூங் கொத்துக்களையும் வைத்து, கிளையினின்று அழகுபெறப் பிரிந்து எழுந்து நீரின்கீழ் உள்ள சிவந்த அரும்பை இணைத்துக் கட்டிய மாலையை வளைய வைத்துக் கட்டி.)

## பிற அலங்காரம்

அவர்கள் தங்களுடைய காதுகளில் குழைகளை அணிந்திருக்கிறார்கள். குழை என்பது தளிருக்கு ஒரு பெயர். குறிஞ்சி நிலப் பெண்கள் காதில் குழையைச் செருகிக் கொண்டிருந்தார்கள். பிற்காலத்தில் அதற்குப் பதிலாக வேறு

நகை வந்துவிட்டது. ஆனாலும் குழையென்ற பெயர் மாற வில்லை. இங்கே சூரர மகளிர் தங்களுடைய வளப்பமான காதுகளில் அசோகத்தின் தளிர்களைச் செருகிக் கொண்டிருக் கிறார்கள். இரண்டு காதுகளிலும் ஒன்றுக்கொன்று ஒப்பாக நிற்க அந்தத் தளிர்கள் தொங்குகின்றன. தழைந்த காது ஆதலின் அங்கே அணிந்திருக்கும் அசோகந் தளிர்கள் மார்பில் வந்து புரள்கின்றன.

துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்ப.

(ஒன்றுக்கு ஒன்று ஒப்பாக நிற்கும்படி, வளப்பமான இரு காதுகளிலும் நிறையச் செருகிய அசோகத்தின் ஒள்ளிய தளிர் நுண்ணிய அணிகலன்களை அணிந்த மார்பில் புரள.)

அவர்கள் தங்கள் மார்பில் சந்தனத்தை அணிந்திருக் கிறார்கள். மலையில் சந்தனத்திற்குக் குறைவு ஏது? பல காலம் வளர்ந்து உரமேறிய சந்தனம் அது. அந்தச் சந்தனக் கட்டையை நன்கு அரைத்து மேலே அப்பியிருக்கிறார்கள். மிக மென்மையான சந்தனக் குழம்பைத் தங்களுடைய நகில்களின்மேல் அப்பி அழகு செய்திருக்கிறார்கள். அந்தத் தனங்கள் கோங்கு அரும்பைப் போலத் தோற்றுகின்றன. அப்பின சந்தனப் படலம் மருதம் பூவின் இதழ்களை வைத்தது போல மெல்லிதாகத் தோற்றுகிறது. மருதம் பூவையே மேலே அப்பினால் எப்படியிருக்குமோ, அத்தகைய தோற்றத்தை அது தருகிறது.

திண்காழ், நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி.

(திண்ணிய வயிரமேறிய நறுமணமுடைய சந்தனக் கட்டையை அரைத்த குழம்பை வாசனை வீசும் மருதம்

பூவைப் போலத் தோற்றும்படி, கோங்கமரத்தின் குவிந்த அரும்புபோன்ற இளைய நகில்களின்மேல் பூசி.)

இப்படிச் சந்தனக் குழம்பை அணிந்த மார்பில் வேங்கைப் பூவின் மகரந்தப் பொடியை அப்பிக்கொள் கிறார்கள். விரிந்த மலருடைய வேங்கை மரங்கள் மலைச்சாரலில் வளர்ந்திருக்கும். அங்கிருந்து அந்தத் தாதைப் பெற்றுச் சந்தனக் குழம்பின் மேலே அப்பியிருக்கிறார்கள். அதற்கும் மேலே விளாமரத்தின் தளிர்களைக் கிள்ளி ஒருவர் மேல் ஒருவர் தெறித்துக் கொண்டிருக்கிறார்கள். அவை அழகிய சித்திரம் வனைந்தாற்போல மார்பில் சந்தனக் குழம்பில் பதிந்து அழகு செய்கின்றன.

விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியா.

(அதன்மேல் வேங்கை மரத்தில் மலர்ந்த மலரிலுள்ள நுண்ணிய மகரந்தப் பொடியை அப்பி, அழகு உண்டாகும் படி விளாமரத்தின் சிறிய தளிர்களைக் கிள்ளி மேலே தூவி.)

### கொடியை வாழ்த்துதல்

இப்படித் தலையில் பல நிறங்களையுடைய மலர்களைச் சூடி, காதில் அசோகந் தளிரைச் செருகி, மார்பில் நல்ல சந்தனத்தையும், அதன்மேல் வேங்கைப் பூந்தாதையும், அதன்மேல் விளாவின் தளிரையும் அப்பிக்கொண்டு அழகுப் பிழம்பாக விளங்குகின்ற அணங்கினருக்கு ஆனந்தம் மேலிடுகிறது. பொதுவாக மகளிர்களுக்கு அலங்காரம் என்றால் மிக்க விருப்பம். தேவ மகளிரைப்பற்றிச் சொல்வானேன்? அழகில் சிறந்த அவர்கள் அலங்காரத்தில் சிறந்து நிற்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். தங்கள்

அழகை மிகுத்துக் காட்டும் மலரலங்காரத்தைப் பெறுவதற்கு வேறு நிலம் இன்மையின் இந்தக் குறிஞ்சி நிலத்திற்கு வந்து இங்கே கிடைக்கும் பல வகை மலர்களைத் தொகுத்துத் தங்களைப் புனைந்துகொள்கின்றார்கள். இப்போது அவர்கள் உள்ளநிறைவு பெற்று விளங்குகிறார்கள். இத்தகைய மலர்களை எப்போதும் விளைவிக்கும் குறிஞ்சியின் வளம் அவர்கள் உள்ளத்தை அள்ளுகிறது. அவர்கள் அறிவு உடையவர்கள் ஆதலின், குறிஞ்சிநில வளப்பத்திற்கு மூல காரணம் முருகப் பெருமான் என்பதை உணர்கிறார்கள். அவனுடைய அருளால் குறிஞ்சி நிலத்தில் வளரும் பூக்கள் அவர்களுடைய அழகைப் பின்னும் எடுத்துக் காட்டு கின்றன. ஆதலின், உள்ள நிறைவு பெற்ற அவர்கள் குறிஞ்சிக்குத் தலைவனாகிய முருகப் பெருமானை நினைத்துத் துதிக்கிறார்கள்.

அவன் தன் கையில் எடுத்திருக்கின்ற கோழியை அவர்கள் வாழ்த்துகிறார்கள். யாரேனும் ஒரு வீரனையோ, மன்னனையோ வாழ்த்தும்போது பல வகையில் வாழ்த்துவது மரபு. அவனுடைய நாட்டை வாழ்த்தலாம்; கொடியை வாழ்த்தலாம். இங்கே சூரர மகளிர் முருகப் பெருமானுடைய கோழிக் கொடியை வாழ்த்துகிறார்கள். அந்தக் கொடி பல போர்களில் பகைவர்களை அழித்த வெற்றியைக் காட்டிக்கொண்டு நிற்கிறது. முருகனுக்கு யாரையும் வஞ்சகமாக அழிக்கும் வழக்கம் இல்லை. நேரே நின்று தன்னுடைய வீரத்தைக் காட்டிப் போரில் வெற்றி பெறுவான். அந்த வெற்றிக்கு அறிகுறியாகக் கோழிக் கொடி மேலே நின்று விளங்கும். 'அந்தக் கோழிக்கொடி வாழ்க!' என்று அலங்காரம் பெற்ற அணங்கினர் வாழ்த்துகின்றனர்.

கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென்று ஏத்தி.

(கோழி உயர்ந்து தோன்றும், வஞ்சியாது எதிர் நின்று கொன்ற வெற்றியைப் புலப்படுத்தும் கொடி நெடிது வாழ்க என்று துதித்து.)

## சோலையும் கண்ணியும்

இப்படித் தங்களை அலங்கரித்துக் கொண்டு பாட்டுப் பாடி முருகனை வாழ்த்திய அணங்கினர் ஒருவர் இருவர் அல்லர்; பல பேர்கள். அவர்களுடைய பாட்டு மலைச் சாரலில் எதிரொலியை எழுப்புகிறது. அவர்களுடைய உள்ளத்தை நிறைவித்து, அவர் மேனியில் அலங்காரம் உண்டாகும்படி செய்து, எழிலுடன் விளங்குகின்ற சோலை அது. அத்தகைய சோலையில் மரங்கள் செறிந்திருக்கின்ற சூழலில் முருகனுக்குரிய காந்தள் வளர்கிறது. மிக உயரமான இடத்தில் அந்தக் காந்தள் வளர்ந்திருக்கிறது. அங்கே உள்ள மரங்களில் குரங்குகள் கூட ஏறுவது இல்லை. அவ்விடத்தில் மலரும் காந்தளை வண்டுகள் அணுகுவது இல்லை. பொதுவாக, தெய்வத்திற்குரிய பூக்களை வண்டுகள் மொய்ப்பதில்லையென்று சொல்வார்கள். தெய்வ மகளிர் பயில்கின்ற இந்தச் சோலையில் வண்டுகள் வருவது இல்லை. மிகமிக உயரத்தில் இருக்கும் சோலை அது; தெய்வத் தன்மை பொருந்திய சோலை. அங்கே மந்தியும் அறியா மரங்கள் செறிந்த சூழ்நிலையில், வண்டுகளும் மொய்க்காமல் அலர்ந்திருக்கிற காந்தள் மலராகிய கண்ணியை அணிந்திருக்கிறவன் முருகன்.

பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பும் மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்.

(பலரும் ஒருங்கே கூடி அழகு விளங்குகிற மலைப் பக்கங்கள் எதிரொலி செய்யும்படி பாடித் தேவமகளிர் ஆடுகின்ற சோலையில், குரங்கும் அறியாத மரங்கள் செறிந்திருக்கின்ற சூழலில், வண்டுகளும் மொய்க்காத விளக்குப் போன்று ஒளிவிடும் காந்தள் மலராகிய பெரிய குளிர்ந்த கண்ணியை அணிந்த தலையை உடையவன். கண்ணி - தலையில் சூடும் சிறிய அடையாள மாலை.)

காந்தள் என்பது சிவப்பாக வேலிக்காலில் முளைத் திருக்கும். அதன் மலர் கார்த்திகை விளக்குப் போலத் தோன்றும்; அதனால் கார்த்திகைப் பூ என்றும் சொல்வதுண்டு.

முருகப் பெருமான் தன்னுடைய சென்னியில் பெரிய குளிர்ந்த காந்தளங் கண்ணியைப் புனைந்திருக்கிறான். அந்தக் கண்ணி மலையிலுள்ள சோலையில் வளருவது, அந்தச் சோலை சூரர மகளிர் ஆடுவது. அந்தச் சூரர மகளிர் இங்குள்ள மலர்களை எல்லாம் பறித்துத் தங்களுடைய கூந்தலையும், காதையும், உடம்பையும் புனைந்து கொள்கிறார்கள்.

இப்படி ஒன்றினோடு ஒன்று தொடர்புடைய செய்திகளைச் சொல்லி ஒரு பெரிய ஓவியத்தை நக்கீரர் காட்டுகிறார். சூரர மகளிரின் இயற்கை அழகையும், ஆடை அணிகலன்களையும், தலைக் கோலத்தையும், நன்றி அறிவினால் அவர்கள் முருகனைப் பாடி ஆடும் திறத்தையும் காட்டி, அத்தகையவர்கள் ஆடுகின்ற சோலையில் வளர்வது முருகப்பெருமான் அணியும் காந்தளங்கண்ணி என்று சொல்லி இந்த வருணனையை முடிக்கிறார்.

---

# செவ்வேற் சேய்

முருகப்பெருமானுடைய சோதிப் பிழம்பைக் காட்டி, பின்பு அவனுடைய திருவடியையும் திருக்கரத்தையும் காட்டி, அப்பால் அவனுடைய திருமார்பிலுள்ள கடம்ப மாலையைக் காட்டி, காந்தளங் கண்ணியையும் நக்கீரர் காட்டினார். காந்தளங் கண்ணியைப் பற்றிச் சொல்லும் போது அழகுப் பிழம்பாகிய தேவலோக மகளிர் முருகனை நினைந்து, அலங்காரங்களைச் செய்து கொண்டு ஆடிப் பாடியதன் சிறப்பைச் சொன்னார். இனி அடுத்தபடியாக ஒரு வகைக் கூத்தைச் சொல்லப் போகிறார். முருகப் பெருமான் திருக்கரத்திலுள்ள வேலின் பெருமையைச் சொல்ல வந்தவர், அந்த வேலோடு சார்த்திப் போர்க்களத்தின் சிறப்பை எடுத்தோதுகின்றார். அப்படிச் சொல்லும் வகையில் அங்கே ஒரு பெண் பேய் ஆடும் கூத்தை வருணிக்கிறார்.

முன்பு அழகு மயமாகிய சூழ்நிலையில் அழகே உருவாகிய அரம்பையர்கள் அழகனாகிய ஆண்டவனைப் பாடி ஆடும் ஆட்டத்தை அழகாக வருணித்தார் நக்கீரர். இப்போது அதற்கு நேர்மாறாக வேறு ஓர் காட்சியைக் காட்டுகிறார். அஞ்சுவதற்குரிய காட்சியைப் பெற்ற பேய்மகள் போர்க்களத்தில் தனக்கு வேண்டிய விருந்தை அயர்ந்து மகிழ்ச்சியுடன் ஆடுகிறாளாம். அவளும் தனக்குப் பசி போக்கிய போர்க்களத்தை எண்ணி அங்கே வெற்றியைப் பெற்ற முருகப்பெருமானைப் பாடி ஆடுகிறாளாம்.

## வேலின் பெருமை

இப்போது ஆண்டவன் திருக்கரத்திலுள்ள வேலை நினைப்பூட்டுகிறார். அது சுடரோடு கூடிய இலையை யுடைய நீண்ட வேல். அது சூரனைக் குலத்தோடு கெடுத்தது. அந்தச் சூரன் கடலுக்குள் புகுந்து ஒளிந்தான். அப்போது முருகன் வேலை ஓச்சி அந்தக் கடலிலுள்ள நீரையெல்லாம் சுவறச் செய்து சூரனைத் தடிந்தான். அந்த வேலைப் பற்றிச் சுருக்கமாக சொல்லி, பின்பு அது செய்த வீரச் செயலை விரிவாகச் சொல்ல வருகிறார்.

பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்.

(பாறைகள் முதிர்ந்த குளிர்ச்சியையுடைய கடல் கலங்கும்படி உள்ளே புகுந்து அங்கே மறைந்திருந்த சூரனாகிய அசுர குல முதல்வனைப் பிளந்த ஒளியையும் இலையையும் உடைய நீண்ட வேல்.)

பாறைகள் முதிர்ந்திருக்கின்ற, குளிர்ச்சியையுடைய கடலுக்குள் புகுந்து இருந்தான் சூரன். அவன் மேல் எய்த வேல் அந்தக் கடலைக் கலக்கிவிட்டு உள்ளே புகுந்து மாமரமாக நின்ற சூரனை இரண்டு பிளவாகத் தடிந்தது. அத்தகைய சுடரையுடைய நெடுவேல் எவ்வாறு சூரனைத் தடிந்தது என்பதைச் சற்று விரிவாக மறுபடியும் சொல்கிறார்.

போர்க்களத்தில் பகைவர்கள் இறந்து விழ அவர்களுடைய பிணங்கள் எங்கும் பரந்து கிடக்கும். பல காலமாக உணவைப் பெறாமல் பசியினால் வாடிய பேய்கள், எங்கே போர்க்களம் இருக்கிறது என்று நாடி ஓடும். போர் நிகழ்ந்தது என்றால் பேய்களுக்குக் கொண்டாட்டம். போரின் முடிவில் போர்க்களத்தில் விழுந்து கிடக்கும் உடம்புகளை யும், அங்கங்களையும் பேய்கள் உண்டு களித்துக்

கூத்தாடுவதாகச் சொல்வது கவிமரபு. பைரவர் அவ்வாறு சாபம் கொடுத்திருக்கிறார் என்பது புராண வரலாறு. அவ்வாறு பேய்க்கு உணவூட்டி விருந்தயரச் செய்யும் வேள்வியைக் களவேள்வி என்று சொல்வது வழக்கம். இது புறத்திணையில் ஒரு துறை. இங்கே முருகப்பெருமான் தன்னுடைய வீரச் செயலினால் பேய்களுக்கு உணவளித்து மகிழ்ச்சி உண்டாகும்படியாகச் செய்கிறானாம். அப்படி உள்ள போர்க்களத்தில் ஒரு பேயின் ஆட்டத்தைப் பற்றி நக்கீரர் சொல்ல வருகிறார். நாம் முன்பு பார்த்த அழகிகளாகிய அரமகளிர் நிலைக்கும், இந்தப் பேய்மகள் நிலைக்கும் நேர் மாறுபாடு. அது சுடர் உலகம்; இது இருள் உலகம். அது அழகுப் பிழம்பு; இது அவலட் சணத் திருவுருவம். இந்தப் பேய்மகளைத் தலையிலிருந்து வருணிக்கிறார்.

## பேய்மகள் ஆடல்

அவளுடைய தலை ஈரம் காணாத தலை. உலர்ந்த செடி போலப் பரட்டையாக இருக்கிறது. உலறிய கதுப்பு அது. அவளுடைய பற்கள் எப்படி இருக்கின்றன? ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு திசையில் முளைத்து எழுந்திருக்கின்றது. அந்தக் கோரப் பல்லைக் கண்டாலே அச்சம் உண்டாகும். அந்தப் பல்லையுடைய வாய் மிக்க ஆழமாக இருக்கிறது. முழு யானையையே உள்ளே விழுங்கிவிடும் அளவுக்குப் பேராழமுடைய வாய். பிறழ் பல்லையும், பேழ் வாயையும் உடைய பேய்மகள் அவள். அவளுடைய கண்கள் எப்போதும் சுழன்று கொண்டிருக் கின்றன. அங்கிருந்து வரும் பார்வையோ கண்டவருடைய உள்ளத்தைக் கிடு கிடுக்கச் செய்கிறது. அவளுடைய காதில் அணிந்துள்ள ஆபரணம் எது தெரியுமா? அந்தக் காதில், கழன்றாற் போன்ற கண்ணுடைய கோட்டானும், நஞ்சுடைய பாம்பும் தொங்குகின்றன. சுழல் கண்ணுடைய கூகைதான்

அதிலுள்ள குழை. கொடும் பாம்புதான் அதைக் கட்டியிருக்கிற சரடு. அப்படித் தொங்குகின்ற பாம்பு மார்பு வரைக்கும் தொங்கி அந்தப் பேய் மகளின் தனங்களில் மோதுகின்றன. பேய்மகளுடைய வயிறு ஒரே சுரசுரப்பாக இருக்கின்றது. அவள் நடந்தாலே பூமி அதிர்கிறது. பார்ப்பவர்களுடைய நெஞ்சமும் அதிர்கிறது. அச்சத்தைத் தருகின்ற நடையை உடையவள் அந்தப் பேய்மகள்.

உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதின் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்.

(உலர்ந்த கேசத்தையும், ஒன்றுக்கொன்று மாறாகக் கோணிய பற்களையும், ஆழமான வாயையும், சுழலுகின்ற விழிகளையுடைய பச்சையான கண்களையும், அச்சத்தைத் தரும் பார்வையையும், கழன்றாற் போன்ற கண்ணையுடைய கோட்டானோடு பாம்பு தொங்கப் பெரிய தனங்களை மோதும் காதுகளையும், சுரசுரப்பான வயிற்றையும், அச்சம் பொருந்திய நடையையும் உடைய பயத்தை உண்டாக்கும் பேய்மகள்.)

முன்னாலே அரமகளிர்களின் அங்கங்களையும், ஆடல் களையும் வருணித்த நக்கீரர் இப்போது பேய்மகளையும் அப்படியே வருணிக்கிறார். இரண்டையும் அருகருகே வைத்துப் பார்க்கும்போதுதான் ஒன்றன் பெருமையும், மற்றதன் சிறுமையும் நன்கு விளங்குகின்றன.

இனி, பேய்மகள் செய்வதைப் பார்க்கலாம். அவள் போர்க்களத்தில் கிடந்த பிணங்களை எல்லாம் பார்க்கிறாள். ஒரு பிணத்தைப் பார்த்து அதற்கு அருகில் வெட்டுண்டு கிடக்கிற தலையைப் பார்த்து எடுக்கிறாள். அது பனங்காய்

போல இருக்கிறது; ஒரே கறுப்பாக இருக்கிறது. அசுரனுடைய தலை அல்லவா? அதனை எடுத்துப் பனங்காயிலிருந்து நுங்கைத் தோண்டி உண்ணுவது போலத் தலையில் கண்ணைத் தோண்டி உண்ணுகிறாள். அப்படி உண்டதனால் கையில் இரத்தம் பூசிக் கிடக்கிறது. அதுதான் அவளுக்கு மருதோன்றி போலும்! கூர்மையான நகமுடைய வளைந்த விரல்கள் ஒரே இரத்தமயமாக இருக்கின்றன. அந்தத் தலையைத் தன்னுடைய கையில் ஏந்திக் கொண்டிருக் கிறாள். அவள் தன் கையில் வளை அணிந்திருக்கிறாள். ஆம், இரும்பு வளையாக இருக்கக் கூடும். முன்பு நாம் கண்ட அணங்கின் ஆட்டம் பார்க்கப் பார்க்க அழகு தருவது. இப்போது பேய்மகள் ஆட்டமோ நினைத்தாலும் பகீர் என்ற உணர்ச்சியைத் தருவது. கையில் கண்ணைத் தோண்டி உண்ட கருந்தலையை ஏந்திக் கொண்டு, பார்ப்பவர்கள் பயப்படும் படியாகக் கையை அங்கும் இங்கும் ஆட்டிக்கொண்டு ஆடு கிறாள்; பாடுகிறாள். அந்தப் போர்க்களத்தைப் பாடுகிறாள்; முருகப்பெருமானுடைய வீரத்தையும் சேர்த்துத்தான் பாடுகிறாள். பாடியாடும் போதே அவள் வாய் மாமிசத்தை அசைபோட்டுக் கொண்டிருக்கிறது. தனியாக ஆடுவது போதாது என்று வேறு பேய்மகளிரோடு கையைக் கோத்துக் கொண்டு துணங்கைக் கூத்தாடுகிறாள். இப்படி ஆடும்படி யாகச் சூரபன்மாவைச் சங்காரம் செய்தது அந்த வேல்.

குருதி ஆடிய கூர்உகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறல்களம் பாடித் தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க.

(இரத்தம் தோய்ந்த கூரிய நகத்தையுடைய வளைந்த விரலாலே கண்ணைத் தோண்டி உண்டு எஞ்சிய மிக்க

நாற்றத்தையுடைய கரிய தலையை, பளபளக்கும் வளையை அணிந்த வளைந்த கையில் ஏந்திக்கொண்டு, கண்டோர் அஞ்சும்படியாக, முருகன் வென்று போர் செய்த வெற்றிக் களத்தைப் பாடித் தோளை அசைத்துக்கொண்டு தசையைத் தின்னும் வாயையுடையவளாய்த் துணங்கைக் கூத்து ஆடும்படி.)

போர் நிகழும்போது யார் வெல்கிறார்களோ அவர்களுக்கு அந்தக் களம் உரியதாகும். இங்கே முருகப் பெருமானுக்குரிய போர்க்களம் அது. ஆகையால் அந்தப் போர்க்களத்தைப் பாடுவது என்றால் முருகப்பெருமானைச் சேர்த்துப் பாடுவது என்பதுதான் பொருள்.

### சூர சங்காரம்

இவ்வாறு பேய்மகள் ஒருத்தியின் ஆடலைக் காட்டிய முகத்தினால் வேறு பல பேய்மகளிரும் இப்படியே ஆடி ஆனந்தம் அடைந்தனர் என்பதைக் குறிப்பாக உணரச் செய்கிறார். துணங்கைக் கூத்து என்பது கையைக் கோத்துக் கொண்டு பலர் ஆடும் ஆட்டம்.

சூரன் குதிரை முகமும், மனித உருவமும் இணைந்த பெரிய உடம்பை உடையவன் என்பது பழைய வரலாறு. அந்தப் பெரிய உடம்பு போர்க்களத்தில் வானளாவ நின்று போர்செய்தது. முருகன் ஆறு திருமுகங்களுடன் வெவ்வேறு வகையில் சென்று பெரும் போர் செய்தான். அந்த நேரத்தில் அவுணர்கள் எல்லாம் சேர்ந்து சூரபன்மாவைத் தலை வனாகக் கொண்டு போரிட்டார்கள். பின்பு சூரன் மாமரமாக மாறிக் கடலுள் புகுந்தான். அப்போது தன்னுடைய வேலை ஏவி முருகன் அந்த மாமரத்தைத் தடிந்தான். அந்த மரம் தலை கீழாக நின்றதாம்; காய், கனி, கொம்பு எல்லாம் கீழாகவும், வேர் மேலாகவும் இருந்தனவாம்; அசுரர்கள் எதிலும்

தலைகீழாக நிற்பவர்கள் என்ற கருத்தை இது காட்டுகிறது. அத்தகைய மாமரத்தைத் தடிந்து, அவுண ருடைய வெற்றி எல்லாம் அடங்கும்படியாகச் செய்தவன் முருகப்பெருமான். சேய் என்னும் பெயரை உடையவன் அவன்; சிவந்த நிறமுடையவன். அவன் புகழ் இன்னதென்று வரையறுத்துச் சொல்ல ஒண்ணாதது; அவன் கையில் ஏந்திக் கொண்டிருக்கும் வேலின் புகழும் அத்தகையது.

இவ்வாறு சூரபன்மாவை அழித்த சிவந்த வேல் இறைவன் கையில் உள்ளது.

இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேல் சேஎய்.

(குதிரையும் மனிதனும் ஆகிய இரண்டு பெரிய உருவம் இணைந்த ஒரு பெரிய சூரனுடைய உடம்பை, ஆறு வேறு திருவுருவங்களுடன் அவன் அஞ்சும்படி மேற் சென்று, அசுரர்களுடைய மிக்க வலிமையெல்லாம் அடங்கும்படி, கவிழ்ந்திருக்கும் கொத்துக்களையுடைய மாமரத்தின் அடி மரத்தைப் பிளந்த, குற்றமில்லாத வெற்றியையுடைய, அறிய முடியாத நல்ல புகழையுடைய செவ்வேலையுடைய முருகனுடைய திருவடி என்று பின்னாலே இணைக்கிறார்.)

### பழைய வரலாறு

முருகப்பெருமானைப் பற்றிய கதைகள் பல பழங்காலம் முதற்கொண்டே வழங்கி வருகின்றன. காலம் மாற மாற வெவ்வேறு கதைகள் பக்தர்களிடத்தில் உலவுகின்றன. பழங்கால நூல்களில் இந்த மாமரத்தைப் பற்றின செய்தி ஒன்று காணப்படுகிறது. அசுரர்கள் எல்லாம்

சேர்ந்து தங்களுக்குப் பலமாக ஒரு மாமரத்தை வைத்திருந் தார்கள் என்றும், தம்முடைய மந்திர சக்தியால் அதனைக் காப்பாற்றி வந்தார்கள் என்றும், அது சூரனுக்கு உயிர்நிலை யாக இருந்தது என்றும், அதனை முருகப்பெருமான் வேலால் பிளந்தான் என்றும் அந்த வரலாறு சொல்கிறது.

## காவல் மரம்

பழங்கால மன்னர்கள் தத்தமக்குரிய காவல் மரம் ஒன்றை வளர்த்து வந்தார்கள். அதைக் கண்ணினும் உயிரினும் சிறப்பாகக் கருதிப் பாதுகாத்து வந்தார்கள். பகைவர்கள் போரிடும்போது அந்த மன்னர்களின் காவல் மரத்தை வெட்டித் தங்கள் வெற்றியை நிலை நாட்டுவார்கள். அந்தக் காவல் மரத்தால் முரசு செய்வதும் உண்டு, சங்க காலத்து நூல்களில் காவல் மரங்களைப் பற்றிய செய்திகள் பல உள்ளன. சூரபன்மா என்ற அசுர மன்னனுக்குக் காவல் மரமாக மாமரம் இருந்தது. பகையரசனுடைய காவல் மரத்தைத் தடிவது போல முருகன் தன் பகைவனாகிய சூரனது காவல் மரத்தைத் தடிந்து வெற்றியை நிலை நாட்டினான் என்பது பழைய மரபுக்கு ஒத்த செய்தி.

எப்படியிருப்பினும் முருகப்பெருமான் மாமரத்தை வெட்டி வெற்றி பெற்றது பழமைக்கும் புதுமைக்கும் பொதுவான செய்தி. வேலினுடைய பெருமையைச் சொல்லும் வாயிலாகச் சூரனுடைய சங்காரத்தை இங்கே நக்கீரர் எடுத்தோதினார். ஆக, முருகப்பெருமானுடைய அங்கங்களைச் சொல்லி அவனுடைய திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தைப் பற்றியும் சொல்லிவிட்டார்.

---

# செம்மல் உள்ளம்

இனிமேல் புலவனை ஆற்றுப்படுத்தும் பகுதி வருகிறது. இதுவரைக்கும் முருகனைப் பற்றிய செய்தியைப் பொதுவாகச் சொன்னார். அத்தகைய முருகனிடத்தில் அன்பு பூண்டு, அவனுடைய திருவடியை அடைய வேண்டுமென்று விரும்பும் ஒரு புலவனைப் பார்த்து, முருகப்பெருமானுடைய திருவருள் பெற்ற மற்றொரு புலவன், ''இவ்வாறு சென்றால் முருகப் பெருமானைக் கண்டு இன்புறலாம்'' என்று சொல்லும் வகையில் அமைந்திருக்கிறது திருமுருகாற்றுப் படை. அதற்கு ஏற்றபடி இது வரைக்கும் முருகனை வருணித்த புலவர், இனி எதிர் நின்ற புலவனைப் பார்த்து அவன் புறப்பட்டதைப் பாராட்டி, ஆற்றுப்படுத்தத் தொடங்குகிறார்.

### நல்ல பயணம்

தேசு பொருந்திய திருவுருவம், அடைந்தாரைக் காக்கும் அரணமாகிய திருவடி, தீயவரை அழிக்கும் திருத்தோள், தேவயானையாகிய கற்புடைத்தேவி அமர்ந்த பக்கம், கடம்ப மாலை அணிந்த திருமார்பு, காந்தளங் கண்ணியை அணிந்த திருமுடி, சூரனை அழித்த சுடர் வேல் - இவற்றோடு விளங்குகிற செவ்வண்ணப் பெருமானாகிய முருகனுடைய புகழ் சொல்லில் அடங்குமா? அறிந்து கொள்ளத்தான் முடியுமா? அவன் யாரும் அறிய முடியாத பெரும் புகழை உடையவன்.

எய்யா நல்இசைச் செவ்வேற் சேஎய்.

(அறிய முடியாத நல்ல புகழையும் சிவந்த வேலையும் உடைய முருகன்.)

இந்தக் கோலத்தோடு விளங்கும் முருகனுடைய திருவடியைப் பற்றிக்கொண்டு நலம் பெறவேண்டும் என்ற ஆர்வத்தோடு ஒரு புலவன் புறப்பட்டிருக்கிறான். ஆசை இருக்கிறதேயன்றி வழி தெரியாது. ஆறு இன்னதென்று தெரியாத அவனுக்கு, இதுதான் வழி என்று காட்ட முன் வருகிறார் நக்கீரர்.

## தட்டிக் கொடுத்தல்

முருகன் திருவருளைப் பெறவேண்டும் என்று விரும்பிப் புறப்பட்டவனை வழிகாட்டும் புலவர் தட்டிக் கொடுக்கிறார். இது பெருந்தன்மை உள்ளவர்களின் இயல்பு. 'நீயா முருகனைக் காணப் போகிறாய்? உனக்கு என்ன தகுதி இருக்கிறது? தானம் செய்தாயா? தவம் செய்தாயா? பொறி புலன்களை அடக்கினாயா?' என்று கேட்டு அச்சுறுத்தி, கேட்பவனை, 'நமக்கும் முருகன் அருளுக்கும் நெடுந்தூரம்' என்று எண்ணும்படி செய்திருக்கலாம். அப்படிச் செய்கிறவர்கள் இருக்கிறார்கள். கடவுளைத் தொழுவதும், பூசை பண்ணுவதும், பாடுவதும் தங்களுக்கே உரிய தனியுரிமை யென்றும் நினைக்கிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். இறைவனைப்போல யாவருக்கும் இரங்கும் கருணையாளன் யாரும் இல்லை. அவனுக்கு வேண்டாதவர் யாரும் இல்லை. கடவுள் இல்லை என்று சொல்கிறவர்களுக்கும் வேண்டிய வாழ்வை அளிக்கும் பரம தயாளு அவன்.

அவனுடைய அருள் பெற்ற பெரியவர்களுக்கு உலகமெல்லாம் நன்றாக வாழவேண்டும் என்ற கருணையே மீதூர்ந்து நிற்கும். ''வையகமும் துயர் தீர்க்கவே'', ''ஞாலம்

நின்புகழே மிக வேண்டும்'' என்று ஞானசம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளினார். ஆகவே இறைவனை நாடிச் செல்பவர்களுக்கு ஊக்கம் ஊட்டி நல்வழிப் படுத்துவது அவர்கள் இயல்பு.

இங்கே நக்கீரர், முருகனைக் காணச் செல்லும் புலவனுக்கு ஊக்கம் உண்டாகும் வகையில் பேசுகிறார்.

''அப்பா! நீ நல்ல காரியம் செய்தாய். நன்மையையே விரும்பி இப்படி ஒரு குறிக்கோளை நீ மேற்கொண்டாயே! உன் நலம்புரி கொள்கை பாராட்டுவதற்குரியது'' என்று முதலில் சொல்கிறார். அப்பால் அவனுடைய உறுதியைப் பாராட்டுகிறார்.

## எண்ணமும் செயலும்

நலத்தைப் பெறவேண்டும் என்னும் ஆசை யாவருக்கும் இருக்கிறது. அதற்குரிய வழி இன்னதென்று பெரியவர்கள் சொல்லக் கேட்கிறோம். அந்த வழியிற் செல்பவர்களைக் கண்டால் பாராட்டத் தயாராக இருக்கிறோம். ஆனால் அந்தக் காரியத்தை நாமே செய்ய முன் வருவதில்லை. இது பெரிய விசித்திரம்.

இந்த உடம்பு நிலையாது என்பது யாவருக்கும் தெரியும். இந்த வாழ்க்கையின் இறுதியில் மரணம் சம்பவிக்கும் என்பதும் யாவருக்கும் தெரிந்த செய்திதான். எப்போதும் போல் உண்டும், உடுத்தும், புலன்களுக்குரிய இன்பத்தை நுகர்ந்தும், உறங்கியும் வாழ்ந்துவந்தால் நாம் முன்னேற முடியாது. மரணத் துன்பத்தை நம்மால் மாற்றிக்கொள்ள முடியாது என்பதும் நமக்குத் தெரியும். ஆனால் இந்த உலகியல் முயற்சிகளை விட்டோ, அல்லது இவற்றிற்கு இடையிலோ இறைவன் அருளைப் பெறத் தீவிரமாக ஏதும் நாம் செய்வதில்லை. நமக்கு எப்போதாவது

நல்லது செய்ய வேண்டும் என்ற எண்ணம் தோன்றினால் அது புராண வைராக்கியமாகவும் பிரசவ வைராக்கிய மாகவும் சிறிது நேரம் இருந்து மறைந்து போகிறது. பழையபடி எப்போதும் உள்ள வாசனைகள் வந்து கப்பிக் கொள்கின்றன. ஆகவே நலத்தை விரும்பும் எண்ணம் இருந்தால் மட்டும் போதாது; அந்தத் துறையில் செயலாற்ற வேண்டும். எண்ணுகிறவர்களே குறைவுதான். அவர்களிலும் செயலிற் புகுபவர்கள் மிகமிகக் குறைவு.

இந்த உண்மையை உணர்ந்து வழிகாட்டப் புகுந்த புலவர் பெருமான், ''அப்பா! உன் கொள்கை நல்லது; அதற்குமேல், நீ துணிந்து அந்தக் கொள்கையின்படி நடக்கத் துணிந்தாயே, அது மிக மிக நல்லது'' என்கிறார்.

## பிரபஞ்ச வாசனை

நம்மிடத்தில் அநாதி காலமாக உள்ள வாசனைகள் எளிதில் நீங்குவதில்லை. பிரபஞ்ச வாசனை சேறாக நம்மிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அதை இறைவன் அன்பு நீரில் கழுவிக் கொள்ள வகை உண்டு. அப்படிக் கழுவிக்கொள்ளத் துணையாக இருக்க வேண்டுமென்றே இறைவன் இந்த உடம்பையும், இதில் பல நுட்பமான கரணங்களையும், பூமியையும், போகத்தையும் தந்திருக் கிறான். நீராடப் போய்ச்சேற்றைப் பூசிக்கொண்ட கதையாக, இந்த வசதிகளை வைத்துக்கொண்டு இறைவனுக்குத் தொண்டு பூண்டு வாழ்வதை விட்டுவிட்டு, மீட்டும் பிரபஞ்ச வாசனையை மிகுதிப்படுத்திக் கொள்கிறோம்.

இறைவன் திருவருள் நம்மை இந்தப் பிரபஞ்சச் சேற்றினின்றும் மீட்கவேண்டும். அருணகிரியார் கந்தர் அலங்காரத்தின் முதற்பாட்டில் இறைவன் தமக்குப் பிரபஞ்சச் சேற்றை நீக்குவித்தான் என்று பாடுகிறார்.

"பேற்றைத் தவஞ்சற்றும் இல்லாத என்னை ப்ரபஞ்சமென்னும்
சேற்றைக் கழிய வழிவிட்டவா!"

என்பது அவர் திரு வாக்கு.

நம்மைத் தளைக்குள் அகப்படுத்தி வைத்திருக்கும் இந்தப் பிரபஞ்சத்தை விடுவதற்கு நாம் சித்தமாக இல்லை. இந்த உடம்பை நாம் கட்டுப்படுத்தாமல் உடம்புக்கும் இந்திரியங்களுக்கும் மனத்துக்கும் அடிமையாகிவிட்டோம். இந்தத் தொடர்பை விடுவதற்கும் நமக்கு மனம் வருவதே இல்லை.

சில பேர்களுக்குத் தம் வீட்டில் தூங்கினால்தான் தூக்கம் வரும்; வேறு இடங்களுக்குச் சென்று படுத்தால் நல்ல தூக்கம் வருவதில்லை. நம் உடம்பு, நம் வீடு, நம் ஊர், நம் மனிதர்கள் என்ற சூழ்நிலை நம்மினும் வேறின்றி இணைந்திருக்கின்றன. அவற்றை உதறித் தள்ளும் எண்ணம் நமக்கு வருவதில்லை. ஒருகால் வந்தாலும் உறுதியாக நிற்பதில்லை. பழகின இடத்தை விட்டுப் பூனை செல்லாது என்பார்கள். நாமும் அப்படித்தான் இருக்கிறோம். நாம் பல பிறவிகளில் பிறந்து பிறந்து பழகிப்போன இடம் பிரபஞ்சம். இதை விட்டுவிட நமக்கு என்றும் மனம் வருவதில்லை.

## காதலும் பற்றும்

ஆனால் இதனினும் சிறந்த இடம் ஒன்று கிடைக்கும் என்ற உறுதியான நம்பிக்கை ஒருவனுக்கு உண்டானால் எதையும் விட்டுவிடுவான். இந்த நாட்டில் பெண்களின் வாழ்க்கையைப் பார்க்கலாம். தந்தை வீட்டில் எல்லா வகையான வசதிகளுடனும் வாழ்கிறாள் பெண். தாயையும் தந்தையையும் விட்டுப் பிரிகிறதே இல்லை. எங்கே போனாலும் தாயோடுதான் செல்லுகிறாள். அவளுக்குத்

திருமணம் ஆகின்றது. அப்பால் கணவனோடு வாழப் புறப்பட்டு விடுகிறாள். தாய் தந்தையரிடம் எவ்வளவு பற்றுடையவளாக இருந்தாலும் இப்போது கணவன் வீட்டுக்குப் போய் வாழவேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி நிற்கிறது. கணவனிடம் உள்ள காதல் பழைய பற்றையெல்லாம் போக்கி விடுகிறது. இவ்வளவு காலம் பழகிய உறவினர்களையும் தாய் தந்தையரையும் இடத்தையும் விட்டுவிட்டு, இதுகாறும் பழகியறியாத ஆடவனோடு வாழப் போய்விடுகிறாள்.

அவ்வண்ணமே ஆண்டவனிடம் காதல் மீதூர்ந்தால் எந்தப் பற்றையும் விடும் உறுதி வந்துவிடும். அவை தாமே நழுவிவிடும்.

## செம்மல் உள்ளம்

இங்கே, தான் பலகாலும் பயின்று வாழ்ந்த இடத்தை விட்டுப் புறப்பட்டிருக்கிறான் புலவன். அந்தப் புலத்தைப் பிரிந்து எப்போதுமே வேறு இடம் சென்று தங்கிவிடும் துணிவோடும் இந்தச் செலவை மேற்கொண்டிருக்கிறான். அப்படிப் பிரிவதற்கு முன்னால் வேறு ஒன்றைப் பற்றிக் கொள்ளும் உறுதி அவனுக்கு உண்டாகியிருக்கிறது. செவ்வேலைத் திருக் கரத்தில் ஏந்திய செம்மேனிப் பெருமானாகிய முருகனுடைய திருவடியைப் புகலிடமாகப் பற்றி வாழ வேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் வேரூன்றியிருக்கிறது. வெறும் எண்ணமாக முளைத்தது, வலிபெற்றுக் கொள்கையாக, கடைப்பிடியாக, லட்சியமாக விளைந்திருக்கிறது. முருகனுடைய சேவடியை விருப்பத்துடன் சென்று சேரவேண்டும் என்ற எண்ணம் ஓர் உள்ளத்தில் எழுமானால் அது பெரிய உள்ளம்.

"உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்."

என்பது திருக்குறள். உயர்ந்தவற்றையே உள்ளத்தால் நாட வேண்டும். உயர்ந்தவற்றில் எல்லாம் உயர்ந்தது பரம் பொருள். அதனைப் பற்றிக்கொள்ள எண்ணும் உள்ளம் உயர்ந்துகொண்டே இருக்கும். அது பெருமை பெற்ற, நிறைவு பெற்ற உள்ளம்; அதைச் செம்மல் உள்ளம் என்று சொல்கிறார் நக்கீரர். இறைவன் சேவடியாகிய நிரந்தரமான வீட்டை அடைந்து வாழவேண்டும் என்ற பெருமையை யுடைய எண்ணத்தை உடைய உள்ளம் அது.

சேவடி படரும் செம்மல் உள்ளமொடு

(செம்மையாகிய திருவடியைச் சென்று அடையும் பெருமையான உள்ளத்தோடு.)

உள்ளத்தில் இருந்த விருப்பம் கொள்கையாக, இதைச் செய்துவிட்டுத்தான் மறுகாரியம் பார்க்க வேண்டும் என்ற விரதமாக மாறியது. அந்த விரதம் நன்மையை விரும்பி மேற்கொண்டது.

நலம்புரி கொள்கை.

(நன்மையையே விரும்பி மேற்கொண்ட கடைப் பிடியையுடைய.)

விரதமாக விருப்பம் உறுதி பெற்றால், அந்தக் கொள்கையைச் சாதித்துக்கொள்ளும் முயற்சி உடனே தோன்றுகிறது. ஒரு லட்சியத்தை முன்வைத்து அது தோன்றுகிறது. அதனால் இதுகாறும் இருந்த இடத்தையும் நிலையையும் விட்டுப் புறப்பட்டு விடுகிறான்.

### பழகிய பகை

சேறும் சகதியும் நிறைந்த இடத்தில் ஒருவன் வசிக்கிறான். அதுவே அவனுக்குப் பழக்கப்பட்டுப் போகிறது.

அதை விட்டு வா என்றால் அதற்குத் துணிவு உண்டாவதில்லை. இது போனால் இன்னும் மட்டமான இடமாகக் கிடைத்தால் என்ன செய்வது என்ற பயம் வேறு இருக்கிறது.

சென்ம வாசனை செருப்பாலடித்தாலும் போகாது என்பார்கள். எத்தனை படித்தாலும் கேட்டாலும் நம்மிடம் ஊறியிருக்கும் பழக்கத்தை விடவும், நாம் பழகிய இடத்தை விடவும் மனம் எளிதில் வராது. நற்றிணை யென்னும் சங்க நூலில் ஓர் அருமையான தொடர் வருகிறது.

''பழகிய பகையும் பிரிவு இன்னாதே.''

என்கின்றார் ஒரு புலவர். பகையாக இருந்தாலும் பல காலம் பழகிவிட்டால் அதைச் சகிப்பதே வழக்கமாகி விடும். அது இல்லாவிட்டால் நம் வாழ்க்கையில் ஏதோ குறைந்து விட்டது போன்ற உணர்ச்சி உண்டாகும்.

நாள்தோறும் எதிர் வீட்டுக்காரன் நம்மை மறைமுகமாகத் திட்டிக்கொண்டே இருக்கிறான். வாசலில் வந்து காறித் துப்புகிறான். காலையில் வேலைக்குப் போகுமுன்பு அரைமணி நேரம் அவனுடைய பகை முழக்கம் கேட்பது வழக்கமாகிவிடுகிறது. திடீரென்று அவன் இறந்து போகிறான். நாள்தோறும் குறிப்பிட்ட நேரத்தில் அவனது வசவுகளைக் காது கேட்டுப் பழக்கமாகி விட்டமையால், இப்போது அந்த நேரத்தில் ஏதோ ஒன்றை இழந்துவிட்டது போன்ற உணர்ச்சி உண்டாகிறது. ''தினமும் எழுந்தால் அவன் ஏதாவது குரைத்துக் கொண்டிருப்பான். இப்போது வெறிச்சென்றிருக்கிறது'' என்று கூடச் சொல்கிறோம், அப்படி வெறிச்சென்றிருப்பது, எதையோ இழந்த உணர்ச்சி; இன்னாமையில் அது ஒருவகை. இந்த உலகியலை நினைந்தே அந்தச் சங்க காலத்துப் புலவர்,

"பழகிய பகையும் பிரிவு இன்னாதே."

என்றார்.

இன்னும் ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம். நாம் நம் உடம்பைக் கண்டு அருவருப்புக் கொள்கிறதில்லை. ஆனால் கடுமையான நோய்வாய்ப்பட்டு அங்கமெலாம் குறைந்து அழுகு தொழு நோயை உடையவர்களுக்கு இந்த உடம்பு நிச்சயமாக இன்பம் தருவதில்லை; துன்பமே தருகிறது. பிறர் கண்டால் அருவருக்கவும், தமக்குக் கணந்தோறும் துன்பத்தை உண்டாக்கவும் காரணமாக இருக்கும் அதைவிடப் பெரிய பகை ஒன்று உண்டா? அதை வைத்துக் கொண்டு; துன்புறுகின்றவன் அதை விட்டுவிட மனம் கொள்வதில்லை. தற்கொலை செய்துகொள்ள வழியா இல்லை? நாகரிகம் மலிய மலிய அதற்கு எத்தனையோ வழிகள் உண்டாகியிருக்கின்றன. மலையை நாட வேண்டாம்; கடலைக் காணவேண்டாம். ரெயில் இருக் கிறது; கார்கள் இருக்கின்றன; ஒரு கணத்தில் வேலையை முடித்துவிடும். ஆனால் அந்த உடம்பாகிய பகையைப் பெற்றிருப்பவர்களுக்கு அதைப் பிரிவதற்கு மனம் வருவதில்லை. இதைவிட வியப்பு வேறு உண்டா? இதை எண்ணிப் பார்த்தால்,

"பழகிய பகையும் பிரிவு இன்னாதே."

என்பது எவ்வளவு சிறந்த உண்மை என்று புலனாகும்.

ஆகவே, பழகிய இடத்தை விட்டு நிரந்தரமாக வேறு இடத்துக்குச் சென்று தங்குவது என்பது எளிதில் ஏற்றுக் கொள்ள முடியாத காரியம். அதைச் செய்யத் தொடங்கி யிருக்கிறான் புலவன். அழுக்கான இடத்தை விட்டு அழகான இடத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டான். ஆதலால் இந்தப் பயணம்,

செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவு

ஆகிவிட்டது. இப்படித் துணிந்து புறப்பட்டவனைப் பாராட்டத்தானே வேண்டும்?

''அப்பா, நீ எண்ணிய காரியம் கைகூடும்'' என்று வாழ்த்துகிறார் நக்கீரர். ''உன்னுடைய நெஞ்சம் நல்ல நெஞ்சம். அதில் உண்டாகிய விருப்பம் இனிய விருப்பம். அது நன்கு நிறைவேறும். நீ நினைத்ததற்குப் பன்மடங்கு நன்மைகளுடன் உனக்கு வந்து வாய்க்கும்'' என்று ஊக்க மூட்டுகிறார்.

## விரைவில் நிறைவேறும்

''இப்போதுதானே நான் வீட்டை விட்டு புறப் பட்டிருக்கிறேன்? இன்னும் எத்தனை காலம் ஆகுமோ, அந்த இடத்தை அடைய? வழியும் தெரியாது; வழக்கும் தெரியாது. அத்தகைய நிலையில் இருக்கும் நான், போய்ச்சேர வேண்டிய இடத்தை அடைய என் வாழ்நாளுக்குள்ளே முடியுமா?'' என்று ஏங்குகிறான் பிரயாணி.

நக்கீரர், ''அஞ்சாதே அப்பா, நீ நினைத்த காரியம் விரைவிலே கைகூடும்'' என்று சொல்லப் புகுகிறார். விரைவு என்பதற்கு ஒரு கால எல்லை வேண்டாமா? ''நீ எப்படியும் உன் வாழ்நாளுக்குள் முருகன் சேவடியை அடைந்து விடலாம்'' என்று சொல்லலாம். எத்தனையோ பிறவிகளை எடுத்துக் காலம் போக்கிய உயிருக்கு இந்தப் பிறவிக்குள்ளே, 'புண்டரிகத்தினும் செக்கச் சிவந்த கழல் வீடு' கிடைக்கும் என்றாலே அதிசயந்தான். ''இன்னும் பக்குவம் பெற்றுப் பல பிறவிகளில் சாதனை செய்து அவனை அடையலாம்'' என்று

சொன்னால் நிச்சயம் என்றே தோன்றும். அப்படியின்றி, ''இந்த உடம்பு இருக்கும்போதே காணலாம்'' என்பது மிக மிக விரைவில் கிடைக்கும் வெற்றி என்பதில் ஐயம் இல்லை.

''இத் தேகமொடு காண்பனோ?''

என்று தாயுமானவர் ஏங்குகிறார்.

''இன்னும் இருபதாண்டுக்குள் கிடைக்கும்'' என்றால் இன்னும் பெரிய ஆச்சரியம். ''இந்த ஆண்டு முடிவுக்குள் கிடைத்துவிடும்'' என்பது நம்பவே முடியாத வியப்பு. இந்த மாதம், இந்த வாரம். இன்றைக்கே என்று குறுக்கிக் கொண்டே வந்தால் கால அளவு சுருங்கச் சுருங்க வியப்பின் அளவு பெருகிக்கொண்டே வரும்.

## இறைவன் அருள்

இறைவனே திருவருள் செய்தால் இந்த விரைவு உண்டாகும். நம் முயற்சியினால் சாதிப்பதாக எண்ணிக் கொண்டால் ஆச்சரியமாகத்தான் இருக்கும். நம் முயற்சியைக்கொண்டு நம் வெற்றியை அளவிட இங்கே வகை இல்லை; நம் முயற்சி மாத்திரம் இருப்பதானால் நாம் என்றைக்கும் இறைவன் சேவடியை அடைய முடியாது. அவனுடைய அருள்வேண்டும். அவன் ஆர்வத்துடன் வந்து அருள் செய்வதனால்தான் நாம் உய்கிறோம். நாம் அவன்பால் வைக்கும் அன்பைவிட அவன் நம்பால் வைக்கும் அருள் கோடி கோடி மடங்கு பெரியது. நம்முடைய அன்பு, குழந்தை பெருஞ் சுமையைத் தூக்க ஆசைப்படுவது போன்றது. அதைத் தூக்க வேண்டுமென்று குழந்தை முயலும்போது, அம்மா ஒருகை கொடுத்துத் தூக்கி வைத்து விடுகிறாள். ஆனால் குழந்தை தூக்கி வைத்ததாகவே சொல்கிறாள். அதுபோல் நாம் அவனை அடைய வேண்டும் என்ற முயற்சியைத் தொடங்கினாலே ஆண்டவன் அருள்

கூர்ந்து நமக்கு உதவி செய்ய ஓடி வருகிறான். நாம் அவனை நோக்கி ஓரடி எடுத்து வைத்தால் அவன் நம்மை நோக்கி நூறடி எடுத்து வைத்து வருகிறான். நம் அன்பைவிட அது எத்தனையோ பங்கு பெரிது.

''தீர்ந்தஅன் பாய அன்பர்க்கு அவரினும் அன்ப போற்றி''

என்பது திருவாசகம்.

நம் முயற்சியை மட்டும் கணக்குப் பண்ணினால் நாம் அவனை அடைவது இன்ன காலம் என்று சொல்ல இயலாது. அவன் அருள் வந்து அணைக்கும் என்றால், அதற்குக் கால தாமதமே வேண்டாம். எந்தக் கணத்திலும் அவனை அடையலாம். ஆதலின் இந்தப் பயணம் நிறைவு பெறுவதென்பது அவன் திருவுள்ளத்தைப் பொறுத்தது. அவன் நினைத்தால் இந்தப் பிறவியிலே, இந்த ஆண்டிலே, இந்த மாதத்திலே, இந்த வாரத்திலே, இன்றாகிய ஒரு நாளிலே நமக்கு நலம் உண்டாகும் என்று சொல்வதுகூடப் பிழை; இந்தக் கணத்திலேயே கிடைக்கும். அதை எண்ணியே பயணம் புறப்பட்ட புலவனைப் பார்த்து,

இன்னே பெறுதிநீ முன்னிய வினையே

என்று கூறுகிறார். இன்னே - இப்பொழுதே. இதைக் காட்டிலும் விரைவான காலம் இல்லை. இது நம்முடைய முயற்சி வேகத்தை எண்ணிச் சொன்னது அன்று; முருகனுடைய கருணை வேகத்தை நினைந்து சொன்னது.

இவ்வாறு இறைவன் திருவடியை அடைவதை லட்சியமாகக் கொண்ட உண்மையான அறிவாளியைப் பார்த்து, அவன் முயற்சிக்கு ஊக்கம் ஊட்டுவாராகி ''இப்போதே நீ நினைத்த காரியத்தின் பயனை அடைவாய்'' என்று சொல்லி, மேலே வழிகாட்டப் புகுகிறார் நக்கீரர்.

செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயத்தனை ஆயின், பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப,
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே!

(சிவந்த வேலையுடைய செந்நிறப் பிரானாகிய முருகனுடைய செம்மையான திருவடியைச் சென்று அடையும் பெருமை பெற்ற உள்ளத்தோடு, நன்மையை விரும்புகின்ற கடைப்பிடியோடு, இதுகாறும் பழகிய இடத்தைப் பிரிந்து சென்று வாழ்வதற்குரிய யாத்திரையை நீ விரும்பினாயானால், பலவகையான நன்மைகளுடன் நன்றாக உன்னுடைய நெஞ்சத்திலுள்ள இனிய விருப்பம் நிறைவேறும் வகையில், இப்போதே நீ நினைந்து முற்பட்ட காரியத்தின் பயனை அடைவாய்.

செம்மல் - பெருமை, நிறைவு. உள்ளம் - ஊக்கம் என்றும் பொருள் கொள்ளலாம். புரி - விரும்பும். கொள்கை - மேற்கோள்; லட்சியம். புலம் - இடம். செலவு - பயணம். நன்னர் - நன்றாக. நசை - விருப்பம். வாய்ப்ப - எண்ணியபடியே கிடைக்க. இன்னே - இப்போதே. பெறுதி - அடைவாய். முன்னிய - எண்ணி முற்பட்ட. வினை - செயலின் பயன்; ஆகுபெயர்.)

முருகன் நிறம் செம்மை; அவன் திருவடி செம்மை; அவன் கைவேல் செம்மை; அவனை அடைய நினைக்கும் உள்ளமும் செம்மையானது. செம்மை என்பதற்கு நேர்மை, நிறைவு, தூய்மை, சிவப்பு என்று பல பொருள்கள் உண்டு. இங்கே எல்லாம் செம்மையாக இருக்கின்றன.

முருகப் பெருமானை அடையவேண்டுமென்ற ஆசை உள்ள ஒருவனுக்கு, அந்தப் பெருமானது திருவருளை

முன்னே பெற்ற புலவன் வழிகாட்டுவது திருமுருகாற்றுப் படை என்பதைப் பார்த்தோம். ''இறைவனைக் காண வேண்டும்'' என்ற ஆர்வத்தோடு புறப்பட்ட புலவனுடைய தகுதியை,

நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை

என்று காட்டினார். இறைவனுடைய திருவருளைப் பெற விரும்புகிறவர்கள் அங்கு ஒருகாலும், இங்கு ஒருகாலும் வைத்தால் அதனை அடைய முடியாது. ஏதேனும் ஒன்றையே திண்மையாக எண்ணிப் பற்றிக்கொள்ள வேண்டும். உலகத்தில் பற்றும் இறைவனிடத்தில் பற்றும் ஒன்றுக்கொன்று மாறுபாடானது. உலகத்தில் வாழ்வது வேறு, பற்று வைத்தல் வேறு. இறைவனிடத்தில் பற்று உடையவர்கள் எல்லாப் பொருள்களிடமும் உறவு கொண்டாடலாம். ஆனால் உலகத்தில் பற்றுள்ளோர்கள் இறைவனோடு பற்றுக் கொண்டாடுவது இயலாது. எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்து ஒரு நெறிப்பட்டு வாழ்பவனுக்கு அந்த உயிர்களுக்கு எல்லாம் தலைவனாகிய ஆண்டவனிடத்தில் சிறந்த பற்று இருக்கவேண்டும். அப்போதுதான் உயிர்களிடத்திலுள்ள அன்பும் நிரந்தரமாக இருக்கமுடியும். ஆகையால், ''பல காலமாக இருந்த பற்றை விட்டுவிட்டு இறைவனை அடையவேண்டுமென்ற காதலோடு புறப்பட்டாயே! நீ உன் பயணத்தை வெற்றியுடன் முடிப்பாய்'' என்று கூறுவதுபோல ஆசி கூறுகிறார் நக்கீரர்.

### வலமான பயணம்

இனி முருகப் பெருமான் இருக்கிற இடங்கள் இன்னவை என்று சுட்டிக்காட்ட வருகிறார். எடுத்தவுடன் திருப்பரங்குன்றத்தைச் சொல்கிறார். மதுரை மாநகரில்

வாழ்ந்தவர் நக்கீரர். ஆகையால் அவர் திருமுருகாற்றுப் படைப் பயணத்தைத் திருப்பரங்குன்றத்திலிருந்து தொடங்குகிறார். அங்கே இருந்து திருச்சீரலைவாய் சென்று, அப்பால் வடக்கே சென்று திருவாவினன்குடியை அடைந்து, அங்கிருந்து கிழக்கே சென்று திருவேரகத்தை வணங்கி, பல மலைகளையும் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு, கடைசியில் மதுரையை அடுத்த பழமுதிர்சோலையில் வந்து முடிக்கிறார். இது வலமாக வரும் பயணமாக இருக்கிறது.

---

# திருப்பரங் குன்றம்

முதலில் திருப்பரங்குன்றமாகிய படைவீட்டைப் பற்றிச்சொல்கிறார். முருகப்பெருமான் ஆறு படைவீடுகளில் எழுந்தருளியிருக்கிறான் என்ற வழக்கு, பலகாலமாகத் தமிழ்நாட்டில் இருக்கிறது. அந்த வழக்குக்கு அடிப்படை திருமுருகாற்றுப்படையே. பிற்காலத்தில் அருணகிரிநாத சுவாமிகளுடைய திருப்பாடல்களிலும், முருகனைப் பற்றிய துதி நூல்களிலும் ஆறுபடை வீடுகளைப் பற்றிய செய்திகள் நிரம்ப வருகின்றன. நக்கீரர் ஆறு படைவீடுகள் என்று குறிப்பிட்டுச் சொல்லாவிட்டாலும் ஆறு இடங்களைத் தனியே வைத்துச் சுட்டிக்காட்டுவதால் ஆறுபடை வீடுகள் என்ற அமைப்பு உண்டாயிற்று. வேறு பல இடங்களிலும் முருகன் இருந்தாலும் ஆறு என்ற எண்ணிக்கைக்கும் அவனுக்கும் தொடர்பு மிகுதி. ஆகையால் ஆறு படைவீடு என்ற வழக்கு நிலையாக நின்றுவிட்டது. அந்தப் படைவீடு களில் முதலாவது திருப்பரங்குன்றம்.

### பரங்குன்றின் பழம் பெருமை

திருப்பரங்குன்றத்தைப்பற்றிச் சொல்ல வருகிறார் நக்கீரர். அதைப் பற்றிய செய்தி சுருக்கமாகவே இருக்கிறது. மதுரையைப் பற்றிய வருணனையே முதலில் இருக்கிறது. ஏதேனும் ஓர் ஊரைப் பிறருக்குச் சுட்டிக்காட்ட வேண்டுமா னால் அது சிற்றூராக இருந்தால், அதன் அருகிலுள்ள பேரூரைச் சொல்லிப் பின்பு அதனைச் சொல்வது ஒரு

வழக்கம். அவ்வாறு திருப்பரங்குன்றத்தை நேரே சொல்லா மல் அதன் அருகிலுள்ள மதுரை மாநகரைச் சொல்லி, அப்பால் திருப்பரங்குன்றத்தைச் சொல்கிறார் நக்கீரர்.

மதுரை மாநகருக்கு மேற்கே இருப்பது திருப்பரங் குன்றம். அந்தக் காலத்தில் திருப்பரங்குன்றம் தனி ஊராக இல்லை. மதுரை மாநகரிலுள்ள மக்கள் பேரன்போடு திருப்பரங்குன்றத்திற்குச் சென்று வழிபட்டு வந்தார்கள். பரிபாடல் என்ற சங்க நூலில் அதைப்பற்றிய செய்திகள் வருகின்றன. திருப்பரங்குன்றத்தில் அந்தக் காலத்தில் இருந்த இயற்கை எழிலையும், மதுரை மாநகரிலுள்ள மக்கள் திரளாகச் சென்று முருகனை வழிபட்ட செய்தியையும் அதில் காணலாம். குகைகளில் பல வகையான சித்திரங்கள் எழுதி இருந்தார்கள் என்பதை அந்த நூல் சொல்கிறது; அவ்விடத்தை எழுதெழிலம்பலம் என்று சொல்வார்கள். தொன்றுதொட்டே திருப்பரங்குன்றம் புகழுடையதாக நிலவுகிறது. முருகப்பெருமானுக்குரிய முதல் படைவீடு என்பதோடு, அது ஒரு சிவத்தலமுமாகும். பரங்குன்றம் என்ற பெயரே பரனாகிய சிவபெருமான் இருக்கின்ற குன்று என்ற பொருளுடையது; அந்தத் தலத்துக்கு தேவாரம் உண்டு. ஆகவே சிவத்தலமும், முருகன் திருப்பதியும் ஒன்றாக இணைந்து அமைந்தது அவ்விடம். முருகப் பெருமானின் புகழ் அங்கே மிகுதியாக இருப்பதனால் பலருக்கு அது பாடல் பெற்ற சிவத்தலம் என்பது தெரியாது. சிவத்தலம் என்பதை அதன் பெயரே நன்கு காட்டுகிறது.

## மதுரையின் சிறப்பு

இனி நக்கீரர் சொல்கின்றதைப் பார்க்கலாம். அவர் முதலில் நமக்கு மதுரையை அறிமுகப்படுத்துகிறார். அவர் மதுரையில் வாழ்பவரானாலும் நம்மை நோக்கிப்

பாடுபவராகையால், புறத்திலிருந்து மதுரைக்கு நம்மை அழைத்துச் செல்கிறார். மதுரை மாநகர் பாண்டிய அரசர்கள் அரசாண்ட இடம். பல காலமாகப் பரம்பரை பரம்பரையாகப் பாண்டிய மன்னர்கள் இருந்து தம்முடைய வீரத்தையும், கொடையையும் புலப்படுத்திய இடம் அது. அன்றியும் தமிழ்ச் சங்கத்தில் பல புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்திவந்த இடமும் அதுதான். பழங்காலத்தில் மன்னர்கள் இருந்து வாழ்ந்து அரசோச்சிய நகரங்களுள் இன்றும் சிறப்புடன் இருப்பவை காஞ்சிபுரமும் மதுரையுமே ஆகும். ஆனால் இந்த இரண்டிலும் மதுரை பழஞ்சிறப்புக் குன்றாமல் மேலும் மேலும் வளர்ச்சி பெற்று வருகிறது. மன்னர் உறைவிடம் ஆதலின் அந்த நகருக்கு மதில்கள் உண்டு; கோட்டைகளும் உண்டு. பழங்காலத்தில் மதிலின் வெளியிலே காவலர்கள் காத்துக்கொண்டிருப் பார்கள். மதிலின்மேல் கொடிகள் ஆடிக்கொண்டிருக்கும். மதுரையில் அடிக்கடி போர் நிகழ்வது இல்லை. அந்தத் திருமதில்வாயில் போர் இல்லாத வாயில். பாண்டியன் மிக்க வீரத்துடன் பகைவர்களை அழித்து ஒடுக்கி விட்டமை யினால் மதுரையை முற்றுகை இடுபவர் யாரும் இல்லை.

மதிலின் வாயிலில் பந்தையும், பாவைகளையும் தொங்க விட்டிருப்பார்கள். அது ஒரு குறிப்பையுடையது. பகைவர்கள் இந்த மதிலினூடே புகுந்து வரமுடியாது. அப்படிப் புகுந்துவர வேண்டுமானால் ஆண்மையை இழந்து, தாங்கள் பெண்களைப் போன்றவர்கள் என்ற எண்ணத்தை உண்டாக்க வேண்டும். அதற்கு அடையாளமாக மதில்வாயிலிலே கட்டித் தொங்கவிட்டிருக்கும் பந்தையும், பாவையையும் எடுத்து விளையாடிப் பின்பு உள்ளே போக வேண்டும். பெண்கள் பந்தாடுவதும் பாவையை வைத்துக் கொண்டு விளையாடுவதும் இயல்பு. வீரமுடையவர்கள்

வெளியில் நின்று கோட்டையை முற்றுகையிடலாம். பெண்களைப் போன்றவர்கள் வீரம் இழந்து உள்ளே போகலாம். இதுதான் குறிப்பு.

மதிலை நெடுந்தூரத்திலிருந்து பார்க்கும்போது, 'பகைவர்கள் வேண்டுமானால் முற்றுகையிட்டுப் போர் செய்யலாம்' என்று உணர்த்துகின்ற பாண்டியனது கொடி அதன் மேல் உயர்ந்து விளங்குகிறது.

செருப்புகன்று எடுத்த சேணுயர் நெடுங்கொடி.

(போரை விரும்பி உயர்த்திக் கட்டிய மிக உயரமாக உள்ள நீண்ட கொடிகளை உடைய.)

மதிலைப் பார்த்து, அதன்மேல் உயர்ந்து பறந்து கொண்டிருக்கும் கொடியைப் பார்த்து, பின்னர் வாயிலை அணுகுகிறோம். அங்கேதான் பந்தும் பாவையும் தொங்குகின்றன. அந்த வாயில் இப்போது மங்கல வாயிலாக இருக்கிறது. திறந்து இருக்கின்ற வாயில் அது. பகைவர்களாகிய வீரர்களை அடியோடு அழித்துவிட்ட சிறப்பை உடையவன் பாண்டியன். ஆதலின் அந்த வாயிலில் இப்போது போருக்குரிய அறிகுறிகள் இல்லை.

வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்.

(வரிந்து புனையப்பட்ட பந்தோடு பொம்மைகள் தொங்க, பகை வீரர்களை அழித்துப் போர் அருமையாகப் போன வாயிலையும் உடைய மதுரை என்று சொல்ல வருகிறார்.)

### கடைவீதி

அந்த வாசலின் வழியே மதுரைக்குள்ளே புகுகிறோம். எங்கே பார்த்தாலும் விசாலமான தெருக்கள்; அழகான

அங்காடிகள் இருக்கின்றன. பழங்காலத்தில் மதுரையிலும் காவிரிப்பூம்பட்டினத்திலும் இருந்த அங்காடிகள் மிக்க சிறப்பைப் பெற்றவை; பிற நாட்டிலிருந்து வந்தவர்களும் பண்டங்களைப் பெற்றுத் தம் ஊருக்குச் செல்லும் பெருமையை உடையவை. மதுரையில் அந்தக் காலத்தில் பகல் நேரத்தில் வியாபாரத்தைச் செய்யும் இடத்தை நாள் அங்காடி என்றும், மாலையில் வியாபாரிகள் வாணிகம் செய்யும் இடத்தை அல்லங்காடி என்றும் கூறுவார்கள். அந்த இரண்டு கடைத் தெருவுகளும் மிக விரிவாக அமைந் திருந்தன என்று பழைய நூல்கள் கூறுகின்றன. அந்த அங்காடிகளில் வஞ்சகம் என்பதே கிடையாது. உள்ளதை உள்ளபடியே சொல்லி வியாபாரிகள் வியாபாரத்தை நடத்துவார்கள்; கொள் முதல் இது, லாபம் இது என்று வெளிப்படையாகச் சொல்லி விற்பனை செய்வார்கள்; போலிச்சரக்கு வியாபாரமோ, அநியாய விலையைச் சொல்கின்ற முறையோ, ஏமாற்றோ, திருட்டோ அங்கே இருப்பது இல்லை. அது எந்த வகையான தீமையும் இல்லாத அங்காடி. அதனை நக்கீரர்,

தீது தீர் நியமம்

என்று சொல்கிறார்.

அந்தத் தெருக்களில் எப்போதும் திருமகள் தாண்டவ மாடிக் கொண்டிருக்கிறாள்; உலகத்திலேயுள்ள பல நாட்டு மக்களும் வந்து சேர்ந்து பண்டங்களைக் கொடுத்தும் கொண்டும் வாணிகம் செய்யும் இடம் அது; மக்கள் கூட்டமும் பொருளின் சிறப்பும் சிறிதும் குறையாமல் நிற்கின்ற இடம்; அங்கே திருமகள் கொலு வீற்றிருக்கிறாள் என்றே சொல்லவேண்டும். ஆகவே,

திருவீற்றிருந்த தீது தீர் நியமத்து

(திருமகள் சிறப்புடன் எழுந்தருளியிருக்கும், தீமை தீர்ந்த கடைகளையும்,)

என்று சொல்கிறார். தமிழ்நாட்டில் அந்தக் காலத்தில் மற்ற நகரங்களைவிடச் சிறந்த மாட மாளிகைகள் மதுரையில் அதிகமாக இருந்தன. அதனால் அதை ''மாடக் கூடல்'' என்று சொல்வார்கள். ''நான்மாடக் கூடல்'' என்பது மதுரைக்குரிய ஒரு பெயர். ஒரு காலத்தில் இறைவன் தன்னுடைய தலையில் இருந்த நான்கு மேகங்களையே மாடமாக நிறுத்தி, வருணன் இடையறாது பெய்த மழையிலிருந்து அவ்வூரைக் காப்பாற்றினான் என்பது புராண வரலாறு. பொதுவாகவே செல்வம் நிரம்பிய நகரமாதலின் செல்வர்கள் பெரிய மாடங்களை எழுப்பியிருந்தார்கள். அதனால் மாடக்கூடல் என்ற பெயர் வந்தது. ஒவ்வொரு வீதியிலும் பல பல மாடங்கள் இருந்தன.

மாடம் மலி மறுகிற் கூடல்.

(மாடங்கள் மலிந்த தெருக்களையும் உடைய மதுரை.)

வீரத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் கோட்டையும் கொடிகளும், சமாதானத்தை வெளிப்படுத்தும் மதில் வாயிலும், செல்வச் சிறப்பையும் நியாயமான வாணிகச் சிறப்பையும் புலப்படுத்தும் அங்காடிகளும், வளத்தைக் காட்டும் மாடங்களும் உடைய மதுரைமா நகருக்கு மேற்கே திருப்பரங்குன்றம் இருக்கிறது என்று சொல்ல வருகிறார்.

மாடம் மலி மறுகிற் கூடற் குடவயின்.

(மாடங்கள் மலிந்த தெருக்களையும் உடைய மதுரைக்கு மேற்கே.)

## வண்டுகளின் மகிழ்ச்சி

இனி, திருப்பரங்குன்றத்தைப் பற்றிச் சொல்கிறார். திருப்பரங்குன்றத்தின் அடிவாரத்தில் வயல்கள் இருக்கின்றன. மலையின்மேல் சுனைகள் இருக்கின்றன. வளப்பமுடைய

நிலமாதலின் அங்கங்கே உழுது பயிரிட்டிருக்கிறார்கள். வளம் நிரம்பிய வயல்கள் அங்கே உண்டு. வயல் வளம் சேற்றினால் அமைவது. நல்ல பூமி ஆதலால் அந்தச் சேறு கறுப்பாக இருக்கிறது. துண்டு துண்டாக அங்கங்கே சிதறுண்டு கிடக்கும் வயலாக இல்லை. எங்கே பார்த்தாலும் அகன்ற நிலப் பரப்புகள் எல்லாம் கரிய சேற்றையுடைய வயலாகக் காட்சி தருகின்றன.

இருஞ்சேற்று அகல் வயல்

என்று நக்கீரர் பாடுகிறார். வயலின் ஓரங்களில் தண்ணீர் தேங்கும் இடங்களில் தாமரை மலர்கள் மலர்ந்திருக்கின்றன. முள்ளைத் தண்டிலேயுடைய தாமரை வாய் அவிழ்ந்து விரிந்திருக்கிறது.

மலர் இருக்கும் இடத்தில் வண்டு வரவேற்பு இல்லாமல் போய்ச் சேரும். முதல் நாள் இரவிலே வண்டுகள் வந்து ஒரு தாமரை மலரில் புகுந்தன. அது மூடிக்கொண்டது. இரவு முழுவதும் அந்தத் தாமரை மலரையே படுக்கையாகக் கொண்டு அந்த வண்டுகள் அங்கே தூங்கின. ஆண் வண்டும் பெண் வண்டுமாகத்தான் இருக்க வேண்டும். காலையில் வாயில் கதவைத் திறப்பதுபோல அந்தத் தாமரை இதழ்கள் விரிந்தன. அப்போது அங்கு இருந்த வண்டுகள் புறப் பட்டன. முதல் நாள் மாலையில் தாமரைத் தேனை உண்ட வண்டுகள் இன்று காலையில் நெய்தல் மலரை ஊதுகின்றன. வைகறை நேரமாகையால் அது இன்னும் மூடிக்கொள்ள வில்லை. அந்த நெய்தலில் உள்ள கள்ளையும் குடித்து மறுபடியும் பூரிக்கின்றன. காலையில் சுறுசுறுப்பை ஊட்டும் வகையில் இருக்கிறது நெய்தல் தேன்; அதனால் அதைக் கள் என்றே சொல்கிறார்.

இப்போது சூரியன் நன்றாகத் தன்னுடைய கிரணங்களைப் பரப்பிவிட்டான். களிப்பில் மிதந்த அந்த

வண்டுகள் மெல்ல மெல்லப் பறந்து மேலே செல்கின்றன. மலையின் மேலுள்ள சுனைகளில் பலவகையான மலர்கள் மலர்ந்திருக்கின்றன. கண்களைப் போன்ற சின்னஞ் சிறிய பூக்கள் அங்கே உள்ளன. அவற்றிலும் தேன் இருக்கின்றது. முதல் நாள் தாமரைத் தேனை நுகர்ந்து விட்டு, விடியற்காலையில் நெய்தல் கள்ளை உண்டு புறப்பட்ட வண்டுகள், நல்ல சிறிய பூக்கள் மலர்கின்ற மலையின் மேலுள்ள சுனைக்கு வந்து விட்டன. அங்குள்ள மலர்களில் புகுந்து அங்கேயுள்ள தேனையும் உண்டு ரீங்காரம் செய் கின்றன. இப்படி வேறு வேறு வண்டுகள் ஒலிக்கின்றன. அழகிய சிறகுகளை உடைய வண்டுக் கூட்டங்கள் சேர்ந்தாற்போல் முரலும்போது ஒருவகை இனிமையான ஒலி எழும்புகிறது. வயிறு நிரம்பத் தேனை உண்ட சிறப்பினாலே அந்த வண்டுகள் இடைவிடாமல் மலையின் மேலேயுள்ள சுனைகளில் ரீங்காரம் செய்கின்றன. அத்தகையது பரங்குன்றம்.

இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று அமர்ந்து உறைதலும் உரியன்.

(கரிய சேற்றையுடைய அகன்ற வயலில் விரிந்து மலர்ந்த முள்ளைத் தண்டிலே உடைய தாமரையில் உறங்கி, விடியற்காலையில் கள் மணம் வீசுகின்ற நெய்தல் மலரை ஊதி, பகல் நேரம் வந்தவுடன், கண்ணைப் போல மலர்ந்த அழகிய சுனைகளிலுள்ள மலர்களில், உள்ளே சிறகுகளை யுடைய வண்டுகளின் கூட்டம் ரீங்காரம் செய்யும் திருப்பரங் குன்றத்தில் எழுந்தருளியிருப்பதற்கும் உரியவன்.)

இரவிலே தங்கிய வண்டுகள் தாமரையில் தூங்குகின்றன என்று சொல்ல வந்தவர்,

முள்தாள் தாமரைத் துஞ்சி

என்றார். இங்கே முள்ளையுடைய தாமரை என்று சொல்வதற்கு ஏதேனும் சிறப்பு உண்டா என்று பார்க்க வேண்டும். இரவில் தூங்குபவர்களுக்குப் பாதுகாப்பு வேண்டும் அல்லவா? ஆகையால் இயற்கையிலேயே வண்டுகள் துஞ்சுகிற படுக்கையாகிய மலருக்கு முள் பாதுகாப்பாக இருக்கிறது. வேறு எந்தப் பிராணியும் அந்தத் தண்டின் மேல் ஏறித் தாமரையில் புகமுடியாது. தாமரையாகிய வீட்டின் இதழாகிய கதவு தானே காலையில் திறந்து கொள்ளுமேயன்றி வேறு ஒருவராலும் திறக்க முடியாது.

வண்டுகளுக்கே இத்தனை இன்பமான வாழ்வு அமையும் போது மற்றவர்களுக்கு எவ்வளவு இன்பம் உண்டாகும் என்று நாம் வியக்கிறோம்.

வீரமும், செல்வமும், சமாதானமும் ஒருங்கேயுடைய மதுரை மாநகருக்கு அருகில் இயற்கையான எழில் நலங்கள் நிறைந்த திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமான் எழுந்தருளியிருக்கிறான். அடியார்களுக்கு அருள் செய்வதற்காக வந்து அமர்ந்த இடம் ஆகையால் மிக்க விருப்போடு அங்கே தங்கியிருக்கிறான்.

குன்று அமர்ந்து உறைதலும் உரியன்.

''அங்கே உறைதலும் உரியன்'' என்று நக்கீரர் சொன்னார். அந்த ஓர் இடம் மாத்திரம் ஆண்டவனுக்கு உரியது அன்று, இன்னும் பல இடங்கள் உண்டு என்பதை அந்தக் குறிப்புக் காட்டுகிறது. அதுமட்டுமன்று என்று சொல்லி மேலே தொடர்ந்து சொல்கிறார்.

குன்று அமர்ந்து உறைதலும் உரியன்; அதாஅன்று.

(அதாஅன்று - அதுவல்லாமல்.)

திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் முருகனைப் பற்றிச் சொன்ன பிறகு, ''அதோடு மட்டுமன்று, இன்னும் சொல்கிறேன்'' என்ற குறிப்பை வைத்துப் பேசினார் நக்கீரர். மேலே திருச்சீரலைவாயின் பெருமையைச் சொல்ல வருகிறார். முருகப் பெருமான் ஆறு முகங்களோடும், பன்னிரண்டு திருக்கரங்களோடும் எழுந் தருளும் கோலத்தை அந்தப் பகுதியில் விரிவாக எடுத்துக் காட்டுகிறார்.

---

# அலைவாய் முருகன்

திருச்சீரலைவாய் என்பது திருச்செந்தூருக்குப் பெயர். அது மிகப்பழைய தலம். அலைவாய், செந்தில் என்ற இரண்டு திரு நாமங்களும் சங்ககாலத்து நூல்களில் வருகின்றன. எப்போதும் அலை மோதுகின்ற இடத்தில் திருக்கோயில் அமைந்திருப்பதால் அலைவாய் என்ற பெயர் வந்தது. அது அடைமொழியுடன் திருச்சீரலைவாய் என்று வழங்குகிறது. செந்தி என்னும் பழம் பெயர் பிறகு செந்திலாகி, செந்தூர் ஆயிற்று. முருகப் பெருமான் சூரபன்மனோடு போராடி வெற்றி பெற்று ஜயாபிஷேகம் செய்துகொண்ட இடமாதலின் அதற்கு ஜயந்தி என்ற பெயர் வந்தது; அதுவே நாளடைவில் செந்நி ஆயிற்று; அது மருவிச் செந்தில், செந்தூர் என்று வழங்கியது என்பர். திருச்செந்தூர் ஆண்டவனுடைய பெருமையை அளவிட்டுச் சொல்ல முடியாது.

வென்றிமாலைக் கவிராயர் என்ற புலவர் பெருமான் அதற்கு ஒரு புராணம் பாடியிருக்கிறார். பகழிக்கூத்தர் என்ற வைணவர் அங்கே சென்று தம் வயிற்று வலி தீரப் பெற்று ஒரு பிள்ளைத்தமிழ் பாடினார். குமர குருபரர் ஐந்து வயசுவரை ஊமையாக இருந்தார். அவருடைய தாய் தந்தையர் அவரைத் திருச்செந்தூர் ஆண்டவனுடைய சந்நிதானத்தில் கொண்டு போய்க் கிடத்தி விரதம் இருந்தனர். அப்பெருமான் திருவருளால் அவர் ஊமைத்தன்மை நீங்கினார். நீங்கின வுடன் கந்தர் கலிவெண்பாவைப் பாடும் அருளாற்றல்

அவருக்குக் கிடைத்தது. ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் வயிற்று வலியால் துன்புற்று இந்தத் தலத்திற்கு வந்து புஜங்க ஸ்தோத்திரம் பாடி அந்த நோயினின்றும் நீங்கினார்.

பழைய சங்க நூல்களில் பல இடங்களில் திருச்சீரலைவாயைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

## பழம் பாடல்களில்

''திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎய்''

என்று அகநானூற்றில் வருகிறது.

''வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேல் நிலைஇய காமர் வயின்துறை''

என்பது புறநானூற்றுப் பாட்டு.

''வரைவயிறு கிழித்த நிழல்திகழ் நெடுவேல்
திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்.''

என்பது ஒரு பழம்பாட்டு. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்,

''சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்.''

என்று பாராட்டுகிறார். தேவாரத்தில் அப்பர் சுவாமிகள்,

''நம்செந்தில் மேய வள்ளி மணாளற்குத்
தாதை கண்டாய்.''

என்று குறிப்பிடுகிறார்.

திருச்செந்தூரில் மூல மூர்த்தி ஒரு முகமுடைய திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கிறான். உற்சவ மூர்த்தி தான் ஆறு திருமுகமுடையவன். அந்தப் பெருமானுடைய

சந்நிதியை ஷண்முக விலாசம் என்று வழங்குகிறார்கள். வெளியில் பெரிய திருவிழாவில் எழுந்தருளும் மூர்த்தியாகிய அந்தப் பெருமானை எண்ணியே நக்கீரர் திருச்சீர் அலை வாய்ப் பகுதியில் ஆறுமுகத்தைப் பற்றியும், பன்னிரண்டு திருக்கரங்களைப் பற்றியும் பாடுகிறார் என்று தோன்றுகிறது. இனி அவர் காட்டும் பெருமானைப் பார்க்கலாம்.

## யானை வாகனம்

முருகப்பெருமான் யானையின்மேல் எழுந்தருளி வருகிறான். முருகனுடைய வாகனங்களில் சிறந்தது மயில். அடுத்தபடி நிற்பது வேழம். அதற்குப் பிணிமுகம் என்று பெயர். திருத்தணி முதலிய தொண்டை நாட்டுத் தலங்களில் யானை உருவத்தை முருகனுடைய சந்நிதானத்திற்கு எதிரில் வைத்திருப்பதைக் காணலாம். அவன் எல்லா உலகத்திற்கும் அதிபதி. அரச நிலையில் உள்ளவன். ஆதலின் அவனுக்கு யானையும் வாகன மாயிற்று. நக்கீரர் முதலில் அந்த யானையை வருணிக்கிறார்.

முருகன் ஏறுகிற யானையானாலும் அதற்கு எப்போதாவது அகங்காரம் வரும்; அப்போது முருகன் அதைத் தண்டிப்பதும் உண்டு. அங்குசத்தை ஓச்சி அதன் போக்கைச் சீர்திருத்துவான். 'நம்முடைய யானை யாயிற்றே! தேவலோகத்து யானையாயிற்றே!' என்று சிறிதும் எண்ணாமல், தவறு நிகழ்ந்தபோதெல்லாம் கண்டிக்கும் தன்மையாளன் எம்பெருமான். தம்மைச் சார்ந்தவர்கள் தவறு செய்தால் அதனை மன்னிப்பது முறையாகாது. யானையி னுடைய நுதலில் வடுக்கள் இருக்கின்றன. கூர்மையான அங்குசத்தின் நுனி பதிந்த வடுக்கள் அவை. அந்த நுதலில் பொன்னாலான மாலையும், நெற்றிப் படாமும் அசைகின்றன. முருகன் ஏறி வரும் யானையாதலின் அதனை நன்றாக

அலங்காரம் செய்திருக்கிறார்கள். அந்த யானையை நிமிர்ந்து பார்த்தால் அதன் நெற்றியிலுள்ள மாலையும் முக படாமும் பளிச் சென்று விளங்குகின்றன. அவை அசைய மெல்ல அசைந்து வருகிறது யானை.

வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வர.

(கூர்மையான அங்குசத்தின் நுனி மோத, அதனால் உண்டான வடு ஆழ்ந்திருக்கும் வரிகளையுடைய நெற்றியில், வாடாத பொன்னரி மாலை பட்டத்தோடு அசைய.)

''யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே'' என்று ஒரு பழமொழி வழங்குகிறது. யானை வருவதைக் குறிப்பதற்கும் வழியில் உள்ளவர்கள் யானைக்கு வழி விடுவதற்கும் அதற்கு மணி கட்டுவது இயல்பு. ஒரு கயிற்றில் இரண்டு தலைப்பிலும் மணியைக் கட்டி அதன் மேல் போட்டிருப்பார்கள். யானை காலை எடுத்து வைத்து நடக்கும்போது அந்த மணிகள் மாறி மாறி ஒலிக்கும். தேவலோகத்து யானையானாலும் அதற்கும் இரண்டு பக்கத்திலும் மணியைக் கட்டியிருக்கிறார்கள். அது கணீர் கணீர் என்று ஒலிக்கிறது. வலக் காலைத் தூக்கி வைக்கும்போது அந்தப் பக்கத்து மணியும், இடக் காலைத் தூக்கி வைக்கும்போது அந்தப் பக்கத்து மணியும் மாறி மாறி ஒலிக்கின்றன. அப்படி மணிகள் ஒலிக்க அது வேகமாக நடந்து வருகிறது.

படுமணி இரட்டும் மருங்கின் கடுநடை.

(ஒலிக்கும் மணி மாறி மாறி ஓசை செய்யும் பக்கத்தையும் வேகமான நடையையும்.)

அந்த வேழம் முருகப் பெருமான் ஏறுகின்ற பெருமையை உடையது. பெரு வீரத்தையுடையது. அதன்

வலிமைக்கு உவமையே கிடையாது. எமனை வேண்டுமானால் சொல்லலாம். அந்த யானையை எதிர்த்துப் போர் செய்யத் தொடங்கினால் யாராலும் வெல்ல முடியாது.

கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்.

(எமனைப் போன்ற மாற்ற முடியாத வலிமையையும்.)

எமன் மாற்ற முடியாத மொய்ம்பை உடையவன். ''மாற்றாரும் கூற்றம்'' என்று தொல்காப்பியம் கூறும். எத்தகைய வலிமை உடையவனாக ஒருவன் இருந்தாலும் கூற்றுவனை ஒரு கணம் தாமதிக்கும்படி செய்யமுடியாது. பணத்தினாலோ பதவியினாலோ பிறவகை வலிமையினாலோ குறிப்பிட்ட ஓர் உயிரைக் கொண்டு போக வரும் கூற்றுவனை மாற்ற முடியாது. அதே போலத்தான் அந்த யானையும் போரில் புகுந்ததானால் அதனுடைய எதிர்ப்பை மாற்றுவதற்கு யாராலும் முடியாது. அதன் வேகத்தைப் பார்த்தால் கூற்றம் யானை உருவம் கொண்டு வந்து விட்டதோ என்று தோன்றுகிறது.

முருகப் பெருமானுக்குரிய அடியவர்கள் வேண்டும் போதெல்லாம் அவன் அங்கே போய் நிற்பான். பக்தர்களுடைய அன்பின் வேகத்தைக் காட்டிலும் முருகப் பெருமானுடைய கருணைக்கு வேகம் அதிகம். அவர்கள் ஒரு கால் முருகா என்று சொல்வதற்குள் மிக்க வேகமாக ஓடிச் சென்று அவர்களுடைய துன்பத்தைப் போக்கும் பெருங் கருணையாளன் அவன். அதற்கேற்றபடி அவனுக்கு வாகனம் அமையவேண்டுமல்லவா?

''குதிரைக்கு மேற்கே பயணம், ராவுத்தனுக்குக் கிழக்கே பயணம்'' என்று ஒரு பழமொழி உண்டு. அப்படியின்றித் தன்மேல் ஏறி நடத்துபவனது உள்ளத்தை அறிந்து செல்வது எதுவோ அதுதான் நல்ல வாகனம். முருகப்

பெருமான் எழுந்தருளியிருக்கும் பிணிமுகம் அவன் கருத்தை அறிந்துகொண்டு வேகமாகச் செல்கிறது. சண்டப் பிரசண்டமாகக் காற்று அடிப்பது போலப் போகும் ஆற்றல் உடையது அது.

கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்
கால்கிளர்ந்து அன்ன வேழமேல் கொண்டு

(யமனைப் போன்ற தடுப்பதற்கரிய வலிமையை உடைய, காற்று எழுந்தாற் போன்ற வேகத்தையுடைய யானையின்மேல் ஏறிக்கொண்டு, மாற்று அரு - மாற்றுவதற்கு அரிய; மாற்று: தொழிற் பெயர்.)

## திருமுடி

யானையின்மேல் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை இனி நாம் பார்க்கலாம். நக்கீரர் மெல்ல அவனுடைய திருமேனியைச் சுட்டிக் காட்டி, ஒவ்வொரு திருமுகமாகக் காட்டிப் பின்பு திருக்கரங்களையும் காட்ட வருகிறார். இதோ முருகப்பெருமானுடைய மகுடம். பலவகை மணிகளால் அமைந்தது அந்தக் கிரீடம். ஒன்றோடு ஒன்று மாறுபட்ட நிறமுள்ள மணிகளாகையால் எடுப்பாகத் தெரிகின்றன. முருகனுடைய திருமுடியில் அந்த மகுடம் பளபளக்கிறது. முடியில் ஐந்து வெவ்வேறு பகுதிகள் உண்டு. அடிமுதல் நுனி வரையில் ஐந்து வகையான பகுதிகள் நன்றாக இழைத்துச் செய்யப் பெற்ற முடி அது. பல வகையான பூ வேலைகளும் சிற்ப வேலைகளும் அமைந்த அந்த முடியில் வெவ்வேறு நிறம் பெற்ற மணிகளைப் பதித்திருக்கிறார்கள். முருகன் எப்படித் திரும்பினாலும் அந்த முடியிலுள்ள மணிகள் பளபளவென்று ஒளி வீசுகின்றன.

ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி

மின்உறழ் இமைப்பின் சென்னிப் பொற்ப.

(ஐந்து வேறு வேறு உருவத்தில் கைத்தொழில் நுட்பம் நிரம்பிய முடியில் விளங்கிய வெவ்வேறு நிறம் பெற்ற மணிகள் மின்னலை ஒத்த ஒளியோடு திருமுடியில் பொலிவு பெற்று விளங்க.)

## குழைகள்

திருமுடிக்குக் கீழே முகங்கள் விளங்குகின்றன. ஒவ்வொரு முகமும் நம்முடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சுடரோடு விளங்குகிறது. முகத்தின் இருபக்கங்களிலும் இரண்டு குழைகள் மின்னுகின்றன. வெவ்வேறு வகையான அழகுடன் அவை விளங்குகின்றன. தாழ் குழையாதலால் காதிலிருந்து தொங்குகின்றன. திருமுகம் சந்திரன் போல இருக்க, அதற்கு அருகில் மிக்க ஒளி படைத்த இரண்டு நட்சத்திரங்கள் சுடர்விடுவது போல அந்தக் குழைகள் ஒளியை வீசுகின்றன.

நகைதாழ்பு துயல்வரூஉம் வகைஅமை பொலங்குழை
சேண்விளங்கு இயற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்ப.

(ஒளி தங்கி அசைகின்ற பலவகை மணிகளையுடைய பொன்னாலான குழைகள், வானத்தில் விளங்கும் இயற்கையையுடைய ஒளியைப் பெற்ற திங்களைச் சேர்ந்து அகலாத நட்சத்திரங்களைப் போல விட்டு விளங்கி ஒளிர.)

சந்திரனை உடுபதி என்று சொல்வார்கள். அவன் நட்சத்திரங்களுக்கெல்லாம் தலைவன். அவனிடத்தில் அன்பு பூண்டு இரண்டு நட்சத்திரங்கள் நெருங்கி ஒளி வீசுவன போலத் தோன்றுகிறது இந்தக் காட்சி.

---

## திருமுகங்கள்

முருகப்பெருமானுடைய திருமுகங்கள் தியானம் பண்ணுகிறவர்களுடைய உள்ளத்தில் ஒளி விடுபவை. விரத சீலர்களாகிய முனிபுங்கவர்கள் தாம் எண்ணிய எண்ணங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொள்வதற்கு இந்தத் திருமுகங்களை இடைவிடாமல் தியானம் செய்வார்கள். அவர்கள் மட்டுமல்ல. உலகத்தில் ஏதேனும் ஒரு கடைப்பிடியைக் கொண்டவர்கள், இறைவனுடைய திருவருளால்தான் அது முடியும் என்று நினைக்கும் போது முருகனை எண்ணுகிறார்கள். எத்தனை தான் ஆற்றல் பெற்றிருந்தாலும் இறைவனுடைய திருவருள் இல்லாமல் யாதும் நிறைவேறாது. அந்தத் திருவருளைப் பெறுவதற்கு வழி யாது? அன்பினால் அவனை எண்ணி உருகுவதுதான், குற்றம் இல்லாத மேற்கோளை உடைய பெரியவர்கள் தம் கடமையை நன்கு நிறைவேற்றும் பொருட்டு உள்ளத்தில் தியானம் செய்ய, அங்கே அம் முகங்கள் ஒளிவிட்டு நிற்கின்றன.

தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்நேர்பு எழுதரு வாள்நிற முகனே.

(கேடும் குற்றமும் இல்லாத மேற்கோளையுடைய தம்முடைய தொழில்கள் முடியும் பொருட்டுத் தியானம் செய்பவர்களின் மனத்தில் பொருந்தி எழுகின்ற ஒளியை யுடைய முகங்கள். தா - கேடு, குற்றம்.)

இது அந்த முகங்களின் பொதுவான இயல்பு. ஒவ் வொரு முகத்தின் இரண்டு பக்கத்திலும் குழைகள் தொங்குகின்றன. அந்த முகங்கள் அன்பர்கள் உள்ளத் தடத்தில் தியானப் பொருளாக விளங்குகின்றன என்று பொது இயலைச் சொன்னார். இனி, தனித் தனியே ஒவ்வொரு முகத்தின் சிறப்பையும் எடுத்து விளக்கப் போகிறார்.

## ஒளி தரும் முகம்

உலகம் இயற்கையாகவே இருளை உரிமையாக உடையது; அறியாமையையும் நிலையாமையையும் பெருமையாக உடையது. கதிரவன் முதலிய சுடர்கள் ஒளி வீசா விட்டால் உலகம் இருள் மயமாக நிற்கும். பகல் நேரத்தில் கூட, சூரிய கிரகணம் முழுமையாக இருந்தால் இவ்வுலகம் முழுவதும் இருள் கப்பிக் கொள்வதைப் பார்க்கிறோம்.

இவ்வாறு இருளையே உரிமையாகப் பெற்ற உலகத்தை, ''இருள் தருமா ஞாலம்'' என்றும், ''மாயிருள் ஞாலம்'' என்றும் புலவர்கள் சொல்வார்கள். உலகம் புறவிருளை உடையது. உலகத்திலுள்ளார் அக இருளாகிய அறியாமையை உடையவர்கள்.

இருள் சூழ்ந்த உலகத்தில் உயிர்கள் உடம்பெடுத்து வாழ்கின்றன. ஒளியின்றி உயிர்களால் வாழ்க்கை நடத்த இயலாது. ஒளியைத் தரும் பொருள்களைச் சுடர்கள் என்று சொல்வார்கள். சூரிய சந்திர அக்கினிகளை முச்சுடர் என்பார்கள். சூரியன் பகலிலும் சந்திரன் இரவிலும் அக்கினி எல்லாக் காலங்களிலும் இருளைப் போக்கி ஒளி தருகின்றன. இந்த மூன்று சுடர்களும் இட எல்லையும் கால எல்லையும் உடையன.

சூரியன் கால எல்லையையும் இட எல்லையையும் உடையவன் என்பதை முன்பே பார்த்தோம்; கதிரவனே

இப்படி எல்லைக்கு அகப்பட்டவன் என்றால் சந்திரனையும் அக்கினியையும் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

அக்கினி நமக்கு விளக்காக நின்று வெளிச்சம் தருகிறது. நாம் ஏற்றினால் விளக்கு எரிகிறது. அகல் முதலிய பாத்திரங்களும் திரியும் எண்ணெயும் இருந்தால் விளக்கு எரிகிறது. அகலை இடமாகவும் திரியையும் எண்ணெயை யும் உணவாகவும் கொண்டு அக்கினியே விளக்காக எரிகிறது. பற்றுக்கோடு இல்லாத அக்கினியைக் கண்ணால் காண முடியாது. அது விளக்காகவோ கொழுந்தாகவோ எரியும்போதுதான் புலனாகிறது. விளக்காகத் தோன்றும் சுடரைவிடப் பெரியது சந்திரன். சந்திரன் சூரியனிடத்தி லிருந்து ஒளியைப் பெறுகிறான். அவனை விடப் பெரிய சுடர் சூரியன். அந்தச் சூரியனுக்கும் ஒளியைத் தருகிறவன் இறைவன். அவன் சோதி மயமானவன். அந்தச் சோதியே இந்தச்சுடர்களையும் விளக்குகளையும் ஒளிபெறச்செய்கிறது. அதனால், இந்த மூன்றையுமே இறைவனாக வைத்துப் போற்றுவார்கள்.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே."

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

இறைவன் காலம் இடம் என்னும் எல்லை கடந்த சோதியாக நின்று உலகத்தில் சுடர்களும் விளக்குகளும் ஒளிபெறச்செய்கிறான். முருகனைக் கந்தபுராணம்,

"பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பு."

என்று கூறும்.

சோதிமயனாகிய முருகன் ஒரு திருமேனியுடையவ னாகிக் கருணைகூர் முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டும் கொண்டு எழுந்தருளினான். அவனுடைய முகங்கள்

ஆறினுள் ஒன்று உலகில் இயற்கையாக அமைந்த இருளைப் போக்கி ஒளி தருகின்றது. அதாவது அருக்கனில் சோதி வைத்து, திங்களில் நிலவை வைத்து, அக்கினியில் ஒளியை வைத்து எங்கும் கதிர்களைப் பரப்புகிறது.

ஆறு திருமுகங்களைப் போற்றப் புகுந்த நக்கீரர் முதலில் உலகில் இருளைப் போக்கும் திருமுகத்தைப் பற்றிச் சொல்கிறார். பெரிய இருள் படர்ந்த உலகம் இருளின்றிக் குற்றம் இன்றி விளங்கும்படியாகப் பல வகையான கதிர்களை விரிக்கின்றதாம், ஒரு முகம்.

மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்.

(பெரிய இருளையுடைய உலகம் குற்றம் இன்றி விளங்கும்படியாகப் பல வகையான கதிர்கள் விரிந்தது ஒரு முகம்.)

முருகனுடைய திருமுகத்தின் சில கதிர்கள் சென்று சூரியனில் இணைந்து அதைச் சுடரச் செய்கின்றன. அப் படியே திங்களிலும் சில கதிர்கள் புகுந்து நிலவு பொழியச் செய்கின்றன. பல வகையாக உள்ள விளக்குகளிலும் படிந்து அவற்றை ஒளியுடையனவாகச் செய்கின்றன.

உபநிடதங்கள் இறைவனால் உலகம் ஒளி பெறுகின்றது என்று பேசும். ''இருளினின்றும் ஒளிக்கு என்னை அழைத்துச் செல்க'' என்பது ஓர் உபநிடதம். இந்தச் செயலைச் செய்கின்றது முருகப்பெருமானுடைய திருமுகங்களில் ஒன்று.

முருகனுடைய திருமுகங்களை வருணிக்க வந்த நக்கீரர் முதலில் சுடர்களுக்கெல்லாம் ஒளி வழங்கி உலகில் இருளைப் போக்கும் திருமுகத்தைச் சொன்னார். ''பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகி'' வந்தமையால் அந்த வடிவில் முதல் முகம் ஒளிவீசி இருளைப் போக்குகிறது.

## ஆர்வலர்க்கு அருளும் முகம்

இனி, இரண்டாவது முகத்தைப்பற்றிச் சொல்ல வருகிறார். முதல் முகம் உலகத்துக்கே பொதுவான நலத்தைச் செய்கிறது. இரண்டாவது முகமோ சிறப்பான ஒரு செயலைச் செய்கிறது. அன்பர்களுக்கு அநுக்கிரகம் செய்கிறதாம். பக்தர்களுக்கு ஆர்வலர் என்பது ஒரு பெயர். சங்ககால நூல்கள் அவ்வாறு கூறும்.

"ஆர்வலர் தொழுதேத்தி நின்புகழ் விரித்தனர்"

"ஆர்வலர் தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே."

என்று பரிபாடலில் வருகிறது. இறைவன் திருவருளைப் பெறவேண்டும் என்ற ஆர்வம் மீதூர்ந்தவர்கள் ஆர்வலர்; அவர்களே பக்தர்கள். அவர்கள் முருகனைப் போற்றிப் புகழ்கிறார்கள். இறைவனை அன்றி வேறு யாரையும் புகழாதவர்கள் அவர்கள். தமக்கு எல்லா நலங்களையும் வழங்கும் வள்ளல் என்ற உறுதியான நம்பிக்கையோடு அவனை வாயார வாழ்த்தி ஏத்துவார்கள். தமக்கு எது வேண்டுமானாலும் இறைவனிடத்தில் விண்ணப்பம் செய்து கொள்ளும் இயல்புடையவர்கள் அவர்கள். இளங்குழந்தை தாயிடம் எல்லாவற்றையும் கேட்டுப் பெறுவது வழக்கம். பக்தர்களும் தம் குறைகளை இறைவனிடமே சொல்லிக் கொள்வார்கள். உண்மையான நம்பிக்கை உடையவர்களுக்கு இறைவன் அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்தருள்வான். அவர்கள்தன்னைப் புகழப் புகழ அதைக் கேட்டு உளம் மகிழ்ந்து அவர்கள் கேட்டன எல்லாம் தரும் பெருமான் அவன்.

"பரந்துபல் ஆய்மலர் இட்டு முட்டாதடி யேயிறைஞ்சி
இரந்தஎல் லாம்எமக் கேபெற லாம்என்னும் அன்பர் உள்ளம்
கரந்துநில் லாக்கள்வனே."

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். மற்றவர்களுக்கெல்லாம் மறைந்து நின்றாலும், தன்னை வணங்கி எது கேட்டாலும் தருவான் என்ற உறுதியையுடைய அன்பர்களிடம் மறைந்து நிற்க மாட்டானாம். அவன் அவர்களுக்கு அளிக்காமல் கரக்கவும் மாட்டான்.

''வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்ட வெறாதுதவு பெருமாளே.''

என்று திருப்புகழில் அருணகிரியார் பாடுகிறார். அடியார் களுக்கு வேண்டியதை வேண்டியபோதெல்லாம் கொடுக்கும் பரம கருணாநிதி முருகன்.

ஆர்வலராகிய பக்தர்கள் தன்னைத் துதிக்கத் துதிக்க அவர்களுடைய நிலைக்கு ஏற்றபடி வந்து அருள் செய்வான் முருகன். சிறந்த வள்ளல்கள் ஏழைகள் உள்ள இடத்துக்குத் தாமே சென்று கொடுப்பார்கள். வண்டி போகாத இடமா னால் அந்த இடத்துக்கு ஏற்றபடி காலால் நடந்து சென்று அறம் செய்வார்கள். தாமே சோற்றைப் பரிமாறுவார்கள். இறைவனும் அவர்களைப் போலத் தன்னுடைய பக்தர் களுக்கு எவ்வாறு சென்று அருள் செய்தால் நலம் உண்டாகுமோ அவ்வாறு சென்று வரம் கொடுப்பான். அவர்கள் எவ்வாறு வேண்டிக்கொள்கிறார்களோ அப்படி யெல்லாம் நடப்பான். அடியார்களுக்கு ஏவலாளனாகவும் நடக்கும் இயல்புடையவன்.

''அவரவர் ஏவ லாளனும் நீயே.''

என்று பரிபாடல் பாடுகிறது. எப்படியாவது பக்தர்கள் மனம் மகிழவேண்டுமென்பது இறைவனுடைய எண்ணம்.

ஓடி ஆடி விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தைக்குச் சோறு ஊட்டப்புகும் தாய் தானும் அந்தக் குழந்தைக்குச் சரியாக ஓடி இனிய வார்த்தைகளைக் கூறி ஊட்டுகிறாள்.

இறைவனும் பக்தர்களுக்கு இனிமையான முறையில் ஒழுகி வரம் கொடுப்பான். அமர்ந்து இனிது ஒழுகி ஆசையோடும் வரம் கொடுப்பானாம். அப்படிக் கொடுப்பதில் அவனுக்குப் பெரு விருப்பம்; காதல். அவனிடம் வரம் பெறவேண்டும் என்ற காதல் பக்தர்களுக்கு இருக்கும். அதுபோலவே அவர்களுக்கு வரம் கொடுக்க வேண்டும் என்ற காதல் முருகனுக்கு இருக்கும். கொடுப்பதனால் வரும் இன்பத்தை அறிந்தவர்கள் இரவலரை எதிர்பார்த்து நிற்பார்கள், அதனை அறியாதவர்களே தம் பொருளைப் பிறருக்குக் கொடுக்க அஞ்சுவார்கள்.

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்திழக்கும் வன்கண வர்."

என்று கூறுவார் திருவள்ளுவர். இறைவன் இந்த இன்பத்தை உணர்ந்தவன். ஆதலின் பக்தர்களுக்கு வரம் கொடுக்க வேண்டு மென்ற பெரு விருப்போடு இருக்கிறான்.

இவ்வாறு, பக்தர்கள் புகழ அவர்களுடைய மனம் பொருந்தும்படியாக இனிமையாக நடந்துகொண்டு, மிக்க விருப்பத்துடன் அவர்களுக்கு வரம் அளிக்கும் செயலைச் செய்கிறது, முருகனுடைய இரண்டாவது முகம்.

ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்துஇனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத் தன்றே.

(ஒரு முகம், பக்தர்கள் போற்றிப் புகழ, அவர்களுக்கு ஏற்கும்படியாகப் பொருந்தி இனிதாகச் சென்று விருப்பத்தோடு மகிழ்ந்து வரத்தைக் கொடுத்தது.

ஆர்வலர் - அன்புடையவர்கள்; பக்தர்கள். அமர்ந்து - பொருந்தி. கொடுத்தன்று - கொடுத்தது.)

## வேள்வியைக் காக்கும் முகம்

இந்த நாட்டில் வெவ்வேறு சாதிகளும் வெவ்வேறு சமயங்களும் இருந்தாலும், எல்லாரையும் பொதுவாக இந்துக்கள் என்று இப்போது குறிப்பிடுகிறோம். ஆனால் அது பழைய பெயர் அன்று. இந்து மதம் என்பதும் புதிய பெயரே. மேல் நாட்டினர் இந்த நாட்டில் புகுந்தபோது முதலில் சிந்து நதியைக் கண்டார்கள். அதை அவர்கள் இந்து என்று சொன்னார்கள். அதிலிருந்து இந்த நாட்டை இந்தியா என்றும் இங்குள்ள மக்களை இந்துக்கள் என்றும் சொன்னார்கள். அந்தப் பெயர்களே நிலைத்து விட்டன.

இந்து மதம் என்பது புதிய பெயரானால் இதற்குப் பழம் பெயர் என்ன என்ற கேள்வி எழும். வைதிக மதம் என்பதுதான் இந்த நாட்டுச் சமயங்களின் பொதுப் பெயர். வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளும் சமயங்கள் யாவும் வைதிக சமயங்கள். இந்து மதத்தின் பிரிவுகளான வைஷ்ணவம், சைவம், சாக்தம், கௌமாரம், காணபத்தியம், சௌரம் ஆகிய எல்லாச் சமயங்களும் வேதத்தையே பிரமாண நூலாகக் கொள்வன.

வேதத்தோடு ஒட்டிச் சொல்லப்பெறுவது வேள்வி வேதம் அறிந்த அந்தணாளர்கள் வேள்விசெய்யும் கடப்பாடுடையவர்கள். அவர்கள் வேத முறைப்படி எரியோம்புவதனால் உலகமே துன்பத்தினின்றும் நீங்கி இன்பத்தை அடைகிறது.

"கற்றாங்கு எரிஓம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்."

என்று தில்லைவாழ் அந்தணரைச் சொல்லுகிறார் சம்பந்தர். வேதமும் வேள்வியும் போற்றப் பெறுபவை; இறைவனுடைய சொரூபமாகவே எண்ணத்தக்கவை.

''வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு.''

என்பது திருவாசகம்.

வேள்வியினால் மழை தவறாமல் பெய்யும். நாடு நலம்பெறும். வேதமந்திர விதிப்படி அந்தணர் வேள்வி செய்வார்கள். வேள்வியில் தேவர்களை மந்திரங்களால் அழைத்து அவியுணவு வழங்குவது மரபு. அவியுணவை ஏற்றுக்கொள்வதனால் திருவள்ளுவர் தேவர்களை,

''அவியுணவின் ஆன்றோர்.''

என்று கூறுகிறார். அந்தணர் வேள்வி புரிவதனால் தேவர்களுக்கு உணவு கிடைக்கிறது; அவர்களால் உலக மக்களுக்கு மழையும் பிற நன்மைகளும் கிடைக்கின்றன. ஆதலின் வானமும் வையமும் வாழக் காரணமாகிறது வேள்வி.

வானமும் வையமும் வாழவேண்டு மென்ற திருவுள்ளம் உடையவன் முருகன். தேவர்களுக்கு வரும் இடையூறுகளைப் போக்கி அவர்கள் வாழ வகை செய்கிறவன். 'இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய' பெருமான் அவன்.

தேவர்களுக்குப் பகைவர்கள் அசுரர்கள். யாரேனும் வேள்வி செய்தால் அதற்கு இடையூறு செய்ய அசுரர்கள் முயல்வார்கள். அப்போது அவர்களைப் போக்கித் தேவர்கள் தமக்குரிய அவியுணவைப் பெறுமாறு செய்வான் முருகன்.

வேள்வியில் மும்முறை 'சுப்ரம்மண்யோம்!' என்று முழங்குவார்களாம். முருகன் யாகத்தைப் பாதுகாக்கும் பேராளன். ஆதலின் அவ்வாறு செய்கிறார்கள். அவனுக்கு ஸ்தோம ரட்சகன் என்பது ஒரு பெயர். அதற்கு வேள்வி காவலன் என்று பொருள்.

"அந்தண்மறை வேள்வி காவற்கார."

என்று அருணகிரிநாதர் பாராட்டுவார்.

இவ்வாறு, அந்தணர்கள் வேதமந்திர விதியின்படி சம்பிரதாயத்தினின்றும் வழுவாமல் செய்கிற வேள்விகளை யாதோர் இடையூறும் இன்றி நிறைவேற்றத் திருவுள்ளங் கொண்டு ஆவன செய்யும் செயலை, முருகனுடைய மூன்றாவது திருமுகம் புரிகின்றது.

ஒருமுகம்

மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்விஓர்க் கும்மே.

(வேத மந்திர விதியின்படியே சம்பிரதாயத்தினின்று வழுவாத அந்தணர்களுடைய யாகங்களை நன்றாக நிறைவேற்றத் திருவுள்ளம் கொள்ளும் ஒரு முகம்.

மந்திர விதி - வேத மந்திர விதி. மந்திரம் என்பதே வேதத்துக்கு ஒரு பெயர்; ஆதலின் வேதவிதி என்றும் சொல்லலாம். மரபுளி - சம்பிரதாயத்தின்படி; மரபு - வழி வழி வந்த வழக்கம். ஓர்க்கும் - நினைக்கும்.)

## மெய்ஞ்ஞானத் திருமுகம்

இனி நான்காவது முகத்தின் புகழைச் சொல்லத் தொடங்குகிறார்.

அறிவு என்பது கடல்போல விரிந்தது. அதற்கு எல்லை கட்டி, எல்லாம் அறிந்துவிட்டேன் என்று சொல்லும் ஆற்றல் உள்ளவர் யாரும் இல்லை.

"ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்."

என்று கம்பன் அறிவைக் கடலாகச் சொல்கிறான். கடலுக்குப் பல துறைகள் இருப்பதுபோல அறிவுக்கும் பல துறைகள்

உள்ளன. பொருள்களை அறிய அறிய அறிபவனுடைய அறிவு விரிந்துகொண்டே செல்கிறது. அதே சமயத்தில் அவன் தான் அறியவேண்டியவை இன்னும் பல பல என்ற உண்மையை உணர்கிறான்.

"அறிதோ றறியாமை கண்டற்றால்."

என்று திருவள்ளுவர் சொல்கிறார். பருப்பொருள்களாகிய காட்சிப் பொருள்களைக் கண்டு முடிப்பதற்கே மனிதனுடைய ஆற்றல் போதாது.

அறிவிற் சிறந்தவர்களை விஞ்ஞானிகள் என்று உலகம் பாராட்டுகிறது. அவர்கள் புதிய புதிய பொருள்களைக் கண்டுபிடிக்கிறார்கள். அவ்வாறு கண்டுபிடிப்பனவற்றை இரண்டு வகையாகப் பிரித்துச் சொல்வார்கள். முன்னே உள்ள பொருளை இதுகாறும் காணாமல் இருந்து இப்போது புதிதாகக் கண்டுபிடிப்பது ஒரு வகை. இதை 'டிஸ்கவரி' (Discovery) என்று சொல்வார்கள். பௌதிக சக்திகளை இணைத்துப் புதிய விளைவு உண்டாகச் செய்து கண்டு பிடிப்பது ஒரு வகை. அதை, 'இன்வென்ஷன்' (Invention) என்பார்கள். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தார். அவர் உள்ளதை அறியாமலிருந்து புதிதாகக் கண்டுபிடித்தார். அது 'டிஸ்கவரி' ஆகும். ஆனால் ஒரு விஞ்ஞானி மின்சாரத்தைக் கண்டுபிடித்தார்; பௌதிக சக்தியின் ஒரு வகை இயக்கத்தால் அதனை உண்டாகச் செய்து கண்டுபிடித்தார். இது 'இன்வென்ஷன்' ஆகும். முன்னையதில் புதுமை, காட்சியைச் சார்ந்தது. பொருள் பழையது; கண்டது புதியது. பின்னையது, விளைவே புதியது. ஆனாலும் அந்த விளைவுக்கு மூலகாரணமாகிய பௌதிக சக்திகள் பழையனவே. இணைப்பினால் வந்த விளைவு புதியது. புதிய பொருள்களை உண்டாக்கி அவற்றைக் கொண்டு விஞ்ஞானி

அந்தப் புதிய விளைவை உண்டாக்கவில்லை. முதல் கண்டுபிடிப்பு, பழையதை அப்படியே கண்டு பிடித்தது. இரண்டாவது, பழைய பொருள்களால் உண்டான புதிய விளைவைக் கண்டுபிடித்தது. எப்படியும் பழைய பொருள் இல்லாமல் ஏதும் இல்லை.

இப்படிக் கண்டு பிடிக்கும் விஞ்ஞானிகள், இனி கண்டுபிடிக்க வேண்டியது ஏதும் இல்லை என்று சொல்லும் நிலைக்கு வரவே இயலாது, சந்திரனை முயன்று அடைந்து விட்டார்கள். அந்தக் கிரகத்தைப் பற்றிய ஆராய்ச்சி இப்போது மிகுதியாயிருக்கிறது. மற்றக் கிரகங்களைப்பற்றி ஆராய இன்னும் எவ்வளவு காலம் ஆகுமோ? கணக்கில் அடங்காத நட்சத்திரங்கள் உள்ளன. இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்ட நட்சத்திரங்களைவிட இன்னும் பல பல வானவெளியில் உள்ளன. அவற்றையெல்லாம் கண்டுபிடித்து அறுதியிட மனிதனால் ஆகுமோ, என்னவோ!

ஆனால் ஒருவன் மட்டும் இவ்வளவையும் அறிவான். அவன் எல்லாவற்றையும் படைத்தவனாகையால் அவனுக்குத் தெரியாமல் ஏதும் இருக்க நியாயம் இல்லை. அவன் தான் இறைவன். அணுவுக்குள் அணுவாய் விபுவுக்கும் விபுவாய் இருக்கும் அவனுக்கு யாவும் தெரியும். அவன் முற்றறிவுடையவன்; சர்வக்ஞன்.

நூலறிவினால் புலனாகாதவற்றை ஆசிரியரை அடைந்து வழிபட்டுக் கற்றுக்கொள்வது மரபு. மாணாக்க னுக்கு உண்டாகும் ஐயந்திரிபுகளைப் போக்கி மெய்யை அறிவுறுத்துவது குருவின் செயல். எந்தத் துறையில் அறிவு பெற வேண்டுமானாலும் அதற்கு ஏற்ற ஆசிரியனை நாடிப் பயிற்சி பெற வேண்டும். அப்படிப் பெற்றாலும் அந்தத் துறையில் முழுமை பெற முடியாது. அந்த ஆசிரியனுக்கே விளங்காத பகுதிகள் பல இருக்கும். அவனை விடச் சிறந்த

அறிவும் அநுபவமும் பெற்ற ஆசிரியனை அடைந்தால் முன்னே கற்பித்த ஆசிரியனால் விளக்க முடியாதவற்றை இந்த ஆசிரியன் விளக்குவான். கீழ் வகுப்பிலிருந்து மேல் வகுப்புக்களுக்கு மாணாக்கன் போய்க்கொண்டிருந்தால், கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களும் வகுப்பின் உயர்வுக்கு ஏற்றபடி தகுதியில் உயர்ந்துகொண்டே வருகிறார்கள். கீழ் வகுப்பு ஆசிரியர் நீக்கமுடியாத ஐயங்களை மேல் வகுப்பு ஆசிரியர் தெளிய வைப்பார்.

நூல்களால் அறிய வாராமல் எஞ்சியிருக்கும் பொருள்களை ஆசிரியர் விளக்குகிறார். ஓராசிரியர் தம்மால் விளக்க முடியாது என்று சொன்ன, எஞ்சிய பொருளைப் பின்னும் சிறந்த அறிவுள்ள ஆசிரியர் விளக்குகிறார். இப்படி ஆசிரியரின் தரம் மேன்மேலும் உயர்ந்து செல்கின்றது. எல்லா ஆசிரியர்களுக்கும் மேலான ஒப்பற்ற ஆசிரியன் இருந்தால் அவன் மற்றவர்களால் தெளிவிக்க இயலாத பொருள்களை விளக்குவான்.

அவ்வாறு உள்ளவன் முருகன். அவன் மெய்ஞ்ஞான பண்டிதன். மெய்ப்பொருளை அறியும் அறிவே தலையான அறிவு. ஞான குருக்கள் அதனை விளக்குவார்கள். அவர்கள் முனிவர்களிடம் உபதேசம் பெற்றவர்கள். அந்த முனிவர் களிற் சிறந்தவர்கள் சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனத்சுஜாதர் என்னும் நால்வர். அந்த நால்வருக்கும் உபதேசம் செய்தவர் தட்சிணாமூர்த்தி. அடையின்றிக் குரு என்றால் அது தட்சிணாமூர்த்தியையே குறிக்கும்.

உலகிலுள்ள ஆசிரியன்மார்கள் தம் மாணாக்கரை நோக்கக் குருக்களாக இருப்பார்கள். அவர்களுடைய குருநாதர்களை நோக்க அவர்கள் மாணாக்கர்களாக இருப்பார்கள். இந்த இருவகைப் பண்புகளும் அவர்களிடம்

உண்டு. தட்சிணாமூர்த்தி யாவருக்கும் மேலான குருநாதராக, சிறந்த மாணாக்கர்களுக்குச் சின் முத்திரையினால் உபதேசம் செய்த ஆசிரியராக விளங்குகிறார். அவர் யாருக்கும் மாணாக்கராக இருக்கவில்லை. ஆனால் அவரையும் மாணாக்கராக்கி அவருக்கே உபதேசம் செய்த பெருமான் முருகன்; அதனால் குமர குருபரன் என்றும் குருசாமி என்றும் திருநாமம் பெற்றான்.

முருகனுடைய பெருமைகள் பல. அவன் வரம்பிலா ஆற்றலுடையவன். இணையிலா அழகுடையவன். எல்லையிலாப் பெருங் கருணையாளன். அறிவுப் பெருமையையே சிறந்த பெருமையாகப் பாராட்டுவது அறிஞர் இயல்பு. முருகனுடைய புகழையெல்லாம் விரிவாகப் பாடத் தொடங்கினார் அருணகிரிநாத முனிவர் பிரான். பதினாறாயிரம் திருப்புகழ்களைக் கங்கை வெள்ளம் போலக் கொட்ட நின்ற மேகம் அவர். எல்லையில்லாத இறைவன் புகழில் எதை முதலில் சொல்வது? முகப்பு நன்றாக இருந்தால் கட்டிடத்துக்குப் பெருமை உண்டு. முருகன் திருப்புகழாகிய பெரிய திருமாளிகையில் முன்வாயில் தோரணமாக எதை அமைப்பது? அவன் அழகைச் சொல்லலாமா? ஆற்றலைச் சொல்லலாமா? அருளைச் சொல்லலாமா? - இந்த யோசனை அருணகிரி நாதருக்கு எழுந்தது. அவன் ஞான மயமானவன். ஞான குருவிற் சிறந்தவன் என்பதை முதலில் சொல்வது பொருத்தமாக இருக்கும் என்று தீர்மானம் செய்தார்.

"முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனஓதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேண.''

என்று பாடத் தொடங்கிவிட்டார். நால்வருக்குக் குருநாத னாக விளங்கியவரும் ஞானக் கண்ணையுடைய மூர்த்தியு மான முக்கட்பரமர், 'குருபர!' என ஓதி வணங்க, அவருக்குச் சுருதியின் முற்பட்டதைக் கற்பித்தான் முருகன் என்ற வரலாற்றைச் சொன்னார்.

ஆகவே, முருகன் தனக்குமேல் குருவின்றி, தான் யாருக்கும் மாணாக்கனாகாமல், பெரிய குருவாக, குமரகுருபரனாக விளங்குபவன். மற்ற இடங்களில் எல்லாம் தீராத ஐயங்களை அவன் தீர்த்துவிடுவான்.

இவ்வாறு, தெளிவில்லாமல் உள்ள பொருள்களை விளக்கும் செயலை அவனுடைய திருமுகங்களில் ஒன்று செய்கிறதாம்.

ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே.

(ஒரு முகம், நூல்களாலும் ஆசிரியர்களாலும் விளக்க முறாமல் எஞ்சி நின்ற பொருள்களை, அவற்றை உணர வேண்டும் என்ற வேட்கையுடன் முருகனைப் பணிந்து நிற்கும் அடியவர்கள் இன்பம் அடையும்படியாக ஆராய்ந்து, சந்திரனைப் போல அவர்கள் கேட்ட துறையின் பகுதிகளை யெல்லாம் விளங்கும்படி செய்யும்.

எஞ்சிய - விளக்கமுறாமல் மிஞ்சிய. ஏம் உற - இன்பம் உண்டாக. திசை - பகுதிகள்.)

அறிவுக்குச் சந்திரனைக் கூறுவது மரபு. ''திங்களன்ன கல்வியும்'' என்பது ஆத்திரையன் பேராசிரியன் பாட்டு.

முருகன் திருமுகங்களில் ஒன்றாகிய இது ஒளியும் தண்மையும் வடிவும் சந்திரனைப் போலத் தோற்றி ஒளிர் கின்றது. அந்த ஒளியினால், விளங்காத துறைகளை யெல்லாம் அந்த முகம் விளக்கிக் காட்டுகிறது. இது மெய்ஞ்ஞானத் திருமுகம்.

## வீரத் திருமுகம்

ஆடவர்களுக்கு இன்றியமையாத இலக்கணம் ஆண்மை. அந்தச் சொல்லுக்கே ஆணின் தன்மை என்பது பொருள். ஆண்மை என்பதற்கு வீரம் என்பது பொருள். ஆகவே ஆடவனுக்குத் தலைமையாக இருக்க வேண்டியது வீரம். வீரம் சில சமயங்களில்தான் நன்கு வெளிப்படும். போரில் வெளிப்படும்.

முருகன் வீரம் உடையவன் என்று சொன்னால் மட்டும் போதாது. அவன் வீரருள் வீரன். வேறு யாராலும் அழிப்பதற்கு அரிய பகைவரை மாய்த்தவன். இதிகாச புராணங்களாலே சிறப்பிக்கப் பெறும் போர்களில் மூன்று முக்கியமானவை; பெரியவை. ஒன்று தேவருக்கும் அசுரருக்கும் நிகழ்ந்த போர்; அதில்தான் சூரபன்மன் முருகனை எதிர்த்து நின்றான். அடுத்தது இராமாயணப் போர்; அதில் இராமனும் இராவணனும் போர் செய்தனர். மூன்றாவது போர் பாரதப்போர்; அதில் துரியோதனாதியரும் பஞ்சபாண்டவரும் போரிட்டனர். இந்த மூன்றையும் தேவாசுர மாபாரத ராமாயணம் என்று சேர்த்துச் சொல்வது ஒரு வழக்கம். இந்த மூன்றிலும் மிகப் பெரியது தேவாசுரப் போர்.

முருகனும் சூரனும் செய்த போரின் கடுமையைக் கந்தபுராணத்தில் காணலாம். அப்போர் பத்து நாட்கள்

நடந்ததாக அப்புராணம் கூறுகிறது. ஆனால் அதன் கடுமையைப் புலப்படுத்த வேண்டி, அது பல காலம் நடந்ததாகச் சொல்வது உண்டு. பாரதப் போர் பதினெட்டு நாட்கள் நடந்தது; இராமாயணப் போர் பதினெட்டு மாதங்கள் நடந்ததாம்; தேவாசுரப் போர் பதினெட்டு ஆண்டுகள் நிகழ்ந்ததாம். இப்படி ஒரு கணக்குச் சொல்வார்கள். தேவாசுரப் போர் எல்லாவற்றிலும் மிகக் கடுமையானது என்ற கருத்தைத் தெரிவிக்கவே இந்தக் கணக்கு ஏற்பட்டது என்று தோன்றுகிறது.

"உயிர்த்தொகை உண்ட ஒன்பதிற் றிரட்டியென்
றியாண்டும் மதியும் நாளும் கடிகையும்
ஈண்டுநீர் ஞாலம் கூட்டி எண்கொள."

என்ற சிலப்பதிகாரப் பகுதியும் *(27:8-10)*, அதற்கு அரும்பதவுரை யாசிரியர், 'தேவாசுர யுத்தம் பதி னெட்டாண்டிலும், இராம ராவண யுத்தம் பதினெட்டு மாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தது என்றெண்ண' என்று எழுதிய உரையும் இதை விளக்கும்.

அத்தகைய கடும்போரில் முருகன் வெற்றிபெற்றான். பகைவர்களில் பெரிய பகையாகிய சூரனை மாய்த்தருளி னான். ஆதலின் அவன் எல்லா வீரர்களிலும் சிறந்த வீரன். அவனிடமுள்ள படைக்கலமோ எல்லா ஆயுதங்களிலும் சிறந்தது. எத்தனையோ வகையான படைக்கலங்கள் இருந்தாலும் வில், வாள், வேல் என்ற மூன்றையும் சிறப்பாக எடுத்துச் சொல்வார்கள். அவற்றிலும் வேல் மிகச் சிறந்தது. அந்தச் சிறந்த ஆயுதத்தை எப்போதும் திருக்கரத்தில் வைத்திருக்கும் பெருவீரன் முருகன்.

பகைவர்களை அடியோடு தேய்த்து இல்லையாக்கும் பெருவலி படைத்தவன் முருகன். தேவர்களைப் பாதுகாக்கக் கங்கணம் கட்டிக்கொண்டவனாதலின், அசுரர்களால் அவருக்கு எந்த இடையூறு வந்தாலும் அதைப் போக்குகிறவன். கந்தபுராணம் சொல்லாத பல போர்களில் அவன் தேவர்களுக்கு வெளிப்படையாகவும் மறைவாகவும் நின்று துணை செய்தவன். சமர்கள் பலவற்றில் மிக்க ஊக்கத்தோடு சென்று போரிட்டு வென்றவன்.

தமிழ்நாட்டில் போரைப்பற்றிச் சொல்லும் நூல்கள் பல உண்டு. அதற்கு இலக்கணம் வகுப்பது புறப்பொருள் இலக்கண நூல். போர் நிகழ்ச்சியைத் திணைகளாகவும் துறைகளாகவும் விரித்துச் சொல்வது புலவர் மரபு. அந்த நிகழ்ச்சிகளில் போர் புரிபவர்கள் முருகனைத் துதித்துக் கூத்தாடும் துறைகளும் உண்டு. வெட்சி முதலிய திணை களாக வகுத்திருக்கிறார்கள் புறப் பொருளை. அகப்பொருளில் முதல் திணையாகிய குறிஞ்சிக்குத் தெய்வம் முருகன். புறப்பொருளிலும் முதல் திணையாகிய வெட்சிக்கும் முருகனுக்கும் தொடர்பு உண்டு. வெட்சிப்பூ முருகனுக்கு உரியதல்லவா?

வீரம் செறிந்த திண்டோளையுடையவன் முருகன். தோள் வலிமைக்கு இருப்பிடம். முருகனுக்குப் பன்னிரண்டு தோள்கள். வேறு தெய்வங்களுக்கு அத்தனை தோள்கள் இல்லை. வலிமைக்குரிய தோள்களின் மிகுதியாலும் அவனுடைய மிடுக்கையும் வீரத்தையும் தெரிந்து கொள்ளலாம்.

இவ்வாறு வீரசிகாமணியாக இருக்கும் முருகன், வெஞ்சமத்தில் புக்குப் பகைவர்பால் சினம் கொண்ட உள்ளத்தோடு அழித்து வெற்றி பெறுகிறான்.

போரில் வெற்றி பெற்றவர்கள் போர்க்களத்தைத் தம்முடையதாக்கிக் கொண்டு, வெற்றிமகளாகிய கொற்றவையை வழிபட்டுக்களவேள்வி செய்வது ஒரு மரபு. பேய்கள் மற்றக் காலங்களில் உணவு பெறாமல் திண்டாடு மாம். போர் வந்துவிட்டால் அவற்றிற்குக் கொண்டாட்டம். தம்முடைய தலைவியாகிய கொற்றவையை வாழ்த்திக் கூத்தாடும், களவேள்வி புரியத் துணை செய்யும். இந்த நிகழ்ச்சிகளைப் பரணி நூல்களில் விரிவாகக் காணலாம்.

களவேள்வி செய்து வெற்றியை நிலைநிறுத்திக் கொள்வதும், கொற்றவையைப் போற்றுவதும், பேய் களுக்கு விருந்தளிப்பதும் போரின் முடிவில் நிகழ்பவை. அவை நிகழ்வதாகப் பாடுவது கவிசமயம்.

முருகன் இந்த மரபு தவறாமல் நடக்கிறான், செறுநர் களைத் தேய்த்துச் சமத்தைப் போக்கிச் சினம் மிக்க உள்ளத்தோடு வெற்றி பெற்றுப் பிறகு களவேள்வியைச் செய்கிறான். இவ்வாறு செய்யும் செயலில் ஈடுபட்டிருக்கிறது ஒரு முகம்.

ஒருமுகம்

செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே.

(ஒரு முகம் போர் செய்யும் பகைவர்களை அடியோடு அழித்து, வருகிற போர்களை ஒழித்துச் சினம் கொண்ட நெஞ்சத்தோடு வெற்றிக்கு அறிகுறியாகக் களவேள்வியைச் செய்கின்றது.

செறுநர் - பகைவர். சமம் - போர். முருக்கி - தோல்வி யுறச்செய்து. கறுவு - சினம். வேட்டன்று - வேட்டது.)

செல்சமம் முறுக்கி என்பதற்கு, 'தன் திருவுள்ளத்திலே ஏறிய நடுவுநிலைமையைப் போக்கிவிட்டு' என்று

நச்சினார்க்கினியர் உரை வகுக்கிறார். எல்லோரிடமும் ஒருபடித்தான அருளை வழங்கவேண்டிய முருகன், அந்த நடுவு நிலைமையைச் சிறிதே மாற்றி அசுரர்களை மறக்கருணையாலே கொல்லவேண்டுமென்று எண்ணுகிறானாம். நடுவு நிலைமையினின்றும் மாறியது போலத் தோன்றினாலும் இதுவும் அருள்தான். நோய்வந்தவனது உடம்பை அறுத்து மருத்துவம் செய்வதுபோல, தன்னை வழிபடாமல் தன் அடியார்களுக்குத் தீங்கு புரிபவர்களுடைய வெய்ய பண்பை மாற்றவே இவ்வாறு மறக் கருணை புரிகிறான். அழுக்குப் படிந்த வேட்டியைக் கல்லிலே மோதி வெளுப்பது போன்ற செயல் இது. வேட்டியைக் கல்லில் துவைப்பவன் அதன்மேல் கோபம் கொண்டு செய்கிற காரியம் அல்ல அது. வெளுக்க வேண்டும் என்பதே அவன் நோக்கம். அவ்வாறே முருகன் கொடுமை பல செய்த அசுரர்களை மோதி அருள் செய்தான். இப்படி வீரம் காட்டும் திருமுகத்தை உடையவன் முருகன்.

## மகிழும் முகம்

முருகப்பெருமானுடைய திருமுகங்கள் ஆறையும் அவற்றின் செயல்களையும் சொல்லி வருகிறார் நக்கீரர். ஒளி தரு முகமும், அன்பருக்கு அருளும் முகமும், வேள்வி காக்கும் முகமும், ஞானம் உணர்த்தும் முகமும், வீரம் விளைக்கும் முகமுமாக ஐந்தைப்பற்றி இதுவரையில் பார்த்தோம். இனி ஆறாவது முகத்தைப்பற்றிச் சொல்கிறார். அது உலகமெல்லாம் இன்ப வாழ்வு பெறுவதற்காக வள்ளிநாயகியோடு மகிழ்ந்து விளங்குகிறதாம். திருப்புகழில் ஒரு பாடல் இந்த ஆறுமுகங்களின் செயல்களையும் புலப்படுத்துகிறது.

''ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும்அடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகம் ஆனபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே.''

இந்தப் பாட்டிலும் இறுதியில், ''வள்ளியை மணம்புணர வந்த முகம் ஒன்றே'' என்று ஆறாவது முகத்தின் செயலைச் சொல்கிறார் அருணகிரியார்.

திருமுருகாற்றுப்படை,

ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே

(ஒருமுகம், குறவருடைய மடமகளும் கொடி போன்ற இடையையுடைய மடமுடைய பெண்ணுமாகிய வள்ளி யோடு சேர்ந்து புன்முறுவலை விரும்பிச் செய்கின்றது.)

என்று கூறுகிறது. வள்ளியெம்பிராட்டியை, குறவர் மட மகள் என்றும், கொடிபோல் நுசுப்பின் மடவரல் என்றும், வள்ளியென்றும் குறிக்கிறது. அந்தப் பெருமாட்டியோடு மகிழ்ந்து தங்குதலை ஒருமுகம் விரும்புகிறதாம்.

இந்திராதி தேவர்கள் தம்முடைய வாழ்வை இழந்து, மகிழ்ச்சியை இழந்து, துன்புற்று வருந்திய காலத்தில் அவர்களுடைய பகைவர்களாகிய அசுரர்களைத் தடிந்து மீண்டும் பழைய வாழ்வை அவர்கள் பெற வைத்தான் முருகன். அவர்கள் முகத்திலிருந்த வாட்டம் நீங்கி மலர்ச்சி

உண்டாயிற்று. அவர்கள் மகிழ்ச்சி நிறைந்தவர்களானார்கள். இவ்வாறு முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கிய முருகன், தான் மகிழ்ச்சி பெற ஒரு மடமங்கையைத் தேடினான் என்பது பொருந்துமா என்ற கேள்வி எழும்.

முருகன் செய்யும் திருவிளையாடல்கள் பல. உயிர்க் கூட்டங்கள் பாசத்தினின்றும் விடுதலைபெற்றுத் தன்னை அடைய வேண்டும் என்று எப்போதும் திருவுள்ளம் கொண்டவன் அவன். ஆதலின் பலப்பல கோலம் புனைந்து எவ்வாறேனும் அவர்களை ஆட்கொள்ள வேண்டும் என்று எண்ணுகிறான்.

மக்கள் இம்மையில் நல்வாழ்வு பெற்று அறம் பொருள் இன்பம் மூன்றையும் நெறிபிறழாது அடைந்து பின்பு வீட்டைப் பெறவேண்டும். இவ்வுலகில் மனைவி மக்களோடு வாழ்ந்து இறைவன்பால் அன்பு செய்து, பிறகு மறுமையில் வீடுபெற வேண்டும். மனிதர்கள் தம் வாழ்க்கைத் துணைவிகளாகிய இல்லத் தரசிகளோடு மனம்பொருந்தி வாழவேண்டும் என்பதற்காகவே தானும் அருளே வடிவாகிய அன்னையுடன் எழுந்தருளியிருக்கிறான். மடவரல் வள்ளியோடு மகிழ்ந்து அமர்ந்திருப்பது, உலகத் தார் தக்க வாழ்க்கைத் துணைவியருடன் இல்லற இன்பம் பெற்று அறவாழ்வு நடத்த வேண்டும் என்பதற்காகத்தான். ஆடலாசிரியன் தன் மாணாக்கர்களுக்குத் தான் ஆடிக் காட்டுவது போல இந்தத் திருவிளையாடலை அவன் செய்கிறான். இந்தப் பகுதிக்கு உரை வகுத்த நச்சினார்க் கினியர், 'காமநுகர்ச்சி இல்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான். உலகில் இல் வாழ்க்கை நடத்தற்கென்று உணர்க. அது, ''தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்'' என்பதனுள், ''பெண்பா லுகந்திலனேற் பேதாய் இரு நிலத்தோர்,

விண்பாலி யோகெய்தி வீடுவர்காண்சாழலோ'' என்பதனான் உணர்க' என்று எழுதியதையும் காண்க.

தேவமகளாகிய தேவயானையுடன் அமர்ந்து மகிழும் ஆண்டவன் குறவர் மடமகள் என்று எண்ணாமல் அவளுடன் மகிழ்ந்தான் என்றது, அவனது பரம கருணையைக் காட்டுகின்றது.

குறவர் மகளாகிய வள்ளி மடப்பம் உடையவள்; மடமகள். மடம் என்பது அறியாமை என்னும் பொருளுடையது. தான் ஒன்றை அறிந்தும் அறியாதவள் போல் அடங்கியிருக்கும் குணம் மடம்; அது மகளிருக்கு ஆபரணம் போன்றது. ''பேதைமை என்பது மாதர்க் கணிகலம்'' என்று பெண்களிற் பெரியராகிய ஒளவையார் கூறியிருக்கிறார். கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை என்று மடத்தின் இலக்கணத்தைப் புலவர்கள் அமைப்பார்கள். தம்முடைய கணவர்பால் தமக்குத் தெரிந்ததை உடனே காட்டாமல் அடங்கியிருக்கும் உயர்குணம் இது. மற்றவர்களிடம் அறிவிலாரைப் போல நடப்பது அன்று.

வள்ளிநாயகி ஒரு வகையில் அறியாமையை உடையவளாகவே முதலில் இருந்தாள். அதனால் மடமகள் என்று சொன்னதோடு நில்லாமல் மீட்டும் மடவரல் என்கிறார். தான் குறவர்பால் வளரும் வளர்ப்புமகள் என்பதை உணராமல் குறவாணர் குடியிலே பிறந்தவளாகவே தன்னை எண்ணிக் கொண்டிருந்தமையால் அப்படிச் சொன்னார். ஆன்மாவானது ஐம்புல வேடரிடையே தன்னை மறந்து தன் நாயகனையும் மறந்து வாழ்வதுபோல வாழ்ந்தவள் வள்ளி. அப்பெருமாட்டிக்கு உண்மையை உணர்த்தி ஆண்டு கொண்டவன் முருகன்.

எம்பெருமானோடு ஒன்றிய பிறகு தன் முன்னை நிலையை எண்ணி எம்பெருமாட்டி புன்முறுவல் பூக்க, அது

கண்டு எம்பெருமானும் நகையை விரும்பினான் என்னும் பொருள் படும்படி இவ்வடிகள் அமைந்திருக்கின்றன. ஆன்மாவானது பக்குவம் அடைவதற்கு முன் இறையருள் நெறியில் விருப்பமின்றி இருக்கிறது. சில ஆன்மாக்கள் அதை வெறுத்தும் பழித்தும் விலகி நிற்கின்றன. ஆனால் பக்குவம் அடைந்த ஆன்மாவுக்கோ அநுபூதியின்பம் பெற்ற பிறகு தன் பழைய நிலையை எண்ணி அப்படி இருந்தது என்ன பேதைமை என்று நகைக்கும் இயல்பு உண்டாகும்.

''கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினும்
கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவன்அருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
கருதிநகை யாவள் அதுபோல்
சொன்னபடி கேட்கும்இப் பேதைக்கும் நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாம்.''

என்று தாயுமானார் பாடுகிறார். இந்த அநுபூதி நிலை பெற்ற வள்ளிநாயகி முன்னை நிலை கருதி நகுவது இயல்பே யன்றோ?

மடமகள் என்பது இளமையும் மென்மையும் உடையவள் என்றும் பொருள் கொள்வதற்குரியது. அப்பெருமாட்டி மெல்லியவள். அவள் இடை மிக மெல்லியது; மிக நுண்ணியது; அது கொடி போன்றது. அப்பிராட்டியின் இடையில் எம்பெருமானுடைய திருக்கரம் வளைந்து தழுவி நிற்கிறது. காமவல்லி என்னும் கொடி கற்பக மரத்தைச் சுற்றிச் சூழ்ந்து தழுவிப் படரும். இங்கே கொடி போன்ற வள்ளியெம்பிராட்டியின் இடையைக் கற்பகம் போன்ற முருகன் கரம் தழுவுகிறது. கொடி மரத்தைச் சார்ந்து படர்வது இயற்கை. இங்கே கற்பகம் கொடியைச் சார்ந்து தன் மேல் படரச் செய்கிறது. முருகன் வலியச் சென்று வள்ளிநாயகியைத் தடுத்தாட் கொண்ட செயலையே இது

குறிக்கிறது. முருகன் திருக்கரம், வேண்டுவார் வேண்டியதை ஈவதாதலின் கற்பகத்துக்கு ஒப்பாக விளங்குகிறது.

இவ்வாறு முருகப்பெருமானுடைய ஆறு முகங்களில் ஒவ்வொன்றும் முறையே தான் தான் செய்யும் செயல்களை வழுவின்றிப் புரிகின்றது. அந்த முகங்களுக்கு ஏற்ப அவனுடைய திருக்கரங்கள் தொழிற்படுகின்றனவாம்.

ஆங்கு, அம்
மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்

(அவ்வாறு அந்த ஆறு முகங்களும் தாம் செய்ய வேண்டிய செயல்களை முறையே பயின்று நடத்துவதால் - தோள்கள் நிமிர்கின்றன. கைகள் செயல் புரிகின்றன என்று சொல்ல வருகிறார்.)

---

## திருக்கரங்கள்

முருகப் பெருமானுடைய ஆறு திருமுகங்களும் இயற்றும் செயல்களைச் சொன்ன நக்கீரர் அவனுடைய பன்னிரண்டு திருக்கரங்களின் செயல்களைச் சொல்ல வருகிறார். அந்தத் திருமுகங்கள் எந்த எந்தச் செயல்களில் ஈடுபட்டிருக்கின்றனவோ அவற்றிற்கு ஏற்ற காரியங் களையே திருக்கரங்களும் செய்கின்றன. ஒன்றனோடு ஒன்று பொருந்தாத செய்கைகளைச் செய்வது நமக்கு இயல்பு. இறைவனோ எல்லா உயிர்களுக்கும் வேண்டியவற்றை வேண்டியபடியே தடுமாற்றம் இல்லாமல் செய்கிறான். நமக்கு அவன் புரியும் பல்வேறு நிகழ்ச்சிகள் ஒன்றனோடு ஒன்று தொடர்பு இல்லாதவை போலத் தோற்றும். ஆனால் அவை யாவும் ஒரு நியதிப்படியே நடைபெறும். அவனுடைய ஆணையின்படி ஒழுங்காக யாவும் நடைபெறும். இயற்கையிலே அமைந்திருக்கும் ஒழுங்கை யும் நியதியையும் கவனித்தால் இவ்வுண்மை விளங்கும்.

### திருத்தோள்கள்

முருகனுடைய தோள்கள் பெருமையுடையவை; அழகுடையவை; வீரமுடையவை. அவை நிமிர்ந்துள்ள தோள்கள். மார்பிலே மூன்று வரிகள் வளைந்து இரண்டு பக்கத்திலும் உள்ள தோள்களில் சென்று சேருவது உத்தம ஆடவர் இலக்கணம்.

''வரையகல் மார்பிடை வரியும் மூன்றுள'' என்று சீவக சிந்தாமணி கூறுகிறது. முருகனிடம் அந்த இலக்கணம் நிறைந்திருக்கிறது. திருமார்பில் அழகிய முத்துமாலையை அணிந்திருக்கிறான். இயல்பாகவே சிவந்த வரிகள் மூன்று மார்பிலே குறுக்கே உள்ளன. அவற்றைத் தாம் ஏற்றுக் கொண்டவைபோலத் தோள்கள் இருமருங்கும் விளங்கு கின்றன. ஆகவே முருகன் மார்பு ஆரம் தாழ்ந்த மார்பு, அம் மார்பு (அழகிய மார்பு), பகட்டு மார்பு (பெருமையை யுடைய மார்பு), செம்பொறியை உடைய மார்பு.

ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்
செம்பொறி வாங்கிய.

(மாலை தாழ்ந்து விளங்கும், அழகிய பெருமையை யுடைய திருமார்பிலுள்ள சிவந்த ரேகைகளை வாங்கிக் கொண்ட - தோள் என்று கூற வருகிறார். ஆரம் - முத்து மாலை; பிற மாலைகளையும் சொல்லலாம். தாழ்ந்த - தொங்கிய. பகடு - பெருமை. பொறி - கீற்று; கோடு. வாங்கிய - ஏற்றுக்கொண்ட. மார்பிலுள்ள கோடுகள் தோளள வும் செல்வதைத் தோளின் செயலாக வைத்து அவை வாங்கிக் கொண்டன என்றார்.)

திருமார்பிலுள்ள வரிகளைத் தோள்கள் வாங்கிக் கொண்டன என்று சொல்லப் புக்கவர் அந்த மார்பையும் வருணித்தார். தோள்கள் எவ்வாறு உள்ளன?

அவை வலிமையை உடையன. ஆடவர்கள் ஆண்மை உடையவர்கள். ஆண்மைக்கு இருப்பிடம் தோள்கள். முருகன் பேராண்மைக்காரன்.

''செந்தில்நகர் வாழும் ஆண்மைக்கார'' என்பது திருப்புகழ். அந்தச் செந்தில் நகர் வாழும் ஆண்மைக்காரனைப் பற்றித்தானே நக்கீரர் இப்போது சொல்கிறார்?

முருகன் திருமேனி சுடர்விடுவது. தேவர்கள் யாவருமே சுடர்விடும் திருமேனி யுடையவர்கள். முருகனோ சதகோடி சூரியர்கள் உதயமானாற் போன்ற ஒளிபடைத்த திருமேனியை யுடையவன். பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பே ஒரு மேனி கொண்டு கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு வந்த நிலையே முருகன். ஆதலின் அவன் உருவமும் அதில் உள்ள அங்கங்களும் சோதி படைத்தவை. தோள்களும் சுடர்விடும் இயல்புடையவை. அந்தத் தோள்கள் புகழ் நிரம்பியவை. வீரத்தால் உண்டாவதைப் பிரதாபமென்றும் ஈகையால் உண்டாவதைக் கீர்த்தி என்றும் சொல்வது மரபு. இரண்டையும் புகழ் என்று சொல்வர். ஈகையால் வரும் புகழை வண்புகழ் என்பார்கள்; வண்மையால் வந்து புகழ் என்று பொருள். முருகனுடைய திருத்தோள்கள் வீரமுடையவை என்றதனால் அவை பிரதாபம் உடையவை என்பது சொல்லாமலே புலனாகும். ஈகையால் உண்டாகும் வண்புகழும் அவற்றிற்கு உண்டு என்று நக்கீரர் சொல்கிறார். வீரர் தம் வலிமையால் பெற்றவற்றைப் பிறருக்கு வழங்குவார்கள். தோளும் கையும் தொடர்புடையன. கையைத் தோள் என்றும் கூறுவதும் உண்டு. ஆதலின் வீரமும் ஈகையும் ஒருங்கே உடையவை அவை. அதனால் பெறும் பிரதாபமும் கீர்த்தியும் அவற்றிற்கு இருக்கின்றன.

வண்புகழ் நிறைந்தவை முருகன் திருத்தோள்கள். இத்தகைய தோள்கள் போர்க்களத்தில் செய்யும் செயல் வியத்தற்குரியவை. படைக்கலங்களை எறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவ்வாயுதங்களை வாங்கும் தோள்கள் அவை.

செம்பொறி வாங்கிய மொய்ம்பின், சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்.

(மார்பில் உள்ள செம்மையான வரிகளை வாங்கிக் கொண்டவை, வலியை உடையவை, ஒளிவிடுபவை, வண்புகழ் நிறைந்தவை, படைக்கலங்களால் பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்குபவை, உயர்ந்தவை ஆகிய தோள்கள்.

பொறி - கோடு. மொய்ம்பு - வலிமை. விடு - விட்டு. வசிந்து - பிளந்து.)

'வசித்து வாங்கு நிமிர்தோள்' என்பதற்கு வேறு ஒரு வகையிலும் பொருள் சொல்லலாம், வசி என்பது வசியத்துக்கும் ஆகும், 'பிறருடைய உள்ளத்தைக் கவர்ந்து வாங்கி நிமிர்கின்ற தோள்' என்றும் கூறலாம். ஆடவர்களுடைய திருத்தோள்கள் வீரம் நிரம்பி மங்கையர் மனத்தைக் கவர்வன என்பார்கள்.

"... மங்கையர்கள்
தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்."

என்பது நளவெண்பா.

'தம்முடைய வலியினாலே பெரிய புகழ் நிறையச் சுடரையுடைய படைக்கலங்களை எறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்குதோள்' என்று உரையெழுதுவர் நச்சினார்க்கினியர். 'சுடரையுடைய படைக்கலங்களைச் சுடர் என்றார்; அஃது ஆகுபெயர்' என்று விளக்கம் கூறுவர். வேறு ஒரு பழைய உரையாசிரியர், 'மார்பிலே சீதேவியைக் கைக் கொண்ட வலியினையுடைய ஒளிவிட்டு வளவிய புகழ் நிறைந்து வளர்ந்து நீண்டு நிமிர்ந்த தோள்கள்' என்று எழுதுவார். பொறியென்பதற்குச் சீதேவியென்றும், வசிந்து என்பதற்கு வளர்ந்து என்றும் பொருள் கொண்டார் அவர்.

முருகன் அசுரர்களோடு போர் செய்யும் காலத்தில் பன்னிரண்டு திருக்கரங்களிலும் படைக்கலம் ஏந்தி அவர்கள்

மார்பைப் பிளப்பதனால் இச்செயலை எல்லாத் தோள்களுக்கும் பொதுவாகச் சொன்னார் என்று நச்சினார்க் கினியர் கூறுவார்.

நச்சினார்க்கினியரே வேறு ஓர் உரையையும் அடிக்கடி குறிக்கிறார்; 'இனி மொய்ம்பினை உடைத்தாய் ஒளிவிட்டு நிறைந்து, வளையவேண்டும் இடம் வளைந்து நிமிர வேண்டும் இடம் நிமிரும் தோள் என்றும் உரைப்பர்' என்று அவர் பிறர் உரையாக ஒன்றைக் காட்டுவார். தோள்கள் கழுத்துக் கருகில் வளைந்தும் ஓரத்தில் நிமிர்ந்தும் விளங்கு வதைக் கொண்டு இவ்வுரை எழுந்ததென்று தோன்றுகிறது.

ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசித்துவாங்கு நிமிர்தோள்

என்று உரைத்த சிறப்பினால், முருகன் தோள்கள் வீரம் செறிந்தன, வீரச் செயலைப் புரிவன, ஒளிபடைத்தன, புகழ் நிரம்பியன, உள்ளத்தைக் கவர்வன, குவிந்து நிமிர்ந்தன என்ற உண்மைகள் புலனாகின்றன. அத்தகைய தோள்களுள் ஒவ்வொரு கையும் இன்ன இன்ன செயலைப் புரிகின்றது என்பதை இனிச் சொல்லப் போகிறார். தோளுக்கும் கைக்கும் உள்ள ஒற்றுமை நயம் கருதி, 'தோள்களுள் ஒரு கை இவ்வாறு செய்யும்' என்று முறையே சொல்லப் புகுகிறார்.

முன்னே சொன்ன ஆறுமுகங்களும் முறையே தத்தமக்கு உரிய செயலைச் செய்வதனால், அச்செயல்களுக்கு இயைய, வீரமும் பெருமையும் உடைய தோள்களில் ஒவ்வொரு கையும் இன்ன இன்ன செயலைப் புரிந்தருளும் என்று, முன்னே சொன்ன பகுதியோடு பொருளைத் தொடர்புபடுத்திக்கொள்ள வேண்டும்.

ஆங்கம், மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்
செம்பொறி வாங்கிய மொய்ம்பின் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசித்துவாங்கு நிமிர்தோள்

என்று முகத்தையும் மார்பையும் தோள்களையும் தொடர்பு படுத்தி, அப்பால் தனித் தனிக் கைகளின் செயலை விளக்குகிறார்.

## முனிவர் இடர் தீர்க்கும் கைகள்

ஒரு முகம் உடையாருக்கு இரண்டு கைகள் இருக் கின்றன. நான்கு முகமுடைய பிரமனுக்கு எட்டுக் கைகள். சிவபெருமானுக்கு ஐந்து திருமுகங்களும் பத்துக் கரங்களும் உண்டு.

முருகன் ஆறுமுகம் உடையவன். தெய்வங்களில் அதிகமான முகமும் அதிகமான திருக்கரங்களும் உடைய பெருமான் அவன். ஆறு முகங்களுக்கு ஏற்றபடி பன்னிரண்டு திருக்கரங்களோடு விளங்குகிறான். ஆறு முகங்களின் செயலைச் சொன்ன நக்கீரர், அவற்றிற்கு ஏற்ற செயல்களைப் புரிவனவாகக் கரங்களைச் சொல்கிறார். ஒரு செயலைப் புரியும் போது திருமுகம், அதன்பால் பார்வையை ஈடுபடுத்தியிருக்கும்; புன்முறுவல், வார்த்தைகள், அசைவு ஆகியவற்றால் அந்தச் செய்கைக்கு ஆவன புரியும். ஆனாலும் நேரடியாகச் செயல்களைச் செய்வன திருக்கரங் களே. கைகளே செயலுக்கு அடையாளம். கை என்பதற்கே செயல் என்ற பொருள் உண்டு. நெடுந்தூரம் நடக்க இயலாத வனைக் காலால் ஆகாதவன் என்பதில்லை. நெடுநேரம் கண்விழித்துப் படிக்க இயலாதவனைக் கண்ணால் ஆகாதவன் என்று சொல்லும் வழக்கம் இல்லை. எல்லோரையும் கையால் ஆகாதவர் என்றே சொல்லுகிறோம். கை செயலுக்கு உரிய

சிறந்த கருவி. தெலுங்கில் செயல் என்பதன் பகுதியாகிய செய் என்பதே கைக்கு ஒரு பெயராக வழங்குகிறது. அம்மொழி தமிழின் இனமொழி அல்லவா?

ஆகவே ஆறுமுகங்களின் வாயிலாக முருகனுடைய செயல்களை விரித்தவர், அந்த அந்தச் செயல்களுக்குரிய தொழில்களைப் புரியும் திருக்கரங்கள் அந்த அந்த நிலைக்கு ஏற்ற வகையில் அமைந்திருப்பதைச் சொல்ல வருகிறார். ஒவ்வொரு முகத்தின் செயலுக்கும் ஏற்றபடி, அந்த முகத்துக்கு இணைந்த இரண்டு கைகளின் கோலமும் பொருத்தமாக இருப்பதைக் காட்டுகிறார்.

முதலில் சொன்ன திருமுகம், 'மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்க'ப் பல கதிரை விரியும்படி செய்வது. கதிரவனுக்கும் திங்களுக்கும் விளக்குகளுக்கும் ஊற்றம் தந்து இருளைப்போக்கும் திருமுகம் அது. அதற்கு ஏற்ற காரியத்திலே ஈடுபடும் கோலத்தில் இரண்டு கைகள் உள்ளன.

கதிரவன் வானவெளியில் பிரயாணம் செய்கிறான். கிழக்கே தோன்றி மேற்கே மறைகிறான். அவன் மேற் கொண்ட இந்தப் பயணத்தில் அவனுடைய செலவைத் தடுத்து நிறுத்தி அவனுக்கு இன்னல் விளைவிக்கச் சில அசுரர்கள் முயல்கிறார்கள். அவனை எதிர்த்துப் போரிடு கிறார்கள். அவர்களுக்கு மந்தேகாருணர் என்று பெயர். கதிரவன் அவர்களோடு போர் செய்து கொண்டே செல் கிறான். ஒரு புறம் அசுரர்களின் கொடுமையை எதிர்த்துப் போக்கியும் மற்றொருபுறம் இருளைப்போக்கியும் அவன் வானத்தில் தன் தேரில் ஊர்ந்து செல்கிறான். உலகத்தில் உள்ள அந்தணாளர்கள் தாம் செய்யும் மூன்று வேளைச் சந்திகளில் கதிரவனை நோக்கி அர்க்கியம் கொடுப்பார்கள். அவர்கள் கொடுக்கும் நீர் அம்பாக

மாறிக் கதிரவனோடு பொரும் அசுரர்களை மாய்க்க உதவும் என்று கூறுவது ஒரு மரபு.

கதிரவன் அசுரர்களோடு போர் இடுதலின் அவன் கதிர்கள் வெம்மையாக இருக்கின்றன. அவற்றின் வெம்மை முழுவதும் அப்படியே பூமியில் படிந்தால் உயிர்க் கூட்டங்களால் அதைத் தாங்க இயலாது. இப்பொழுதே புழுக்கள் கதிரவன் வெம்மையைத் தாங்காமல் அழிகின்றன.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே."

என்ற திருக்குறள் அதனை நினைப்பூட்டுகிறது அல்லவா?

எனவே, கருணையை உடைய முனிவர் சிலர் அந்தக் கதிர்களின் கடுமையைத் தாம் தாங்கிக்கொண்டு அக் கடுமை குறையும்படி செய்கிறார்களாம். அவர்களை வால கில்லியர் என்று சிலரும், வேணாவியோர் என்று சிலரும் கூறுவர்.

உயிர்கள் இந்த வெம்மையைத் தாங்க இயலாதே என்ற பேரருளினால் இடை நின்று தாங்கும் முனிவர்களுக்கு, அதற்கு ஏற்ற வலிமையைத் தருவது அவர்களுடைய தவம் மட்டும் அன்று; முருகப்பெருமானுடைய திருவருளும் அந்த வலிமையை வழங்குகிறது. உலகம் இருள் நீங்கி ஒளிபெற வேண்டும் என்ற நோக்கத்துடன் விளங்கும் திருமுகத்தைச் சார்ந்த திருக்கரங்களில் ஒன்று, மேலே நீண்டு அவர்களைப் பாதுகாக்கிறது. மற்றொரு கையை முருகன் தன் இடையிலே வைத்துக் கொண்டிருக்கிறான்.

விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை;
உக்கம் சேர்த்தியது ஒருகை.

(வானத்திலே செல்லும் வழக்கத்தையுடைய முனிவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு மேலே எடுத்தது ஒரு திருக்கரம்; இடையிலே வைத்திருப்பது ஒரு திருக்கரம். மரபு - வழக்கம். ஐயர் - முனிவர். உக்கம் - இடை.)

'ஒரு கை எக்காலமும் ஆகாயத்தே இயங்குதல் முறைமையினையுடைய தெய்வ இருடிகளுக்குப் பாதுகாவலாக எடுத்தது; ஏந்திய கைக்கு இணைந்த கை மருங்கிலே வைத்தது' என்றும், 'என்றது, ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தல் ஆற்றா என்று கருதி, தமது அருளினால் சுடரொடு திரிந்து அவ்வெம்மையைப் பொறுக்கின்ற முனிவரைப் பாதுகாக்கவே, உலகத்தைத் தாங்கிக் காத்ததாயிற்று. இதனானே இக் கை, மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்த முகத்திற்கு ஏற்ற தொழில் செய்ததாயிற்று' என்றும், 'மனமும் முகமும் செய்தலின், ஏனைக் கை தொழிலின்றி மருங்கில் கிடந்து' என்றும் நச்சினார்க்கினியர் விளக்கினார்.

கதிரவனுடைய வெம்மையைத் தாங்கும் முனிவர்களைப் பற்றிய செய்திகள் வேறு பழைய தமிழ் நூல்களிலும் வருகின்றன.

தாமப்பல் கண்ணனார் என்னும் புலவர், சோழன் நலங்கிள்ளியின் தம்பியாகிய மாவளத்தானைப் பாடுகிறார். அவனுடைய பொறுமையைப் பாராட்டுகிறார். 'ஒரு புறாவுக்காகத் தன் ஊனை அரிந்து தந்த சிபிச்சக்கரவர்த்தியின் மரபில் வந்தவனே!' என்று அந்தச் சோழனை விளிக்கிறார். சிபியின் பெருமையைச் சொல்லும்போது சீவகாருண்யம் மிக்கவன் அவன் என்பதைப் புலப்படுத்த, அவன் சுடரொடு திரிதரும் முனிவருக்குச் சமானமானவன் என்று கூறுகிறார்.

"நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
கால்உண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும் மருள."

(புறநானூறு, 43)

'நிலத்தில் வாழ்கிறவர்களுக்குக் கதிரவனுடைய கதிர்களின் வெப்பத்தால் விளையும் துன்பம் நீங்கும்படியாக, சுடுகின்ற கதிர்களை உடைய சூரியனது வெப்பத்தைத் தாம் ஏற்றுக் கொண்டு, காற்றே தம் உணவாகக் கொண்டு, அச் சூரியனோடு சுற்றிவரும் விளங்கும் சடையையுடைய முனிவரும் வியப்பை அடையும்படி' என்பது இதன் பொருள்.

இதன் உரையில், 'முனிவர் என்றது வேணாவியோரை; அன்றிச் சுடர் திரிந்த வழித் திரிந்து தவம் செய்யும் முனிவர் என்றும் உரைப்ப' என்று கூறுவர் பழைய உரையாசிரியர்.

சிலப்பதிகாரத்திலும் இந்த முனிவர்களைப் பற்றிய செய்தி வருகிறது. பாலை நிலத்துத் தெய்வமாகிய துர்க்கையை பரவுகின்றனர் வேட்டுவர். அப்போது அவர்கள் அப்பெருமாட்டி இந்த முனிவர்களுக்கு இடர் கெடும்படி அருளுவதாகப் பாடுகிறார்கள்.

''சுடரொடு திரிதரும் முனிவரும் அமரரும்
இடர்கெட அருளும்நின் இணையடி தொழுதேம்.''

(சிலப்பதிகாரம், 12:18)

அதற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லாரும், 'கதிரவனுடைய வெம்மை உயிர்களை வருத்தாமல், அவனைத் தாங்கி அவனுடனே சுழன்று திரிதலைச் செய்யும். தெய்வ இருடிகள்' என்று எழுதுகிறார்.

இவ்வாறு, ''காலுணவாகச் சுடரொடு கொட்கும் அவர் சடை முனிவர்'' என்று புறநானூற்றிலும், ''சுடரொடு திரிதரு முனிவர்'' என்று சிலப்பதிகாரத்திலும் வரும் முனிவர்களே இங்கே, ''விண்செலல் மரபின் ஐயர்'' என்று சொல்லப் பெறுகிறார்கள்.

மேலே சொன்ன இரண்டு கைகளையும் அருணகிரி நாதர் புயவகுப்பில் பாராட்டுகிறார்.

''வசைதவிர் ககன சரசிவ கரண
மகாவ்ருத சீல சால வரமுனி சித்தரை
அஞ்சல் அஞ்சல் என்று
வாழ்வித்து நின்றன:
மணிவட மழலை உடைமணி தபனிய நாண்
அழகாக நாடி வகைவகை கட்டு
மருங்குடன் பொருந்து
ரீதிக் கிசைந்தன.''

'வசை சிறிதும் இன்றி நீங்கினவர்களும், வானத்தில் சஞ்சரிப்பவர்களும், பசுகரணம் நீங்கிப் பதிகரணம் பெற்றவர்களும், மிக்க பெரிய விரதங்களை அநுஷ்டிப்பவர் களும், அருங்குணத் தொகுதியையுடையவர்களும், மேலான முனிவர்களுமாகிய சித்தர்களை, ''நீங்கள் அஞ்சவேண்டாம். அஞ்ச வேண்டாம்'' என்று குறிப்பித்து அவர்களை வாழச் செய்து நிற்பவை மணிகளின் வடங்களோடு கூடிய இனிய ஒலியையுடைய உடைமணி யென்னும் ஆபரணத்தையும், பொன் அரைஞாணையும் அழகாகத் தெரிந்து வகை வகையாகக் கட்டும் திருவிடை யுடனே சேர்ந்து விளங்கும் அழகு முறைக்குப் பொருந்தி அமைந்தவை' என்பது இதன் பொருள்.

திருமுருகாற்றுப்படையில் வரும் செய்தியையே சந்த அழகு ததும்ப அருணகிரிநாதர் அருளுகிறார். இங்கே, 'விண் செலல் மரபின் ஐயர்' பல பல சிறப்புகளுடன் கூடி, 'வசை தவிர் ககன சரசிவ கரண மகாவ்ருத சீல சால வரமுனி சித்தர்' ஆக விளங்குகிறார்கள். திருமுருகாற்றுப்படையில் வரும் வெறும் உக்கமாகிய திருவிடை இங்கே, 'மணிவட மழலை

உடைமணி தபனிய நாண் அழகாக நாடி வகை வகை கட்டும் மருங்கு' ஆகிறது. முன்னவர் பூட்டிய அணிகளோடு பின் வருவோர் பூட்டிய அணிகளையும் அணிந்து, ஒரு குழந்தை அழகிலும் சிறப்பிலும் மிக்க நலம் பெற்று விளங்குவது போல இருக்கிறது இந்தக் காட்சி.

## யானையைச் செலுத்தும் கைகள்

முதல் முகத்துக்கு ஏற்ற வகையில் செயலாற்றும் இரண்டு கைகளைப்பற்றிக் கூறிய நக்கீரர் மேலே இரண்டாவது திருமுகத்துக்கு இணையாக உள்ள இரண்டு கைகளின் சிறப்பைக் கூற வருகிறார். அந்த முகம், ''ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக் காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே'' என்று கூறியபடி பக்தர்களுக்கு வரம் கொடுக்கும் தன்மையை உடையது. முருகன் பேரருளாளன். அவன் தன்னுடைய அன்பர்களுக்கு மிக மிக எளியனாக நின்று அருள்புரியும் கருணாநிதி. அன்பர்கள் தன்னை அணுகிப் பணிந்து போற்றி வழிபட அருள் செய்வது பெரிது அன்று. அன்பர்களைத் தானே நாடிச்சென்று அவர்களுக்கு இன்னருள் பாலிக்கும் இயல்புடையவன் முருகன். தன் அன்பர்களின் அபயக்குரல் கேட்பதற்கு முன்பே அவர்களை நாடிச் சென்று அருள்புரிகிறவன்.

போலீஸ்காரர்களுக்கும் டாக்டர்களுக்கும் இன்ன நேரந்தான் வருவார்கள் என்ற வரையறையிருந்தால் அவர்களால் மக்களுக்கு மிகுதியான பயன் உண்டாகாது. எப்போது அழைத்தாலும் அவர்கள் சென்று உதவ வேண்டும். அதனால் மற்றவர்களுக்கு வாகனம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவர்களுக்கு அவசியம் வேண்டும். மிக விரைவில் சென்று தங்கள் கடமையை ஆற்றும்படி அவர்களுக்கு வசதி இருக்கவேண்டும்.

முருகன் அமராவதி காவலன்; உலகத்தையே காப்பவன். அசுரர்களால் வரும் இடர்களைப் போக்க அவன் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறான். அவனைப் போன்ற பெரிய போலீஸ்காரன் யாரும் இல்லை. போலீஸ்காரனைப் போலவே அவன், ''சதுக்கமும் சந்தியும்'' நிற்பவன். பெரிய சேனாபதியல்லவா? ''சேனைத் தலைவர்களுள் நான் முருகனாக இருக்கிறேன்'' என்று கண்ணன் கீதையில் அருளியிருக்கிறான். ஆகவே, அவன் விரைவிலே சென்று மக்களுக்கு அருள்புரிவதற்கு ஏற்ற வாகனங்களைக் கொண்டிருக்கிறான்.

முருகன் சிறந்த மருத்துவன்; 'பவரோக வயித்திய நாதப் பெருமாள்' அவன். வேறு எந்த மருந்தாலும் தீராத பிறவிப்பிணி அவனுடைய திருவருளால் போய்விடும். எந்தச் சமயத்தில் நோயாளிக்கு அபாய நிலை ஏற்பட்டாலும் உடனே சென்று ஆவன புரிவது டாக்டரின் கடமை. மிகவும் விரைவிலே சென்று நோயாளிகளைக் கவனிக்க வேண்டும். அதனால்தான் சிறிய டாக்டராக இருந்தாலும் கார் வைத்துக் கொண்டிருக்கிறார். புகழ் பெற்று வாழ்ந்த டாக்டர் ரங்காசாரியர் அந்தக் காலத்தில் விமானத்தில் பறந்து சென்று நோயாளிகளுக்கு நலம் செய்தார். முருகனாகிய வைத்திய னும் தன் அன்பர்களைப் பாதுகாக்க விரையும் கருணைக் கடவுள். அவன் விரைவுக்கு ஏற்றபடி வாகனங்களை வைத்திருக்கிறான்.

எப்போது அழைத்தாலும் வருகிறவன் அவன். அதற்காகவே வேகமாகச் செல்லும் வாகனத்தைக் கொண்டிருக்கிறான்.

''நீலச் சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி யுடன் வருவான்.''

என்று அருணகிரிநாதர் பாடுவார்.

''சுப்பிரமணிய சுவாமி மயில் வாகனத்தில் இருக்கிற மாதிரி'' என்று ஒரு பழமொழி உண்டு. அதற்குத் தவறாகப் பொருள் கூறுவர் சிலர். அது முருகனுடைய கருணைச் சிறப்பைப் புலப்படுத்துவது. முருகன் தன்னை எந்தப் பக்தன் எப்போது கூப்பிடுவானோ என்று எண்ணி எப்போதும் மயில் வாகனத்தில் வீற்றிருக்கிறான். மயிலை அழைத்து வரச்செய்து அதற்குக் கடிவாளம் முதலியவை பூட்டச் செய்து பிறகு ஆரோகணித்துச் செல்வதற்கு நேரமாகும் அல்லவா? ஆகவே அவன் எப்போதும் அடியார்களுக்கு அருள் செய்வதற்குச் சித்தனாக மயிலின்மேல் எழுந்தருளிய கோலத்தில் இருக்கிறான். இதுவே அந்தப் பழமொழியினால் அறிவதற்குரியது.

அடியவர்கள் தம்முடைய முயற்சி ஒன்றினாலேயே அவனுடைய திருவருளைப் பெற இயலாது. அவன் அவர்களை ஆட்கொண்டருள வேண்டும் என்ற வேகம் உடையவனாக இருக்கிறான். அவன் இருக்கும் இடத்துக்குச் சென்று அவனை நாம் தரிசிப்பதென்பது இயலாத காரியம். நாம் எந்த முயற்சியும் செய்யாமல் அவனே நம்மிடம் வந்தால், அவன் அருமையை நாம் உணரமாட்டோம். ஆதலால் நாம் ஓரளவு முயற்சி செய்தால் இறைவன் ஓடிவந்து நம்மை அணைத்து அருள் புரிவான். நாம் பலகாலமாக அழுந்தியிருக்கும் பிரபஞ்சச் சேற்றை விட்டுவிட்டுப் புறப்படவேண்டும். நாம் மெய்யன்போடு முயற்சியில் தலைப்பட்டோம் என்பதை முருகன் உணர்ந்து நம்மை ஆட்கொள்ள வேகமாக வருவான்: நம்மை இடைவழியிலே சந்திப்பான்.

அவன் இருக்குமிடம் சென்று பார்ப்பது ஒரு வகை; அவன் நம்மிடம் வருவது ஒரு வகை. முதலாவது இயலாத காரியம்; இரண்டாவது அருமையை உணராத நிலையை

உண்டாக்கும். ஆகவே இருவரும் இடைவழியிலே சந்திப்பதே நல்லது. நம்முடைய சிறு முயற்சியைத் தன் கருணையினால் நிரப்பும் வகையில் அவன் வருகிறான். அவனை நாம் சென்று சந்திக்க வேண்டும். இதனை நினைத்தே அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில்,

"மயில்வாகனனைச் சந்திக்கிலேன்."

என்று சொல்லுகிறார். அவன் அடியார்களை நோக்கி மயில் வாகனத்தில் வந்துகொண்டிருக்கிறான். இடைவழியிலே நாம் சென்று சந்திக்க வேண்டியதுதான்.

முருகன் தன் கருணை வேகத்தினால் வாகனத்தில் எழுந்தருளிவந்து ஆர்வலர்களுக்கு அருள் செய்கிறான்; வரம் கொடுக்கிறான். இதனை அவனது இரண்டாவது திருமுகத்தின் செயலாகச் சொன்னார் நக்கீரர். அன்பர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு அவன் யானை வாகனத்திலும் ஏறி வருவான். திருச்சீரலைவாய் என்னும் பகுதியின் தொடக்கத்தில் நக்கீரர் இந்தக் கோலத்தை நினைப்பூட்டி யிருக்கிறார் அல்லவா?

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டும் மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழமேல் கொண்டு

என்று கூறியதைப் பார்த்தோம்.

இவ்வாறு எழுந்தருளும்போது ஒரு கையைத் துடையின் மேல் வைத்துக் கொண்டிருக்கிறான், மற்றொரு கையில் அங்குசத்தை ஏந்தியிருக்கிறான்.

நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை
அசைஇயது ஒருகை,
அங்குசம் கடாவ ஒருகை

என்று இந்தக் கைகளின் செயல்களைக் கூறுகிறார் நக்கீரர்.

'அழகு பெற்ற செவ்வாடையையுடைய துடையின் மேல் தங்கியது ஒரு கை; அங்குசத்தைச் செலுத்துவதற்காக அமைந்தது ஒரு கை' என்பது இதன் பொருள். 'இஃது யானை ஏறுவார்க்கு இயல்பென்று கூறினால், தன்னை வழிபடுவாரிடத்து வருங்கால் யானை மேல வந்து அருள் செய்தல் இயல்பாதலின், இக் கைகள் காதலின் உவந்து வரம் கொடுத்த முகத்திற்கு ஏற்றவாறு உணர்க' என்று நச்சினார்க்கினியர் எழுதுவர்.

முருகன் சிவந்த திருமேனி உடையவன்; சிவந்த ஆடையை அணிந்தவன்; ''செய்யன் சிவந்த ஆடையன்'' என்று பின்னே வருகிறது.

''பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கை.''

என்பது குறுந்தொகையில் உள்ள கடவுள் வாழ்த்து. 'குன்றி மணியைப் போன்ற சிவந்த ஆடையை உடையவன்' என்று அதிலிருந்து தெரிகிறது.

''உடையும் ஒலியலும் செய்யை.''

என்பது பரிபாடல். முருகன் இடையில் அணிந்த உடையும் சிவப்பு; மேலே அணிந்த ஆடையும் சிவப்பு.

''குன்றியும் கோபமும் ஒன்றிய உடுக்கை.''

என்பது ஒரு பழம் பாடல், குன்றி மணியின் செந்நிறமும் இந்திரகோபப் பூச்சியின் செவ்வண்ணமும் இணைந்த சிவந்த

ஆடையை முருகன் அணிந்திருக்கிறான் என்று அது சொல்கிறது.

கலிங்கம் என்பது செவ்வண்ண ஆடைக்குப் பெயர்; அதை முருகன் அணிந்திருக்கிறான். அவனுடைய செம்மேனியில் பொருந்தி அது தனியழகைப் பெறுகிறது. முருகன் அணிந்திருப்பதனால் அது நலம் பெறுகிறது. ஆதலின் அதை, 'நலம்பெறு கலிங்கம்' என்றார். பிறருக்கு நலம் தரும் கலிங்கமாகிய அது, முருகனால் நலம் பெறுகிறதாம். அதை அணிந்த துடையின்மேலே ஒரு கையை வைத்திருக்கிறான் முருகன்.

அதனோடு இணைந்த ஒரு கை அங்குசத்தை ஏந்தியிருக்கிறது. முருகன் திருக்கரங்களில் உள்ள படைக்கலங்களில் அங்குசம் ஒன்று. முருகனுடைய தமையனார் கையிலும் தாயின் கையிலும் அங்குசம் உண்டு. முருகன் கஜவாகன மூர்த்தியாக எழுந்தருளும் போது அங்குசம் ஏந்தி வருகிறான்.

இந்த இரண்டு திருக்கரங்களையும் பற்றி அருணகிரிநாதர் புய வகுப்பில் கூறுவதைப் பார்க்கலாம்.

"வருணித கிரண அருணித வெகுதரு
ணாதப சோதி ஆடை வடிவு பெறப்புனை
திண்செழுங் குறங்கின் மேல்வைத் தசைந்தன;
வளைகடல் உலகை வலம்வரு பவுரி
விநோதக லாபகோப மயில்வத னத்துவி
ளங்கும் அங்குசங்க டாவிச் சிறந்தன."

'வருணிப்பதற்குரிய கிரணங்களோடு கூடியதும் சிவந்த நிறம் உடையதும் மிகவும் இளஞ்சூரியனுடைய வெயிலின் சோதி வீசுவதுமாகிய ஆடையானது அழகு பெறும்படி அதனைப் புனைந்த திண்ணிய செழிப்பான துடையின்மேல்

வைத்து அமைந்தவை; வளைந்த கடலையுடைய உலகத்தை வலமாக வரும் கூத்தாகிய விளையாட்டையும் தோகையையும் உடைய மயில் வாகனத்தின் முகத்தைப்போல விளங்கும் அங்குசத்தைச் செலுத்திச் சிறப்புற்றவை' என்பது இதன் பொருள். இங்கே திருமுருகாற்றுப்படையில் சொல்லப்பெற்ற கலிங்கம், குறங்கு, அங்குசம் யாவும் வருகின்றன. அங்குசத்துக்கு உவமையாக மயிலின் முகத்தைச் சொன்னது, அருணகிரியார் கற்பனை.

அடியவர்களுக்கு வரம் கொடுக்கும் கோலத்தோடு முருகன் யானை வாகனத்தின்மேல் எழுந்தருளி வருகிறான்; அப்போது ஒரு கை துடையின் மேல் இருக்க, மற்றொரு கை அங்குச மென்னும் யானைத் தோட்டியைப் பிடித்து விளங்குகிறது.

நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை
அசைஇயது ஒருகை;
அங்குசம் கடாவ ஒருகை.

## படை ஏந்தும் கைகள்

முருகன் திருக்கரத்திலுள்ள படைகளுக்குள் வேல் சிறந்தது. வேலவன் என்று முருகனைக் குறிப்பிடும் வழக்கினால் இது நன்கு புலனாகும். போரில் சிறந்து நிற்பது வேல்.

பழங்காலத்தில் படைகள் நான்கு வகைப்படும். அவற்றைச் சதுரங்க சேனை என்பார்கள். தேர், யானை, குதிரை, காலாள் என்னும் படைகள் அவை. அவற்றுள் சிறந்து நிற்பது யானைப்படை. யானையைக் கொல்வதற்கு அம்பும் வாளும் பயன்படா. வேலே யானையை எறிவதற்கு ஏற்ற படை. இதனால் வேற்படை மற்றவற்றினும்

சிறந்ததாயிற்று. முருகன் வேலே விளங்கு கையானாக இருக்கிறான்.

வேல் விளங்கும் கையையும் அதற்கு இணையான திருக்கரத்தையும் சொல்ல வருகிறார் நக்கீரர். சிறந்த பொருளுக்கு அடையே வேண்டியதில்லை. ஈசுவரன் என்றால் எந்த ஈசுவரன் என்று கேட்கமாட்டார்கள். அது சிவபெருமானைக் குறிக்கும் திருநாமம். கோயில் என்று அடையின்றிச் சொன்னால், எல்லாத் தலங்களிலும் சிறந்த சிதம்பரத்தைக் குறிக்கும். இயல்பாகவே பெருமையுடைய வர்களுக்குச் சிறப்புப் பெயர்களைச் சேர்த்து அடையாளம் காட்டவேண்டும் என்பதில்லை. அவ்வாறே வேலைச் சொல்ல வந்த நக்கீரர் அதற்குச் சிறப்பாக அமையும்படி எந்த அடையையும் சேர்த்துச் சொல்லவில்லை. எஃகு என்று மட்டும் சொல்கிறார். எஃகு என்பது வேலுக்கு ஒரு பெயர். அது கூர்மையையும் குறிக்கும். வேல் கூரியதாதலின் அதற்கு அப்பெயர் வந்தது போலும்!

வேலை ஞானசக்தி என்று கூறுவர். வேல் நீண்டு பின்பு இலைப்பகுதியில் அகன்று பிறகு கூர்மையாக முடிவது. அப்படியே அறிவும் நெடுநாட் பயிற்சியினால் அமைவதாக நீண்டு, பலவற்றைத் தெரிந்துகொள்வதால் அகன்று, இறுதியில் ஒன்றையே முடிந்த முடிபாகத் தெரிந்து கொள்வதால் கூரியதாக விளங்கும். ஆழ்ந்து அகன்று கூரிய அறிவு என்று சொல்வதிலிருந்து இந்த இலக்கணங்களைத் தெரிந்து கொள்ளலாம். இந்த வகையில் வேலின் இயல்புக் கும் அறிவின் இயல்புக்கும் ஒப்புமை இருக்கின்றது.

முருகன் தன் திருக்கரத்தில் வேலை வைத்துச் சுழற்றிக் கொண்டிருக்கிறான். அதற்கு இணையான கையில் கேடயத்தை வைத்திருக்கிறான். போர்செய்யப் புகுவார்

வலக்கையில் ஆயுதத்தையும் இடக்கையில் கேடயத்தையும் ஏந்தியிருப்பார்கள். ஆயுதம் எதிரியைத் தாக்குவதற்கு; கேடயம் எதிரியின் தாக்குதலினின்றும் பாதுகாப்பதற்கு. கேடயம் வட்டமாக இருப்பது. அதைக் கிடுகு, பரிசை, தோல் என்று சொல்வார்கள். கறுப்பாக அகன்று விரிந்து வட்டமாக இருப்பதால் அதனை நக்கீரர் 'ஐயிரு வட்டம்' என்று சொல்கிறார். 'வியப்பையும் கருமையையும் உடைய பரிசை' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதுகிறார். வேலும் கேடயமும் ஏந்தும் கைகளை,

இருகை, ஐயிரு வட்டமொடு எஃகுவலம் திரிப்ப

என்று நக்கீரர் பாடுகிறார்.

'இரண்டு கைகள் கேடயத்துடன் வேலாயுதத்தையும் வலமாகச் சுழற்ற' என்பது இதன் பொருள்.

இந்த இரண்டு கைகளும் 'மந்திர விதியின் மரபுளி வழாஅ, அந்தணர் வேள்வியோர்க் கும்மே ஒரு முகம்' என்று சொன்ன திருமுகத்துக்குப் பொருந்தி அமைந்த கைகள். 'இதனானே, அசுரர் வந்து வேள்வியைக் கெடாமல் அவரை ஓட்டுவதற்கு இவற்றைச் சுழற்றுதலின் வேள்வி ஓர்க்கும் முகத்திற்கு இக்கைகள் ஏற்றவாறு உணர்க' என்று நச்சினார்க்கினியர் விளக்குகிறார்.

முருகன் அசுரகுலத்தைக் கட்டறுப்பவன். அசுரர்கள் சுரர்களாகிய தேவர்களின் பகைவர்கள். அந்தணர் செய்யும் வேள்விகளில் அவியுணவு பெற்றுத் தம் கடமைகளை ஆற்றுபவர் தேவர். அவர்கள் உணவு பெறுவதற்குரிய வேள்வியைக் குலைப்பதற்கு அசுரர்கள் முந்துவார்கள். அப்போது வேள்வி காவலனாகிய முருகன் வேற்படை ஏந்தி அவர்களை அழிப்பான். தாமத குணத்துக்கும் அஞ்ஞானத்துக் கும் இருப்பிடமாக உள்ளவர்கள் அசுரர்கள், அவர்களை

அழிக்க ஞானவடிவமான வேற்படையே ஏற்றது. ஆதலின் அதனால் நிருதர்களை அழிக்கிறான் முருகன்.

இந்த இரண்டு கைகளின் புகழையும் விரித்துக் கூறுகிறார் அருணகிரிநாதர்.

''வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புணைந்தன.''

என்பது வேலெடுத்த புயத்தைச் சொன்னது. 'கிரவுஞ்சமலை பிளவு படவும், அசுரர்களுடைய தலைகள் பிளக்கவும், மகரமீன் உலவும் பெருங்கடல் வேலிலிருந்து தோன்றிய தீயின் வாயிலே துன்புறவும் சுழற்றி, கூர்மையும் வெற்றியும் தங்கிய தூய வேலாயுதத்தை அழகாகக் கொண்டவை' என்பது இதன் பொருள்.

முருகன் இயற்றிய வீர விளையாடல்களை எண்ணி இவ்வாறு விரித்துக் கூறினார்.

அடுத்தபடி கேடயத்தைச் சொல்கிறார்.

''மதியென உதய ரவியென வளைபடு
தோல்விசால நீல மலிபரிசைப்படை
கொண்டு நின்றுழன்று சாதிக்க முந்தின.''

'சந்திரனைப் போலவும் உதய சூரியனைப் போலவும் வளைந்துள்ள தோலும் விரிவும் நீல நிறமும் மிக்க கேடயமாகிய ஆயுதத்தை ஏந்தி நின்று திரிந்து மேற்கொண்ட காரியத்தை நிறைவேற்ற முந்துகின்றவை' என்பது இதன் பொருள். அந்தப் படை வட்டமானது, கரியது. தோலால் செய்தது என்ற செய்திகளை இதனால் உணர்கிறோம்.

## ஞான முத்திரைக் கைகள்

முருகன் சிறந்த ஞானாசிரியன். குமரகுரபரன். 'எஞ்சிய பொருளை ஏமுற நாடித் திங்கள் போலத் திசைவிளங்கும்' திருமுகத்தை உடையவன். அந்தச் சிறப்புக்கு ஏற்ற கரங்கள் இரண்டு உள்ளன. அவற்றை இனிச் சொல்ல வருகிறார் நக்கீரர்.

முருகன் ஞானகுருவாக எழுந்தருளியிருக்கும்போது மோன குருவாகவும் இருக்கிறானாம். அப்போது அவனுடைய திருக்கரம் ஒன்று சின்முத்திரையைக் காட்டியபடி அவன் திருமார்போடு ஒட்டித் தோன்றுகிறது. இடக்கை மாலையைப் பற்றிக்கொண்டு இலங்குகிறது.

ஒருகை மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய.

'முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை உணர்த்தும் காலத்து, ஒருகை மார்போடே விளங்கா நிற்க, ஒருகை மார்பின்மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகு பெற' என்று நச்சினார்க்கினியர் உரை கூறுவர். இதை விளக்கும்போது, 'என்றது, இறைவன் மோன முத்திரையத்தனாய்த் தானாயே இருந்து காட்ட, ஊமைத் தசும்புள் நீரு நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி மாணாக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோனமுத்திரை கூறிற்று; ''தன்னை யுன்னி என்னையாக்கிய போழ்தே யானவ னாயினேன்'' என்பதனான் உணர்க' என்று எழுதியுள்ளார்.

தட்சிணாமூர்த்தி சின்முத்திரையைத் தரித்து மோன குருவாக எழுந்தருளியிருந்த கோலத்தை இது நினைப்பிக் கிறது.

''கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி

வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.''

என்பதில், அந்தக் கோலம் சொல்லோவியமாக உள்ளது. அவ்வாறே முருகனும் சின்முத்திரையைத் தரித்த கோலத்தில் குருவாக வீற்றிருக்கிறான் என்பது மேலே சொன்ன விளக்கவுரையால் புலனாகிறது. ஞானபண்டித சாமியாக இருத்தலின் அவன் மோன குருவாக இருப்பதற்கும் உரிமையுடையவன்.

''அன்றாலின் கீழிருந்து மோன ஞானம்
அமைத்தசின்முத் திரைக்கடலே அமரர் ஏறே.''

என்று தாயுமானவர் போற்றும் கோலம் முருகனுக்கும் ஏற்புடையது போலும்.

இந்த இரண்டு திருக்கரங்களையும் அருணகிரிநாதர் சிறப்பிக்கும் முறையை இனிப் பார்க்கலாம். இதோ மோன முத்திரை தரித்த செங்கையை வகுக்கிறார்.

''மனகுண சலன மலினமில் துரிய
அதீத சுகாநு பூதி மவுன நிரக்ஷர
மந்திரம் பொருந்தி மார்பிற் றிகழ்ந்தன.''

'மனமும் குணமும் சலனமும் ஆகிய அழுக்குகள் இல்லாத துரியமும் கடந்த துரியாதீத நிலையில் பெறும் ஆனந்த அநுபூதியைத் தருவதற்குக் காரணமான மவுனமான அட்சரம் ஏதும் இல்லாத மந்திரமாகிய முத்திரையைப் பொருந்தித் திருமார்பில் திகழ்ந்தவை' என்பது இதன் பொருள்.

மோன முத்திரையையே 'மவுன நிரட்சர மந்திரம்' என்று கூறுகிறார். அந்த முத்திரையின் பொருள் உணர்ந்தவர் கள் துரியாதீதமாகிய சுகாநுபூதியில் திளைப்பார்கள்.

தாரொடு பொலியும் இடக்கையைக் கூறும் முறை வருமாறு:

"வகைவகை குழுமி மொகுமொகு மொகென
அநேக சமூக ராக மதுபம் விழச்சிறு
சண்பக செறிந்த தாரிற் பொலிந்தன."

'இனம் இனமாகத் திரண்டு மொகு மொகு மொகு என்ற ஒலியோடு பலவாகிய சமூகத்தையுடைய பண்களைப் பாடும் வண்டுகள் விரும்பி வந்து விழச்சிறிய சண்பக மலர் நெருங்கித் தொடுக்கப் பெற்ற மாலையோடு விளங்குபவை' என்பது இதன் பொருள். நக்கீரர் தார் என்று மட்டும் சொல்ல, அருணை முனிவர் அதைச் சண்பக மாலையாக்கி அதில் வண்டுகள் விழுந்து இராகம் பாடுவதைக் கூறினார்.

இந்த இரண்டு கைகளும் முருகனுடைய ஞானச் சிறப்பைத் தெளிவாகக் காட்டுகின்றன.

## களவேள்வியை நடத்தும் கைகள்

முருகன் பெருவீரம் உடையவன். அவனுடன் போர் செய்த சூரபன்மன், புராணங்களிலும் இதிகாசங்களிலும் வரும் மற்ற அசுரர்களும் அரக்கர்களும் பெற்ற ஆற்றலை விடப் பேராற்றல் பெற்றவன். துணிவுக்கே உருவாகவும், வன்கண்மைக்கே வடிவாகவும், கொடுமைக்கே கொள் கலனாகவும் இருந்தவன் அவன். அவனை வென்று தேவர்களுக்கு நலம் செய்தவன் முருகன். மிகமிகச் சிறந்த வீரம் படைத்த முருகன் முன் நின்று சூரனோடு செய்த போர் தேவாசுரம் என்று பெயர் பெறும். அதைப் போன்ற பெரிய போர் வேறு இல்லை.

போரில் பெற்ற வெற்றியின் சிறுமை பெருமை, எதிர்த்த பகைவனின் நிலையைப் பொருத்தவை. சூரன் மிக்க வலிமையுடையவனாதலால் அவனோடு செய்த போரில் கிடைத்த வெற்றி பெரிய வெற்றியாகும். இதை எண்ணியே நக்கீரர், ''சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி'' என்று முருகனைப் பாடினார்.

முருகன் இந்த வெற்றியைக் கொண்டாடுகிறான். பேய்கள் போரில் உணவு பெறும் என்பதை முன்னே பார்த்தோம். மற்றக் காலங்களிலெல்லாம் பட்டினியாக இருந்த அலகைகள் எங்கே போர் நடைபெறுகிறதென்று பார்த்து ஏங்கிக் கொண்டிருக்கும். போர்க்களத்தை அடைந்த பிறகு அங்கே உள்ள பிணங்களைத் தின்னும். அப்போது கொற்றவைக்குப் பூசைபோட்டுப் பிறகே பேய்கள் உண்ணுவதாகச் சொல்லுவது மரபு. இதைக் களவேள்வி என்பர். எங்கே போர் நடந்தாலும் இறுதியில் களவேள்வி நடைபெறுவதாகச் சொல்வர். பரணி நூல்களிலும் பழங்காலத் தமிழ் நூல்களிலும் அது பற்றிய செய்திகள் வருகின்றன.

முருகன் போர் செய்து வெற்றிகொண்ட போது கணக்கற்ற பேய்கள் விருந்து உண்டன. அதனால் செருக்களத்து அலகை வகுப்பு, போர்க்களத்து அலகை வகுப்பு என்று அந்தக் காட்சிகளை வருணிக்கும் பாடல்களை அருணகிரியார் பாடியருளினார்.

இந்தக் களவேள்வியில், பல நாள் பசித்திருந்தாலும் உண்ணுவதற்கு முன் பேய்கள் தம்முடைய தலைவியாகிய துர்க்கையை வாழ்த்துகின்றன.

'வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ'னாகிய முருகனுக்கு இந்தக் களவேள்வியினால் இரண்டு பங்கு உவகை உண்டாகிறது. தன்னுடைய தாயைப் போற்றும் விழா

அது என்பதனாலும், பல காலம் பசித்திருக்கும் ஏழைப்பேய்கள் உணவு பெறுகின்றன என்பதனாலும் வந்த உவகை அது. ஆதலின் போரில் வீரம் காட்டி வென்ற முருகன் களவேள்வி நன்கு நடைபெறுவதற்கு வேண்டிய செயல்களைச் செய்கின்றான்.

செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே.

என்பதனால் அவனுடைய திருமுகங்களில் ஒன்று களவேள்வி நடைபெறும்படி செய்கிறது என்பதை முன்பு பார்த்தோம். அந்தத் திருமுகத்துக்கு ஏற்ற இரண்டு கைகளின் செயல்களை இப்போது சொல்ல வருகிறார் நக்கீரர். அவற்றில் ஒரு கையை முருகன் மேலே தூக்கிச் சுழற்றுகின்றான். அந்தக் கையில் உள்ள வளையும் சுழல்கிறது. அவ்வாறு கையைச் சுழற்றுவது களவேள்வியை நன்கு நடத்துவதற்கு உத்தரவு கொடுக்கும் அடையாளம். வேலை வாங்குகிறவர்கள் கையை மேலே தூக்கி விரலை அசைத்து, ''வேலை நடக்கட்டும்'' என்று குறிப்பிப்பது போன்றது இது. முருகன் கையை உயர்த்தும் போது அதில் அணிந்த வளை கீழே நழுவி முழங்கைக்கு முன் வந்து நிற்கின்றது. இந்தக் காட்சியைச் சொல்லுகிறார் நக்கீரர்.

ஒருகை, கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப.

(ஒரு கையானது கீழே நழுவி விழும் வளையோடு மேலே சுழன்று களவேள்வி செய்க என்று உத்தரவிட. தொடி - வளை, கொட்ப - சுழல. 'களவேள்விக்கு முத்திரை கொடுப்ப' என்று உரை எழுதுவார் நச்சினார்க்கினியர்.)

இவ்வாறு மேலே உயர்த்திக் களவேள்வி நடக்க ஏவும் கைக்கு இணையான கை மணியை அடிக்கிறது. முருகன் திருக்கையில் இருக்கும் பொருள்களில் மணியும் ஒன்று. கொற்றவைக்குப் பூசை செய்வதே களவேள்வி. அந்தப்

பூசைக்கு மணியடிக்க வேண்டும் அல்லவா? முருகனுடைய மற்றொரு கை அதைச் செய்கின்றதாம்.

ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட.

(மற்றொரு கை ஓசை இனிதாக உள்ள ஒலிக்கின்ற மணியை மாறி மாறி அடிக்க. பாடு - ஓசை, படுதல் - ஒலித்தல். இரட்டுதல் - மாறி மாறி அடித்தல்.)

அந்த மணியின் ஓசை கேட்பதற்கு இனிதாக இருக்கிறது. மேலே உள்ள கையை அசைக்கிறான்; உடனே கீழே உள்ள கையினால் மணியை அடிக்கிறான்; இப்படி மாறி மாறிச் செய்வதனால் 'படுமணி இரட்ட' என்றார். களவேள்வியாகிய கொற்றவையின் பூசையை நடத்துகின்ற தலைமைப் பூசாரியாகவே முருகன் விளங்குகிறான். தன் அன்னையின் பூசையை அவன் அன்புடன் செய்ய முந்துவது பொருத்தந்தானே?

இந்தக் கைகளின் வருணனையை அருணகிரியாரின் திருவாக்கில் இனிப் பார்க்கலாம்.

போர்க்களத்தில் நிசாசரர்களாகிய அசுரர்கள் மேலும் மேலும் கறுவிக் கொண்டு முந்துகிறார்கள். வெளி முகடளவும் அவர்களுடைய சேனைகள் பரந்து நிற்கின்றன. அவர்கள் இப்போது போரில் தொலைந்து போயினர். இன்னும் யார் இருக்கிறார்கள் என்று தேடிச் சாடினர் வீரர். போர்க்களம் இப்போது பிணம் பரந்த காடாகி விட்டது. பேய்கள் அவர்களின் உடலங்களைக் கொண்டு வந்து அடுக்குகின்றன. போர்க்களம் எங்கும் பரந்து மூலை முடுக்குகளில் எல்லாம் தேடிச் சென்று எங்கும் நிற்கின்றன. களவேள்வி செய்யும்பொருட்டே இவ்வாறு அந்தப் பேய்கள்

ஆயத்தம் செய்கின்றன. அவர்களுக்கு ஊக்கமூட்டும் கை, தான் அணிந்த வளைகள் சுழல மேலே நின்று சுழல்கிறதாம்.

"மிசைமிசை கறுவி வெளிமுக டளவு
நிசாசர சேனை தேடி
விததி பெறச்சில கங்கணங் கறங்க
மீதிற் சுழன்றன."

(கறுவி - பகைத்து. சேனை தேடி - சேனையைத் தேடி. விததி பெற - பரவலைப் பெற. கங்கணம் - வளை; தொடி. கறங்க - சுழல.)

மற்றொரு கையோ, மக்களும் விலங்குகளும் அஞ்சும்படி நெருப்பைக் கக்குகின்ற விழிகளைப் பெற்ற பூதபிசாசங்கள் போர்க்களத்திலே புகுந்து களவேள்வியில் கலந்து கொள்ளும்படி மணியை அடிக்கிறதாம். அவை வேறு எங்கோ இருந்தாலும் அவற்றின் காதில் விழும்படி உரத்த ஒலியோடு முழங்குகிறது அந்த மணி.

"வெருவுவ வெருவ எரிசொரி
விழியுள பூத பிசாசு போத
மிகுதொனிபற்றி முழங்கு விஞ்சு கண்டை
வாசிக்கை கொண்டன."

(வெருவுவ - கண்டு அஞ்சுகின்ற உயிர்கள். எரிசொரி - வெருவும் படியாக எரியைச் சொரிகின்ற. முழங்கு கண்டை, விஞ்சு கண்டை; கண்டை - மணி. வாசிக்கை கொண்டன - அடித்து ஒலிக்கும் செயலை மேற்கொண்டவை.)

களவேள்வி நடப்பதற்காக அங்கே உள்ள பேய்களை அவை நன்கு காணும்படி ஒரு கையை உயர்த்தி ஏவுகிறான் முருகன். அங்கே வராமல் இருக்கும் பூத பிசாசங்களும் களவேள்வியில் உணவு பெறும்படி, அவற்றிற்கு அழைப்பு

விடுப்பதுபோலப் பேரொலியுடன் ஒலிக்கும் மணியை அடிக்கிறானாம்.

## இன்பம் வழங்கும் கைகள்

இறைவன் சத்தியோடு ஒன்றி வாழ்வதனால் உலகில் ஆண் பெண்கள் உறவு கொண்டு இல்லறம் நடத்துகிறார்கள். நல்ல வண்ணம் யாவரும் வாழப் பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்தது போல, முருகனும் மடவரல் வள்ளியொடு நகையமர்ந்த முகத்தோடு விளங்குகிறான் என்பதைப் பார்த்தோம். ஆந்த ஆறாவது முகத்துக்கு இணைந்த கைகள் இரண்டையும் இப்போது நக்கீரர் சொல்ல வருகிறார்.

யாவரும் குடியும் குடித்தனமுமாக வாழவேண்டுமானால் பூமி செழிக்க வேண்டும். நாடு செழித்தால் ஊர் செழிக்கும். ஊர் செழித்தால் வீடு செழிக்கும். வீடு செழித்தால் இல் வாழ்வு நன்கு நடைபெறும். உடம்பும் உயிரும் ஒன்றி வாழ்வதற்கே மழை இன்றியமையாதது. தன் பிள்ளைக்குத் திருமணம் செய்து வைத்து அவனைத் தனியே வாழும்படி வைக்க வேண்டுமென்று தந்தை விரும்பினால் ஓர் அழகிய வீட்டைக் கட்டிக் கொடுத்து அதில் நன்கு வாழ்வதற்குரிய பண்டங்களை நிரப்பிவைப்பான். அப்படியே இறைவனும் உயிர்கள் நன்கு வாழ வேண்டுமென்று இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்கித் தந்திருக்கின்றான். இந்த உலகத்தில் யாவரும் இல்லற வாழ்வில் இன்புற்று வாழவேண்டுமென்று மழையைப் பெய்விக்கிறான்.

இறைவன் அருளால் மழை பொழிகிறது. முருகனுடைய திருக்கரங்களில் ஒன்று இதைச் செய்கின்றதாம்.

ஒருகை, நீலநிற விசும்பின் மலிதுளி பொழிய.

(ஒரு கையானது நீலநிறம் பெற்ற வானத்திலிருந்து மிக்க துளிகளாக மழையைப் பொழிய.)

மழை பெய்தால் அது இறைவனுடைய கருணையைக் காட்டுவதென்று அன்பர்கள் உவகை கொள்வார்கள்.

அடுத்த கை தேவலோக மகளிருக்கு மணமாலையைச் சூட்டுகிறதாம். தேவலோக மகளிர் மங்கல வாழ்வு பெற்றதற்கு முருகனே காரணம். சூரபன்மனால் அலைப் புண்டு வாழ்விழந்த தேவர்கள் அவனால் அழிந்து படாமல் அவர்களைக் காப்பாற்றினான் முருகன். தேவ மகளிர் தாலிக்கு வேலியாக விளங்குபவன் அவன்.

''சேல்வாங்கு கண்ணியர் வண்ணப்
பயோதரம் சேரஎண்ணி
மால்வாங்கி ஏங்கி மயங்காமல்
வெள்ளி மலைஎனவே
கால்வாங்கி நிற்கும் களிற்றான்
கிழத்தி கழுத்திற்கட்டும்
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி
பூங்கழல் நோக்குநெஞ்சே!''

என்ற கந்தரலங்காரத்தில், இந்திராணியின் மங்கலத்தைக் காத்தவன் முருகன் என்ற கருத்து வருகிறது. ஆகவே, அமர மகளிர் மஞ்சளும் குங்குமமுமாக, பூவும் மங்கலமுமாக வாழும்படி செய்தவன் முருகன்.

இந்தக் கருத்தையே வேறு வகையில் சொல்கிறார் நக்கீரர்.

ஒருகை, வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட

(ஒரு கையானது தேவலோகத்து மடந்தையருக்கு மணமாலை சூட்ட.)

மழை பெய்து நிலத்தைக் குளிரச் செய்து, மணமாலை சூட்டி உளத்தைக் குளிரச் செய்தருளுகிறான் முருகன்.

புயவகுப்பில் இந்த இரண்டு கைகளின் செயல்களையும் சற்றே மாற்றிச் சொல்கிறார் அருணகிரியார்.

முருகனுடைய கை ஒன்று வானில் உள்ள மேகத்தைத் திறந்து கொண்டு அந்தப் புனித நீரை விளையாட்டாக ஆடல் பயிலும் தேவலோக மகளிர்மேல் வீசுகின்றதாம்.

"விதமிகு பரத சுரவனி தையர்கணம் மேல்தொறும்
லீலையாக விமல சலத்தினை
விண்திறந்து மொண்டு பொலிந்தன."

'பல வகையாகப் பரத நாட்டியம் ஆடும் தேவமகளிர் கூட்டத்தின் மேனிதோறும் விளையாட்டாக, வானிலுள்ள மேகத்தைத் திறந்து புனிதமான நீரை மொண்டு வீசி விளங்கின' என்பது இதன் பொருள்.

வான்அர மகளிருக்கு வதுவைமாலை சூட்டுவதாக நக்கீரர் சொன்னதை மாற்றி, தேவயானையின் திருக்கரத்தைப் பற்றியிருப்பதாகப் பாடுகிறார் அருணகிரியார்.

"விதரண தருவின் மலரிடை செருகிய
கூதள நீப மாலை
விபுதர் குலக்குலி சன்பயந்த செங்கை
யானைக் கிசைந்தன."

'கொடைத் தன்மையையுடைய கற்பக மரத்தின் மலரினிடையே செருகிய கூதள மாலையையும் கடம்ப மாலையையும் உடைய, தேவர் இனத்தின் தலைவனாகிய வச்சிரபாணியாம் இந்திரன் தந்த சிவந்த கையையுடைய தேவயானைக்குப் பொருந்தி இருந்தன' என்பது இதன் பொருள்.

இவ்வாறு முருகன் தன் பன்னிரு கைகளாலே ஆறு முகங்கள் செய்யும் செயல்களுக்கு ஏற்ற வகையில் நலம் செய்கிறான்.

ஆங்குஅப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி.

(அவ்வாறு அந்தப் பன்னிரண்டு திருக்கரங்களும் திரு முகங்களுக்கேற்ற பகுதியிலே அமையும்படி செயல்களைச் செய்தருளி.)

திருச்சீரலைவாய்க்கு முருகன் எழுந்தருளுகிறான். அப்போது ஆறு முகமும் பன்னிரண்டு கைகளும் உடைய திருக்கோலத்தில் அவன் காட்சி தருவதை இதுகாறும் நக்கீரர் சொன்னார்.

## முருகன் அலைவாய்க்கு எழுந்தருளுதல்

முருகன் ஆறு முகங்களோடும் பன்னிரண்டு திருக்கரங்களோடும் தன்னுடைய பிணிமுகம் என்னும் யானையின் மேல் ஏறிக்கொண்டு வருகிறான்; திருச்சீரலை வாய் என்னும் பெயரையுடைய திருச்செந்தூருக்கு வருகிறான்.

அவன் வான்வழியே எழுந்தருளுகிறான். சூரபன் மனோடு போர் செய்யும் பொருட்டுக் கந்தகிரியினின்றும் புறப்பட்டுப் பல தலங்களின் வழியே வந்து திருச்செந்தூரை அடைந்து அங்கே தங்கினான் என்று கந்தபுராணம் கூறுகிறது. முருகன் விசும்பின் வழியே எழுந்தருளும்போது அந்தர துந்துபிகள் முழங்குகின்றன. வேறு இசைக்கருவிகளும் ஒலிக்கின்றன. வயிரமேறிய ஊதுகொம்புகளின் பேரொலி கேட்கிறது. தூய வெண்மை நிறமுள்ள சங்குகள் முழங்கு கின்றன. இடி இடித்தாற்போல வலிமையுடன் அதிரும் முரசுகள் ஒலி எழுப்புகின்றன.

அந்தப் பல்இயம் கறங்கத், திண்காழ்
வயிர் எழுந்து இசைப்ப, வால்வளை ஞரல,
உரம்தலைக் கொண்ட உருமிடி முரசமொடு.

(வானுலகத்திலுள்ள இசைக் கருவிகள் முழங்க, திண்ணிய வயிரத்தையுடைய கொம்புகள் ஓங்கி ஒலிக்க, வெண்மையான சங்குகள் ஒலியை எழுப்ப, வலிமையையுடைய இடியைப்போன்ற முரசங்களோடு - மயில் முழங்க என்று சொல்ல வருகிறார்.

பல் இயம் - பல வாத்தியங்கள். கறங்க - ஒலிக்க. காழ் - வயிரம். வயிர் - ஊதுகொம்பு. வால்வளை - வெள்ளிய சங்கு. ஞரல - ஊத. உரம் - வலிமை. உரும்இடி - பெரிய இடி.)

முருகனுக்கு மயிலும் ஒரு கொடி. பல பீலிகளை யுடைய மயிலை அவன் வெற்றிக்கொடியாக ஏந்தியிருக் கிறான். சுற்றிச் சூழப் பல வகை வாத்தியங்கள் ஒலிப்பதைக் கண்டு முருகன் ஆணையினால் அந்த மயிலும் தன் குரலை எழுப்பி ஒலிக்கிறது.

பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ.

(பல பீலிகளையுடைய மயிலாகிய வெற்றிக்கொடி குரல்காட்ட, பொறி - பீலி. அகவ - குரல் முழக்க.)

மன்னர்கள் வரும்போது அவர்களுடைய வரவை யாவரும் அறிந்து கொள்ளும்படி இசைக்கருவிகளை முழக்குவார்கள். அவர்களைக் கண்டு இன்புற்றுத் தம் குறைகளைச் சொல்லிக் கொள்ளவும் வேண்டிய உபகாரங் களைப் பெறவும் மக்கள் அவர்களை அணுகுவார்கள். அப்படி அவர்களால் நலம் பெறுவோர்களுக்கு அவர்களின் வரவை அறிவிக்கவே இந்த இசைக்கருவிகளை முழக்கு வார்கள்.

வருவோர்களின் தகுதிக்கு ஏற்றபடி இந்த வாத்தியங்கள் இருக்கும். இறைவன் திருவீதியில் உலாவரும் போது பல வாத்தியங்களை வாசிப்பதை நாம் பார்க்கிறோம் அல்லவா?

முருகன் எல்லோரிலும் வல்லவன். பெரிய உபகாரி. ஆதலின் தேவர்கள் அவன் வரவை அறிவிக்கும் இசைக் கருவிகளை முழக்குகிறார்கள்.

இந்தப் பேராரவாரத்தோடு முருகன் வானத்தின் வழியே வருகிறான். உலகிலுள்ள அன்பர்கள் தன்னை வந்து வழிபட்டு உய்தி பெறும்பொருட்டு அவன் சில இடங்களில் திருக்கோயில் கொண்டு காட்சி தருகிறான். திருச்செந்தூரில் தங்கி மக்களுக்குக் கருணை பாவிக்கும் பொருட்டு இப்போது எழுந்தருளி வருகிறான். மக்களுக்கு அவனுடைய திருவருளைப் பெறவேண்டும் என்று உள்ள விருப்பத்தைக் காட்டிலும், அவர்களுக்கு அருள் செய்ய வேண்டும் என்று அவன் கொண்டுள்ள விருப்பம் அதிகமானது. குழந்தை உணவு உண்ண வேண்டும் என்று கொள்ளும் விருப்பத்தை விட அதற்கு ஊட்டவேண்டும் என்ற வேகம் தாயினிடம் மிகுதியாக இருக்கிறது. அவ்வாறே முருகனுக்கும் கருணை வேகம் இருக்கிறது.

மக்கள் இறைவனை வழிபட எண்ணாவிட்டாலும் அவன் அவர்களை ஆட்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை மாற்றுவதில்லை. பிள்ளை தன் தாயைப் புறக் கணித்து விட்டாலும் தாய் தன் பிள்ளையை மறப்பதில்லை. பிள்ளைப் பாசம் அவளை விட்டுப் போவதில்லை. அதை எண்ணியே, ''பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு'' என்ற பழமொழி எழுந்தது, இறைவனைச் சுந்தரமூர்த்தி நாயனார். ''பித்தா'' என்று பாடினார். எல்லோரையும் பெற்றவனாகிய அவன், அவர்கள் தன்னை மறந்தாலும்

அவர்களை ஆட்கொள்ள வேண்டுமென்று பித்துப் பிடித்திருக்கிறானாம். அவனுடைய கருணை அவ்வளவு வேகமானது.

நோயாளிகள் வந்து காத்திருப்பார்களே என்று கடமையுணர்ச்சியுடைய மருத்துவர் ஒருவர் தம் மருத்துவ சாலைக்குக் காரில் விரைவது போல முருகன் திருச்செந்தூரை நோக்கி யானையின்மேல் விரைந்து வருகிறான்.

விசும்பு ஆறாக விரைசெலல் முன்னி.

(ஆகாயமே வழியாக விரைந்து செல்வதைத் திருவுள்ளத்திற் கொண்டு.)

இவ்வாறு சென்று திருச்சீரலைவாயை அடைந்து அங்கே தங்கியிருக்கிறான். அன்பர்களுக்கு அருள் சுரக்கும் பொருட்டு இவ்வாறு தங்குதல் அவனிடத்தில் நிலைபெற்ற குணம் ஆகும். உலகம் புகழ்கின்ற தலம் திருச்செந்தூர். நாளுக்கு நாள் அதன் மேன்மையும் சிறப்பும் ஓங்கி வருகின்றன. அந்த அலைவாயில் அவன் எழுந்தருளியிருக்கிறான்.

உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே.

(உலகத்தார் புகழ்ந்த, நாளுக்கு நாள் ஓங்கி வருகின்ற உயர்ந்த மேலான சிறப்பையுடைய அலைவாய்க்குச் சென்று தங்குவதும் அவனுடைய நிலைத்த பண்பாகும்.

சேறல் - செல்லுதல்; இங்கே சென்று தங்குதல். திருப்பரங்குன்றத்தில் இருப்பதோடு திருச்சீரலைவாயிலும் இருப்பான் என்பதை உம்மை காட்டுகிறது.)

மனிதன் ஒரு காலத்தில் ஓரிடத்தில்தான் இருப்பான். முருகன் எங்கும் எப்பொழுதும் இருப்பான். ஒரே காலத்தில்

பல இடங்களில் பலருக்குக் காட்சி தந்தருளுவான். திருப்பரங்குன்றத்தில் சில காலம், அலைவாயில் சில காலம் இருப்பான் என்று கொள்ளக் கூடாது. திருப்பரங்குன்றத்தில் உரிமையோடு தங்கியிருப்பதைப் போலவே திருச்செந்தூரி லும் தங்கியிருப்பான். இப்படி ஒரே சமயத்தில் பல இடங்களில் இருத்தல் அவனுடைய நிலையான பண்பு. சர்வ வியாபி யாதலால் இப்படி இருப்பது அவனுக்குச் சாத்தியமாகிறது.

பூமிக்கு அடியில் எங்கும் தண்ணீர் இருக்கிறது. அதனால் எங்கே வெட்டினாலும் தண்ணீர் கிடைக்கிறது. ஒரே சமயத்தில் பல இடங்களில் பல கிணறுகள் வெட்டினாலும் தண்ணீர் கிடைக்கிறது. அவ்வாறே எங்கும் நிறைந்திருக்கும் முருகன் பல இடங்களிலும் ஒரே சமயத்தில் வெளிப்படுகிறான்.

திருச்செந்தூருக்கு அலைவாய் என்பது ஒரு பெயர். அதையே சீரலைவாய் என்றும், திருச்சீரலைவா யென்றும் அடைகளோடு சேர்த்து வழங்குவார்கள். அலைமோதும் கடற்கரையில் அலையின் வாயிலே திருக்கோயில் அமைந்திருப்பதால் இந்தப் பெயர் உண்டாயிற்று.

'அலைவாயில் முருகன் எழுந்தருளியிருக்கிறான். அது மட்டுமா? இன்னும் கேள்' என்கிறார் நக்கீரர்.

அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே; அதாஅன்று

மேலே மூன்றாவது படைவீடாகிய திருவாவினன் குடியைச் சொல்ல வருகிறார்.

---

# திருஆவினன் குடி

இதோ நக்கீரர் நம்மைத் திருவாவினன்குடிக்கு அழைத்துச் செல்கிறார். அவரோடு போனால் நாம் ஆகாயத்தில் பறக்கலாம்; பூமியிலே ஓடலாம்; மனிதர்களுடைய இயல்புகளை ஞான திருஷ்டியால் கண்டு கொள்ளலாம்; தெய்வங்களைக் கண்டு அடையாளம் தெரிந்து கொள்ளலாம்.

இதென்ன இவ்வளவு பெரிய கூட்டம்? ஆவினன் குடிக்கு நாம் வந்துவிட்டோம். இங்குள்ள முருகனைத் தரிசிப்பதற்காகத்தான் இவ்வளவு பெரிய கூட்டம் வந்திருக்கிறது. நக்கீரர் நமக்கு அவர்களைக் காட்டுகிறார்.

## முன் புகும் முனிவர்

இதோ இவர்களைப் பாருங்கள், பார்த்தாலே கையைக் குவித்துக் கும்பிட வேண்டுமென்று தோன்றுகிறதல்லவா? தவமே உருவாகிய முனிபுங்கவர்கள். இந்தப் பெருங் கூட்டத்துக்கு இவர்களே தலைவர்களாகத் தோன்று கிறார்கள்.

இவர்களின் இடையிலே தவக்கோலத்துக்கு அடையாளமாகிய மரவுரி இருக்கிறது. சற்றே இவர்கள் திருமுடியைப் பார்க்கலாம். ஆ! இவர்களுக்கு எவ்வளவு வயசாயிற்றோ தெரியவில்லையே! முடி முழுவதும் தும்பைப் பூவாக வெளுத்திருக்கிறது. அதை நன்றாக உச்சியில் முடித்திருக்கிறார்கள். வலம்புரிச் சங்கைப் போல அந்த முடி உருவத்தாலும் நிறத்தாலும் தோன்றுகிறது.

சீரை தைஇய உடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்.

(மரவுரியை உடையாக அணிந்தவர்; அழகோடு வலம்புரிச் சங்கை ஒத்த வெண்மையான நரை முடியை உடையோர். சீரை - மரவுரி. தைஇய - அணிந்த. உடுக்கை - உடை. வால் நரை - வெண்மையான நரை.)

இவர்களுடைய திருமேனியில் புஷ்டி இல்லை. ஆனால் ஒரு தேசு இருக்கிறது. மாசு என்பது சிறிதும் இல்லாத தூய திருமேனி. பளபளப்புக்கு காரணம் தசைப் பிடிப்பா? இல்லை, இல்லை. இவர்கள் தம் மேலே மான் தோலைப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். மார்பைப் பாருங்கள், கொஞ்சமாவது தசை தெரிகிறதா? எலும்புகளே மேலே தோன்றுகின்றன. அவற்றை எண்ணிக் கொள்ளலாம் போல இருக்கின்றன. உடம்பு இளைத்தும் ஒளி இளைக்காமல் பெருகியிருக்கிறது.

மாசுஅற இமைக்கும் உருவினர், மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்புஎழுந்து இயங்கும் யாக்கையர்.

(மாசு இல்லாமல் விளங்கும் திருமேனியை உடையோர்; மான்தோலைப் போர்த்த, தசைகெட்ட மார்பில் எலும்புகள்மேலே தோன்றி அசையும் உடம்பை யுடையோர். இமைக்கும் - விளங்கும். உரிவை - தோல்.)

இவர்கள் ஏன் இப்படி இளைத்திருக்கிறார்கள்? இந்த உடம்பு சோற்றால் எடுத்த சுவர். சோறு குறைந்தால் இது மெலியும். இவர்களும் உணவு இல்லாமல் இளைத்துப் போயிருக்கிறார்கள்; ஆம்; உணவு இல்லாமல் தான் இப்படி ஆகியிருக்கிறார்கள். ஆனால் ஏழைகள் அல்ல; தாமே வலிந்து

உணவை உண்ணாமல் விரதம் இருப்பவர்கள்; அடிக்கடி சேர்ந்தாற்போல் பட்டினி கிடந்து தவம் புரிபவர்கள்.

"உண்ணாது நோற்பார் பெரியர்."

என்று திருவள்ளுவர் சொல்லவில்லையா?

நமக்குத்தான் ஒரு வேளை காபி இல்லாவிட்டாலும் ஒன்றும் ஓடுவதில்லை. இவர்கள் உணவு கிடைக்காமல் இப்படி இல்லை. உண்ண வேண்டுமானால் ஆயிரம் பேர் சுவையுள்ள உணவைத் தரச் சித்தமாக இருக்கிறார்கள். ஆனாலும் இவர்கள் தாமாகவே உணவை உண்ணுவ தில்லை. தாம் செய்யும் தவத்துக்கு அது இடையூறாக இருக்கிறதென்று விரதம் இருக்கிறார்கள். காமமும் தாமதகுணமும் உணவினால் மிகுதலின் இந்த விரதத்தை மேற்கொள்ளுகிறார்கள்.

நம்முடைய வாழ்க்கையில் நாம் பல பல காரியங்களைச் செய்கிறோம். ஒவ்வொருவரும் தமக்கு அமைந்த வாழ்க்கை வகைக்கு ஏற்பக் காலை முதல் இரவு வரையில் பல பல செயல்களில் ஈடுபட்டிருக்கிறார். யாவரும் எது செய்தாலும் செய்யாவிட்டாலும் தவிராமல் செய்கின்றவை இரண்டு. ஒன்று ஊண், மற்றொன்று உறக்கம்.

"யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதும் மாகமுடியும்."

என்பர்தாயுமானவர். இந்த வாழ்க்கை என்னும் தேருக்குப் பல அங்கங்கள் இருந்தாலும், இதன் முன் சக்கரங்கள் இந்த இரண்டும். இது எங்கெங்கோ செல்கிறது; சாமாறே விரைகிறது. இதனை மாற்றி ஆமாறு செல்லத் தூண்ட வேண்டும். தேரின் போக்கை மாற்ற வேண்டுமானால் தேர் முழுவதையும் திருப்ப இயலாது. அதன் முன்சக்கரங்களில் முட்டுக்கட்டை போட்டுத் திருப்பவேண்டும். வாழ்க்கைத்

தேரைத் திருப்புவதற்கும் அதன் முன்சக்கரங்களாகிய ஊண் உறக்கம் என்பவற்றில் முட்டுக்கட்டை போட வேண்டும். அப்போது தேர் முழுவதும் திரும்பும்.

அதனால்தான் விரதம் இருப்பவர்கள் உணவில் வரையறையை மேற்கொள்கிறார்கள்; உணவு இல்லாமலே இருக்க முயலுகிறார்கள்; உறக்கத்தைக் குறைத்துக் கொள்கிறார்கள்; உறங்காமல் இருக்க முயலுகிறார்கள். ''தனித்திரு, பசித்திரு, விழித்திரு'' என்பது தவத்துக்குரிய நிலையைச் சொல்லும் உபதேசம்.

ஆகவே, தவம் புரிபவர்கள் உணவின்றிப் பல நாள் விரதம் இருக்கிறார்கள். அதனால் அவர்கள் உடம்பு இளைக்கிறது. சோற்றுக்கு இல்லாமல் பட்டினி கிடப்பவனுக்கும் உடம்பு இளைத்தாலும், அந்த உடம்பு ஒளியின்றி வாட்டமடையும். தவம் புரிபவர்களுக்கு உடம்பு மெலிந்தாலும் தவக்கனலின் ஒளி உடம்பில் தேசினை உண்டாக்கும்.

''ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து.''

என்று மணிவாசகர் இந்த நிலையைக் கூறுகிறார்.

இந்த முனிபுங்கவர்கள் 'ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி' அவ்வொளி புறத்திலும் பொசியும்படி செய்கிறவர்கள்.

நன்பகல், பலவுடன் கழிந்த உண்டியர்.

(நல்ல நாட்கள் பலவற்றில் ஒருங்கே உணவை உண்ணாது விட்டவர்கள்.)

இதுவரையில் இவர்களுடைய புறத்தோற்றத்தைப் பார்த்தோம். இனி இவர்களுடைய அகத்தையும் பார்க்கலாம்.

பட்டினி கிடப்பவர்களுக்குச் சள்ளுச் சள்ளென்று கோபம் வரும். இவர்களுடைய மனம் எப்படி இருக்கிறது? யாரிடத்திலும் பகை என்பது எள்ளளவும் இல்லை. பிறரிடம் வெறுப்பு வருமா? அதுவும் இல்லை. எந்தப் பிராணிக்கும் இன்னல் இயற்றத் தெரியாதவர்கள்; சகலஜீவ தயாபரர்கள். பகை இன்மையால் மனிதர்கள் யாவரும் இவர்களை அணுகிப் பணிகிறார்கள். செற்றமாகிய இம்சை இல்லாமையால் எல்லாப் பிராணிகளும் இவர்களோடு உறவாடுகின்றன. மார்பிலே ஊனே இல்லை என்று உடம்பில் இல்லாததைச் சொன்னதுபோல, மனத்திலே பகையும் இல்லை. இம்சை யுணர்வும் இல்லை என்று உள்ளத்தில் இல்லாதவற்றையும் சொல்லுகிறார் நக்கீரர். பொல்லாத குணங்கள் இல்லாமையே பெருமை அல்லவா?

இவர்கள் உள்ளே உள்ள செல்வத்தைச் சொல்ல வேண்டாமா? மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவற்றில் புத்தி சக்தி மிக்கவன் அறிவாளி; இவர்களுக்கு அந்த அறிவு நிரம்ப இருக்கிறது என்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அறிவு இரண்டு வகை: நூலறிவு வாலறிவு என்பவை; அவற்றை அபரஞானம், பரஞானம் என்று சொல்வார்கள். தக்க ஆசிரியர்களைத் தேடிச் சென்று கற்கும் இயற்கையறிவுள்ள மாணவனுக்கு நூலறிவு கிடைக்கிறது. அது முயற்சியால் வருவது. வாலறிவு என்பது அநுபவத்தால் அறிவது. எத்தனை நூல்களைக் கற்றும் அந்த வாலறிவு இல்லையெனில் கற்றன அனைத்தும் வீணாகிவிடும்.

''நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக'' என்று காரைக் காலம்மையார் பாடுகிறார். அந்த அறிவுக்கு எல்லையுண்டு.

எல்லையிறந்த இறையருளனுபவத்தை அந்த அறிவால் அறிய இயலாது. வாலறிவு ஒன்றுதான் அருளநுபவ நுகர்ச்சிக் குரியது. ''அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே'' என்பதில் அருணகிரியார் சொல்வது வாலறிவை.

இந்த முனிவர்கள் வாலறிவிற் சிறந்தவர்கள். பல நூல்களைக் கற்றவர்களுக்கும் இந்த வாலறிவில் எள்ளளவும் தட்டுப்படுவதில்லை. இவர்களோ அந்த அறிவின் தலை நிலத்தில் இருக்கிறார்கள்.

''அப்படியானால் இவர்களுக்கு நூலறிவு குறைவு தானோ?'' என்று கேட்காதீர்கள். அதிலும் இவர்கள் குறைந்தவர்கள் அல்லர். கற்றறிந்த பேரறிவினர்களின் கூட்டத்தில் இவர்கள் தலைமை தாங்குபவர்கள்; கல்வியறி வுக்கு வரம்பாக விளங்குகிறவர்கள்; வாலறிவும் நூலறிவும் ஒருங்கே பொருந்திய மாபெருந் தலைவர்கள் இவர்கள்.

இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்
கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர்.

(பகையையும் பிறரைச் செறுவதையும் நீக்கிய மனமுடையவர்; கற்றவர் சிறிதும் அறியாத வாலறிவினர்; கற்றவர்களுக்கு வரம்பாக நிற்கும் தலைமையை உடையவர்.)

இவர்கள் காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றும் இல்லாத தூயவர்கள். மனிதனுக்குக் காமமும் வெகுளியும் தோன்றுவது இயல்பு. ஆனால் அவற்றை அடக்கி வெல்ல வேண்டும். ''ஓங்குசினம் காத்துக் கொள்ளும் குணம்.'' என்பது ஆன்றோர் வாக்கு. இவர்கள் தம்முடைய மனத்திண்மையினால் காமத்தையும் வெகுளியையும்

வென்றவர்கள். ஞானம் நிரம்பியவர்கள்; அதனால் மயக்கமும் இல்லாதவர்கள்.

காமமொடு
கடுஞ்சினம் கடந்த காட்சியர்.

(காமத்தோடு கடுமையான சினத்தையும் வென்ற ஞானத்தை உடையோர். கடந்த - வென்ற. காட்சி - ஞானம்.)

காமத்தையும் சினத்தையும் வென்றவர் என்று சொன்னார். காட்சியர் என்றதனால் ஞானத்துக்கு மறுதலையாகிய மயக்கத்தையும் வென்றவர் என்பது தெளிவாகும்.

''காமம் வெகுளி மயக்கம் எனும்மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.''

என்பது திருக்குறள். பிறவி நோய்க்குக் காரணமான இந்த மூன்றையும் கடந்த முனிபுங்கவர்களாகிய இவர்கள், இனிப்பிறவி பெறாமல் முத்தி பெறுவதற்குரியவர்கள்; இப்போதே அந்த இன்பத்தை நுகர்பவர்கள். அந்த நிலையைச் சீவன் முக்தி என்பார்கள். அதை அடுத்தபடி சொல்ல வருகிறார் நக்கீரர்.

இடும்பை யாவதும் அறியா இயல்பினர்.

(சிறிதளவும் துன்பத்தை அறியாத இயல்புடைய வர்கள்.)

இன்ப துன்பங்களுக்கு அப்பாலே மலைபோல நிற்கும் இயல்புடையவர்கள் சீவன் முக்தர்கள்.

''இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை.''
என்று பெருமிதம் கொள்ளும் நிலையை உடையவர்கள் அவர்கள்.

இன்பம், துன்பம் என்பன மனத்தில் உண்டாகும் அநுபவங்கள். விருப்பு வெறுப்புக்களால் இன்பதுன்பங்கள் உண்டாகின்றன. அவற்றை ஒழித்தவர்களை அவை சார்வதில்லை. அவ்விரண்டுக்கும் மேற்பட்ட அமைதியான ஆனந்தத்தில் அவர்கள் ஆழ்ந்து கிடப்பார்கள்.

உலகியலில் பொறிகளால் நுகரும் துன்பங்கள் உடனே துயரத்தை உண்டாக்குகின்றன; பொறி இன்பமோ பின்பு வரும் துன்பத்துக்குக் காரணமாகின்றது. ஆகையால் பொறியினால் நுகரும் இன்பம் துன்பம் இரண்டும் ஒருவகையில் இடும்பைகளே. அவற்றிற்கு அப்பாலே சென்றவர்கள் உயிரினால் இன்பம் நுகர்வார்கள்.

பொறியின் வாயிலாக வரும் இன்பதுன்பம் மனத்தைச் சார்ந்தவை. பொறிகள் அடங்கி நின்றாலும் மனம் இன்பதுன்பத்தை வாசனையினால் நுகரும். தூங்கும் போது கனவில் இன்ப துன்பங்களை மனம் அநுபவிக்கின்றது அல்லவா? ஜாக்கிரத்தில் மனம் பொறிகளோடு இயைந்து இன்பதுன்பங்களை உணர்கிறது; கனவில் அவற்றோடு சாராமல் நுகர்கிறது. இது தான் வேற்றுமை. மனம் தொழிற்படாத போது பொறி நுகர்ச்சி இராது. நன்றாகத் தூங்குகிறவனை எறும்பு கடித்தாலும் தெரிவதில்லை; கூப்பாடு போட்டாலும் அவன் காதில் விழுவதில்லை. பரிச இந்திரியமாகிய தோல் இருந்தாலும், ஒலிப் பொறியாகிய செவி இருந்தாலும் மனம் அவற்றோடு சாரவில்லை; அதனால் உணர்வும் இல்லை.

ஆகவே இன்பமும் துன்பமும் மனத்தைச் சார்ந்தவை. இந்த இரண்டும் கடந்த அநுபவம் ஒன்று உண்டு. அங்கே மனத்துக்கு வேலை இல்லை. அப்போது இன்பத்தை உயிர் தனி நின்று அநுபவிக்கிறது. அதுதான் ஆனந்தம்; அதுதான் சுக

துக்கம் அற்ற இன்பம். அதையே சிவானந்தமென்றும், பிரம்மானந்தமென்றும், ஆத்மானந்தமென்றும் பலபடி யாகக் கூறுவர்.

அத்தகைய ஆனந்தத்திலே லயித்த இந்த முனிவர் களுக்குச் சிறிதும் துன்பம் என்பதே இல்லை.

இடும்பை
யாவதும் அறியா இயல்பினர்.

(சிறிதேனும் துன்பம் என்பதை அறியாத இயல்பை உடையவர்கள்.)

இவர்கள் மனம் கண்ணாடிபோல் இருக்கிறது. விருப்பு வெறுப்பு இல்லாமல் இருக்கிறது. அந்த நிலை என்றும் பொருந்தி இருக்கிறது. இவர்களுடைய முதிர்ந்த ஞானமே இவர்களுக்கு இந்த நிலையை உண்டாக்கியது.

இத்தகைய முனிவர்கள் முன்னாலே புகுகிறார்கள்.

மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புக.

(மனம் பொருந்த வெறுப்பில்லாத ஞானத்தையுடைய முனிவர்கள் முன்னாலே செல்ல.)

முருகனைக் காணும் பொருட்டுக் கைலாயத்தி லிருந்தும் வைகுண்டத்திலிருந்தும் அமராவதியிலிருந்தும் பெரிய தேவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஏதோ குறை இருக்கிறது. அதை நீக்கிக்கொள்ள முருகனை நாட வருகிறார்கள். முருகனுக்குச் சிறிதே சினம் உண்டாகியிருக்கிறது. அதை ஆற்றி, தம்முடைய வேண்டுகோளைச்சமர்ப்பிக்க வருகிறார்கள்.

தாமே நேரில் சென்று சொல்ல அவர்களுக்கு அச்சமாக இருக்கிறது. முருகனுக்கு வேண்டியவர்களை முன்னிட்டுக்

கொண்டு போகலாம் என்று தோன்றுகிறது. முருகனுக்கு மிகவும் வேண்டியவர்கள் பக்தர்கள்; ஞானியர். அதனால்தான் இந்த முனிபுங்கவர்களை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். தம் தம் தொழிலில் அவர்கள் சிறந்த தலைவர்களானாலும், இங்கே முருகன் சந்நிதியில் தலைமை அன்பர்களுக்குத்தான். இந்த நுட்பம் தெரிந்து, இந்த முனிபுங்கவர்களையே முன்னே போகச் சொல்லி ஆடல் பாடல் வல்லவர்களை அவர்களுக்கு பின்னே அனுப்பி, அந்தப் பெரியவர்கள் பணிவாகப் பின்னே வருகிறார்கள்.

பிரம்மாவிடம் கோபம் கொண்டு சிறையில் அடைத் திருக்கிறான் முருகன். இப்போது தேவர்கள் வந்தால் அந்தக் கோபத்தை அவர்கள்மேலும் காட்டுவான். ஆகையால் கோபம் அடைந்த கணவனுக்கு முன் குழந்தையை விட்டு ஆறுதல் பெறச் செய்து, பின்பு செல்லும் மனைவியைப் போலத் தேவர்கள் முனிபுங்கவர்களை அனுப்பியிருக் கிறார்கள். அதனால் அவர்கள் முன்னே புகுகிறார்கள்.

சீரை தைஇய உடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்,
மாசற இமைக்கும் உருவினர், மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந்து இயங்கும் யாக்கையர், நன்பகல்
பலஉடன் கழிந்த உண்டியர், இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்
கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினம் கடந்த காட்சியர், இடும்பை
யாவதும் அறியா இயல்பினர், மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புக.

முனிவர் பெருங்கூட்டம் முன்னே செல்கிறது. அவர்களைக் கையெடுத்துக் கும்பிட்டு விட்டு, பின்னே வருகின்றவர்கள் யார் என்று பார்ப்போம்.

## இசைவாணர் வருகை

முனிவர்கள் முதலில் போக, அவர்களை அடுத்துக் கந்தருவர்களும் அவர்களுடைய மகளிரும் வருகிறார்கள். அவர்கள் இனிய இசையை எழுப்புகிறவர்கள். முருகன் இசையில் ஈடுபடுகிறவன். ஆகவே, முருகனுக்கு உகந்த முனிவர்கள் முன்னே செல்ல, அவர்களை அடுத்து அவன் விரும்பும் இசையைப் பாடுபவர்கள் புகுகிறார்கள். சினம் உடையவர்களுடைய சினத்தை ஆற்றுவது இசை. ஒருகால் முருகன் நான்முகனிடம் கொண்ட கோபம் ஆறாமல் இருந்தாலும் அதனை ஆற்றுவதற்கு அவர்களுடைய யாழிசை உதவும்.

கந்தருவர்கள் எப்படி இருக்கிறார்கள்? இசைவாணர்கள் எப்போதுமே தம்மை அணி செய்து கொள்ளும் இயல்புடையவர்கள். கந்தருவர்கள் இடையில் அணிந்துள்ள உடை மிக்க மெல்லியதாகவும் வெள்ளை வெளேரென்றும் இருக்கிறது. பாலைக் காய்ச்சும்போது மேலே ஆவி வருகிறதே, அதை அப்படியே முகந்து ஆடையாக உடுத்துக் கொண்டால் எப்படி இருக்கும்? அப்படி இருக்கிறது அவர்களுடைய தூய உடை. ''பாலாவி யன்ன பைந்துகில்'' என்று வேறு நூல்களிலும் வருகிறது. வெள்ளைப் புகைபோலவும் இருக்கிறது.

அவர்கள் மார்பில் மலர்மாலை விளங்குகிறது. இப்போதுதான் மொட்டு மலர்ந்த மலர்களைக் கட்டிய புத்தம் புதிய மாலை அது; அந்த மார்பில் அழகாகத் தொங்குகிறது.

புகைமுகந் தன்ன மாசில் தூஉடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்து.

(புகையை முகந்தாற் போன்ற அழுக்கு இல்லாத தூய உடையையும், மொட்டுக்கள் வாய் அவிழ்ந்து மலர்ந்த மாலை சூழ விளங்கும் மார்பையும் (உடைய கந்தருவர்). முகை - மொட்டு. தகை - மாலை.)

அவர்களுடைய உடையும் மாலையும் தூய்மைக்கும் கலைப் பண்புக்கும் அடையாளமாக நிலவுகின்றன. அவர்கள் யாழை வாசிக்கிறார்கள். நரம்புகளை இறுகக் கட்டிய யாழ் அது. முறுக்கி இறுக்கிய நரம்புக் கட்டுத் தளர்ந்து போனால் அந்த அந்த நரம்பு அதற்குரிய சுரத்தைப் பேசாது. எப்படி அவை இறுக அமைய வேண்டுமோ, அப்படி அமைய வேண்டும். இப்படித் தந்திகள் கச்சிதமாக இறுக அமைந்த அமைப்பைத் திவவு என்று சொல்வார்கள். திவவு தளர்ந்து தொய்வு உண்டானால் பாட்டில் அபசுவரம் உண்டாகும்.

இசைவாணர்கள் இசை நிகழ்ச்சியைத் தொடங்குவதற்கு முன் இந்தத் திவவு சரியாக இருக்கிறதா என்று பார்த்து ஒழுங்காக அமைத்துக் கொள்வார்கள். சுருதியோடு ஒட்டிப் பேசுகிறதோ என்று தம் காதை வாத்தியத்தின் அருகில் வைத்துப் பார்த்து ஒழுங்குபடுத்திக் கொள்வார்கள். நுட்பமான ஒலியும் தவறின்றி அமையவேண்டும் அல்லவா? அதனால் இப்படிக் கூர்ந்து பார்த்துச் சுருதி சேர்க்கிறார்கள். இத்தகைய நரம்புக் கட்டை உடைய நல்ல யாழைக் கந்தருவர்கள் வாசிக்கிறார்கள். யாழ் நல்ல முறையில் செய்தது. அதில் உள்ள நரம்புக் கட்டாகிய திவவும் நல்ல முறையில் பொருத்திக் கட்டியது.

இனி, அதை வாசிக்கிறவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று பார்க்க வேண்டாமா?

வாத்தியத்தை வாசிக்கும்போது விரல்கள் வேலை செய்கின்றன. ஆதலின் விரல்கள் நன்றாக இருந்தால் போதும் என்று நினைக்கலாமா? சங்கீதத்தில் மனோதர்மம் என்பது மிகவும் முக்கியமானது. இராகத்தின் கட்டுக்கோப்பு, அதாவது ஆரோகண அவரோகண கதி, எப்போதும் மாறாது. தாளத்தின் கணக்கும் மாறாது. ஆனால் இந்த ராகலயங் களுக்குள்ளே இழையும் இசை இசைவாணனுடைய மனோதர்மத்தால் பலபல வடிவங்களைக் கொள்ளும்; பலபல அலைகளை எழுப்பும். ஆதலின் இசைவாணனுக்கு மனோதர்மம் அவசியமானது. அதுதான் பாட்டுக்கு ஜீவனைப் போன்றது. இந்த மனோதர்மச் சிறப்பினால்தான் சிறந்த இசைவாணர்கள் தங்களுக்கே உரிய பாணியை உண்டாக்கிக் கொள்கிறார்கள்.

முருகனைத் தரிசிக்க வரும் கூட்டத்தில் இரண்டாவது வரிசையில் செல்லும் கந்தருவர்களாகிய இசைவாணர் களுக்கு நல்ல வளமான மனோதர்மம் இருக்கிறது. அது பாட்டில் நயத்தை உண்டாக்குகிறது. அந்த நயம் அவர்களுடைய மனத்திலிருந்து ஊற்றெடுக்கிறது. அது மட்டுமா? அவர்கள் வீணையை மீட்டி இசை எழுப்புவதோடு நிற்பதில்லை. அவர்களும் அதனுடன் இணைந்து இழைந்து பாடுகிறார்கள். வீணையோடு இணைந்து பாடுபவர்களின் பாட்டு மென்மையாக இருக்கும். அவர்களுடைய மொழி மென்மொழி.

கந்தருவர்களின் மூன்று கரணங்களும் இசையோடு இசைந்து இன்புறுத்துகின்றன. அவருடைய உள்ளம், மனோதர்மமாகிய நயனுடை நெஞ்சு. அவர்கள் மொழி மென்மொழி. அவர்கள் கரத்தினால் நல்ல திவவையுடைய யாழை மீட்டுகிறார்கள். இப்படி மனமொழி மெய்களின் இணைப்புச்செயலால் அவர்களிடம் யாழிசை உண்டாகிறது.

செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்நரம்பு உளர.

(காதிலே வைத்துப் பார்த்துச் சுருதிகூட்டிய நரம்புக் கட்டையுடைய நல்ல யாழிலே பயிற்சியுடையவர்களும், மனோதர்மமுள்ள நெஞ்சையும், மென்மையான மொழி களையும் உடையவர்களுமாகிய கந்தருவர் இனிய யாழ் நரம்பை மீட்டிப் பாட.

நேர்பு - சேர்த்து. செய்வு - சுருதிகூட்டும் செய்கை. திவவு - நரம்புக் கட்டு. நயன் - இனிமை,அன்பு; இங்கே மனோதர்மம். மேவலர் - மேவுதலை உடையவர். உளர - மீட்ட.)

முனிவரை அடுத்து யாழை வாசித்து இனிய பாட்டைப் பாடிக்கொண்டு வருகிறார்கள் கந்தருவர்கள். அவர்களுடைய மனைவிமார்கள் உடனிருந்து பாடிக் கொண்டு வருகிறார்கள். அவர்களுடைய அழகு சொல்லத் தரம் அன்று.

அவர்களுடைய உடம்பின் அமைப்பைப் பார்த்தால் நோய் என்பதன் வாசனையே தெரியாதது என்று தோன்றுகிறது. அவர்கள் நினைக்கிறபடியெல்லாம் அந்த உடம்பு வளைந்து கொடுக்கிறது. அவர்களின் திருமேனி மாந்தளிரின் நிறம் பெற்றுப் பளபளக்கிறது. மாநிறம் என்று பொதுவாகச் சொல்வதுண்டு. உண்மையில் மாநிறம் உடையவர்கள் இந்தக் கந்தருவ மங்கையர். அந்த மேனி பள பளக்கும் பொழுதெல்லாம் அதில் ஒரு மெருகு தோன்று கிறது. அழகுத் தேமல் படர்ந்திருக்கிறது. பொன்னை உரைத்த பொடியை உடம்பெல்லாம் பூசினால் எப்படி இருக்கும், அப்படி மின்னுகிறது அந்த அழகுத் தேமல். அதைத் திதலை என்று சொல்வார்கள்.

நோய்இன்று இயன்ற யாக்கையர்; மாவின்
அவர்தளிர் புரையும் மேனியர்; அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர்.

(நோயே இல்லாமல் அமைந்த உடம்பை உடையவர்; மாமரத்தின் பளபளக்கும் தளிரை ஒத்த வண்ணத்தை உடையவர்; அப்படிப் பளபளக்குந்தோறும் பொன்னை உரைத்தாற்போலத் தோன்றும் அழகுத் தேமலை உடையோர்.)

அவர்கள் அணிந்த மெல்லிய ஆடை அவர்கள் மேனியழகைப் புலனாக்குகிறது. அவர்கள் தம் இடையில் பதினெட்டு வடங்களை யுடைய மேகலையாகிய பருமம் என்னும் அணியை உள்ளே அணிந்திருக்கிறார்கள். உடை நழுவினாலும் இரகசியத்தை அந்த வடங்கள் மறைத்து விளங்கும். அந்தப் பகுதி மேடாகவும் பள்ளமாகவும் இலக்கணப்படி அமைந்திருக்கிறது. அவர்கள் சிறிதும் மாசுமறுவற்றவர்கள். அவர்களும் கந்தருவர்களோடு சேர்ந்து பாடுகிறார்கள். அந்தப் பாட்டில் சிறிதளவு கூட அபசுவரம் இல்லை; குற்றம் ஏதும் இல்லாதபடி கந்தருவர்களும் அவர் மகளிரும் இணைந்து பாடும் பாட்டுக் கேட்கிறது.

இன்னகைப்
பருமம் தாங்கிய பணிந்துஏந்து அல்குல்
மாசில் மகளிரொடு மறுஇன்றி விளங்க.

(கண்ணுக்கு இனிய ஒளியை உடைய பருமம் என்னும் மேகலையைத் தாங்கியதும், தாழ்ந்தும் உயர்ந்தும் இலக்கணப்படி அமைந்ததுமாகிய இரகசிய உறுப்பை யுடையவராகிய குற்றமற்ற மகளிரோடு அந்தப் பாடல் சிறிதும் குறைபாடு இல்லாமல் எடுத்துக்காட்ட.

நகை - ஒளி. பருமம் - பதினெட்டு வடங்களைக் கொண்ட மேகலை. பணிந்து - தாழ்ந்து. ஏந்து - உயர்ந்து நிற்கும். மறு - குற்றம்.)

கந்தருவர் யாழை மீட்டிப் பாட அவர்களுடன் கந்தருவ மகளிர் பாடுகிறார்கள். அழகு, தூய்மை, சிறந்த முறையால் அமைந்த கருவியாகிய யாழ் ஆகியவற்றையுடைய அவர்கள் பாடும் பாட்டு மிக மிக இனிமையாக இருக்கும் என்று சொல்லவும் வேண்டுமா?

உடம்பில் வளப்பம் இல்லாத முனிவர்களைச் சொல்லிப் பிறகு மேனி வளம் பெற்ற கந்தருவர்களைச் சொன்னார். இப்படி முரண்பட்ட தோற்றங்களைக் காட்டுவது நக்கீரர் இயல்பு என்பதைத் தொடர்ந்து பார்த்து வருகிறோம் அல்லவா?

## அவர்கள் குறை

முதலில் தவம் செல்ல, அதனை அடுத்து இசை செல்லுகிறது. இந்த இரண்டையும் முன்னிட்டுக் கொண்டு தேவர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு முருகனால் ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கிறது. அதற்காகவே கூட்டமாக வருகிறார்கள் தேவர்கள். திருமால் வருகிறார்; சிவபெருமான் வருகிறார்; இந்திரன் வருகிறான்; முப்பத்து முக்கோடி தேவர்களுமே வருகிறார்கள். இந்தக் கூட்டத்தில் ஒருவனைக் காணோம். மும்மூர்த்திகளில் ஒரு மூர்த்தியாகிய பிரமனைக் காணவில்லையே.

அவன் இப்போது சிறையில் இருக்கிறான். அதனால் படைப்புத் தொழில் நின்று போயிற்று. அது நிற்கவே, தொடர்ந்து செய்ய வேண்டிய காத்தல் முதலிய தொழில்களும் நின்று போய் விட்டன. அடுப்பு மூட்டினால் தானே சோறு சமைக்கமுடியும்? அடுப்பு மூட்டிக் கொடுக்கும் சிற்றாள் வரவில்லை. அதனால் சமையலே நடைபெறவில்லை.

நான்முகனைச் சிறையில் அடைத்தவன் முருகன். அந்தப் பெருமானை அணுகிப் பிரமனுடைய பிழையைப்

பொறுக்க வேண்டுமென்று இரந்து வரம் பெறுவதற் காகத்தான் இந்தத் தேவர்கள் வருகிறார்கள். நேரே போனால் முருகனுக்குப் பழைய கோபம் தலைக்காட்டுமோ என்று அஞ்சி, அவனுக்கு மிகவும் உகந்த முனிவர்களையும் இசை வாணர்களையும் முன்னிட்டுக் கொண்டு வருகிறார்கள்.

யார் யார் எப்படி வருகிறார்கள் என்பதை அடுத்தபடி வருணிக்கிறார், நக்கீரர்.

## காண வரும் செல்வர்கள்

முனிவர்களையும் இசைவாணர்களையும் முன்னிட்டுக் கொண்டு தேவலோகத் தலைவர்கள் முருகனைத் தரிசித்துத் தம்முடைய குறைகளை முடித்துக் கொள்ள வருகிறார்கள். மும்மூர்த்திகள் என்று கூறும் மூவரில் ஒருவனாகிய நான்முகன் இப்போது சிறைப் பட்டிருக்கிறான். மற்ற இருவரும் இந்திரனும் இங்கே வருகிறார்கள். மூவரும் பெருஞ் செல்வர்கள்; பலருக்கும் வரம் கொடுத்து நலம் செய்யும் பெரியவர்கள். ஆயினும் இப்போது ஏழையரைப்போல முருகனிடம் தங்கள் வேண்டுகோளைக் கூறி இரந்து பெற வருகிறார்கள்.

முதலில் நிற்பவரை அடையாளம் தெரிகிறதா? நெடுந்தூரத்தில் வரும்போதே இன்னார் வருகிறார் என்று தெரியும்படியாக ஓர் அடையாளம் இருக்கிறது. கருடக்கொடி பளபளக்கிறது. கருடனுடைய வீரம் பெரிது. பாம்பு என்றால் படையும் நடுங்கும் என்பார்கள். அத்தகைய பாம்புக் கூட்டம் எவ்வளவு பெரிதானாலும் அஞ்சி நடுங்கும் படி செய்கிறவன் கருடன். பாம்புகளைக் கொத்துவது கூட அவசியம் அன்று. தன் சிறகைப் படபடவென்று அவன் அடித்துக்கொண்டாலே போதும். நாகங்கள் சுருண்டு விழும். பல கோடுகளையுடைய அந்தச் சிறகுகள் கருடனுக்கு அழகாகப் பொருந்தி

யிருக்கின்றன. கொடிய நாகங்களும் கருடனுக்கு அஞ்சி நடுங்கும்.

நஞ்சுடைய நாகத்துக்கு ஒவ்வொரு பக்கத்திலும் இரண்டு இரண்டாக வாயில் நான்கு நச்சுப்பற்கள் உண்டு. அந்தப் பற்களோடு இணைந்து நஞ்சுள்ள பைகள் இருக்கின்றன. பாம்பு ஒருவரைக் கடிக்கும்போது பற்கள் அழுந்தும். நச்சுப்பையிலிருந்து நஞ்சு பல்லிலுள்ள துளையின் வழியே சென்று கடிக்கப்பட்டவன் உடம்பில் ஏறும். டாக்டர் துளையுள்ள ஊசி வழியே மருந்தை ஏற்றுவது போலப் பாம்பும் துளையுள்ள பல்லால் நஞ்சை ஏற்றுகிறது. நான்கு நச்சுப்பற்களுக்கும் காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்று பெயர். நஞ்சு ஒடுங்கி நிற்கும் எயிற்றில் துளை இருக்கிறது. பாம்புகள் மூச்சு விட்டாலே துன்பம் உண்டாகும்; தீக்காற்று வீசும், அத்தகைய கொடிய நச்சரவங்களும் நடுநடுங்கி விழும்படி சிறகை அடிக்கும் பறவை கருடன். அவனை உயர்ந்து தோன்றும் தம் கொடியிலே கொண்ட செல்வர் திருமால். வெற்றியும் மிடுக்கும் உடையவர்கள் கொடி கட்டிக் கொள்வார்கள். திருமாலின் சிறப்பும் பல படியாக இருந்தாலும் இங்கே அவருடைய கொடியை மட்டும் கூறி அவருடைய பெருமையைப் புலப்படுத்துகிறார் நக்கீரர்.

கடுவோடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிற்று
அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்அணி நீள்கொடிச் செல்வனும்.

(நஞ்சோடு உள்ளே அமைந்த துளையையுடைய, வெள்ளையான பல்லையுடையனவும், நெருப்பைப்போல மூச்சுவிடுவனவும், அச்சத்தை உண்டாக்குகின்ற கடுமை யான வலிமையை உடையனவுமாகிய பாம்புகள் அஞ்சி விழும்படி

அடிக்கும், பல கோடுகளை உடைய வளைந்த சிறகுகளையுடைய பறவைகளாகிய கருடனை அணிந்த உயர்ந்த துவசத்தையுடைய திருமாலும்.

கடு - நஞ்சு. தூம்பு - துளை. வால் எயிறு - வெள்ளை யான பல். உயிர்க்கும் - மூச்சுவிடும். அஞ்சுவரு - அச்சம் உண்டாகின்ற. வரி - கோடு. கொடுஞ்சிறை - வளைந்த சிறகு.)

அடுத்தபடி சிவபெருமான் வருகிறார். அவரையும் அவருடைய துவசத்தாலே இனம் கண்டு கொள்ளலாம். அவருடைய வாகனமும் கொடியுமாக இருப்பது இடபம். தர்மமே இடபமாக இருப்பதனால் அது வெள்ளை வெளேரென்று மாசு மறுவின்றி விளங்குகிறது.

"வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருதேறி."

என்பது தேவாரம். இடபக் கொடியைச் சிவபிரான் தம் வலப்பக்கத்தில் உயரப் பிடித்து வருகிறார். அப்பெருமா னுடைய வீரம் சொல்லத் தரம் அன்று. அட்ட வீரட்டானம் என்று அவருடைய வீரத்தைப் புலப்படுத்தும் தலங்கள் இந்நாட்டில் இருக்கின்றன. ஆண்மை விளங்கும் திண்மையான தோளையுடையவர். அந்த வீரமூர்த்தியின் ஒரு பாகத்தில் உமாதேவியார் அமர்ந்திருக்கிறார். அதுவும் ஓர் அடையாளம். இன்னும் ஒரு சிறந்த அடையாளம் அவருக்கு உண்டு. அது அவருக்கு அமைந்த கண்கள். பொதுவாகத் தேவர்கள் யாவரும் இமையாத கண்ணையுடையவர். மகாதேவராகிய அப்பெருமான் கண்களும் இமையாதவை என்று சொல்வது பெரிய சிறப்பு அன்று. யாருக்கும் இல்லாத படி அவர் மூன்று கண்களைப் பெற்றவர்; இடமும் வலமும் உள்ள இரண்டு கண்களோடு ஞான நேத்திரமாகிய நெற்றிக்கண்ணை உடையவர்.

"இமையாத முக்கண், மூவரிற் பெற்றவர்."

என்று இந்தச் சிறப்பைத் திருக்கோவையாரில் மாணிக்கவாசகர் எடுத்துச் சொல்கிறார்.

அவருடைய வலிமைக்கு ஏதாவது ஓர் எடுத்துக் காட்டாவது சொல்ல வேண்டாமா? அவர் திரிபுரத்தை எரித்தவர். வெள்ளி, பொன், இரும்பு ஆகியவற்றால் அமைந்த மதில்களையுடைய திரிபுரங்களைக் கொண்ட மூன்று அசுரர்கள், பறக்கும் அப்புரங்களால் மக்களுக்குத் தீங்கு விளைவித்தனர். சிவபிரான் தம்முடைய புன்னகையால் அவற்றை அழித்தனர். அவ்வளவு பெருவலிமையுடைய செல்வர் அவர். அவரும் முருகனைக் காண வருகிறார்.

வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்.

(வெள்ளையான இடபக் கொடியைத் தம் வலப் பக்கத்தே உயர்த்தியவரும், பலரும் புகழும் திண்மையான தோளை உடையவரும், உமாதேவியார் விரும்பித் தங்கும் திருமேனியை உடையவரும், இமையாத மூன்று கண்களை உடையவரும், மூன்று மதில்களை அழித்த வலிமையிலே மிக்க செல்வரும் ஆகிய சிவபெருமானும்.

வலவயின் - வலப்பக்கத்தில். உயரிய - எடுத்த. எயில் - மதில். முருக்கிய - அழித்த. முரண் - வலிமை.)

அடுத்தபடி தேவருக்கு அரசனாகிய இந்திரன் வருகிறான். இமையா முக்கண் என்று சிவபெருமானைக் கண்ணால் அடையாளம் கண்டு கொள்வது போல அவனையும் கண்ணால் இனம் கண்டு கொள்ளலாம். அவனுக்கு

உடம்பெல்லாம் கண். ஆயிரம் கண்களை உடையவன் இந்திரன். நூறு யாகங்களைத் தடையின்றி முடித்தால் இந்திரபதவியைப் பெறலாம். அதனால் அவனுக்குச் சதமகன் என்ற பெயர் வழங்கும். அவனும் பெரிய வீரன்தான்; போரில் வெளிப்படையாகப் பொருது பகைவர்களை அழிக்கும் வெற்றி மிடுக் குடையவன்.

அவனுடைய வளமும் செல்வமும் பெரும்புகழ் பெற்றவை. போக போக்கியங்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது இந்திரனது வாழ்வு. அதனால்தான்,

"இந்திர லோகம் ஆளும் அச்சுவை."

என்று தொண்டரடிப்பொடி ஆழ்வார் அதனைச் சொன்னார். அவனுடைய பதவிக்கு ஏற்ற வாகனம் அவனுக்கு இருக்கிறது. அது வெள்ளை யானையாகிய ஐராவதம். மற்ற யானைகளுக்கு இரண்டு கொம்புகளே உண்டு. ஐராவதத்துக்கோ நான்கு கொம்புகள். அது நடந்து வந்தால் பார்க்க அழகாக இருக்கும். வெள்ளிமலை கால் பெற்று நடந்து வருவது போல் இருக்கும்.

"வெள்ளி மலைஎனவே
கால்வாங்கி நிற்கும் களிற்றான்."

என்று கந்தர் அலங்காரத்தில் அருணகிரியார் சிறப்பிப்பார்.

ஐராவதம் தன்னுடைய துதிக்கையை நிலத்திலே புரள விடுகிறது. அதன் பிடரியில் வீற்றிருந்து தன் வளம் தோன்ற வருகிறான், இந்திரனாகிய செல்வன்.

நூற்றப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்.

(நூற்றைப் பத்துமுறை அடுக்கியதால் வரும் ஆயிரம் கண்களையுடையவனும், நூறாகிய பலவகை வேள்விகளை முற்றச் செய்தவனும், எதிர்நின்று பகைவர்களை அழிக்கின்ற வெற்றிச் சிறப்பை உடையவனும், நான்கு உயர்ந்த கொம்புகளையும் அழகு வாய்ந்த நடையையும், பூமியில் தாழ்ந்த பெரிய வளைந்த துதிக்கையையும் உடைய, எல்லோரும் உயர்வாகச் சொல்லும் யானையாகிய ஐராவதத்தின் கழுத்தின் மேல் ஏறியவனும் ஆகிய வளம் மலிந்த செல்வத்தையுடைய இந்திரனும்.

நாட்டம் - கண். வென்று அடுகொற்றம் - வஞ்சியாமல் எதிர் நின்று கொன்று பெறும் வெற்றி. மருப்பு - கொம்பு. உயர்த்த - உயர்வாகப் புகழ்ந்த. எருத்தம் - கழுத்து.)

## வரும் காரியம்

இவர்கள் எதற்காக வருகிறார்கள்?

இந்த உலகத்தில் நான்கு திசையில் நின்று நான்கு தேவர்கள் காக்கிறார்கள். இந்திரன், யமன், வருணன், குபேரன் என்னும் நால்வரும் முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் திசைகளிலிருந்து காவல் புரிகிறார்கள். உலகத்தில் மக்கள் வாழும் பல நகரங்கள் இருக்கின்றன. அவற்றைக் காக்கும் தெய்வங்கள் அவர்கள்.

திசைகளில் நின்று அவர்கள் காத்தாலும் அவர்களுக்கும் மேலதிகாரிகளாக இருந்து உலகத்தை நடத்துகிறவர்கள் மூவர். அவர்களையே மும்மூர்த்திகள் என்று சொல்வார்கள். படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில் களையும் பிரமன், திருமால், சிவபிரான் என்னும் மும்மூர்த்திகளும் இயற்றுகிறார்கள். படைக் கிறவன் தன் தொழிலைப் புரிய, இறுதியில் அழிக்கிறவன் தன் தொழிலை ஆற்றுவான். அஸ்திவாரம் போட்டுச் சுவரெழுப்பி மேல் தளம்

போடவேண்டும். அஸ்திவாரம் போட ஒப்புக்கொண்டவன் அதைச் செய்யா விட்டால் மற்ற இரண்டு வேலைகளும் நடத்தல் முடியாது. அவற்றைச் செய்கிறவர்கள் சும்மா இருக்க வேண்டியதுதான். அதுபோல, உலகத்தைப் படைக்கும் முதல் தொழிலைச் செய்கிறவன் இப்போது தன் தொழிலைச் செய்யவில்லை. அந்த நான்முகன் சிறையில் இருக்கிறான். அதனால் படைப்புத் தொழில் நடக்கவில்லை. அதற்குப் பிறகே மற்றத் தொழில்கள் நடக்க வேண்டும். படைப்புத் தொழில் நின்றதும் மற்ற இருவருக்கும் வேலை இல்லை. பழையபடி எல்லாம் நடைபெறவேண்டுமானால் பிரமன் விடுதலை பெற வேண்டும். அப்போதுதான் மூன்று மூர்த்திகளும் தத்தம் தொழிலை முறையாகச் செய்யமுடியும்.

இதனை உணர்ந்து நான்முகன் விடுதலையைக் காரணமாகக் கொண்டு இவர்கள் வருகிறார்கள். பழையபடி மூன்று மூர்த்திகளும் தலைவராக இருந்து மூன்று தொழில்களையும் இயற்றி உலகத்தை இயங்கச் செய்யவேண்டும் என்பதே இவர்கள் விருப்பம்.

நான்முகன் தாமரையில் தோன்றியவன். நீண்ட ஆயுளை உடையவன். அவன் இன்று சிறைப்பட்டிருப்ப தற்குக் காரணம், முருகனை அவமதித்தது. கைலைக்கு வந்த நான்முகன் முருகனைக் கண்டும் வணங்கவில்லை. அவனுடைய அகந்தையை அறிந்து அதனைப் போக்க எண்ணிய முருகன் அவனை அழைத்தான். யார் என்று கேட்டான். பிரமன் என்றான். என்ன தொழில் என்று கேட்கப் படைக்கும் தொழில் என்றான். என்ன வரும் என்ற போது வேதம் வரும் என்றான். ''எங்கே, சொல்'' என்று முருகன் பணிக்க, ''ஓம்'' என்று தொடங்கினான். அந்த அளவிலே நிறுத்தி, ''அதற்குப் பொருள் சொல்'' என்று சொல்லப் பிரமன் சொல்லத் தெரியாமல் மயங்கினான். அப்போது முருகன்

அவன் தலையிற் குட்டிச் சிறையில் இருத்திவிட்டுத் தானே படைக்கும் தொழிலை மேற்கொண்டான் என்பது கந்த புராணத்திற் கண்ட வரலாறு.

பழங்காலத்தில் வேறு ஒரு வகையில் நான்முகன் பதவியை இழந்த வரலாறு வழங்கிவந்தது. அதைத் திருமுருகாற்றுப்படைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் எடுத்துரைக்கிறார். சூரசங்காரம் நடந்தபிறகு இந்திரன் தன் மகளாகிய தேவயானையை முருகனுக்குத் திருமணம் செய்வித்தான். அப்போது மனம் மகிழ்ந்த முருகன் தன் கையில் உள்ள வேலைப் பார்த்து, ''நமக்கு எல்லாம் தந்தது இவ்வேல்'' என்றான். அப்போது அருகில் நின்றிருந்த பிரமன், ''இவ்வேலுக்கு நான்தானே சக்தி தந்தேன்? என் படைப்புக்கு அகப்பட்டது தானே இது?'' என்று சொன்னான். அது கேட்ட முருகன், ''நம் கையில் இருக்கும் வேலுக்கு நீ கொடுக்கும் சக்தியும் உண்டோ? ஏன் வீணே அகங்கரிக்கிறாய்? இவ்வாறு கூறிய நீ பூமியிலே போய்க் கிடப்பாயாக!'' என்று சாபமிட்டானாம். அதனால் அவன் தன் நிலையையும் தொழிலையும் இழந்து உலகத்தில் பிறந்து உழன்றானாம்.

நான்முகன் முருகனுக்கு அபசாரம் செய்ய, அதனால் அவன் தன் நிலையையும் தொழிலையும் இழந்தான் என்பது இந்த இரண்டு வரலாறுகளுக்கும் பொதுவான கருத்து. அவனைப் பழைய நிலையில் நிறுத்தித் தன் தொழிலைச் செய்யும்படி வைக்கவும், அதன்பின் தாமும் தம்தொழில் களை இயற்றித் தம் நிலையைப் பாதுகாத்துக் கொள்ளவும் வேண்டி முருகனிடம் வருகிறார்கள், திருமாலும் சிவ பெருமானும் இந்திரனும் பிறரும்.

நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்

பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக
ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வர.

(நாற்றிசைக் காவலர்களாகிய நான்கு பெருந் தெய்வங்களின் காவலுக்கு உட்பட்ட நல்ல நகரங்கள் நிலை பெற்ற உலகத்தைக் காப்பாற்றுகின்ற, ஒன்றாக விரும்பும் கடைப்பிடியையுடையவர்களாகிய, பலரும் புகழும் மும்மூர்த்திகளும் பழையபடியே தம்தம் தொழில்களை இயற்றித் தலைவர்கள் ஆகும்படியாக, இன்ப முறுகின்ற பூவுலகில் வந்து தோன்றி, தாமரையினால் தோற்றுவிக்கப் பட்டவனும் கேடில்லாத நீண்ட ஆயுளை உடையவனுமாகிய நான்முகனாகிய ஒருவனை எண்ணி, அழகு தோற்றும்படி - வருகிறார்கள்.

நிலைஇய - நிலைபெற்ற. ஒன்றுபுரி - ஒன்றையே செய்யும். கொள்கை - கடைப்பிடி; கடமை. மூவரும் மூவேறு தொழில்களைச் செய்தாலும் எல்லாம் உலகத்தைக் காக்கும் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டவை; ஆதலின் மூன்றும் தொடர்புடையவை. ஒன்று இல்லா விட்டால் மற்றவை நிகழ்வதில்லை. ஏமுறு - இன்பம் அடைகின்ற. பயந்த - பெற்ற. தா - கேடு. ஊழி - வாழ்நாள். காண்வர - தோற்றம் மிகும்படி; அழகு தோற்றும்படி.)

## முப்பத்து மூவர்

முருகனைக் காணத் தேவலோகத்திலிருந்து ஒரு பெரிய கூட்டமே வந்து கொண்டிருக்கிறது. முன்னாலே முனிவர்களையும் கந்தர்வர்களையும் பிறரையும் விட்டுப் பின்னே திருமாலும் சிவபிரானும் இந்திரனும் வருகிறார்கள். அவர்களுக்குப் பின்னாலும் பெருங்கூட்டம் வருகிறது.

தலைவர்கள் உலா வருவதாக இருந்தால் வாத்திய கோஷ்டி முன்னால் போகும். விருதாவளிகளை எடுப்பவர்களும் போவார்கள். பிறகு தலைவர்கள் செல்வார்கள். அவர்களுக்குப் பின்னே அதிகாரிகளும் தொண்டர்களும் செல்வார்கள். அவ்வாறே இந்தக் கூட்டமும் அமைந்திருக் கிறது. முன்னும் பின்னும் பெருங்கூட்டம் வர, நடுவிலே மூன்று செல்வர்களும் வருகிறார்கள்.

அவர்களுக்குப் பின்னாலே யார் வருகிறார்கள்?

முருகனிடம் தங்களுடைய குறையைச் சொல்லி நிறைவேற்றிக் கொள்வதற்காகவே அந்தச் செல்வர்கள் வருகிறார்கள். பிரபஞ்சத்தில் அவர்கள் செய்யும் தொழில் தடைப்பட்டு விட்டது. அஸ்திவாரம் போன்ற படைப்புத் தொழில் நின்றுவிட்டது. அதைச் செய்கிறவன் சிறையில் அடைபட்டுக் கிடக்கிறான். அவனை மீட்க வேண்டும். அதுதான் வருகிறவர்கள் அனைவரிடையும் உள்ள பொது வான நோக்கம். ஆயினும் இந்தச் சமயத்தில் தங்களுக்குத் தனித்தனியே வேறு குறைகள் இருப்பதனால் அவற்றையும் முருகனிடம் சொல்லிப் போக்கிக் கொள்ளலாம் என்று ஒவ்வொருவரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அரிசி வாங்க வேண்டுமென்று கடைக்குப் போனால் வீட்டிலுள்ள குழந்தை குட்டிகளுக்கு வேண்டிய சில்லறைச் சாமான்களையும், தனக்கு வேண்டிய வெற்றிலை பாக்கையும் வீட்டுத் தலைவன் வாங்கிக் கொள்கிறான். அவனுடன் செல்லும் குழந்தைகளும் தங்களுக்கு வேண்டிய தின்பண்டங்களை வாங்கிக்கொள்கிறார்கள் அல்லவா?

இங்கே மூன்று செல்வர்களையும் பின்பற்றித் தேவலோகமே கூட்டமாகத் திரண்டு வருகிறது. பெரியவர் கள் முருகனைத் தரிசனம் செய்து கொள்ளப் போகிறார்கள்.

அவர்களோடு போனால் எளிதிலே தங்களுக்கும் தரிசனம் கிடைக்கும் என்பது அந்தத் தேவர்களுடைய எண்ணம். நெல்லுக்கு இறைத்த நீர் புல்லுக்கும் ஆகும் அல்லவா?

தேவர்கள் முப்பது முக்கோடி என்பது ஒரு கணக்கு; ஒரு கோடிக்கு ஒரு தலைவர். ஆகவே முப்பத்து மூன்று பேர்கள். அவர்களும் நான்கு பிரிவாக உள்ளவர்கள். ஆதித்தர்கள் பன்னிரண்டு பேர்கள்; துவாதசாதித்தியர்கள் என்பர். ருத்திரர்கள் பதினொருவர்; ஏகாதசருத்திரர். எட்டுத் திசைகளையும் பாதுகாவல் செய்யும் வசுக்கள் எண்மர். தேவலோக வைத்தியர்களாகிய அசுவினி தேவர்கள் இருவர். ஆக, தேவலோகத்தில் பேரதிகாரிகளாக இருக்கும் தலைவர்கள் முப்பத்து மூவர்.

தேவர்கள் ஒளிபடைத்த திருமேனியை உடையவர்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு சூரியனைப் போன்ற தேசு பெற்றவர்கள். அவர்கள் மேலே சொன்ன மூன்று பெருந்தலைவர்களையும் பின்பற்றி வருகிறார்கள்.

பகலின் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு.

(சூரியனைப் போலத் தேசுடையவர்களாகத் தோன்றும் மாறுபாடு இல்லாத தோற்றத்தைப் பெற்ற, நான்கு வேறுபட்ட இயற்கையையுடைய முப்பத்து மூவரோடு - பிறரும் வருகிறார்கள் என்று சொல்ல வருகிறார்.)

நச்சினார்க்கினியர், 'பகலில் தோன்றும் இகலில் காட்சி' என்பதற்கு வேறு ஒரு பொருள் கூறுகிறார். 'ஒரு பொருள் பலவாறு பகுத்துக் காண்டற்கண் வேறுபடத் தோன்றும் தம்முள் மாறுபாடு இல்லாத அறிவினையுடைய' என்பது அவர் உரை. பகல் என்பதற்குப் பகுத்துக் காணுதல் என்றும், காட்சி என்பதற்கு அறிவு என்றும் அவர் பொருள் கொண்டார்.

பொருள்களின் உண்மையை ஆராயும்போது அவர்கள் முப்பத்து மூன்று பேரும் ஒரே மாதிரியான முடிவுக்கு வருவார்களாம். அவர்களுக்குள் கருத்து வேறுபாடு (இகல்) இராதாம்.

உலகம் முழுவதும் இயங்குவதற்கு உரிய வேலை களைச் செய்ய நியமிக்கப் பெற்றவர்கள் இந்த முப்பத்து மூன்று தேவர்கள். முப்பத்து மூன்று மந்திரிகளையுடைய மந்திரிசபை போன்ற குழு இது. இந்தக் குழுவில் ஆளுக்கு ஒரு கருத்து இருந்தால் குழுவில் வேறுபாடு உண்டாகும்; ஆட்சி நன்கு நடைபெறாது. எல்லோரும் ஒருமித்த மனப்பாங்குடன் இருந்தால்தான் நிர்வாகம் நன்கு நிகழும். இந்த முப்பத்து மூவரிடமும் அந்த ஒருமைப்பாடு இருக்கிறதாம். இது நச்சினார்க்கினியர் கருத்து.

ஆதித்தர், ருத்திரர், வசுக்கள், மருத்துவர் என்று நான்கு சிறு குழுக்களாக இருப்பதால், 'நால் வேறு இயற்கை' என்று சொன்னார். மொத்தத்தில் அவர்கள் பதினொரு மூவர்; முப்பத்து மூன்று பேர்.

## பதினெண் கணம்

திருமால் முதலிய மூன்று செல்வர்களையும் அடுத்து, அவர்களின் கீழ் நின்று அதிகாரம் செலுத்தும் முப்பத்து மூவர் வருகின்றனர். அவர்களை அடுத்துத் தேவர்களும் மற்றவர்களும் வருகிறார்கள். அவர்கள் பதினெட்டுப் பிரிவாக உள்ளவர்கள். அவர்களைப் பதினெண் கணத்தினர் என்று சொல்வர். அவர்களும் உயர்ந்த நிலையை உடையவர்கள்.

ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்

*(பதினெண் வகையாகிய உயர்ந்த நிலையைப் பெற்றவர்களும்.)*

பதினெண் கணங்களுக்கு வகை வெவ்வேறாகக் கூறுவர். நச்சினார்க்கினியர் தேவர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், இராக்கதர், கந்தருவர், சித்தர், சாரணர், பூதர், பைசாசர், தாராகணம், நாகர், ஆகாசவாசிகள், போக பூமியோர் என்று கூறுவார். 'பிறவாறும் உரைப்பர்' என்று அவரே எழுதியுள்ளார்.

இந்தப் பதினெண் கணத்தைப் பற்றிய செய்தி புறநானூற்றிலும் வருகிறது. அந்நூலின் கடவுள் வாழ்த்தில் சிவபெருமான் அணிந்திருக்கும் பிறையைப் பதினெண் கணத்தினரும் துதித்து வழிபடுகிறார்கள் என்று பாரதம் பாடிய பெருதேவனார் பாடுகிறார்.

"அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே."

என்பது அப்பகுதி. அதன் உரையாசிரியர், 'பதினெண் கணங்களாவார்: தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தரு வரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதமும் வேதாளமும் தாராகணமும் ஆகாசவாசிகளும் போக பூமியோரும் என இவர். பிறவாறும் உரைப்பர்' என்று எழுதினார்.

சிலப்பதிகாரத்தில் இந்திர விழவூர் எடுத்த காதையில் காவிரிப் பூம்பட்டினத்தின் விழாக்காட்சிகளை இளங்கோ வடிகள் வருணிக்கிறார். எல்லாத் தெய்வங்களுக்கும் சிறப்பு நடைபெறுகிறதாம். முப்பத்து மூன்று தேவர்களுக்கும் பதினெட்டுக் கணங்களுக்கும் விழா எடுக்கிறார்களாம்.

"நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்."

இங்கே வரும் மூவறு கணங்களுக்கு வகை கூற வந்த அடியார்க்கு நல்லார் இரண்டு பழைய வெண்பாக்களை மேற்கோளாகக் காட்டுகிறார். அவை வருமாறு:

"கின்னரர் கிம்புருடர் விச்சா தரர்கருடர்
பொன்னமர் பூதர் புகழியக்கர் - மன்னும்
உரகர் சுரர்சா ரணர்முனிவர் மேலாம்
பரகதியோர் சித்தர் பலர்."

"காந்தருவர் தாரகைகள் காணாப் பசாசகணம்
ஏந்துபுகழ் மேய இராக்கதரோ - டாய்ந்ததிறல்
போகா இயல்புடைய போகபுவி யோருடனே
ஆகாச வாசிகளா வார்."

தொல்காப்பியப் பொருளதிகார உரையில் பேராசிரியர், 'பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண் கணம்' என்றும், தக்கயாகப் பரணி உரையாசிரியர், 'பதினெண்கணங்களாவன தேவகணம், பிதிரர்கணம் முதலியன' என்றும் எழுதுவர்.

முப்பத்து மூன்று தேவர்களும் அவர்களுக்குப்பின் பதினெண் கணத்தினரும் ஆவினன்குடி முருகனைத் தரிசிக்க வருகிறார்கள். இந்தப் பெருங் கூட்டத்தில் உள்ளவர்களைத் தனித்தனியே அடையாளம் காட்ட முடியுமா? ஆகவே பொதுவாக அவர்களைப் பற்றிய சில செய்திகளைச் சொல்கிறார் நக்கீரர்.

எல்லோரும் ஒளியுடைய மேனி படைத்தவர்கள். வானத்தில் கணக்கில்லாத நட்சத்திரங்கள் மினுக்கு மினுக் கென்று காட்சி தருவதைப் போல அவர்கள் விளங்கு கிறார்கள். கணக்குக்கு வாராத கூட்டம்; ஒளி படைத்த மேனியையுடைய கூட்டம். அந்த இரண்டுக்குமே நட்சத்திரங்கள் உவமையாகின்றன.

மீன்பூத் தன்ன தோன்றலர்.

(விண்மீன்கள் ஒளியுடன் விளங்குவதைப் போன்ற தோற்றத்தை உடையவர்கள்.)

அவர்கள் முருகனைக் காணவேண்டும் என்ற ஆர்வத்தோடு வருகிறார்கள்; தலைவர்களோடு சேர்ந்து போனால் தான் தரிசனம் கிடைக்கும்; பின் தங்கி விட்டால் கிடைக்காமல் போனாலும் போகும். ஆதலால் மிக்க வேகமாக வருகிறார்கள். மீன்கள் நிரம்பிய இடமாகிய கடலின்மேலே காற்று வீசினாற்போன்ற வேகத்தை யுடையவராக அவர்கள் வருகிறார்களாம்.

மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர்.

(மீன்கள் உலாவுகின்ற இடத்தைச் சேர்ந்து காற்று எழுந்தால் ஒத்த வேகமான நடையை யுடையவர்கள். மீன்: ஆகுபெயர்.)

இவ்வாறு வருகிறவர்கள் பெரிய வலிமையை உடையவர்கள். ஏழைகள் மெலிவுடன் பணக்காரர்களைத் தேடிச் செல்வது போல வரவில்லை. பணக்காரர்கள் அரசியல் அதிகாரிகளைப் பார்க்க வருகிறது போல வருகிறார்கள். பணக்காரர்களாக இருந்தால் என்ன? அரசியல் ஆணைக்கு முன் எம்மாத்திரம்?

இங்கே வருகிறவர்கள் இயல்பாகவே பெருவலிமையை உடையவர்கள். காற்றும் நெருப்பும் கலந்து அடித்தால் அவற்றின்முன் ஏதாவது நிற்க முடியுமோ? அந்தத் தீயைப் போன்ற வலிமையை உடையவர்கள்.

வளியிடைத்
தீஎழுந் தன்ன திறலினர்.

(காற்று வீசும் பொழுது தீ எழுந்தாற் போன்ற வலிமையை உடையவர்கள்.)

''வேகமாகப் போ!''

''என்ன இப்படித் தள்ளுகிறாய்?''

''அதோ நம் தலைவர் எவ்வளவு தூரம் முந்திப் போய் விட்டார்! நீ மெல்ல நகருகிறாயே!''

''சரிதான், போ.''

இப்படி வேகமாகப் போகும் கூட்டத்தில் மக்கள் பேசுவதை நாம் கேட்டிருக்கிறோம். ஆவினன்குடிக்கு யாத்திரை வரும் இந்தக் கூட்டத்தினரும் பேசிக் கொள்கிறார்கள். பேச்சா அது? இடிக்குரல் அல்லவா? எல்லோருக்கும் முன்பே போகவேண்டும் என்று ஒவ்வொருவருக்கும் ஆத்திரம். பெருங்கூட்டத்தில் உரத்துப் பேசினால்தானே காது கேட்கும்? அதனால் அவர்கள் உரக்கக் குரல் கொடுக்கிறார்கள். நெருப்புப் பிறக்கும்படி மேகங்கள் மோதி இடி இடிக்கிறது போல இருக்கிறது அவர்களுடைய குரல்.

தீப்பட
உரும்இடித் தன்ன குரலினர்.

(தீ உண்டாகும்படியாக இடி இடித்தாற் போன்ற குரலையுடையவர்களாகி - வருகிறார்கள்.)

நான்முகனைச் சிறை மீட்க வேண்டுமென்றால் தலைவர்கள் மாத்திரம் சென்றால் போதாதோ? இவர்கள் ஏன் போக வேண்டும்?

அரசாங்கத்தினால் ஏதேனும் ஒரு காரியம் ஆக வேண்டுமானால் சில தலைவர்கள் மட்டும் கையெழுத்

திட்டு விண்ணப்பம் அனுப்புவதில்லை. அந்தக் காரியம் மிகவும் அவசியமானது, அவசரமானது என்பதைக் காட்டு வதற்காகப் பொது மக்களுடைய கையெழுத்துக்களையும் வாங்கி அனுப்புவார்கள். தலைவர்கள் மட்டும் கையெழுத் திட்டு அனுப்பும் மனுவைவிட இந்த மனுவுக்கு வலிமை அதிகம். அவ்வாறே இங்கே தாம் சாதிக்க விரும்பிச் செல்லும் காரியத்திலே பலருக்கும் சிரத்தை உண்டு என்று காட்டும் பொருட்டு, இத்தனை கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு வருகிறார்கள் பெருந்தலைவர்கள்.

அதோடு, அவரவர்களுக்கு முருகனைத் தரிசனம் செய்ய வேண்டும் என்றும் ஆசை. இந்தச் சமயத்தில் அதனை எளிதில் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று புறப்பட்டிருக் கிறார்கள். அன்றியும் அவரவர்களுக்கே உரிய சில குறை களும் உண்டு. அவற்றையும் முருகனிடம் விண்ணப்பித்துக் கொள்ளலாமே. இதை நக்கீரர் சொல்கிறார்.

விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காண.

(எல்லோருக்கும் பொதுவாக உள்ள பெரிய குறையைத் தீர்த்துக்கொள்வதோடு, அதன் சார்பில் தாம் பெறவேண்டிய வற்றைத் தங்கள் தங்கள் முறையிலே நின்று பெற்றுக் கொள்ளும் பொருட்டு (மேலே சொன்ன யாவரும்) ஆகாயத்தே இயங்கிக் கொண்டு வந்து ஒருங்கே தரிசனம் செய்து கொள்கிறார்கள். அப்படி அவர்கள் தரிசித்துக் கொள்ளும்படி - முருகன் ஆவினன் குடியில் எழுந்தருளியிருக்கிறான் என்று சொல்ல வருகிறார்.

விழுமிய - மேலான. குறை - காரியம். மருங்கில் - சார்பில். கொண்மார் - கொள்ளும் பொருட்டு. அந்தரக்

கொட்பினர் - ஆகாசத்தில் சுழன்று வருகிறவர்கள். உடன் - ஒருங்கே.)

தங்களுக்கு உற்ற காரியங்களில் மேலானது, யாவருக்கும் பொதுவானது, விழுமிய குறை, நான்முகனைச் சிறையினின்று விடுவிப்பது. அதனை 'விழுமிய உறு குறை' என்றார். 'நான்முக ஒருவற் சுட்டியது' அது. ஆனால் அதற்குமேல் அதனைச் சார்ந்து தாம் பெற வேண்டிய முறையான சில குறைகளும் அவர்களுக்குத் தனித்தனியே உண்டு. அவற்றையும் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தோடு வருகிறார்களாம்.



இந்தப் பெருங்கூட்டம் வந்து தரிசித்துக் கொள்ளும் படி முருகன் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருக்கிறான்; தேவசேனையம்மையாருடன் எழுந்தருளி யிருக்கிறானாம்.

முதலிலேயே அந்தப் பெருமாட்டியை. ''மறுவில் கற்பின் வாணுதல்'' என்று குறிப்பிட்டதைப் பார்த்தோம். களவுக்காதல் இல்லாமலே கற்புக் காதல் செய்த பிராட்டியாதலின் அவ்வாறு சொன்னார். இங்கும் அப்படியே சொல்லுகிறார். 'கேடு இல்லாத பதிவிரதத்தை யுடைய மடந்தை' என்கிறார்.

தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவி னன்குடி அசைதலும் உரியன்; அதாஅன்று.

(கேடு இல்லாத விரதத்தையுடைய மடந்தையாகிய தேவசேனையோடு சில காலம் திருவாவினன்குடியில் தங்கியிருக்கும் செயலையும் உடையவன்; அது மட்டும் அன்று.)

கொள்கையென்பது கடைப்பிடி அல்லது விரதத்தைக் குறிக்கும்; இங்கே பதிவிரதமாகிய கற்பைக் குறித்தது. கற்புமணப் பிராட்டியாகிய தேவகுஞ்சரியுடன் சில காலம்

திருவாவினன் குடியில் முருகன் எழுந்தருளியிருப்பான் என்று மூன்றாவது படைவீட்டைச் சொல்லி விட்டு, அடுத்த படை வீட்டைச் சொல்லத் தொடங்குகிறார் நக்கீரர்.

பகலின் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்,
மீன்பூத் தன்ன தோன்றலர், மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர், வளியிடைத்
தீஎழுந் தன்ன திறலினர், தீப்பட
உரும்இடித் தன்ன குரலினர், விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துஉடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவி னன்குடி அசைதலும் உரியன்; அதா அன்று.

## ஆவினன்குடியும் பழனியும்

திருவாவினன் குடியென்பது, இன்று பழனியென்று புகழ்பெற்று விளங்கும் தலம். இப்போது மலைமேலுள்ள திருக்கோயிலைப் பழனியென்றும், அடிவாரத்திலுள்ள திருக்கோயிலைத் திருவாவினன்குடி யென்றும் வழங்கு கின்றனர். நகருக்கும் பழனியென்ற பெயரே இப்போது வழங்குகிறது.

பழங்காலத்தில் அந்த ஊருக்கு ஆவினன்குடி என்று பெயர். ஆவியர்குடி என்பது குறுநில மன்னர்களின் குடிகளில் ஒன்று. அவர்கள் அரசாண்டு வந்த இடம் இது. கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பேகன் இந்தக் குடியில் தோன்றியவன். வையாவிக் கோப்பெரும் பேகன் என்பது அவன் முழுப்பெயர். ஆவி, வையாவி என்னும் இரண்டும் அக்குடிக்கு உரிய பெயர். அவர்கள் வாழ்ந்த இடத்தை

ஆவினன்குடி என்றும் வையாவியூர் என்றும் வழங்கினர். வையாவிபுரி என்றும் கூறுவதுண்டு. பழனியின் மற்றொரு பெயராகிய வையாபுரி என்பது வையாவிபுரி என்பதன் திரிபேயாகும். நாளடைவில் வையாவிபுரி வையாவூர் ஆகி அதை உள்ளிட்ட நாடு வைகாவூர் நாடு என்று ஆகிவிட்டது. ''வைகாவூர் நனாடதில் ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே'' என்று இந்த நாட்டையும் ஊரையும் அருணகிரியார் பாடுகிறார்.

பொதினி என்பது பிறகு பழனியென்று மருவியது. பழங்காலத்தில் மலையின்மேலும் கோயில் இருந்தது என்று சங்க நூல்களால் தெரிய வருகிறது.* பேகனுடைய குல தெய்வம் முருகன்.

பிற்காலத்தில் பழனிக்குப் புராணம் ஒன்று எழுந்தது. திருவாகிய இலக்குமியும், ஆவாகிய காமதேனுவும், இன்னாகிய கதிரவனும் பூசித்தமையால் திருவாவினன் குடி என்று பெயர் வந்ததென்றும், தம்மை வலம் வந்த விநாயகருக்குச் சிவபெருமான் மாங்கனியைக் கொடுத்து விட்டு உலகை வலம் வந்த முருகனுக்குக் கொடுக்காததனால் அவன் சினந்து இம்மலைமேல் வந்து நிற்க, அவனைத் தேடிவந்த சிவபெருமான், ''பழம் நீயே'' என்று கூற, அதுவே காரணமாக மலைக்குப் பழம் நீ என்று பெயர் வந்தது, அதுவே பழநியாயிற்றென்றும் புராணம் கூறும்.

மலையின்மேலும் அடிவாரத்திலும் திருக்கோயில்கள் இருப்பதைத் திருச்செங்கோடு, திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களில் காணலாம். அவ்வாறு திருவாவினன்குடியாகிய பழனியம்பதியிலும் இருக்கின்றன.

---

*நான் எழுதிய ''பழம்பழனி'' என்ற கட்டுரையைக் காண்க. (பெரும் பெயர் முருகன் என்ற நூல்.)

இத்தலத்திற்குப் பல திருப்புகழ்ப் பாக்கள் உண்டு. தலபுராணத்தையன்றி இரண்டு பிள்ளைத் தமிழ்களும் ஒரு பள்ளும் இருக்கின்றன. தண்டபாணி சுவாமிகள் பழனித் திருவாயிரம் என்ற நூலைப் பாடியிருக்கிறார். பழனி இரட்டைமணி மாலை ஒன்று உண்டு. இவற்றையன்றிக் கும்மி, கீர்த்தனங்கள் முதலிய இசைப் பாடல்களும் உண்டு.

இத்தலம் முன் காலத்தில் கொங்கு நாட்டைச் சார்ந்திருந்தது; இப்போது மதுரை மாவட்டத்தில் சேர்ந்திருக்கிறது.

---

# திருவேரகம்

இப்போது நக்கீரர் நம்மைத் திருவேரகம் என்னும் திருத்தலத்திற்கு அழைத்து வருகிறார். அது காவிரிக் கரையில் உள்ள படைவீடு. ஆற்றங் கரைகளில் அந்தணர் இருந்து வேதம் ஓதி வேள்வி புரிவார்கள். பழைய காலத்தில் ஆறுகளின் இருமருங்கும் பல அகரங்கள் ஓங்கி வளர்ந்தன. திருவேரகமும் அப்படி அமைந்த அகரங்களில் ஒன்று. அங்கே அந்தணாளர்கள் மிகுதியாக வாழ்ந்தார்கள்; ஏரகத் தில் எழுந்தருளியிருக்கும் முருகனை வழிபட்டு இன் புற்றார்கள்.

நக்கீரர் ஏரகத்தை விரிவான வகையில் வருணிக்க வில்லை. அங்கே முருகனை வழிபடும் அந்தணர்களின் இயல்பை மட்டும் கூறுகிறார். தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டே அந்தணர்கள் வாழ்ந்து வருகிறார்கள். பழைய இலக்கண இலக்கியங்களில் அவர்களைப் பற்றிய செய்திகள் பல வருகின்றன. அவர்கள் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல், விரதம் இருத்தல், அரசர்களுக்குக் குருவாக இருந்து நலம் செய்தல், தலைவர்களுக்குப் பாங்கராக இருத்தல், தமிழ்ப் புலமையும் பெற்றிருத்தல் முதலியவற்றைப்பற்றி அந்நூல்கள் கூறுகின்றன.

பதின்மூன்றே அடிகளில் திருவேரகம் என்னும் படை வீட்டைப் பாடுகிறார் நக்கீரர். அவற்றில் 12 அடிகள் முருகனை வழிபடும் அந்தணர்களைப் பற்றிச் சொல்கின்றன. இனி அவற்றைப் பார்ப்போம்.

## அறு தொழிலாளர்

அவர்கள் ஆறு தொழில்களைச் செய்பவர்கள். 'ஷட்கர்ம நிரதர்கள்' என்று சொல்வார்கள். ''அறு தொழிலோர் நூல்'' என்று திருவள்ளுவரும் கூறினார். ஆறுமுகநாதனுடைய அடியார்களைப் பற்றிக் கூற வருவதனால் எடுத்தவுடன் ஆறு என்னும் எண்ணைப் பெற்ற தொழில்கள் நினைவுக்கு வருகின்றன.

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது.

(ஆறு என்று தமக்கு அமைந்த இலக்கணத்தினின்றும் பிழையாமல்.)

''அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்''

(புறத்திணையியல், 20)

என்று இந்த ஆறு இயல்புகளைத் தொல்காப்பியர் கூறுகிறார். இப்போது கிடைக்கும் தமிழ் நூல்களில் மிகப் பழையது தொல்காப்பியம். ஆறு தொழில்கள் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், கோடல், கொடுத்தல் என்பன. வேத சாஸ்திரி புராணங்களையும் பிற நூல்களையும் கற்றுப் பயிலுதலே ஓதல். இவற்றில் முக்கியமானது வேதம் ஓதுதல். ஓதுவதற்குள் சிறந்ததாதலின் வேதத்தை ஒத்து என்று வழங்குவர்.

அந்தணர் ஓதும் நூல்களில் தலை, இடை, கடை என்று மூன்று தரம் உண்டு. இவற்றை நச்சினார்க்கினியர் தொல் காப்பியப் பொருளதிகார உரையில் விரிவாகச் சொல்கிறார். இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம் என்னும் மூன்றும் தலையான நூல்கள். இறைவன், அகத்தியன், மார்க்கண்டேய னார், வான்மீகனார், கவுதமனார் போன்றவர்கள் இயற்றிய தமிழ் நூல்களும் தலையான ஒத்து என்று சொல்வர். இவர்கள்

தலைச்சங்கத்திலிருந்து தமிழ் பாடியவர்கள் என்று ஒரு வரலாறு உண்டு. அதர்வவேதமும் ஆறு சாஸ்திரங்களும் தர்மசாஸ்திரமும் ஆகியவை இடையாய ஒத்து; மத்திய நிலையில் உள்ள நூல்கள். அகத்தியம், தொல்காப்பியம் என்னும் இலக்கணங்களும் இடைச்சங்கத்தார் இயற்றிய நூல்களும் இடையாய ஒத்து என்பர். இதிகாச புராணங்களும் மறுப்பு நூல்களும் கடையாய ஒத்து; கடைச்சங்க நூல்களையும் இந்த வரிசையில் சேர்ப்பார் நச்சினார்க்கினியர். இந்த மூன்று வகை நூல்களிலும் சிறந்த பயிற்சி உள்ளவன் ஓதற் சிறப்புடைய அந்தணன்.

ஓதுவித்தலாவது தக்கவர்களுக்கு மேலே சொன்ன நூல்களைக் கற்பித்தல். 'ஓதுவித்தலாவது கொள்வோன் உணர்வுவகை அறிந்து அவன் கொள்வரக் கொடுக்கும் ஈவோன் தன்மையும் ஈதல் இயற்கையுமாம்' என்று விளக்குவார் நச்சினார்க்கினியர்.

வேட்டல் என்பது வேள்வி செய்தல். நாள்தோறும் செய்யும் வேள்விகளும் அவ்வப்போது செய்யும் வேள்வி களுமாக அவை பலவகைப்படும். வேள்வி செய்வதால் தேவர்கள் மனமகிழ்ந்து மழை பெய்வித்தல் முதலிய நன்மைகளைச் செய்வார்கள் என்று பழங்காலத்தினர் நம்பினார்கள்.

வேட்பித்தல் என்பது, பிறர் வேள்வி செய்ய அதற்குத் தாம் வழி காட்டியாக இருந்து நடப்பித்தல். கோடல் என்பது தக்காரிடம் தானம் பெறுதல். கொடுத்தல், தக்கவர்களுக்குத் தானம் வழங்குதல்.

"ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தணர்."

(பதிற்றுப்பத்து, 24)

என்று சங்கப் புலவர் ஒருவர் பாடுகிறார்.

ஏரகத்தில் உறையும் அந்தணர்கள் இந்த ஆறு தொழில்களையும் வழுவாமற் செய்பவர்கள்.

அந்தணர்களுக்குக் கோத்திரமும், சூத்திரமும் உண்டு. கோத்திரம் என்பது கௌசிக கோத்திரம், பாரத்துவாச கோத்திரம் என்பனபோல வழிவழி வந்த குடியின் அடையாளம். சூத்திரம் என்பது ஆபஸ்தம்பம், ஆசுவலாயனம், திராஹ்யாயனம் என்பன போலத் தாம் செய்யும் கர்மாக்களுக்கு வழிதுறை வகுக்கும் நூலைச் சொல்வது. ஒரு கோத்திரத்தில் பிறந்தவர்கள் அதே கோத்திரத்தில் பிறந்தவர்களை மணம் புரிந்து கொள்ளமாட்டார்கள். ஆதலின் தந்தை ஒரு கோத்திரமானால் தாய் வேறு கோத்திரமாக இருப்பாள். மணமகனுக்கும் மணமகளுக்கும் தனித்தனியே கோத்திரங்கள் இருப்பதைத் திருமணத்தில் கூறுவார்கள். பிதிர்க்கடன் இறுக்கும்பொழுது தந்தை தாய் பிறந்த இருவேறு கோத்திரத்தையும் சுட்டிக் கடன் இறுப்பார்கள். கோத்திரத்தால் வேறுபட்ட தாய் தந்தையர்களின் குடி வேறு வேறாக இருக்கும். இப்படிப் பல கோத்திரங்கள் உண்டு.

மிகப் பண்டைப் பழங்காலம் முதலே இந்த அந்தணாளர் திருவேரகத்திலிருந்து முருகனை வழிபட்டு வருகிறார்கள். தமக்கு வேண்டியனவெல்லாம் குறை வின்றிக் கிடைப்பதால் ஊரை விட்டுப் போகாமல் வாழ் கிறார்கள். 'பதியெழு வறியாப் பழங்குடி'' என்று பழைய நூல்கள் கூறும். அவ்வாறு வாழும் தொல்குடி அந்தணர் இவர்கள்.

இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி

'தந்தை தாய் என்னும் இருவருக்கும் உரிய கோத்திரமாகத் தனித்தனியே இரண்டு முனிவர்களைச் சுட்டிக் கூறும் பலவாக வேறுபட்ட பழைய குடி' என்பது பொருள். இந்தத்

தொல்குடியில் பிறந்தவர்கள் நக்கீரர் காட்டும் முருகன் அடியார்கள்.

வேதசாஸ்திரங்களை ஓதும் செயலில் அந்தணர்களுக்கு நாற்பத்தெட்டு ஆண்டுகள்கழிந்துவிடும். அந்த நாற்பத்தெட்டு ஆண்டுகளிலும் குருகுலவாசம் செய்து பிரமசரியம் காத்துக் கல்வியை நிறைவேற்றிய பிறகே திருமணம் செய்து கொள்ளவேண்டும். அப்படிச் செய்யும் மணத்துக்குப் பிராம்மம் என்று பெயர். 'பிரமமாவது ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட்டு ஆண்டு பிரமசரியம் காத்தவனுக்கு பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்தும் இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது' என்பது நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம்.

இங்கே நாம் பார்க்கும் அந்தணர்கள் நாற்பத்தெட்டு ஆண்டுகளை நன்னெறியில் கழித்து அறத்தையே விரும்பி நின்று பிரமசரிய விரதம் காத்தவர்கள்.

அறுநான்கு இரட்டி இளமை நல்லியாண்டு
ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை.

(நாற்பத்தெட்டாகிய இளமைப் பருவத்துக்குரிய நல்ல ஆண்டுகளை நிற்க வேண்டிய நெறியிலே நின்று கழித்த, தர்மத்தையே விரும்பும் கடைப்பிடியை - (உடையவர்கள்) கொள்கை என்பது கடைப்பிடி அல்லது விரதம்.)

இவ்வாறு நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரிய விரதம் காத்தபிறகு மணம் புரிந்து இல்வாழ்வை நடத்துகிற வர்கள் அவர்கள். அவர்கள் ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினிகளை ஓம்பும் இயல்புடையவர்கள். அந்தத் தீயையே தமக்குச் செல்வமாக

உடையவர்கள். ஒவ்வோர் அக்கினியும் ஒவ்வொரு வகையாக உள்ளது.

மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து.

'மூன்று வகையாகச் சொல்லப்பட்ட மூன்று வேள்வித் தீயையே செல்வமாகவுடைய' என்பது பொருள். இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், 'நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவுமாகிய மூன்று வகையைக் கருதின ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று தீயான் உண்டாகிய செல்வத்தினையுடைய' என்று உரைத்தார். வேறு உரைகாரர் ஒருவர் 'மூன்றாவன: ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்களுக்குத் தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ணவும் இவ்வாறாய முத்தீ' என்று விளக்குகிறார்.

"அந்தணர் அருங்கடன் இறுக்கும் முத்தீ"
"ஒன்றுபுரிந் தடங்கிய இரு பிறப்பாளர்
முத்தீ."

(புறநானூறு, 2, 367)

என்று வேறு சங்கப் புலவர்களும் இந்த முத்தீயைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

அந்தணர்களை இருபிறப்பாளர் என்பர். வடமொழியில் த்விஜர் என்பர். பூணூல் புனைவதற்கு முன் ஒரு பிறப்பும், அதன்பின் வேறு பிறப்பும் உடையவரைப்போல இருத்தலின் இவ்வாறு கூறுவர். அவர்கள் முருகனை வழிபடும் வேளையை அறிந்து வந்து துதிகளைக் கூறுகிறார்கள்.

இருபிறப்பாளர் பொழுதறிந்து நுவல

'உபநயனத்துக்கு முன் ஒன்றும் பின் ஒன்றுமாகிய இரு பிறப்பினையுடைய அவ்வந்தணர்கள் துதிக்க வேண்டிய

பொழுதை அறிந்து தோத்திரங்களைக் கூற' என்பது இதன் பொருள். 'பொழுதறிந்து நுவல' என்பதற்கு, 'உதய காலத்தும் மத்தியான்ன காலத்தும் அத்தமன காலத்தும் தாபனம், அநுட்டானம், பூசை ஆகிய மூன்று தொழிலையும் முயன்று செய்ய' என்று ஒரு பழைய உரைகாரர் உரை எழுதுகிறார்.

இங்கே உள்ள அந்தணரின் இயல்புகளைப் பழம் புலவர்கள் பல இடங்களில் கூறியுள்ளனர். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

"ஒன்றுபுரி கொள்கை இருபிறப் பாளர்
முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி
ஐம்பெரு வேள்வியும் செய்தொழில் ஓம்பும்
அறுதொழில் அந்தணர்."

(கட்டுரை காதை)

என்று கூறுவர்.

## வழிபடும் முறை

இப்படித் துதித்து வழிபடும் அந்தணர்கள் முருகனுடைய ஷடக்ஷர மந்திரத்தை ஜபித்து வேத மந்திரங்களைக் கூறி மலரை ஏந்தி அருச்சிக்கிறார்கள்; மந்திரபுஷ்பம் சமர்ப்பிக்கிறார்கள். இதை அடுத்தபடி சொல்கிறார் நக்கீரர்.

இந்த அந்தணர் மூன்று முப்புரி நூல்களை அணிந்திருக்கிறார்கள். பிரமசாரியானால் மூன்று புரிகளை மாத்திரம் அணிந்திருப்பார்கள். இவர்கள் இல்வாழ்வார்; மூன்று புரிகள் சேர்ந்த நுண்ணிய பூணூல்கள் மூன்றை அணிந்திருக்கிறார்கள்; எல்லாம் சேர்ந்து ஒன்பது இருக்கின்றன. நீராடி வந்தவர்கள் ஆடையை உலர்த்தாமல் ஈரமாகவே உடுத்திருக்கிறார்கள். அது இடையில் இருந்தபடியே உலருகிறது.

ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ.

'மூன்று புரிகளையுடைய ஒன்பது என்னும் எண்ணிக்கை கொண்ட நுண்ணிய நூலை (அணிந்து), உலராத ஆடையை இடையில் கிடந்தவாறே உலரும்படி உடுத்து' வழிபடுகிறார்கள். 'முந்நூல் கொண்டு முப்புரியாக்குதலின், ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட ஒரு புரி மூன்றாகிய நுண்ணிய பூணூல்' என்று உரை வகுப்பார் நச்சினார்க்கினியர்.

"ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை."

என்பது அப்பர் திருவாக்கு. நூலையும் புலரா உடையையும் உடைய அந்தணரை,

"புன்மயிர்ச் சடைமுடிப் புலரா உடுக்கை
முந்நூல் மார்பின் முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர்."

(25:126-8.)

என்று சிலப்பதிகாரத்திலும் காணுகிறோம்.

தம்முடைய கைகளைத் தலையின்மேல் கூப்பிக் கொண்டு முருகனைத் துதிக்கிறார்கள் இவ்வந்தணர்கள். பிறகு ஷடக்ஷர மந்திரத்தை ஜபிக்கிறார்கள். அதன்பின் கையில் மலர்களை ஏந்திப் புஷ்பாஞ்சலி செய்கிறார்கள்.

உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்தி.

(தலையின்மேல் குவித்த கையையுடையவர்களாய் முருகனைப் புகழ்ந்து, ஆறு எழுத்துக்களைத் தன்பாற்

கொண்ட அரிய உபதேச மந்திரத்தை நாக்குப் புரளும் அளவிலே பலமுறை கூறி, மணம் மிக்க நறுமலர்களை ஏந்தி வழிபடவும்.)

## ஆறெழுத்து

ஆறெழுத்தைத் தன்னுள்ளே அடக்கிய அரிய மந்திரம் ஷடக்ஷரம். மறை என்பது மந்திரம். கேள்வி - உபதேசம். உபதேச மந்திரத்தை அவ்வாறு கூறினார். முருகனுக்கு உரியது ஷடக்ஷர மந்திரம். அது பிரணவத்தின் விரிவாக இருப்பது; அதனால், ''ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே'' என்று அருணகிரியார் பாடினார்.

ஆறெழுத்து இன்னதென்று குறிக்கும்போது நச்சினார்க்கினியர், 'அது நமோ குமாராய என்பதாம்' என்று எழுதியிருக்கிறார். வடமொழிச் சந்தியிலக்கணப்படி அது நம: குமாராய என்று இருக்கவேண்டும். மந்திரங்களுக்கு இலக்கண வரம்பில்லை என்று சொல்வதுண்டு. மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் பதிப்பில், 'நமக் குமாராய' என்ற பிரதிபேதமும் காணப்படுகிறது.

நச்சினார்க்கினியர் கூறும் உரையினால், நமச் சப்தத்துடனும் ஒரு ஷடக்ஷரம் வழங்கியதென்று தெரிய வருகிறது. பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் முதலிய மந்திரங்கள் நமச்சப்தத்துடன் இணைந்தே உள்ளன. நாம் பெருக வழங்கும் சரவணபவ என்ற ஆறெழுத்தில் நமச்சப்தம் இல்லை. ஒருகால் அந்த மந்திரங்களோடு இணை சேரும் வகையில் இப்படியும் ஒரு ஷடக்ஷரம் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

மந்திரத்தை உச்சரிக்கும் முறை மூன்று உண்டு. அவை மானஸம், மந்தம், வாசிகம் என்பன. மனத்துக்குள் மந்திரத்தை எண்ணி ஜபிப்பது மானஸமுறை.

"துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின், நாள்தொறும்
வஞ்சகம் அற்றடி வாழ்த்த, வந்தகூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செ ழுத்துமே."

என்று திருஞானசம்பந்தர் திருவாக்கில் அஞ்செழுத்தை 'நெஞ்சகம் நைந்து நினைக்'கும் மானஸ முறை குறிக்கப் பெறுகிறது. மெல்லப் பிறர் காதில் கேளாதபடி நாவைப் புரட்டி உச்சரித்தல் மந்தம். வெளிப்படையாக வாய்விட்டுச் சொல்லுதல் வாசிகம். வாசிகத்தைவிட மந்தம் சிறந்தது.

இங்கே முருகனை வழிபடும் அந்தணர்கள் பல துதிகளை வாயாரப் பாடிப் பிறகு ஆறெழுத்தை மந்த முறையில் உச்சரிக்கிறார்கள். 'நா இயல் மருங்கின் நவிலப் பாடி' என்றது அதனையே கூறுகின்றது. நவிலுதல் - பல்கால் உருவேற்றுதல். பாடுதல் - இங்கே, உச்சரித்தல்.

ஷடக்ஷர மந்திரத்தை உச்சரித்துக் கையில் மலர்களை ஏந்தி வழிபடுகிறார்கள். அபிஷேக ஆராதனைகள் முடிந்த பிறகு கையில் மலரை வைத்துக்கொண்டு வேதமந்திரங் களைச் சொல்லி இறைவன் திருவடியில் சமர்ப்பிப்பது மரபு. இதை மந்திர புஷ்பம் என்று சொல்வார்கள். பூசையின் இறுதியில் நறுமலர் ஏந்தி வழுத்துதல் வழக்கமாதலின் அதை இங்கே இறுதியில் வைத்துச் சொன்னார்.

பெரிதுஉவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்; அதாஅன்று.

(இவ்வாறு அந்தணாளர்கள் வழிபடுவதை மிகவும் திருவுள்ளத்தில் உவந்து முருகன் திருவேரகத்தில் எழுந்தருளியிருப்பதற்கும் உரியவன்; அது மட்டும் அன்று.)

இன்னும் இடங்கள் உள்ளன என்று தொடர்கிறார்.

## ஏரகம் எது?

திருவேரகம் என்ற படைவீடு இன்னது என்பதைப் பற்றி முற்காலத்தும் பிற்காலத்தும் சில வேறுபாடான கருத்துக்கள் நிலவி வருகின்றன. திருமுருகாற்றுப்படைக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர், 'மலை நாட்டகத்து ஒரு திருப்பதி' என்று எழுதினார். சுப்பிரமணியம் என்று வழங்கும் தலத்தை அவர் எண்ணி அவ்வாறு எழுதியிருக்கக் கூடும் என்று சிலர் கூறுவர். நாஞ்சில் நாட்டில் உள்ள குமரகோயில் என்ற தலமே ஏரகம் என்று சிலர் எழுதி யிருக்கிறார்கள். நாஞ்சில் என்பது ஏரைக் குறிக்கும் சொல் என்றும், நாஞ்சில் நாட்டில் உள்ளதாதலின் ஏர் அகம் என்ற பெயர் அமைந்ததென்றும், இன்றும் ஈர உடையுடன் வழிபடும் முறை அங்கே உள்ளதென்றும் பிறவாறும் சில காரணங்களைக் காட்டுகின்றனர்.

ஆனால் அருணகிரிநாத சுவாமிகளுடைய கருத்து, காவிரிக்கரையில் சோழநாட்டில் இன்று சுவாமிமலை என்று வழங்கும் திருத்தலமே திருவேரகம் என்பது. அவருடைய திருப்புகழ்ப் பாக்கள் இதை நன்கு தெளிவுறுத்துகின்றன.

"ஏரக வெற்பெனும் அற்புத மிக்கசு
வாமிமலைப்பதி மெச்சிய சித்த."

"ஏரக வெற்பெனும் அற்புத மிக்கசு
வாமிமலைப்பதி நிற்கும் இலக்ஷண."

"தனி ஏரகத்தின் - முருகோனே
தருகா விரிக்கு வடபாரிசத்தில்
சமர்வேல் எடுத்த - பெருமாளே."

"குளிர்கா மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்
திருவே ரகத்தில் உறைவாய்."

"யாவும்அலை கொண்டுகைத்த காவிரிபுறம்பு சுற்றும்
ஏரகம்அ மர்ந்தபச்சை மயில்வீரா."

என்னும் திருப்புகழ்ப் பகுதிகளில் இதைக் காணலாம்.

ஆகவே சோழநாட்டுச் சுவாமிமலையே திருவேரகம் என்பதில் ஐயம் இல்லை.

ஏரகம் என்ற பெயர் வந்ததற்கு என்ன காரணம் என்பதை இங்கே ஆராய்வது பொருத்தமென்று எண்ணு கிறேன்.

அப்பர் சுவாமிகள் திருவாக்கில் ஏர் என்ற தலத்தின் பெயர் வருகிறது. தனிப்பதிகம் பெறாத தலமாகையால் அது வைப்புத்தலங்களுள் ஒன்றாகக் கொள்வதற்குரியது.

"இடைமரு தீங்கோய் இராமேச்சரம்
இன்னம்பர் ஏர் இடவை எமப்பேரூர்"

(க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்)

"இரும்புதலார் இரும்பூளையுள்ளார் ஏரார் இன்னம்பரார்."

(திருவீழிமிழலைத் திருத்தாண்டகம்)

என்ற இடங்களில் அத் தலத்தின் பெயர் வருகிறது.

கும்பகோணத்துக்கு வடக்கே இரண்டு மைல் தூரத்தில் ஏரகரம் என்றுள்ள ஊரே இந்த வைப்புத்தலம். இப்போது பேச்சு வழக்கில் ஏராரம், ஏராவரம் என்று வழங்குவர். அங்கே இரண்டு சிவாலயங்கள் உள்ளன. ஒன்று சிதைந்திருக்கிறது. அதிலுள்ள கல்வெட்டிலிருந்து அந்த ஊர், 'இன்னம்பர் நாட்டு

ஏராகிய மும்முடிச் சோழமங்கலம்' என்று வழங்கியதாகத் தெரியவருகிறது. ஆகவே அந்த ஊரே ஏர் என்ற வைப்புத்தலம் என்று உறுதியாகக்கொள்ளலாம். தஞ்சைக் கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்றிலும் இவ்வூர்ப் பெயர் வருகிறது. (தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 2: கல்வெட்டு, 70.)

இந்த ஊர் சுவாமி மலைக்கு ஈசானிய திசையில் இருக்கிறது. ஏர் என்னும் தலத்தின் அகத்தே இருப்பதால் ஏரகம் என்ற பெயர் வந்திருக்கலாம் அல்லது அக்காலத்தில் அந்தணர்கள் வாழும் அகரம் மிகப்பெரியதாக இருந்து அதனிடையே முருகன் கோயில் இருந்திருக்கலாம். ஏரைச் சார்ந்த அகரமாதலின் ஏரகரம் என்று வழங்கிப் பிறகு அதுவே ஏரகமாக மாறியிருக்கலாம். ஏர் என்ற வைப்புத் தலமும் ஏரகமும் அடுத்தடுத்து இருப்பதைப் பார்க்கும்போது இத்தகைய எண்ணங்கள் தோன்றுகின்றன.

நமக்கு அருணகிரியார் அருள்வாக்கே ஆணையாத லின் சுவாமி மலையே திருவேரகம் என்று கொண்டு போற்றிப் புகழ்ந்து வழிபடுவோமாக.

---

## குன்றக் குரவை

நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் முதலில் திருப்பரங் குன்றத்தைப்பற்றிச் சொன்னார். அவர் மதுரையில் வாழ்ந்தவர். அதன் அருகில் உள்ள திருப்பரங் குன்றத்திலே தொடங்கிக் கீழே திருச்சீரலைவாய்க்கு வந்து மீண்டும் வடமேற்காகச் சென்று திருவாவினன்குடியைக்காட்டி அப்பால் வடகிழக்காக வந்து திருவேரகத்தைப் பாடினார் கடைசியில் மதுரைக்கு அருகில் உள்ள பழமுதிர் சோலையில் வந்து முடிக்கப் போகிறார்.

முருகன் உள்ள இடங்கள் இவ்வளவுதானா? அவன் குறிஞ்சி நிலத்தலைவன். எல்லா மலைகளுக்கும் அவனே உரிமையாளன். பல மலைகளில் அவன் கோயில் கொண்டிருக்கிறான். பக்தர்கள் வந்து வணங்கும் வண்ணம் அங்கங்கே முருகனுக்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன. முருகனுக்குக் கோயில் இல்லாமல் வெறும் மலையாக இருந்தாலும் அங்கும் முருகனுடைய அருளாட்சி நிலவுகிறது. வேறு மூர்த்திகளின் கோயில்கள் இருந்தாலும் முருகனுடைய உரிமை போகாது. அந்த மூர்த்திகள் அங்கே குடிவந்தவர்கள். திணைக்குச் சொந்தக்காரன் என்ற உரிமையுடையவன் முருகன் தான்.

நான்கு படை வீடுகளைச் சொல்லிய நக்கீரர் இன்னும் ஒவ்வொரு மலையாக வருணித்துக் கொண்டே போகலாம். அதற்கு முடிவே இராது. கேட்கிற புலவனுக்குப் பொறுமை

இருக்க வேண்டும். நூலுக்கும் ஓர் அளவு வேண்டும் அல்லவா? ஆகவே, முருகன் எழுந்தருளியிருக்கும் பிற இடங்களில் பழமுதிர்சோலையை மட்டும் தனியே சொல்வதாகப் பிரித்துக் கொண்டார். மற்ற இடங்களில் மலைகள் எல்லாவற்றையும் ஒரு தொகுதியாகத் தொகுத்து, ''முருகன் ஒவ்வொரு குன்றிலும் தன் அருள் விளையாடலை நடத்துகிறான்'' என்றார். மற்ற இடங்களைப் பழமுதிர்சோலை மலையைப் பற்றிக் கூறி முடிப்பதற்குள் வரிசையாகவும் விரைவாகவும் அடுக்கிக் கூறுகிறார்.

மலைகளையெல்லாம் தொகையாகக்கூறி, ''குன்று தோறாடலும் நின்றதன் பண்பே'' என்று முடிக்கிறார். நக்கீரர் காலத்துக்குப் பின் திருமுருகாற்றுப்படையை ஆதாரமாகக் கொண்டு முருகனுக்கு உரிய படை வீடுகள் ஆறு என்று ஒரு வழக்கு உண்டாயிற்று. ஐந்து படை வீடுகள் தனித்தனியே அமைந்த தலங்கள். ஆனால் நான்காவது படை வீடோ தலங்களின் தொகுதி; எல்லாக் குன்றுகளும் சேர்ந்த தொகுதி அது.

குன்றுகளுக்குத் தலைவனாகிய முருகன் அவற்றில் தன்னுடைய வழிபாட்டை நடத்திவரும் பூசாரியாகிய வேலனுடைய பூசையை ஏற்றுக் கொண்டு அருள் பாலிக்கிறான். குன்றில் வாழும் குறவர்கள் களிகூத்தாடிப் போற்ற, அவர்களுக்கு நலம் செய்தருளுகிறான். இவற்றை நக்கீரர் குன்று தோறாடல் என்னும் பகுதியில் சொல்லுகிறார்; அவற்றை இனிப் பார்ப்போம்.

## வேலன்

முருகனுக்குப் பூசைபோடும் பூசாரி தன் கையில் வேலை வைத்துக்கொண்டு ஆவேசம் வந்து ஆடுவான். அதனால் அவனுக்கு வேலன் என்ற பெயர் உண்டாயிற்று.

உரையாசிரியர் படிமத்தான் என்று எழுதுவார்கள். படிமம் என்பது பிரதிமை அல்லது விக்கிரகத்தைக் குறிக்கும் சொல். முருகனுடைய திருவுருவத்தைப் பாதுகாத்துப் பூசை செய்வதால் பூசாரிக்கு அப்பெயர் வந்தது. ஆட்டைப் பலி கொடுத்து அவன் ஆடும் ஆட்டத்தை வெறியாட்டு என்று கூறுவார்கள். குறிஞ்சிநில மக்கள் தங்கள் வீட்டில் யாருக்காவது நோய் வந்தால் வேலனை அழைத்து முருகனுக்குப் பூசை போட்டு வெறியாட்டு எடுக்கச் சொல்வார்கள். அந்தப் பூசாரி வருந்தி அழைத்தால் முருகன் ஆவேச உருவத்தில் வந்து தங்களுக்கு நன்மை செய்வான் என்று குறிஞ்சி நில மக்கள் நம்பினர்.

வேலனாகிய பூசாரி முருகனுக்கு மாலை தொடுத்து வைக்கிறான். இக்காலத்தில் சில இடங்களில் கிராம தேவதைகளுக்குப் பூசை செய்யும் பூசாரிக்குப் பண்டாரம் என்று பெயர் வழங்குகிறது. பூத்தொடுக்கும் தொழிலுடைய வர்களுக்கும் அப்பெயர் வழங்கும். இரண்டையும் செய்யும் பண்டாரங்களும் உண்டு. வேலன் மரபில் வந்தவர்கள் இவர்கள்.

குறிஞ்சி நிலத்து வேலன் அந்நிலத்தில் கிடைக்கும் மலர்களைப் பறித்து மாலையாகத் தொடுக்கிறான். பச்சிலைக் கொடி என்றே ஒரு கொடி உண்டு. அது ஒரே பசுந்தழையாக மண்டிக் கிடக்கும். அந்தக் கொடியினால் பூசாரி மாலை கட்டுகிறான். நடுவில் சாதிக்காயை வைத்துக் கட்டுகிறான். அது நல்ல மணத்தை வீசுகிறது. தக்கோலம் என்பது ஒரு மரம். அதன் காய் பண்டங்களைப் பொதிந்து வைக்கும் புட்டிலைப்போல இருக்கும். அதனால் அதனை அம்பொதிப் புட்டில் என்று புலவர்கள் சொல்வார்கள். சாதிக்காயை இடையிட்டுக் கட்டியதைப் போலத் தக்கோலக்

காயையும் இடையிடையே வைத்துக் கட்டுகிறான். இது என்ன காய் மாலையா என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? பூமாலை தான்.

இனிமேல் மலர்களைச் சொல்கிறார். காட்டு மல்லிகையை வைத்துக் கட்டுகிறான். வெள்ளை வெளே ரென்றிருக்கும் கூதாளம் பூவையும் பிணைத்துக் கட்டு கிறான். இப்படித் தொடுத்த சிறுமாலை முருகன் தலையிலே அணிவதற்கு ஏற்ற கண்ணியாக இருக்கிறது.

கொடியிலே காய்களையும் மலர்களையும் வைத்துக் கட்டிய கண்ணியை அந்த மலைப்பக்கத்திலேதான் காணமுடியும். பூசாரி அன்புடன் கட்டும் இதை முருகன் விருப்புடன் ஏற்று அணிந்து கொள்கிறான்.

பைங்கொடி நறைக்காய் இடை இடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன.

(பச்சிலைக் கொடியில் நறுமணத்தையுடைய சாதிக்காயை நடுவிலே வைத்து, பூசாரியானவன், அழகிய பண்டங்களைப் பொதிதலையுடைய புட்டிலைப்போல விளங்கும் தக்கோலக் காயையும் விரவ வைத்து, காட்டு மல்லிகையோடு வெள்ளை நிறம் பெற்ற கூதாளம் மலரையும் வைத்துக் கட்டிய கண்ணியை அணிந்தவனாகி - எழுந்தருளுகிறான் முருகன் என்று சொல்ல வருகிறார்.

பைங்கொடி - பச்சிலைக்கொடி. நறைக்காய் - சாதிக்காய். இடுபு - இட்டு வைத்து. வேலன் - பூசாரி. அம் - அழகிய. பொதி - பொதிகை. புட்டில் - புட்டிலைப்போன்ற தக்கோலக்காய். விரைஇ - விரவி; கலந்து. குளவி - காட்டு மல்லிகை. கண்ணி - தலையில் அணியும் மாலை.)

## குன்றவாணர்

முருகன் எழுந்தருளப்போகிறான் என்ற பேரன்புடன் குறிஞ்சி நிலத்திலுள்ள குறவர்கள் மகிழ்ச்சி மீதூர ஆடுகிறார்கள். அவர்கள் எப்போதும் விலங்குகளைக் கொல்லும் கொடிய தொழிலை உடையவர்கள். வில்லும் அம்புமே அவர்களுடைய படைகள். வில் ஒரே சமயத்தில் பல பொருள்களைத் துளைத்துச் செல்லும்படி அம்பை விடும் தன்மையுடையது. அத்தகைய வில்லை வல்வில் என்று சொல்வது மரபு. பழங்காலத்தில் வல்வில் ஓரி என்ற வீரன் ஒருவன் இருந்தான். அவன் அம்பை ஒரு விலங்கின் மேல் விட்டால் அது அந்த விலங்கை வீழ்த்துவதோடன்றித் தொடர்ந்து பல விலங்குகளின் உடம்பில் ஊடுருவிச்சென்று அவற்றையெல்லாம் மாய்த்து விடுமாம். அதனால்தான் வல்வில் ஓரி என்ற சிறப்புப் பெயர்வந்ததாம். இராமனைக்கூட வல்வில் இராமன் என்று சொல்வார்கள்.

கொடுந்தொழிலையும் வல்வில்லையும் கொலையே புரிகின்ற தன்மையையும் உடைய வேடர்கள் இப்போது முருகனுடைய அன்பு மேலிட்டு அந்தக் கொடிய இயல்பு மாறிக் களிக்கூத்தாடுகிறார்கள்.

அவர்கள் மார்பில் சந்தனக் குழம்பு மணக்கிறது. அந்த மார்பு சந்தன நிறத்தால் பளபளவென்று இருக்கிறது. மலைக் காட்டில் சந்தன மரத்துக்குப் பஞ்சமா? நல்ல இனிய தேனைப் புளிக்கவைத்துக் கள்ளாக மாற்ற அதை நீண்ட மூங்கிற் குழாயில் இட்டு வைத்திருப்பார்கள். நாளாக ஆக அது நன்றாகப் புளித்து, உண்டவர்களுக்கு அதிகமான மயக்கத்தை உண்டாக்கும். அத்தகைய கள்ளைக் குறவர்கள் உண்டு மகிழ்ந்து ஆடுகிறார்கள்.

மலைகளில் சின்னச் சின்ன ஊர்கள் இருக்கின்றன. அங்குள்ள குறவர்கள் தம் சுற்றத்தாரோடு கள்ளைக் குடித்து

மகிழ்கிறார்கள். தொண்டகம் என்னும் பறையை அடித்துக் குரவை யென்னும் கூத்தை ஆடுகிறார்கள். கைகளைக் கோத்துப் பாடி ஆடுவதைக் குரவைக் கூத்து என்பார்கள். முருகனுடைய வரவை எண்ணிக் குறவர்கள் ஒரே ஆனந்தத்தில் மிதக்கிறார்கள். அவனுக்கு உரிய தொண்டகப் பறையை அடித்து அவன் புகழைப் பாடிக் குரவைக் கூத்து ஆடுகிறார்கள். அப்போது முருகன் எழுந்தருளுகிறான்.

நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடுஅமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர.

(நல்ல மணம் வீசும் சந்தனத்தை அணிந்த, நிறம் கிளர்ந்து தோன்றும் மார்பையும் கொடுமையான செயலை யும் வலிய வில்லையும் உடைய கொலை செய்யும் வேடர்கள், உயர்ந்த மூங்கிற் குழாயில் பல நாள் இருந்து முற்றி விளைந்ததும் தேனாலாயதுமாகிய கள்ளின் தெளிவை, மலையிலுள்ள சிற்றூர்களில் வாழும் தம் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து, தொண்டகம் என்ற சிறிய பறைக்கு ஏற்றபடி குன்றக் குரவையாகிய கூத்தை ஆட. சாந்து - சந்தனம். கேழ் - நிறம். அகலம் - மார்பு. கொலைஇய - கொலைபுரிகின்ற. கானவர் - வேடர். அமை - மூங்கில். தேக்கள் - தேனால் ஆனகள். தேறல் - தெளிவு. சிறுகுடி - குறிஞ்சி நிலத்து ஊர். கிளை - சுற்றம். தொண்டகம் - குறிஞ்சிநிலப்பறை. அயர - ஆட.)

குறவர்கள் குரவைக் கூத்தாட, வேலன் கட்டிய கண்ணியை அணிந்துகொண்டு பல மகளிரோடு முருகன் எழுந்தருளுகிறான். அவன் வரும் அந்தக் கோலத்தை இனிச் சொல்கிறார் நக்கீரர்.

## உடன் வரும் மகளிர்

முருகனுடன் அழகிய மகளிர் கூட்டம் ஒன்று வருகிறது. குறிஞ்சி நிலத்துக்குப் போவதென்றால் அந்த அணங்குகளுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. மயிலைப் போன்ற சாயலும் நடையும் உடைய அவர்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு வருகிறார்கள். முருகனோடு பல மயில்கள் வருவதுபோல இருக்கிறது அந்தக் காட்சி. அவர்கள் திருமேனி முழுவதும் மலர்களால் அமைந்த அலங்காரம் ஒளிர்கிறது. தலையிலே பூ, மார்பிலே பூ, இடையிலே பூ.

தலையில் கண்ணியாகச் சில மலர்களைச் செருகியிருக்கிறார்கள். நீர்ப் பூக்கள் அழகு செய்கின்றன. வண்டுகள் மொய்க்கும் மணத்தை உடையவை அவை. பேரரும்பாக இருக்கும்போதே பறித்து விரல்களாலே வலிய அலர்த்திக் கட்டித் தலையில் அணிந்திருக்கிறார்கள். ஒரே மாதிரியான பூக்கள் அல்ல; வெவ்வேறு வகையான மலர்களைக் கண்ணியாகத் தொடுத்து அணிந்திருக்கிறார்கள். கண்ணி கட்டுவதற்கு ஏற்றபடி காம்புகள் இருக்கின்றன அந்த மலர்களில்.

விரல்உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி.

(விரலாலே வலிய மலர்த்துதலால் மலர்ந்தவை, வெவ்வேறு வகையாக இருப்பவை, வாசனையும் காம்பும் உடையவை, ஆழமான சுனைகளிலே மலர்ந்தவை, வண்டுகள் படிந்து மொய்க்கும் தன்மையவை ஆகிய மலர்களால் தொடுத்த கண்ணியையும் - பிறவற்றையும் உடைய மகளிர் என்று சொல்ல வருகிறார். உளர்ப்பு - கோதுதல்; வலிய மலர்த்துதல். கால் - காம்பு. குண்டு - ஆழம்.)

பேரரும்புகளை இவ்வாறு விரலால் பிரித்து மாலையாகக் கட்டி அணிவது வழக்கம்; ''தண்கயத்து அயன்ற ஒண்பூங்குவளை, அரும்பலைத்து இயற்றிய சுரும்பார் கண்ணி, பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி'' *(180: 5-7)* என்று அகநானூற்றில் வருகிறது.

கண்ணியை அணிந்தது ஒரு பக்கம். கூந்தல் முழுவதையும் எடுத்துக் கட்டியிருக்கிறார்கள்; இரட்டையாகப் பிணைத்த மாலையைக் கொண்டு கட்டியிருக்கிறார்கள்.

இணைத்த கோதை அணைத்த கூந்தல்

(இரட்டையாகக் கட்டிய மாலையினால் கட்டிய கூந்தலையும் - உடைய மகளிர். கோதை - மாலை.)

குறிஞ்சி நிலத்துப் பெண்கள் தழை என்று கூறப்படும் ஒரு வகை ஆடையை அணிவார்கள். பலவகை மலர்களும் தளிர்களும் தழைகளும் இணைத்துக் கட்டியது அது. தழைகளை மிகுதியாக வைத்துக் கட்டுவதனால் அதற்குத் தழை என்ற பெயர் உண்டாயிற்று. முருகனுடன் வரும் மகளிரும் தழையாடையை இடையில் கட்டியிருக்கிறார்கள். கஞ்சாச் செடியின் பூவும் இலையும் அந்தத் தழையில் இருக்கின்றன. அவற்றை ஒன்றோடு ஒன்று இணைத்து முடிந்திருக்கிறார்கள். வெண் கடப்பம் பூவையும் சேர்த்துக் கட்டியிருக்கிறார்கள். மலர்களில் வண்டுகள் மொய்க் கின்றன; அவற்றில் உள்ள தாதை உண்ணுகின்றன. மலரும் தழையும் இணைந்து அமைந்த இந்தத் தழையாடை அவர்கள் இடையைச் சுற்றி உடுத்தும்படி பெரியதாக இருக்கிறது; குளிர்ச்சியுடையதாகவும் இருக்கிறது. பெருந்தண் மாத்தழை அது.

முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅந்த வால்இணர் இடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை.

(முடிந்திருக்கும் கஞ்சாவின் இலையையுடைய மணமுடைய பூவையும், சிவந்த அடியையுடைய வெண் கடம்பின் வெள்ளையான பூங்கொத்துக்களையும் இடை யிடையே இட்டு, வண்டுகள் வந்து மொய்த்துத் தாதுகளை உண்ணும்படி தொடுத்து அமைத்த பெரிய குளிர்ந்த தழையென்னும் ஆடையை - உடுத்துக்கொண்டு வரும் மகளிர் என்று சொல்ல வருகிறார்.

குல்லை - கஞ்சா. கால் - அடிமரம். மராம் - வெண் கடம்பு. வால்இணர் - வெள்ளையான பூங்கொத்து. இடையிடுபு - நடுவில் வைத்து. சுரும்பு - வண்டு. தழை - தழை யென்னும் ஆடை.)

பல மணிகளைக் கோத்த மேகலையை அழகாகத் தம்முடைய இரகசிய உறுப்பு மறையும்படி உள்ளே அணிந்திருக்கிறார்கள் இவர்கள். அதன் மேலே இந்தத் தழையாடையை உடுத்துக்கொண்டு மயிலைப்போல நடந்து வருகிறார்கள்.

திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு.

(திருத்தமாக அமைந்த மணிகளாலான வடங்களை யுடைய மேகலையை அணிந்த இரகசிய உறுப்பில் அசையும் படி (தழையை) உடுத்து, மயிலைக் கண்டாற் போன்று வருகின்ற மெத்தென்ற நடையையுடைய பெண்களோடு - முருகன் எழுந்தருளுகிறானாம்.

காழ் - வடம்; இங்கே மேகலைக்கு ஆயிற்று. திளைப்ப - அசைய. பொருந்த. உடீஇ - உடுத்து. மடநடை - மெத்தென்ற நடை.)

கண்ணியையும் கூந்தலையும் தழை யாடையையும் உடைய அழகிய மகளிரோடு முருகன் குறிஞ்சி நிலமக்களுக்கு அருள்புரியும் பொருட்டு எழுந்தருளுகிறான்.

## முருகன் வருகை

அவன் பேரழகன். வெவ்வேறு கோலம் கொண்டு அன்பர்களுக்கு அருள் புரிகிறவன். அவன் திருமேனி வண்ணம் முதலியவற்றையும் அவன் கொள்ளும் கோலங்களையும் சொல்லுகிறார் நக்கீரர்.

முருகன் செந்நிற முடையவன், ''குங்கும ரக்த வர்ணம்'' என்று அவனுடைய தியான சுலோகம் சொல்லும். ''பவழத் தன்ன மேனி'' (குறுந்தொகை) என்று அந்தச் செம்மேனிக்குப் பவளத்தை உவமை கூறுவர் ஒரு புதல்வர். அவன் உடுத்திருக்கும் ஆடையும் சிவப்பானது. ''குன்றி யேய்க்கும் உடுக்கை'' (குறுந்தொகை) என்று அதற்குக் குன்றிமணியின் சிவப்பை உவமை கூறுவர்.

அவனுடைய காதில் அசோகந்தளிர் தொங்குகிறது. காதில் அசோகந்தளிரைச் செருகிக் கொள்ளும் வழக்கத்தை முன்பே பார்த்தோம். அதுவும் சிவப்பாகவே இருக்கும்.

செய்யன், சிவந்த ஆடையன், செவ்வரைச்
செயலைந் தண்டளிர் துயல்வரும் காதினன்.

(சிவந்த திருமேனியை உடையவன், செந்நிறம் பெற்ற ஆடையை அணிந்தவன், செம்மையான அடிமரத்தை யுடைய அசோகினது குளிர்ச்சியான தளிர் அசையும் காதுகளை உடையவன் - ஆக எழுந்தருளுகிறான்.

அரை - அடிமரம். செயலை - அசோகு. துயல்வரும் - அசையும்.)

இடையில் கச்சைக் கட்டிக்கொண்டிருக்கிறான். காலில் வீரக்கழலை அணிந்திருக்கிறான். வெட்சியினால் ஆகிய சிறிய கண்ணியைத் தலையிலே சூடியிருக்கிறான்.

கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்.

(கச்சை யுடையவனாகி, கழலை அணிந்தவனாகி, வெட்சிக் கண்ணியைச் சூடியவனாகி - வருகிறான். செச்சை - வெட்சி.)

அவன் இசையை விரும்புபவன்; இசையை எழுப்புபவன். பலவகை இன்னிசைக் கருவிகளை அவன் வாசிக்கிறான். கண்ணனைப்போல அவனும் புல்லாங் குழலை வாசிக்கிறான். கொம்பை ஊதுகிறான். இப்படியே பல சிறிய வாத்தியங்களை அவன் வாசிக்கிறான். கீத வாத்திய விநோதனாக எழுந்தருளுகிறான்.

குழலன், கோட்டன், குறும்பல் லியத்தன்.

(புல்லாங்குழலை வாசிக்கிறவன், கொம்பை ஊதுகிறவன். சிறிய பல வாத்தியங்களை வாசிக்கிறவனாய் - வருகிறான். கோடு - ஊது கொம்பு, பல்லியம் - பல இசைக் கருவிகள்.)

முருகனுக்குப் பலவகை வாகனங்கள் உண்டு. முன்பு அவன் யானையின்மேல் எழுந்தருளி வந்த காட்சியைக் கண்டோம். இப்போது ஆட்டுக்கிடாய் வாகனத்தில் வருகிறான்; மயில் வாகனத்தில் எழுந்தருளுகிறான்.

நாரதர் இயற்றிய யாகத்திலிருந்து வந்த ஆடு அது. அது உலகையே நிலை கலங்கும்படி செய்தது. முருகன் வீரவாகு தேவரை விடுத்து அதை அடக்கிக் கொண்டு வரும்படி செய்து அதன்மேல் ஊர்ந்தருளுகிறான்.

முருகனுக்கு இயல்பாகவே மயில் வாகனம் உண்டு. எல்லா மந்திரங்களுக்கும் மூலமாகிய பிரணவமே மயிலாக நின்று முருகனுக்கு வாகனமாயிற்று. இதுவே முதல் மயில் வாகனம்.

"ஆன தனிமந்த்ர ரூப நிலைகொண்ட
தாடு மயில்."

என்பது திருப்புகழ். சூரனோடு முருகன் போர் செய்த போது ஆயிரங் கண்ணுடைய இந்திரன் மயிலாக மாறி முருகனுக்கு வாகனமாகி அவனைத் தாங்கினான். அந்தப் போரின் இறுதியில் வேலால் இருகூறாகிய சூரன் மயிலும் சேவலுமானான். அந்த மயிலை வாகனமாகக் கொண்டு ஊர்ந்தருளினான் முருகன்.

முருகனுடைய திருக்கரத்தில் நாத தத்துவமே கோழியாக இருக்கிறது. சூரசங்காரத்தின்போது சூரனுடைய ஒரு கூறு சேவலாக மாற அதையும் வெற்றிக் கொடியாக முருகன் ஏந்தினான்.

முருகன்நெட்டையானவடிவமுடையவன். நெடுவேள் என்று சொல்வார்கள். தோள்வளைகளை அணிந்து கொண்டிருக்கிறான். இந்த அழகிய கோலத்தோடு அவன் வருகிறான்.

தகரன், மஞ்ஞையன், புகரில் சேவலங்
கொடியன், நெடியன், தொடியணி தோளன்.

(ஆட்டின்மேல் ஏறுபவனாய், மயிலை ஊர்ந்தவனாய், குற்றமற்ற சேவற் கொடியை ஏந்தியவனாய், நெடிய திருவுருவமுடையவனாய், வாகுவலயங்களை அணிந்த தோள்களையுடையவனாய் - எழுந்தருளுகிறான். தகர் - ஆடு. புகர் - குற்றம். தொடி - வளை.)

சேவல் என்பது மயிற்சேவலையும் குறிப்பதாகக் கொள்ளலாம். முருகனுக்கு மயிற்கொடியும் உண்டு.

மலைகளிலும் அவற்றைச் சார்ந்த இடங்களிலும் குறிஞ்சி நில மக்கள் வழிபட்டு நடத்தும் பூசையை ஏற்றுக்

கொண்டு, முருகன் எழுந்தருளும் அழகைச் சொல்லிக் கொண்டு வருகிறார் நக்கீரர். அவனுடன் பல அழகிய மகளிர் வருகிறார்கள். சிலர் இனிய குரலெழுப்பிப் பாடுகிறார்கள். சிலர் கூடி ஆடுகிறார்கள்.

பாடுகிறவர்களின் குரலின் இனிமையை எப்படி வருணிப்பது! ஒரு பெண் பாடியதைச் சீவக சிந்தாமணி ஆசிரியர் கூறுகிறார். ''இவள் பாடினாளோ, அல்லது வீணைதான் நாவைப் பெற்றுப் பாடியதோ!'' என்று யாவரும் உருக அவள் பாடினாளாம்.

''இருங்கடற் பவளச் செவ்வாய்
திறந்திவள் பாடினாளோ
நரம்பொடு வீணை நாவின்
நவின்றதோ என்று நைந்தார்.''

அவள் குரலுக்கும் வீணையின் இசைக்கும் வேறுபாடு தெரியாமல் அவ்வளவு இனிமையும் கார்வையும் உடைய தாக இருந்ததாம். இங்கே முருகனுடன் வருகிறவர்களும் அப்படித்தான் பாடுகிறார்கள். வீணையின் நரம்பிலிருந்து இசை தொகுதியாக எழுந்தால் எப்படி இருக்கும். அவ்வளவு இனிமையாக இருக்கிறது அந்த மகளிரின் இசை. அவர்கள் கூட்டமாக இருந்து பாடுகிறார்கள். முருகனுக்கு இசை யென்றால் விருப்பம் அதிகம்.

நரம்புஆர்த் தன்ன இன்குரல் தொழுதியொடு.

(யாழின் நரம்பு ஒலித்தாற்போன்ற இனிய குரலை எழுப்பிப் பாடும் மகளிர் கூட்டத்தோடு - முருகன் எழுந்தருளுகிறான். ஆர்த்தன்ன - ஆர்த்தாலன்ன; ஒலித்தாற் போன்ற. தொழுதி - தொகுதி; கூட்டம்.)

'இவர்கள் தன்னைச் சேவித்துப் பாடும் மகளிர்' என்று இனம் காட்டுவர் நச்சினார்க்கினியர்.

முருகன் இடையிலே கட்டிய ஆடை நல்ல நிறமும் நயமும் மணமும் உடையதாக இருக்கிறது. சிறிய சிறிய புள்ளிகளை உடையதாய், வாசம் ஊட்டியதாய், மிகவும் மெல்லியதாய் இருக்கும். அது நிலத்திலே கிடந்து புரளுகிறது.

வணக்கமுள்ளவர்கள் ஆடைகளை மடக்கிக் கொண்டு தலைவர்கள் முன் நிற்பார்கள். தலைவர்களோ தம் ஆடை நிலத்தில் புரளும்படி உடுப்பார்கள். மேல் நாட்டு அரசர்கள், அரசிகள் இவ்வாறு தம் ஆடை நிலத்தில் புரளும்படி உடுத்திருப்பதைப் படங்களில் காணலாம். அவர்கள் நடக்கும்போது ஆடை நுனிகளை எடுத்துச் செல்லச் சில ஏவலர்கள் அருகில் இருப்பார்கள்.

"நிலந்தோய்பு உடுத்த நெடுநுண் ணாடையர்."

என்று இத்தகைய பெருமக்களைப் பற்றிய பெருங்கதை என்னும் பழங்காவியம் கூறும்.

முருகன் பெருமதிப்புடைய பெரிய தலைவனாகை யால் அவன் இடையிலே கட்டிய துகில் நிலத்திலே பொருந்திப் புரளுகிறது.

குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கிற் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்.

*(சிறிய புள்ளிகளை உடையதாய் மணமும் தண்மை யும் மென்மையும் உடையதாய், இடுப்பிலே கட்டிய, நிலத்திலே புரளுதலையுடைய துகிலை உடையவன்.*

*பொறி - புள்ளி. சாயல் - மென்மை. மருங்கு - இடை. நேர்பு - பொருந்திப் புரளுதல்.)*

குறும்பொறி என்பதற்கு உதரபந்தம் என்று பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர். 'இடையிலே இறுகக் கட்டிய உதர பந்தத்தின் மேலே உடுப்பதாக உட்கொண்ட, நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்தி நறிய குளிர்ந்த

மென்மையை உடைத்தாகிய துகிலினையுடுத்து' என்று அவர் பொருள் எழுதுவர்.

## தலைக்கை தருதல்

முருகன் அழகும் வீரமும் உடையவன். அவனுடைய புயங்கள் விசாலமானவை; முழவைப்போலப் பருத்தவை. பல மகளிர் கூடி ஆடும்போது அவர்களுக்குத் தோள் கொடுத்து முருகனும் ஆடுகிறான். அவன் தோளும் கையும் வன்மையை உடையவை. மகளிர் தோள்கள் மென்மையுடையவை. மெல்லியலாராகிய அவர்கள் பெண்மான்களைப்போல இருக்கிறார்கள். அவர்கள் ஒருவர் கையை ஒருவர் கோத்துக் கொண்டு குரவைக்கூத்து ஆடுகிறார்கள். அப்படிப் பல மகளிர் ஆடும்போது ஓர் ஆடவன் அவர்களுக்கு முதல்வனாக நின்று அவர்களுடன் கை கோத்து ஆடுவான். அவன் முதலில் நின்று கை தருவதைத் தலைக்கை தருதல் என்று கூறுவார்கள்.

முருகன் குரவைக் கூத்தாடும் மகளிருக்குத் தலைக்கை தந்து ஆடிக்கொண்டே வருகிறான். ஆடலிலும் பாடலிலும் மகிழும் பெருமான் அவன்.

முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்றோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து.

(முழவைப்போலப் பெருத்த விசாலமான கைகளால் ஏற்ற வண்ணம் ஏந்திக் கொண்டு, மெல்லிய தோளையுடைய மான்போன்ற பல மகளிரைத் தழுவி, அவர்களுக்குத் தலைக்கை கொடுத்து.

முழவு - மத்தளம். தடக்கை - விசாலமான கை; குரவைக் கூத்துக்கு ஏற்ப வளைந்த கை என்றும் சொல்லலாம். இயல - பொருந்த; குரவைக் கூத்து நன்கு நடைபெற என்றும் பொருள் கொள்ளலாம். ஏந்தி - மகளிர் கையைத் தாங்கி. பிணை - பெண்மான்; இங்கே ஆகு பெயராய்க் குரவைக் கூத்தாடும் மகளிரைக் குறித்தது. தழீஇ - தழுவி. தலைத்தந்து - தலைக் கையைத் தந்து.)

'மென்றோட் பல்பிணை இயல முழவுறழ் தடக்கையின் தழீஇ ஏந்தித் தலைத்தந்து' என்று கூட்டி, 'மெல்லிய தோளினையுடைய பலவாகிய மான்பிணை போலும் மகளிர் குரவை ஆடி அசைய, தன்னுடைய முழவையொத்த பெருமையையுடைய கையினாலே அவர்கள் கையினைத் தழீஇ எடுத்துக் கொண்டு முற்கை கொடுத்து' என்று உரை எழுதுவர் நச்சினார்க்கினியர்.

'இவர்கள் மெய்தீண்டி விளையாடுவதற்குரிய மகளிர்' என்று அவர் விளக்குவார்.

பல மகளிர் கையைக்கோத்துக் கொண்டு ஆடுவதைக் குரவைக்கூத்து என்பர். குறிஞ்சி நிலத்தில் ஆடுவதைக் குன்றக் குரவையென்றும், முல்லை நிலத்தில் ஆடுவதை ஆய்ச்சியர் குரவையென்றும் கூறுவர். ஆடலும் பாடலும் கந்தனுக்கும் கண்ணனுக்கும் மிகவும் உகந்தவை. ஆதலின் அவர்களைத் தெய்வமாக உடைய குறிஞ்சியிலும் முல்லையிலும் குரவைக் கூத்தை மிகுதியாகக் காணலாம். சிலப்பதிகாரத்தில் குன்றக் குரவையும், ஆய்ச்சியர் குரவையும் வருகின்றன.

"குரவை என்பது கூறுங் காலைச்
செய்தோர் செய்த காமமும் வென்றியும்
எய்தக் கூறும் இயல்பிற் றாகும்."

என்பது பழைய சூத்திரம். குரவையாடுபவர்கள் காதலையும் வீரத்தையும் பாராட்டிப் பாடுவார்கள் என்று இதனால் தெரிகிறது.

"குரவை என்பது எழுவர் மங்கையர்
செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்து
அந்நிலைக் கொப்பநின் றாடலாகும்."

என்பது மற்றொரு பழைய சூத்திரம்.

"குரவைக் கூத்தே கைகோத் தாடல்."

என்பது திவாகரம்.

கலித்தொகையில் மகளிர் ஆடும் கூத்தில் ஆடவன் தலைக்கை தந்து ஆடும் காட்சியைக் காணலாம்.

"நிரைதொடி நல்லவர்
துணங்கையுள் தலைகொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின்
காழகம்."

(கலித்தொகை, 73.)

பெருவீரனாகிய முருகன் குரவைக்கூத்தாடும் மகளிருக்குத் தலைக்கை தந்து அவர்களுடைய கூத்து நன்கு நடைபெற உதவுகிறான்.

இவ்வாறு பலவகைக் கோலம் கொண்டு, பல இசைக் கருவிகளை இசைத்து, பாடும் மகளிருடனும் ஆடும் மகளிருடனும் சேர்ந்து முருகன் மலைகள் எல்லாவற்றிலும் திருவிளையாடல் புரிகிறான்.

குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே; அதாஅன்று.

(ஒவ்வொரு மலையிலும் திருவிளையாடல் புரிவதும் நிலைபெற்ற அவனுடைய இயல்பாகும்; அதுமட்டும் அன்று. நின்ற தன் பண்பே என்று பிரிக்க வேண்டும். தன் என்றது அவனுடைய என்ற பொருளையுடையது.)

மலைகள் பல; அவை குறிஞ்சித் திணையின்பாற் படும். அவற்றையெல்லாம் தனக்குரியனவாகக் கொண்டு ஆட்சி புரிபவன் முருகன். ஆதலின் அந்தக் குன்றுகளில் அவன் பலபல கோலத்துடன் வருகிறான். பல விளையாடல்களை நிகழ்த்துகிறான். அதனால் அவனுடைய அழகும், அலங்காரமும், வீரமும், காதலும், இசைவன்மை யும், இசை விருப்பமும், ஆடல் வன்மையும், ஆடல் விருப்பமும், அன்பர்களுக்கு அருள்செய்யும் பேரருளும் புலனாகின்றன.

## பல குன்று

இப்படிப் பல மலைகளிலும் அவன் ஆடும் இயல்பைப் புலப்படுத்திய நக்கீரர் திருவாக்கை அடிப்படை யாகக் கொண்டு, எல்லா மலைகளையும் ஒரு தொகுதியாக்கி, குன்று தோறாடல் என்ற தொகுதிப் படைவீடாக அன்பர்கள் போற்றலாயினர்.

குன்றுதோறாடல் என்பதற்கு ஒவ்வொரு குன்றிலும் விளையாடுதல் என்றே பொருள் கொள்ளவேண்டும், ஆடல் என்பது தொழிற்பெயர். அருணகிரிப் பெருமான்,

''குன்றுதொ றாடல் மேவு பெருமாளே''
''குன்றுதோ றாடல் மேவிய பெருமாளே.''

என்று பாடிய இடங்களிலும் ஆடலை மேவியவன் என்றே பொருள் கொள்ளும்படி வைத்தார். ஆறுபடை வீடுகளையும் பாடவந்த கச்சியப்ப சிவாசாரியார்.

''குன்றுதோ றாடிய குமரற் போற்றுவோம்''

என்று பாடினார்.

தனியே பெயராகச் சொல்லும்போது இந்தப் படை வீட்டைப் 'பலகுன்று' என்று சொல்வதே பொருத்தம் என்று தோன்றுகிறது. அருணகிரிநாத முனிவர்,

''பலகுன்றிலும் அமர்ந்த பெருமாளே.''
''பலமலை யுடைய பெருமாளே.''

என்று பாடியிருப்பதும் இங்கே நினைவிற்கொள்ளுவதற் குரியது.

---

# முருகன் உறையும் இடங்கள்

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி, திருவேரகம் என்னும் நான்கு படை வீடுகளைப் பற்றிச் சொல்லிப் பிறகு எல்லாக் குன்றுகளையும் ஒரு தொகையாகக் கூறிய நக்கீரர் கடைசிப் படைவீடாகிய பழமுதிர் சோலையைப்பற்றிச் சொல்ல வருகிறார். எந்த நூலுக்கும் ஒரு தொடக்கம், நடு, முடிவு என்று மூன்று பகுதிகள் இருக்கும். ஒரு புலவனுக்கு மற்றொரு புலவன் வழி காட்டுவதாக அமைந்தது திருமுருகாற்றுப்படை. அந்தப் புலவனை விளித்து, ''நீ முருகன் திருவடியை அடையவேண்டும் என்ற ஆர்வத்தோடு புறப்பட்டிருக் கிறாயே; நல்ல காரியம் அப்பா. நீ உறுதியாக அவன் திருவருளைப் பெறுவாய்'' என்று முன்னே கூறிப் பிறகு அவன் இருக்கும் இடங்களைச் சொல்லத் தொடங்கினார் நக்கீரர். இந்த முன்னுரையையும் முதற்படை வீடாகிய திருப்பரங்குன்றத்தையும் இணைத்துச் சொன்னார். இடையில் மற்றப் படைவீடுகளையும் சொன்னார்.

இறுதியில் நூலை முடிக்க வேண்டும் அல்லவா? ''நான் சொன்ன இந்தத் தலங்களோடு வேறு பல இடங்களிலும் முருகன் எழுந்தருளியிருக்கிறான். நீ எங்கே உன் அன்பின் திறத்தால் அவனைக் காண முடிகிறதோ அங்கே உள்ளம் உருகி அவனைத் துதிப்பாயாக. உன்னுடைய உண்மை அன்பு நிலையை அவன் உணர்ந்து உனக்குக் காட்சி தந்து யாரும் பெறுதற்கரிய பரிசாகிய பேரின்பத்தைத் தருவான்'' என்று கூறி

நிறைவேற்ற வேண்டும். அதை ஆறாவது படைவீடாகிய பழமுதிர் சோலையைப் பற்றிச் சொல்லும் இறுதிப் பகுதியில் அமைக்கிறார். முன்பு இன்ன தலத்தில் இருப்பதற்குரியவன் என்று சொன்னவர், அதே வாய்பாட்டில் பழமுதிர் சோலையைச் சொல்லவில்லை. 'பழமுதிர் சோலை மலையில் எழுந்தருளியிருக்கும் முருகன் உனக்குப் பெறலரும் பரிசாகிய இன்பத்தைத் தருவான்' என்ற முறையில் கூறி, நூலை முற்றுவிக்கிறார்.

இந்த இறுதிப் பகுதியில் முருகன் உறையும் பல்வேறு இடங்களையும், அவனை ஏத்தும் முறையையும், அவன் காட்சி தரும் சிறப்பையும் கூறிவிட்டுப் பழமுதிர்சோலை மலையின் இயற்கை வளத்தை வருணிக்கிறார்.

## திருவிழா நடைபெறும் இடம்

முருகன் தனக்கென்று கோயில் கட்டி வழிபடும் இடங்களில் உறைந்து அன்பர்களுக்கு நன்மை செய்கிறான். அந்த இடங்களில் மட்டுந்தானா அவன் இருக்கிறான்? அவன் பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தன். அவன் கண்ணைக் கவரும் அழகுருவம் படைத்தவன். அழகு ததும்பும் இடங்களிலெல்லாம் அழகனாகிய முருகனுடைய மணம் கமழும். மலர்களையும் மற்றப் பண்டங்களையும் வைத்து நடத்தும் விழாக்களில் அவன் சாந்நியத்தைக் காணலாம்.

தமிழ் நாட்டில் பொதுவாக விழா என்றாலே தெய்வத்துக்குச் செய்யும் திருவிழாவைத்தான் குறிக்கும். விழாவில் நறுமணப் பொருள்களும் மலரும் எங்கும் பரவிச் சிதறிக் கிடக்கும். மக்கள் இனிய உணவுகளை உண்டு விருந்து அயர்வார்கள். அழகாக இருக்கும் இடத்தை, 'இது விழாக் களத்தைப் போல இருக்கிறது' என்று கூறுவது புலவர்கள்

வழக்கம். மகிழ்ச்சியையும் வளப்பத்தையும் தெய்வ உணர்ச்சியையும் கொண்டு விளங்குவது விழா.

ஒவ்வோர் ஊரிலும் விழா நடக்கும். அந்தத் தெய்வத்திற்கு ஏற்பத் தனித்தனியே சில முறைகள் உண்டு. சிறிய சிறிய ஊர்களில் முருகனுக்கு விழா எடுக்கிறார்கள். குறிஞ்சி நிலக் கடவுளாகிய அவனுக்கு அந்நிலத்தில் விளையும் தினையரிசியில் விருப்பம் அதிகம். தேனும் தினைமாவும் வள்ளி நாயகி தர உண்டவன் அல்லவா? ஆதலால் அவனை வழிபடும்போது தினையரிசியைக் கொண்டு வழிபடுகிறார்கள். நாம் அட்சதையையும் மலரையும் கலந்து வைத்து வழிபடுகிறோம். மலை நாட்டினர் தினையரிசியையும் பூவையும் விரவி வைத்துப் பூசிக்கிறார்கள். அந்த நிலத்து வழக்கப்படி ஆடுவெட்டிப் பூசை போடுகிறார்கள். விழா ஆரம்பிக்கும் முன்பே கொடியேற்றம் நடக்கிறது. எங்கே விழா நடைபெறுகிறதோ அங்கே முதலில் கோழிக் கொடியை நட்டு விழாவுக்குரிய அமைப்பை உண்டாக்குகிறார்கள். இப்படி ஒவ்வோர் ஊரிலும் நடைபெறுகிறது. அந்த விழாக்களை நடத்து வோருடைய அன்பை உணர்ந்து முருகன் அவ்விடங்களில் எழுந்தருளி நலம் செய்கிறான். அங்கே அவனைக் காணலாம்.

சிறுதினை மலரொடு விரைஇ, மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்.

(சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து வைத்து, ஆட்டை அறுத்து, கோழிக்கொடியோடு விழாவுக்குரிய களத்தை நிறுவி, ஒவ்வோர் ஊரிலும் நடத்த மேற்கொண்ட சிறப்புப் பொருந்திய விழாக்களிலும் - முருகன் உறைவான் என்று சொல்ல வருகிறார்.

விரைஇ - விரவி; கலந்து. மறி - ஆடு. வாரணக் கொடி - கோழிக்கொடி. வயின்பட - இடம் உண்டாக. நிறீஇ - நிறுவி; அமைத்து.)

தினை என்பதற்குப் பிரப்பரிசி என்று உரை கூறுவர் நச்சினார்க்கினியர்.

இது ஊரார் எல்லாம் சேர்ந்து நடத்துகிற விழா. பல காலமாக ஆண்டுதோறும் வழக்கமாக இந்த விழா நடந்து வருகிறது. மக்கள் திரள் திரளாகக் கூடி விழாவைக் கண்டு களிக்கிறார்கள்; முருகனை வழிபடுகிறார்கள். இவர்கள் பக்தி ஓரளவுதான்.

## பக்தர்கள் ஏத்தும் இடம்

ஆனால் விழாவை எதிர்பாராமல் எப்போதும் முருகனை நினைந்து உருகி வாழ்த்தும் பக்தர்கள் இருக்கிறார்களே, அவர்களுடைய அன்பு உயர்ந்தது, அவர்கள் முருகனுடைய அருளுக்காக ஏங்கி நிற்பவர்கள். அவன் அருளைப் பெற வேண்டும் என்ற பேரார்வம் உடையவர்கள். மற்றப் பொருள்களிடத்தில் விருப்பம் கொள்ளாமல் அவன் அருளொன்றையே பெறும்பொருட்டு ஏசற்று நிற்பவர்கள். அவர்கள் அன்பு சாமானியமானது அன்று. அது முறுகிய அன்பு. ஆர்வம் என்பது அன்பு முறுகிய நிலை.

"அன்பீனும் ஆர்வமுடைமை."

என்று திருவள்ளுவர் ஆர்வம் அன்பு கனிந்த பிறகு உண்டாவது என்று சொல்கிறார்.

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக" என்பது ஆழ்வார் திருவாக்கு. அன்பு பொதுவானது. ஆர்வம் சிறப்பானது. அன்பு இலையானால் ஆர்வம் மலராகும். அன்பு மலரானால் ஆர்வம் காயாகும். அன்பு காயானால் ஆர்வம்

கனியாகும். விழாவில் இறைவனைத் தரிசிக்கும் அன்பர்கள் பலர் கூடுகிறார்கள். ஆனால் ஆர்வமுடைய வர்கள் எல்லாக் காலத்திலும் அவனை நினைந்து உருகி அவன் அருளைப்பெறுவதே குறிக்கோளாக நிற்பார்கள். அன்புடையவரை அன்பர் என்றும், ஆர்வம் உடையவர்களை ஆர்வலர் என்றும் சொல்வர். அன்பர்கள் பக்தர்கள்; ஆர்வலரோ முறுகிய பக்தர்கள். திருச்சீரலைவாயைச் சொல்லும் பகுதியில் முருகனுடைய ஆறு திருமுகங்களைச் சிறப்பிக்கும் இடத்தில், அவனுடைய முகம் ஒன்று ஆர்வலர்களுக்கு வரம் கொடுப்பது என்று முன்பே சொன்னார்.

"ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே."

அங்கே ஆர்வலர் என்ற சொல்லைக் கண்டோம். மறுபடியும் இப்போது ஆர்வலர்களை நினைக்கிறார் நக்கீரர். முறுகிய பக்தர்களாகிய ஆர்வலர்கள் எங்கெங்கே எவ்வெப்போது துதித்து வழிபடுகிறார்களோ, அந்த அந்த இடங்களில் முருகன் சென்று அருள்தர முந்துவான்.

"செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியும்செங் கோடைக் குமரனென
எங்கே நினைக்கினும் அங்கேவந் தென்முன் எதிர்நிற்பனே."

என்று அருணகிரியார் கந்தர் அலங்காரத்தில் பாடுகிறார்.

விழா எடுக்கும் களங்களில் பொதுவான நிலையில் எழுந்தருளும் முருகன், தன் அருளன்றி வேறு நோக்கமின்றி எங்கும் ஆர்வலர்கள் வழிபடும் இடங்களிலும் இருப்பான்.

ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்.

(அன்பு முறுகி ஆர்வமாகிய ஆர்வலர்கள் துதித்து வழிபட விரும்பிச் செல்லும் இடங்களிலும்.)

## வெறி அயர் களன்

முருகனைப் பூசிப்பதே தொழிலாக உடையவன் வேலன். அவன் தன் கையில் வேலை வைத்துக்கொண்டு ஆடுவதனால் வேலன் என்று பெயர் பெற்றான். அந்தப் பூசாரி கோயிலில் பூசை செய்வான். யாருக்கேனும் தீங்கு வந்ததானால் அதை மாற்றுவதற்கு அவர்கள் வீட்டுக்கே சென்று பூசை போடுவான். அவன் ஆட்டுக்கிடாயை வெட்டிச் செய்யும் பூசைக்கு வெறியாட்டு என்று பெயர். அவன் எங்கே பூசை போட்டாலும் அங்கேயும் முருகன் எழுந்தருளுவான்.

வேலன் தைஇய வெறிஅயர் களனும்.

(பூசாரி அமைத்த வெறியாடுகின்ற இடத்திலும். தைஇய - அலங்கரித்து அமைத்த. வெறி - ஆட்டை அறுத்துச் செய்யும் பூசை. களம் - இடம்.)

''வேலன் புனைந்த வெறியயர் களம்.''

(குறுந்தொகை, 53),

''வேலன் வெறியார் வியன்களம்.'' (அகநானூறு, 98)

''வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து.''

(சிலப்பதிகாரம்.)

என்று பழைய நூல்கள் இந்த வெறியயர் களத்தைப் பற்றிக் கூறுகின்றன.

'பிள்ளையார்* வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின் வேலன் என்றார்' என்று நச்சினார்க் கினியர் விளக்குவார்.

---

*பிள்ளையார் - முருகன்.

பலமக்கள் கூடி விழா எடுக்கும் இடம். அன்பிற் சிறந்தவர்கள் தனியே இருந்து வழிபடும் இடம். பூசையையே தொழிலாகக்கொண்ட பூசாரி பூசை போடும் இடம் என்ற மூன்றும் முருகனை நினைப்பூட்டுவதற்குரிய செயற்கை வடிவங்களையோ, படிமங்களையோ உடையவை. இவற்றைச் சொல்லிவிட்டு, அழகுள்ள இயற்கையான இடங்களிலும், மக்கள் செயற்கையாக அமைத்த அழகிய இடங்களிலும் முருகன் எழுந்தருளி யிருக்கிறான் என்று சொல்ல வருகிறார் நக்கீரர்.

## இயற்கையிலும் செயற்கையிலும்

இயற்கை யெழில் நிரம்பியது காடு; அடர்ந்த மரச் செறிவும், மலரும் காயும் கனியும் குலுங்கும் வளமும் உடையது. அது மழையின் உதவியால் இயற்கையாக வளர்வது. மலைக் காடானாலும், முல்லை நிலத்துக் காடானாலும் முருகன் அங்கே எழுந்தருளியிருப்பான்.

மக்கள் தங்கள் ஊரைச் சார வளர்ப்பது சோலை. தாங்கள் விரும்பிய மரங்களை நட்டு வளர்த்து, வேண்டும் போது அங்கே சென்று இளைப்பாறுவார்கள். ஊர்கள் தோறும் சோலைகள் இருப்பதும், அங்கே சென்று தங்கி மாதரும் ஆடவரும் இன்புறுவதும் சிறந்த நாகரிக வாழ்வுக்கு அடையாளங்கள். பொழிலாட்டு என்பது சிறந்த சமுதாயத்துக்குரிய விளையாட்டு. காவியங்களில், மக்கள் சோலையில் சென்று மனம் போனபடி மகிழ்ச்சியுடன் விளையாடுவதைப் புலவர்கள் வருணிப்பார்கள். கம்பரும் பொழிலாட்டுப் படலத்தை அமைத்திருக்கிறார். காப்பியங்களுக்குரிய இலக்கணங்களில் ஒன்று அது. ஆகவே, வளவாழ்வு பெற்றவர்கள் மகிழ்ந்து தங்குவதற் காகத் தாமே விரும்பி அழகுபெற அமைப்பது சோலை; அதைக் கா என்று சொல்வர்.

இயற்கையில் அமைந்த காட்டிலும், மக்கள் விரும்பிச் செயற்கையாக அமைத்துக்கொண்ட காவிலும் முருகன் எழுந்தருளியிருப்பான்.

ஆற்றின் நடுவிலே சில திட்டுகள் நிரந்தரமாக அமைந்திருக்கும். அவை மிகவும் வளப்பமாக இருக்கும். கடலுக்கு நடுவிலே இருப்பதைத் தீவென்றும் ஆற்றுக்கு நடுவிலே இருப்பதைத் துருத்தி என்றும் கூறுவது மரபு. இன்றும் மலையாளத்தில் அகழிகளுக்கு நடுவே உள்ள இடங்களைத் துருத்தி என்று சொல்கிறார்கள். துருத்தியும் மரங்கள் அடர்ந்து வளம் பெற்று நிலவும். அங்கும் முருகன் எழுந்தருளியிருப்பான். காடு, சோலை, ஆற்றிடைக் குறையாகிய துருத்தி என்ற மூன்றும் அழகு தவழும் இடங்கள். அங்கே முருகன் எழுந்தருளியிருக்கிறான்.

காடும் காவும் கவின்பெறு துருத்தியும்.

(இயற்கையாக வளர்ந்த காடுகளிலும், மக்கள் வளர்க்கும் சோலைகளிலும், அழகுப்பெற்ற ஆற்றுக்கு நடுவில் உள்ள இடங்களிலும்.)

இன்னும் முருகன் எங்கே இருக்கிறான்?

மரங்கள் அடர்ந்த இடங்களைச் சொன்னார். அவை வளர்வது புனலாலே அல்லவா? காடும் காவும் துருத்தியும் நீர் வளத்தால் அழகு பெறுகின்றன. அந்த நீரையுடைய நீர் நிலைகளிலும் இயற்கையானவையும் செயற்கையானவையும் உண்டு. ஆறுகள் இயற்கையாக அமைந்தவை. குளங்கள் மக்கள் வேண்டும் இடங்களில் வெட்டிக் கொண்டவை. இயற்கையானாலும் செயற்கையானாலும் அவ்விடங்களில் வெம்மையைப் போக்கித் தண்மை தந்து தாகம் தீர்த்துப் பயிரை வளர்க்கும் நீர் நிரம்பி இருக்கிறது. அங்கே அருள் தண்மை நிரம்பிய முருகன் மறைந்து உறைகிறான்.

இயற்கையும் செயற்கையுமாக அழகு மலிந்து விளங்கும் இடங்கள் எத்தனை எத்தனையோ உண்டு. அவற்றை எல்லாம் தனித்தனியே சொல்லிக்கொண்டு செல்ல நேரம் இல்லை, இப்போது சொன்னவற்றைப் போன்ற வேறு பல இடங்களிலும் முருகன் தெய்விகம் தோற்ற இருந்து விளங்குகிறான்.

யாறும் குளனும் வேறுபல் வைப்பும்

(இயற்கையான ஆற்றிலும், மக்கள் வெட்டிய குளத்திலும், இவை போன்ற வேறு பல இடங்களிலும்.)

இனி மக்கள் செறிந்து வாழும் இடங்களுக்கு வருவோம். பெரிய ஊர்களில் பல தெருக்கள் இருக்கின்றன. அவை கூடுகின்ற இடங்கள் உண்டு. அவற்றைச் சந்தி என்று சொல்வது வழக்கம். தெருக்கள் சந்திக்கின்ற இடம் ஆதலின் சந்தி யென்ற பெயர் வந்தது. மூன்று தெருக்கள் கூடும் இடம் முச்சந்தி. நான்கு தெருக்கள் கூடும் இடம் நாற்சந்தி; அதைச் சதுக்கம் என்று தனியே பெயரிட்டு அழைப்பர்; சதுஷ்கம் என்ற வட சொல்லே அப்படியாயிற்று. ஐந்து தெருக்கள் கூடும் இடம் ஐஞ்சந்தி. பெரிய நகரங்களில் இவ்வாறு பல தெருக்கள் கூடும் இடங்கள் உண்டு. சில சந்திகளில் தெய்வங்களை நிறுவி யிருப்பதும் உண்டு. காவிரிப்பூம்பட்டினத்தில் நான்கு தெருக்கள் கூடும் ஓரிடத்தில் ஒரு பூதத்தை நிறுவி யிருந்தார்கள். அதற்குச் சதுக்கப் பூதம் என்று பெயர். சீகாளத்தியில் ஐஞ்சந்தி விநாயகர் என்று ஒரு மூர்த்தி இருக்கிறார். ஐந்து தெருக்கள் கூடிய இடத்தில் இருந்தவராதலின் அந்தப் பெயரைப் பெற்றிருக்க வேண்டும்.

இப்பொழுதெல்லாம் நகரங்களில் இத்தகைய சந்திகளில் நிற்பவர்கள் போலீஸ்காரர்கள். வண்டிகளின் போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவதற்காக அவர்கள் நிற்கிறார்கள்.

இந்த எல்லாச் சந்திகளிலும் முருகனுடைய அருளோட்டம் இருக்கிறது. அவன் அவ்விடத்தில் இருக்கிறான். அவனும் பெரிய காவற்காரன்தானே?

முருகன் கடம்ப மலர்மாலையை அணிபவன்; ஆதலின் கடம்பன் என்ற திருநாமம் அவனுக்கு அமைந்தது. புதிய பூவை உடைய கடம்ப மரமே முருகனுக்கு உகந்த இடந்தான். அதில் அவன் எழுந்தருளியிருப்பான்.

சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்.

(நான்கு தெருக்கள் கூடும் சதுக்கத்திலும், மூன்று தெருக்கள் ஐந்து தெருக்கள் முதலியவை கூடும் சந்தியிலும், புதிய பூவை யுடைய கடம்ப மரத்திலும்.)

முருகன் கடம்ப மரத்தில் உறைபவன் என்பதை வேறு நூல்களும் சொல்கின்றன.

''கடம்பமர் நெடுவேள்''

என்பது பெரும்பாணாற்றுப்படை.

''கடம்பமர்ந்து''
''கடம்பமர் அணிநிலை''

என்பன பரிபாடலில் வரும் பகுதிகள்.

''செல்வக் கடம்பமர்ந்தான்''

என்று ஐந்திணை ஐம்பதும்,

''கடம்பமர் மன்றற் றொங்கற் கந்தன்.''

என்று பழைய திருவிளையாடற் புராணமும்,

''கடம்பமர் காளை.''

என்று தேவாரமும் கந்த புராணமும் கூறுகின்றன.

நடந்து செல்லும் மக்கள் கூடும் சந்திகளைச் சொன்னவர், மக்கள் கூடும் வேறு இடங்களையும் சொல்ல வருகிறார். சிறிய ஊர்களில் ஊருக்கு நடுவே ஒரு மரமும் அதைச் சுற்றி மேடையும் இருக்கும். அங்கே ஊர்க்காரர்கள் கூடி நியாயம் பேசுவார்கள். உண்மையையே பேசுவார்கள்; பொய் பேச அஞ்சுவார்கள். அந்த இடம் தெய்வத் தன்மை உடையது என்று அஞ்சியே பொய் பேசமாட்டார்கள். அத்தகைய இடத்துக்கு மன்றம் என்று பெயர். மக்கள் கூடும் அந்த இடமும் முருகனுடைய ஆட்சி சிறப்பாக நிலவும் இடம்.

அது போலவே நகரங்களில் பலரும் கூடும் இல்லங்கள் உண்டு. அவற்றை அம்பலம் என்றும் பொதியில் என்றும் சொல்வார்கள், எல்லோரும் பொதுவாகக் கூடிப் பேசும் இல்லாதலின் பொதியில் என்ற பெயர் வந்தது; பொது இல் என்ற இரண்டு சொற்கள் இணைந்த வடிவமே பொதியில் என்பது. அங்கும் முருகன் திருவருள் மணக்கும்.

பழங்காலத்தில் சிறு கம்பங்களையும், முளைகளையும் நட்டு அவற்றையே தெய்வமாக வழிபட்டு வந்தார்கள். அவற்றைக் கந்து அல்லது கந்தம் என்று சொல்வார்கள். கந்து என்பதற்கு நடுதறி யென்றும் பற்றுக் கோடென்றும் பொருள். சிவலிங்கம் எப்படி அருவம், உருவம் என்ற இரண்டையும் இணைத்த அருவுருவமோ அது போன்றதே அந்தக் கந்து, கன்றாப்பூர் என்ற திருத்தலத்தில் இறைவன் நடுதறியாகவே காட்சியளிக்கிறான்.

''கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.''

என்பது தேவாரம்,

இவ்வாறு கந்தை நட்டு வழிபடும் இடம் கந்துடை நிலை. அங்கேயும் கந்தன் எழுந்தருளியிருப்பான்.

மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்.

(மரத்தடியிலுள்ள மன்றத்திலும், பொதுவாகப் பலர் கூடும் சபையிலும், கந்தை வழிபடும் இடத்திலும்.)

கந்து என்பதற்கு ஆதீண்டு குற்றி என்று நச்சினார்க்கினியர் பொருள் உரைத்தார்.

இவ்வாறு முருகன் இயற்கை யெழில் தவழும் இடங்களிலும், செயற்கை யழகுடைய இடங்களிலும், மக்கள் நடக்கும் இடங்களிலும், ஒன்று கூடித் தங்கும் இடங்களிலும், கந்து நட்டு வழிபடும் இடங்களிலும் எழுந்தருளியிருக்கிறான். அழகு, ஒற்றுமை, இயக்கம், நியாயம், வழிபாடு, மணம் ஆகியவை உள்ள இடங்களி லெல்லாம் முருகன் இருந்து அவற்றை இலங்கச் செய்கிறான்.

முன்னே கூறிய இடங்களில் சிலவற்றைப் பிற நூல்களும் சொல்கின்றன.

"ஆலமும் கடம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோடு
எவ்வயி னோயும் நீயே."

என்று பரிபாடல் பாராட்டுகிறது.

"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்
முறையுளிப் பராஅய்ப் பாய்ந்தனர்."

என்பது கலித்தொகை.

மேலே சொன்ன இடங்களில் முருகன் எழுந்தருளி யிருப்பதாகக் கருதி அன்பர்கள் வழிபடுவது உண்டு.

இவற்றைக் கூறிவிட்டு மேலே குறமகள் செய்யும் வழிபாட்டை விரிவாகச் சொல்லப் புகுகிறார் நக்கீரர்.

---

## குறமகள் செய்யும் பூசை

முருகனுக்கு மிகவும் விருப்பமான இடம் குறிஞ்சி நிலம். மலைகளிலும் அவற்றைச் சார்ந்த இடங்களிலும் அவனை வழிபடுபவர்கள் மிகுதி. குறிஞ்சி நிலத்து ஊர்களில் உள்ள பூசாரியாகிய வேலன் அவனை வழிபடுவதை நக்கீரர் முன்பு சொன்னார். இப்போது பூசாரிச்சியாகிய குறமகள் பூசை போடுவதை வருணிக்க வருகிறார்.

பூசாரிச்சியைத் தேவராட்டி என்றும் சொல்வதுண்டு. தெய்வம் ஆவேச உருவத்தில் அவள்மேல் வந்து அருள் செய்யுமாம். அதனால் அந்தப் பெயர் உண்டாயிற்று. அவள் மிகவும் பக்தியுடனும் விரத ஒழுக்கத்துடனும் இருந்து முருகனை வழிபட்டுப் பிரத்தியட்சமாக அவனை வருவிக்கிறாள்; தன்மேல் ஆவேசிக்கும்படி செய்கிறாள். அவள் செய்யும் வழிபாட்டையும் வெறியாட்டு என்று சொல்வார்கள்.

### கொடியேற்றம்

இதோ, குறமகள் முருகனை வரும்படி செய்யப் போகிறாள். அதைக் கண்டு தம் தம் குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்காகக் குறிஞ்சி நில மக்கள் அத்தனை பேரும் கூட்டமாகக் கூடியிருக்கிறார்கள். முருகனுக்குப் பெரிய திருவிழாவே நடைபெறுகிறது.

திருவிழாவில் முதலில் செய்யவேண்டுவது கொடியேற்றம். இங்கும் முதலில் கொடியேற்றம் நடைபெறு கிறது.

முருகனுடைய கொடி கோழி. சேவலுக்குக் கொண்டை அழகாக இருக்கும். கொண்டை அசைய அசையச் சேவற்கோழி நடந்து வருவதே ஒரு சிறப்பாக இருக்கும். கொண்டையினால் மாட்சிபெற்ற தலையையுடையது சேவல். அந்தக் கொடியை இப்போது ஏற்றுகிறார்கள். வெறும் கொடியை மட்டும் ஏற்றினால் போதுமா? திருவிழாவுக்கு ஏற்ற வகையில் அலங்காரம் செய்கிறார்கள். தோரணம், பூமாலை எல்லாவற்றையும் கட்டுகிறார்கள். முருகன் திருக்கோயிலுக்கு முன் வெறுவெளியாக இருந்த இடம் இப்போது விழாக் கோலத்துடன் பொலிகிறது. விழாவுக்கு பொருத்தமானபடி எல்லாவற்றையும் செய்திருக்கிறார்கள்.

மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர.

(மாட்சிமைப்பட்ட தலையையுடைய கோழிக் கொடியோடு மற்ற அலங்காரங்களையும் செய்து பொருத்தமாக அமையும்படி.

மண்ணி - அலங்கரித்து, 'ஆண்டலைக் கொடி' என்று பிரித்து, பேய் முதலியவை வராமல் பாதுகாப்பாக இருக்கும்படி ஆடவனது தலையும் பறவையின் உடம்பும் உடைய உருவத்தை எழுதிய கொடி என்றும் பொருள் கொள்வது உண்டு. ஆண்டலைக்கொடி என்பதற்கு மயிற் கொடி என்று ஓர் உரையாசிரியர் உரை எழுதியிருக்கிறார்.)

### ஆராதனை

தெய்வங்களுக்கு உகந்தது வெள்ளைக்கடுகு. கடவுளை வழிபடும் இடங்களில் அதை அரைத்துப் பூசுவது வழக்கமென்று பழைய நூல்கள் சொல்லுகின்றன. வெள்ளைக் கடுகை அரைத்து நெய்யோடு குழப்பி அங்கங்கே பூசுவார்களாம். தெய்வம் இருப்பதாக எண்ணும் வாசல் நிலை முதலிய இடங்களில் அதை அப்புவார்கள். இப்போது

மஞ்சளும் குங்குமமும் இடும் வழக்கம் இருப்பது போன்றது அது.

"ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை" (86)

என்று நக்கீரர் தாம் இயற்றிய நெடுநல்வாடை என்ற நூலில் கதவுநிலையைச் சொல்கிறார். ஐயவி என்பது வெள்ளைக் கடுகு.

இங்கும் வாசற் கால்களிலும் மற்ற இடங்களிலும் தெய்வ சாந்தித்தியத்தின் பொருட்டு நெய்யையும் அரைத்த கடுகையும் அப்புகிறார்கள். அப்படி அப்பும்போது முருகனுடைய திருநாமங்களையும் மந்திரங்களையும் மெல்லச் சொல்கிறார்கள். பக்தியுடன் இந்தக் காரியத்தைச் செய்கிறார்கள். இவ்வாறு செய்யும் இடங்களுக்கெல்லாம் ஒரு கும்பிடு போடுகிறார்கள். அழகிய மலர்களைத் தூவுகிறார்கள்.

இப்போதும் திருக்கோயில்களில் அங்கங்கே உள்ள பலிபீடங்களுக்கும் மற்ற இடங்களுக்கும் சுவரில் உள்ள திருவுருவங்களுக்கும் எண்ணெய் தடவி அபிஷேகம் செய்து கும்பிட்டுப் பூசிக்கிறார்கள். அப்படியே மலை நாட்டுக் கோயிலிலும் எங்கெங்கே கடவுள் உறைவதாக வழிவழியே நம்பி வருகிறார்களோ அங்கெல்லாம் இந்த நெய்யும் ஐயவியும் பூசிப் பூசிக்கிறார்கள்.

இக்காலத்தில் சில தலங்களில் உள்ள மூர்த்திகளுக்கு நீரால் அபிஷேகம் செய்வதில்லை. புனுகு பூசுவார்கள். அதுபோல அந்தக் காலத்தில் சுவர்களிலும் தூண்களிலும் உள்ள உருவங்களுக்கு ஐயவியும் நெய்யும் கலந்து பூசிப் பூத்தூவி வழிபடுவார்கள் என்று தோன்றுகிறது. இந்தக் கலவையினால் அந்த உருவங்களுக்குக் காற்றாலும் வெயிலாலும் மழையாலும் ஊறுபாடு நேராமல் இருக்கும் போலும்!

நெய்யொடு ஐயவி அப்பி ஐதுஉரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி.

(நெய் அல்லது எண்ணெயோடு வெண்சிறு கடுகையும் அப்பி, மெல்லியதாக மந்திரத்தைச் சொல்லிக் கை கூப்பி வணங்கி வளப்பமிக்க மலர்களைத் தூவி அருச்சித்து.

நெய் என்பது எண்ணெய்க்கும் பெயர். ஐயவி - வெண் சிறுகடுகு. ஐது - மெல்லியதாக. குடந்தம்படுதல் - கும்பிடுதல்.)

ஐது உரைத்து என்பதற்கு, 'தான் வழிபடுவதற்குரிய மந்திரத்தைத் தோன்றாமல் உச்சரித்து' என்று உரை எழுதுவர் நச்சினார்க்கினியர். 'சிறிது மந்திரங்களையும் ஓதி' என்பது வேறு ஓர் உரை. மந்திரங்களை வெளிப்படையாகச் சொல்லுதல் கூடாது.

குடந்தம்படுதல் - கையைக் குவித்து வணங்குதல்; அஞ்சலி செய்தல். ''நால்விரல் முடக்கிப் பெருவிரல் நிறுத்தி, நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்'' என்பது ஒரு பழைய சூத்திரம். குட என்பது வளைவை உணர்த்தும் உரிச்சொல். கையை வளைத்துச் செய்யும் வழிபாட்டுக்குக் குடந்தம் என்னும் பெயர் வந்தது. இது மிகவும் அருமையாக வழங்கும் சொல்.

''குடந்தம் பட்டுச் சூழ்போந்து குழைந்து வழுத்தி.''

என்று கூர்ம புராணக்காரர் இந்தச் சொல்லை ஆளுகிறார்.

திருவிழாவில் இனிமேல்தான் தேவராட்டி வந்து பூசை செய்யப் போகிறாள். அதற்கு முன் ஏற்பாடாக இவை யாவும் நடக்கின்றன. எங்கே பார்த்தாலும் தெய்வத்தை நினைக்கச் செய்யும் காட்சிகள்; மணம்.

## குறமகள் வருகை

முருகனுடைய பூசையை நடத்தும் குறமகள் இதோ வருகிறாள். முருகன் ஆவேச உருவத்தில் வந்து விளையாடுவதற்கு இடமாகிய பண்புடையவள் அவள். அவளைக் கண்டாலே குறிஞ்சி நில மக்களுக்கெல்லாம் ஒரு தனி மதிப்பு. அவள் விரதம் காக்கும் கடுமையைக் கண்டு அவளிடத்தில் யாவரும் அச்சமும் அன்பும் ஒருங்கே கொண்டு பழகுவார்கள்.

முருகனுடைய திருக்கோயிலுக்கு முன் அவள் வருகிறாள். முருகனைத் தன்மீது வருவித்து அருள் காட்டப் போகிறாள். ஆடியும் பாடியும் தொழுதும் அழுதும் முருகனை வருவிக்கும் கலையில் வல்லவள் அவள். இந்தப் பெருவிழாவில் எந்தச் சமயத்தில் முருகன் அவள் வாயிலாக வந்து அருள் புரிவானோ என்று எல்லா மக்களும் காத்து நிற்கிறார்கள்.

தெய்வம் வந்து குடிகொள்ளும் நடமாடும் கோயிலாக அவள் இருக்கிறாள். உள்ளே ஒரு சேலையைக் கட்டி அதன்மேலே நிறத்தால் வேறுபட்ட வேறு ஓர் ஆடையை உடுத்திருக்கிறாள். நீராடித் தூய்மையுடன் இருக்கும் அவள் தன் கையில் சிவந்த நூலைக் காப்பாகக் கட்டியிருக்கிறாள்.

விரதம் இருப்பவர்கள் கையில் காப்புக் கட்டிக் கொள்வதுண்டு. விழா நடைபெறும்போது முக்கியமான பூசகர் காப்புக் கட்டிக்கொள்வதை நாம் பார்த்திருக்கிறோம். விழாத் தொடங்குவதற்குமுன் இந்தக் காப்புக் கட்டு நடைபெறும். காப்புக்கட்டிக்கொண்டவர்கள் விரதம் காத்து, வேறு எந்தச் செயலிலும் ஈடுபடாமல், குறிப்பிட்ட எல்லையை விட்டுப் போகாமல் விழா முடியுமளவும் இருப்பார்கள். காப்புக் களையுமட்டும் மிகவும் கடுமையான வரையறைகளோடு விரதம் காப்பார்கள்.

இந்தக் காலத்தில் மஞ்சட் சரட்டைக் காப்பாகக் கட்டிக்கொள்வதைப் பார்க்கிறோம். முருகனுடைய திருவிழாவில் எல்லாம் சிவப்புமயமாக இருக்கிறது. முருகன் செந்நிறமுடையவன். அதனால் அவனுடைய திரு விழாவில் சிவப்புக்கு அதிகச் சிறப்பு இருக்கும் போலும். பூசாரிச்சியாகிய குறமகள் தன் கையில் செந்நிறமுள்ள நூலையே காப்பாகக் கட்டிக்கொண்டிருக்கிறாள்.

## குறமகள் செயல்

அவள் கையில் வெண்பொரியை வைத்துக் கொண்டு அதை எங்கும் சிதறிக்கொண்டே வருகிறாள். சிறு தெய்வங்கள் பல அவ்விடத்தில் இருப்பதாக அவர்கள் நம்பினார்கள். அவர்களுக்கெல்லாம் நிறைவு உண்டாகும் பொருட்டுப் பொரியைத் தூவுகிறாள். பெரிய மனிதரைப் பார்க்கப் போகும்போது அவர் வீட்டு ஏவலாளர்களுக்கு ஏதேனும் சிறிது பணம் தருகிறோம் அல்லவா? அது பாலக் குறிஞ்சி நிலத்தின் தனித் தெய்வமாகிய முருகன் எழுந்தருளப் போகிறான்; அதற்கு முன் அங்குள்ள குட்டித் தெய்வங்களுக்கு நிறைவு உண்டாகப் பொரியைத் தூவுகிறாள் குறமகள்.

அதோடு அரிசியையும் இட்டுப் பூசிக்கிறாள். மஞ்சள் கலந்த அட்சதையைக் கொண்டு பூசிக்கும் வழக்கத்தை நாம் அறிவோம். இங்கேயோ நல்ல வெள்ளையான அரிசியில் சிவப்புக் கலந்து செவ்வரிசியாக்கி அங்கங்கே இடுகிறாள். அதைச்சில்பலி அல்லது சிறு பலி என்று சொல்வார்கள். அந்தச் சிவப்பு எதனால் வருகிறது தெரியுமா? மிக்க பலமுள்ள ஆட்டுக்கிடாய்களை வெட்டிப் பலியிடுகிறார்கள். அவற்றின் இரத்தத்தை அரிசியோடு கலந்து பூசிக்கிறாள். பல கூடைகளில் பிரப்பரிசி வைத்து நிவேதனம் செய்கிறாள்.

முரண்கொள் உருவின் இரண்டு உடன்உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ.

(ஒன்றோடு ஒன்று மாறுபட்ட நிறத்தையுடைய இரண்டு ஆடைகளை ஒன்றன்மேல் ஒன்றாகச் சேர்த்து உடுத்து, கையில் செந்நிற நூலைக் காப்பாகக் கட்டி, வெண்ணிறமான பொரியைத் தூவி, மிக்க வலிமை நிலை பெற்ற பெரிய காலையுடைய கொழுத்த ஆட்டுக்கிடாயை வெட்டிய இரத்தத்தோடு கலந்த மிக்க வெண்மையான அரிசியைச் சிறு பலியாக வைத்து, பல பிரப்பரிசி நிரம்பிய கூடைகளை இருத்தி.

முரண் - மாறுபாடு. உரு - நிறம். யாத்து - கட்டி. மதவலி - மிக்க வலிமை. நிலைஇய - குறையாமல் நிலைபெற்ற. விடை - ஆட்டுக்கிடாய். விரைஇய - கலந்த. பலி - பூசைக்குரிய பொருள். பிரப்பு - கூடை நிறைய இட்டு வைக்கும் நிவேதனப் பொருள். இரீஇ - வைத்து.)

இவ்வாறு குருதி கலந்த அரிசியும் பிரப்பும் வைத்து வழிபடும் வழக்கத்தை வேறு புலவர்களும் சொல்லியிருக் கிறார்கள்.

"கொழுவி டைக்கறை விராவிய பலிக்குறை நிரப்பி
வழுவில் பல்பிரப் பிரீஇவெறி யாட்டயர் மன்றத்து."

என்பது தணிகைப்புராணம்.

## அலங்காரம்

சிறிய பசு மஞ்சளை அரைத்து நீரில் கலந்து அங்கங்கே தெளித்திருக்கிறார்கள். வேறு பல வாசனைப் பண்டங்

களையும் இடந்தோறும் தூவியிருக்கிறார்கள். மனிதர்கள் கூடும் இடத்தில் அழுக்குப் படிதல் இயல்பு; நாற்றமும் உண்டாகும். அவற்றை மாற்றுவதற்கு இப்படியெல்லாம் செய்கிறார்கள்; இந்தச் சூழல் முழுவதும் நறுமணம் கமழ்கிறது. செவ்வரளி மாலையை ஒரே அளவாக நறுக்கித் தொங்க விட்டிருக்கிறார்கள். எங்கே பார்த்தாலும் செம்மை தான். செய்யனாகிய முருகனுக்கு ஏற்ற இடமாக அது பொலிகிறது. ஒவ்வோர் இடமும் ஒவ்வொரு பொருளும் முருகனுடைய நினைவை ஊட்டுகின்றன.

சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி.

(சிறிய பசு மஞ்சளோடு மணமுடைய பொருள்களைத் தெளித்து, பெரிய குளிர்ந்த செவ்வரளியால் ஆன மணம் மிக்க குளிர்ந்த மாலையை அளவு ஒத்து அறும்படியாக அறுத்து, அங்கங்கே தொங்கும்படி கட்டி.

விரை - வாசனைப் பொருள். கணவீரம் - செவ்வரளி. துணை அற - ஒரே அளவாக அறும்படி. தூங்க - தொங்கும்படி. நாற்றி - தொங்கவிட்டு.)

சிறுபசு மஞ்சள் என்பது மஞ்சளில் ஒருவகை என்றும் சொல்வது உண்டு.

'பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை' என்பதற்கு, 'பெரிய குளிர்ந்த செவ்வரளி மாலையையும் ஒழிந்த நறிய குளிர்ந்த மாலைகளையும்' என்று பொருள் எழுதுவர் நச்சினார்க்கினியர். 'அறுத்துத்துணையறத்தூங்க நாற்றி' என்று கூட்டி, 'தலையொக்க அறுத்துத் தமக்கு ஒப்பு இல்லாதபடி அசையத் தூக்கி' என்று எழுதுவார். 'இணை யொக்க நறுக்கி

அசைதரப் பூங்கோயிலாகத் தூக்கி' என்பது வேறு ஒருவர் உரை.

இவ்வாறு எல்லா ஏற்பாடுகளும் நிறைவேறி விட்டன. இனி முருகனை வா, வா என்று அழைக்க வேண்டியதுதான். எல்லோரும் ஒருமுகமாக முருகனுடைய வருகையை எதிர்பார்த்து ஆவலோடும் பக்தியோடும் காத்திருக் கின்றனர்.

## முருகனை வருவித்தல்

அந்த மலைச்சாரலில் பல ஊர்கள் இருக்கின்றன. அங்கிருந்தெல்லாம் மக்கள் திரண்டு வந்திருக்கின்றனர். பலர் தாமும் விரதம் இருந்து இந்த விழாவிலே கலந்துகொள்ள வந்திருக்கிறார்கள்.

அந்த ஊர்களெல்லாம் வாழவேண்டும். முருகன் திருக்கோயில் வாழவேண்டும் என்று குறமகள் வாழ்த்து கிறாள். 'பசி, பிணி, பகை ஆகிய துன்பங்கள் இல்லாமல் ஆண்டவனே! நீ எல்லோரையும் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டிக் கொள்கிறாள். நல்ல வாசனையுள்ள தூபத்தை எடுத்துக் காட்டுகிறார்கள். அவள் இப்போது பாடுகிறாள். முருகன் குறிஞ்சி நிலத்துக்குத் தெய்வம். அவனுக்கு விருப்பமானது குறிஞ்சிப்பண். அந்தப் பண்ணில் அவள் பாடுகிறாள். அவளுடைய பெண்மைக் குரல் தெளிவாகக் கேட்கிறது.

மலையில் சலசல என்று அருவி விழுந்துகொண்டே இருக்கிறது. அதன் இனிய ஓசை சுருதி போடுகிறது. ஓம் என்ற ஓசையே அதில் எழுகிறது. வேறு இனிய வாத்தியங்களைப் பலர் வாசிக்கிறார்கள். கண்ணில் காணும் காட்சி யாவும் முருகனுடைய எண்ணத்தை உண்டாக்குகின்றன. காதில் விழும் ஒலிகள் யாவும் அவனுடைய நினைவை எழுப்புகின்றன. முருகுணர்ச்சி கண் வழியாகவும் காது

வழியாகவும் புகுந்து மனத்தை நிரப்புகிறது. வாசனைப் பண்டங்களாலும் தூபத்தாலும் உண்டான நறுமணமும் ஒரு தெய்விகமான உணர்ச்சியை நாசி வழியே ஏற்றுகிறது.

அருவியின் ஓங்கார சுருதியும் இன்னியங்களின் இசை முழக்கமும் இணைந்து முழங்கும் அங்கே குறமகள் குறிஞ்சிப் பண்ணைப் பாடுகிறாள். அவளுடைய பாட்டு இந்தப் பேரொலியையும் கிழித்துக் கொண்டு தனியே காதில் விழுகிறது.

பாடியபடியே பல வண்ணங்களையுடைய பல பூக்களை அவள் தூவுகிறாள். முன்னாலே இரத்தத்தோடு கலந்த சிவந்த தினையைப் பரப்பச் செய்திருக்கிறாள். முருகனுக்கே உரிய துடியும் தொண்டகமும் ஒலிக்கின்றன. இரத்தக்களரி போன்ற அந்த இடம் பொல்லாதவர்கள் உள்ளத்தில் அச்சத்தை உண்டாக்குகிறது.

தூப மணம் கமழ மலர் மணம் விரவ வாத்தியங்கள் ஒலிக்க அந்த இடம் முருகன் வருவதற்கு ஏற்ற, உணர்ச்சி பழுத்த நிலையமாக இருக்கிறது. துடியும் தொண்டகப் பறையும் இதோ சற்று வேகமாகவும் உரக்கவும் முழங்குகின்றன. இந்த உச்ச நிலையில் முருகன், ''ஆ!'' என்று முழங்கிக் கொண்டு வந்து விடுகிறான்; அந்தக் குறமகள் மேலே ஆவேச உருவத்தில் வந்து ஆடுகிறான். எல்லோரும் இப்போது கன்னத்தில் போட்டுக்கொள் கிறார்கள். கும்பிடுகிறார்கள். சிலர் அழுகிறார்கள். சிலர் நடுங்குகிறார்கள். சிலர் கீழே விழுந்து வணங்குகிறார்கள். சிலர் உணர்ச்சி விஞ்சி, ''முருகா! முருகா!'' என்று கதறுகிறார்கள். சிலர் கூத்தாடுகிறார்கள். விசையைத் தூண்டி விட்டதுபோல எங்கும் ஒரே தெய்வ உணர்ச்சி; துடிதுடிப்பு; ஆட்டபாட்டம்.

இங்கே சில பேர்வழிகள் வந்திருக்கிறார்கள். அவர்களுக்குச் சாமி பூதம் இவற்றிலெல்லாம் நம்பிக்கையே இல்லை. ''ஏதோ பைத்தியக்காரச் செயல்'' என்று பூசை வழிபாடுகளைக் கண்டு பரிகாசம் செய்கிறவர்கள், அவர்கள் இங்கே இந்த 'அறிவிலிகள்' செய்யும் செய்கைகளை வேடிக்கை பார்க்க வந்திருக்கிறார்கள். இந்தக் கூட்டத்தோடு கலவாமல் தனியே நிற்கிறார்கள்.

ஆனால் என்ன ஆகிறது தெரியுமோ? இந்த இடத்தில் கொந்தளித்துப் பொங்கும் உணர்ச்சி அவர்களையும் ஆட்கொள்கிறது. எல்லாம் நிரம்பிக் குறமகள் திடீரென்று ஆவேசம் வந்து கூவும்போது, அவர்களும் அயர்ந்து போகிறார்கள். தம்மை அறியாமல் கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள். தெய்வம் தம்மை என்ன செய்து விடுமோ என்ற எண்ணத்தால் அவர்களுடைய நெஞ்சு படபடக்கிறது.

இவ்வாறு தெய்வ நம்பிக்கை இல்லாதவர்களும் அஞ்சி நடுங்கும்படி அந்தக் குறமகள் முருகனை வரவழைத்திருக்கிறாள். முருகனை வரவேற்றுத் தெய்வமணம் பரப்பும் சூழல் அந்தத் திருக்கோயில். அங்கே மக்கள் திருவிழாக் கொண்டாடுகிறார்கள்.

அந்த இடம் சிலையோடும்படி பலரும் பாடுகிறார்கள். ஆவேச உருவத்தில் முருகன் வந்திருக்கும்போது அவனை வரவேற்று உபசரிக்க வேண்டாமா? பல கொம்பு களை ஊதுகிறார்கள். பெரிய மணிகளை அடிக்கிறார்கள். முருகனுடைய யானையை வாழ்த்துகிறார்கள். அது புறங்காட்டி ஓடாத வலிமையை உடையது; பிணிமுகம் என்னும் பெயருடையது. முருகனை நாம் இருக்கும் இடத்துக்கு எழுந்தருளும்படி செய்வதற்கு உதவும் வாகனம் அல்லவா? அதனால் அதை வாயார வாழ்த்துகிறார்கள்.

அங்கே முருகன் எழுந்தருளி யாவருக்கும் நலம் பாலித்துக் கருணை புரிகிறான். குறமகள் நேரிலே முருகனை வருவித்துப் பேச வைக்கும் அற்புதமான இடம் அது.

நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை அருவியொடு இன்னியம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர் -
ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கெடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி.

(செறிந்த மலைச்சாரலில் உள்ள நல்ல நகர்களை வாழ்த்தி, மணமுள்ள தூபத்தைக் காட்டி, குறிஞ்சிப் பண்ணைப் பாடி, இனிமையாக ஒலிக்கின்ற ஓசையை யுடைய அருவியோடு இணைந்து இனிய வாத்தியங்கள் முழங்க, பல நிறங்களையுடைய மலர்களை அருச்சித்து, கண்டோர் அஞ்சும்படியாக இரத்தத்தோடு கலந்த சிவந்த தினையைப் பரப்பி, பூசை செய்யும் குறமகள் முருகனுக்கு உவப்பான வாத்தியங்களை வாசிக்கச் செய்து, தெய்வம் இல்லையென்று முரண்பட்ட கொள்கையை உடையவர் களும் அஞ்சும்படியாக முருகனை வரும்படி செய்த அழகு மிக்க அகன்ற திருக்கோயிலில், வெறியாடுகின்ற இடத்தில் சிலையோடும்படியாகப் பாடி, பல கொம்புகளை ஒன்றாக ஊதி, ஒலியினால் கொடுமையையுடைய மணிகளை ஒலித்து, போரில் பின்வாங்கி ஓடாத வீரத்தை உடைய பிணிமுகம் என்னும் யானையை வாழ்த்தி - வழிபட, அவ்விடத்தில் முருகன் இருப்பான் என்று சொல்ல வருகிறார்.

நளிமலை - மரங்கள் அடர்ந்து செறிந்த மலை. சிலம்பு - மலைச்சாரல். நகர் - ஊர்; திருக்கோயில் என்றும் கொள்ளலாம். இமிழ் - இனிதாய் ஒலிக்கின்ற. இன்னியம் - இனிய இசைக் கருவிகள். கறங்க - முழங்க. உருவம் - நிறம். தூஉய் - தூவி. வெருவர - அச்சம் உண்டாகும்படி. குருதி - இரத்தம். முருகு இயம் - முருகனுக்கு உவப்பான வாத்தியங்கள்; துடி, தொண்டகம் முதலியன. நிறுத்து - ஒலிக்கச் செய்து. முரணினர் - மாறுபட்ட எண்ணம் உடையவர்; இங்குள்ள பக்தர்களுக்கு மாறுபட்ட, கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள். உட்க - அஞ்ச. முருகு ஆற்றுப் படுத்த - முருகனை வருவித்த. உரு - அழகு. வியனகர் - பரந்த கோயில்.)

பிணிமுகம் என்பதற்கு மயில் என்றும் பொருள் கொள்ளலாம்.

தூபம் காட்டிக் குறிஞ்சிப் பண்ணைப் பாடி முருகனை வழிபடுதல் கால வழக்கம்.

''குறிஞ்சி பாடுமின், நறும்புகை எடுமின்''

என்பது சிலப்பதிகாரம்.

''ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர் தூஉய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி.''

என்ற புறப்பொருள் வெண்பா மாலைப் பாடலில் இங்கே கண்ட பல செயல்களைச் சொல்லியிருக்கிறார் ஆசிரியர்.

இவ்வாறு பூசை போட்டு முருகனை ஆவேச ரூபத்தில் வருவிக்கும் வழக்கம் குறிஞ்சி நிலத்தில் உண்டென்பதை அகநானூற்றிலும் காணலாம்.

''களம்நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்.''

# முருகனைத் தரிசிக்கும் வழி

முருகன் எழுந்தருளிய தலங்களைக் கூறி, அங்கங்கே முனிவரும் தேவரும் பிறரும் வழிபடுவதைக் கூறி, கோயில் கட்டி வழிபடும் இடங்கள் அல்லாத வேறு பல இடங்களையும் கூறி, கடைசியில் குறமகள் செய்யும் வழி பாட்டையும் கூறி, முருகன் எவ்வாறு எல்லா வகையான மக்களாலும் வணங்கப் பெறுகிறான் என்பதைப் புலப்படுத்தினார் நக்கீரர். இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப மக்கள் வேறுபடுகின்றனர். அவர்களுடைய பழக்க வழக்கங்களும் வேறுபடுகின்றன. வாழ்க்கையின் வளமும் வேறுபட்டிருக்கின்றன. ஆயினும் யாவரும் முருகனையே தலைவனாக உணர்ந்து வழிபடுகிறார்கள். இவ்வுலக வாழ்க்கையில் எது வேண்டுமோ அதற்காக வழிபடு கிறார்கள். இந்த வாழ்க்கையை வெறுத்து நிற்பவர்களும் அவனுடைய திருவருளை விரும்பி வழிபடுகிறார்கள்.

முருகன் மலைமேல் இருக்கிறான்; சமவெளியில் இலங்குகிறான்; காட்டில் ஒளிர்கிறான்; நாட்டில் திகழ்கிறான்; ஆற்றில் இருக்கிறான்; குளத்தில் இருக்கிறான்; மனிதர்கள் கூடுகின்ற இடத்தில் இருக்கிறான்; மனித சஞ்சாரமே இல்லாத இடத்திலும் விளங்குகிறான். அழகிய மலரிலும் அவன் அருள் ஒளிர்கிறது.

அவனை வழிபடுவோர்களில் தான் எத்தனை வேறு பாடுகள்! அழகிய தேவமகளிர் அவனுடைய ஆட்சிக்குரிய

குறிஞ்சி நிலத்துக்கு வந்து தம்மை அழகு செய்து கொண்டு அவனை வாழ்த்துகிறார்கள்; போர்க்களத்தில் உணவு பெற்ற பயங்கரமான பேயும் அவனை வாழ்த்துகிறது. இந்திராதி தேவர்களும் தம்முடைய குறை முடிய வேண்டுமென்று அவனை வந்து பணிகிறார்கள்; கொலையே புரி வேடர்களும் அவனைப் பாடிக் கூத்தாடுகிறார்கள். எல்லாம் கற்று உயர்ந்த ஞானியரும் அவனை வணங்கி இன்புறுகிறார்கள்; ஒன்றும் அறியாத வேலனும் வழிபட்டு மகிழ்கிறான். முனிவர்கள் போற்றுகின்றனர்; அந்தணாளர் ஏத்துகின்றனர்.

இவ்வாறு முருகனுடைய பெருமை எங்கும் நிலவுவதைக் கூறினார். வெளிப்படையாக இறைவன் உறையும் இடம் என்று அடையாளங்களால் புலனாகும் தலங்களைக் கூறினார்; அல்லாத ஆறு குளம் முதலிய இடங்களையும் கூறினார்.

## ஐயம் தெளிய

இப்படிக் கூறிய பிறகு நக்கீரருக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. புலவனோ முருகனை அடைய வேண்டும் என்ற காதலோடு இருக்கிறான். வள்ளல் ஒருவனை அடைந்து பரிசு பெற வேண்டும் என்ற விருப்பத்தோடு இருக்கும் பரிசிலனைப் போல இந்தப் புலவன் இருக்கிறான். 'அந்த வள்ளல் இந்த ஊரிலும் இருப்பார்; அந்த ஊரிலும் இருப்பார்; இன்னும் வேறு வேறு இடங்களிலும் இருப்பார்' என்று சொன்னால் புலவனுக்குச் சற்றே மயக்கம் வரலாம். 'எப்போதும் சுற்றிக்கொண்டே இருப்பார் போலும்! திட்டமாக இன்ன இடத்தில் இருப்பார் என்றால் அங்கே போய்க் காணலாம். பல இடங்களில் இருப்பவரானால் எந்தச் சமயத்தில் எங்கே இருப்பார் என்று தெரியாதே! நாம் ஒரு சமயம் ஒரிடத்துக்குப் போனால், அங்கே அவர் இல்லாமல் வேறு இடத்தில் இருந்தால் என்ன செய்வது? மறுபடியும்

அந்த இடத்தை நாடிச் சென்றால், அதற்குள் மற்றோர் இடத்துக்குப் போய்விட்டால் எப்படிக் காணுவது?' என்ற எண்ணம் தோன்றலாம் அல்லவா? அந்த மயக்கத்தைப் போக்க முற்படுகிறார் நக்கீரர்.

'நான் சொல்லி வந்தேனே, இந்த இடங்களில் எல்லாம் முருகன் உறைகிறான். அன்போடு அவன் அருளை வேண்டி நிற்கும் அடியவர்கள் எப்படியெல்லாம் தம் நிலைக்கு ஏற்ற வகையில் வழிபடுவதை விரும்புகிறார்களோ அப்படியெல்லாம் வழிபடுகிறார்கள். அப்படி வழிபடும் இடங்களிலெல்லாம் அவன் உறைகிறான். இதை நான் அநுபவத்தில் கண்டிருக்கிறேன்' என்கிறார்.

வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே.

(தன்னை விரும்பும் அன்பர்கள் தாம் விரும்பியபடியே அடைந்து வணங்க அங்கங்கே உறைவதும் நான் அறிந்த வண்ணமாகும்.)

'இவ்வாறு வழிபட்டவர்கள் தாம் வேண்டியவற்றை வேண்டியபடியே பெற்று, நன்றியறிவுடன் வழிபட, அங்கங்கே எழுந்தருளியிருக்கிறான்' என்று பொருள் கூறலாம்.

முன்னாலே வழிபடுகிறவர்களைப் பார்த்துப் பலர் வழிபடுகிறார்கள். அந்த வழிபாட்டின் பயனாக அவர்கள் எவற்றை விரும்புகிறார்களோ, அவற்றை அடைகிறார்கள். அடைந்த அவர்கள், தம் அநுபவத்தால் வழிபாட்டின் பயனை உணர்ந்து கொண்டவர்களாதலின் மேலும் வழிபடுகிறார்கள். ''இதனை நானே அநுபவத்தில் உணர்ந்திருக்கிறேன்; ஏதோ பிறர் வாய்மொழியாகக் கேட்டதன்று'' என்று உறுதி கூறுவாரைப் போல, ''அறிந்தவாறே!'' என்கிறார்.

முருகன் எல்லா இடங்களிலும் எழுந்தருளியிருக் கிறான். அவன் இல்லாத இடம் ஒன்றும் இல்லை. அவன் உறையும் இடம் இதுதான் என்று தனியே சுட்டிக்காட்டிக் கணக்கிட முடியாது. அவன் இல்லாத இடமே இல்லை என்று முடிந்த முடிபாகச் சொல்லி விடலாம். நக்கீரர் அப்படிச் சொல்லாமல், உலகில் உள்ள உபகாரி ஒருவனுடைய விலாசத்தைச் சொல்பவரைப்போலச் சொல்லத் தொடங்கிக் கடைசியில் வேகமாக ஒரு பட்டியலையே கொடுத்து விட்டார். ஏன்?

## மூவகை இடங்கள்

முருகனைக் காணவேண்டும் என்ற ஆர்வமுடைய புலவன் இன்னும் பக்குவம் முதிர்ந்த நிலை பெறவில்லை. அவனை அடைய வேண்டும் என்ற ஆர்வம் மட்டும் அவனிடம் தலைப்பட்டிருக்கிறது. இன்னது செய்ய வேண்டுமென்று தெரியாமல் இருக்கிறான். அவனுக்கு வழிகாட்ட வந்த நக்கீரர் மனிதனின் மன இயல்பு அறிந்தவராதலின் நயமாக உண்மையைப் படிப்படியாகச் சொல்லுகிறார். முதலில், ‘‘நீ இப்போதே நினைத்த காரியத்தில் வெற்றி அடைவாய்’’ என்று தட்டிக் கொடுத்தார். பிறகு எல்லோருக்கும் தெரிந்த திருப்பரங்குன்றம் முதலிய தலங்களைச் சொல்லி முருகனுடைய சிறப்பையும் இணைத்துக் கூறினார். எல்லா மலைகளிலும் இருக்கிறான் என்று பிறகு சொன்னார். கோயில் இல்லாத மலையிலும் அவன் ஆடல் புரிபவன் என்று ஊகிக்கும்படி சொன்னார். முன்னே கூறிய திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் என்பவை வெளிப்படையாக முருகன் எழுந்தருளியிருக்கும் கோயில்களையுடைய தலங்கள். பின்னாலே கூறிய பல குன்றுகளிலும் சிலவற்றில் தான் முருகனுக்கு கோயில்கள் உள்ளன. பலவற்றில் கோயில்

இல்லை. அடையாளமுள்ள இடங்களும் அடையாளம் இல்லாத இடங்களுமாக உள்ள தொகைத்தலம் குன்றுதோறாடல். பிறகு காடு, கா, ஆறு, குளம் என்று வரிசையாக அடுக்கிக் கூறிய இடங்கள் அடையாளமே இல்லாத இடங்கள். அடையாளம் சிறந்தது நிற்கும் தலங்களை முன்னதாகக் கூறி, அடையாளம் உள்ளனவும் இல்லனவுமாகிய இடங்களை இடையிற் கூறி, அப்பால் அடையாளமே இல்லாத இடங்களை இறுதியிற் கூறினார். திட்பத்திலிருந்து திட்பமும் நுட்பமும் கலந்த நிலைக்கும், இறுதியில் நுட்பமான நிலைக்கும் அழைத்துச் செல்லும் பாங்கில் இருக்கிறது இந்த முறை. ஆண்டவனைச் சகளமாகிய உருவத்திலே கண்டு வழிபட்டுப் பின்பு உருவமும் அருவமும் இணைந்த இலிங்க உருவிலே வழிபட்டுப் பின்பு அருவாகிய நிஷ்கள உருவத்திலே வழிபடும் முறையைப் போலவும் தோன்றுகின்றது.

முருகன் எங்கும் பரவி இருக்கிறான். ஆனால் அவனை வழிபடும் இடங்களில் அவனுடைய அருள் சுரக்கிறது. நிலத்துக்கு அடியில் எங்கும் நீர் இருக்கிறது. ஆயினும் நமக்குப் பயன்படுவதில்லை. நிலத்தை அகழ்ந்து கிணறு தோண்டினால் நீரைக் காண்கிறோம். முயற்சி இல்லாமல் எளிதில் நீரை அடைய முடியாது. எங்கும் நம் காலுக்குக் கீழே இருந்தாலும் கண்ணுக்குத் தெரிவதில்லை. இறைவன் சர்வ வியாபியாக இருப்பினும் வழிபடும் இடங்களில் வெளிப் படுகிறான். அன்புடன் உருகித் தியானித்து வணங்கினால் வெளிப்படுகிறான்.

நம்முடைய உள்ளத்தில் அன்பு முதிர்வதற்குச் சில சூழ்நிலைகள் வேண்டியிருக்கின்றன. மடைப்பள்ளியைக் கண்டவுடன் உணவு நினைவு வருவது போலக் கோயிலைக் கண்டவுடன் யாவருக்கும் இறைவன் நினைவு வருகிறது.

ஆனால் பசியுடையவனுக்கு எப்போதுமே உணவின் நினைவுதான் இருக்கும்.

நாம் தீவிரமான பக்தி உடையவர்கள் அல்ல. ஆதலின் நம் உள்ளத்தில் பக்தியைத் தூண்டுவதற்கு ஏற்ற சூழ்நிலை இன்றியமையாததாக இருக்கிறது. பக்குவம் முதிர்ந்தவர்களுக்கு எந்த இடத்திலும் எந்தக் காலத்திலும் இறையுணர்வு இருக்கும்.

> ''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
> முத்தர் மனமிருக்கும் மோனத்தே.''

என்று பெரியோர் கூறுவர்.

ஆதலின், இருக்கும் சூழ்நிலையின் பலத்தால் கோயில்களில் வழிபட்டு, அங்கே இறைவன் அருளால் அன்பர்கள் நலம் பெறுகிறார்கள். தம்முடைய உள்ளத்தில் உள்ள அன்புச் சிறப்பினால் காட்டிலும் காவிலும் ஆற்றிலும் குளத்திலும் அவனை வழிபடுபவர்களும் அவன் அருளைப் பெறுகிறார்கள். எந்தக் காலத்தில் எந்த இடத்தில் எவ்வாறு வழிபட்டாலும் அங்கே முருகன் எழுந்தருளுகிறான்.

''நான் சொன்ன இடங்களிலும் அல்லாத வேறு இடங்களிலும் நீ அவனைக் காணலாம். எந்த இடமானாலும் நீ அன்பு முதிர்ந்து, எங்கே காணமுடியும் என்ற உணர்ச்சி பெறுகிறாயோ அங்கே அவனை வணங்குவாயாக'' என்று நக்கீரர் கூறுகிறார்.

மற்றவர்கள் வணங்கும் இடங்களில் ஒரு சூழ்நிலை உருவாகியிருக்கிறது. அந்த இடங்களிலெல்லாம் எல்லாருக்கும் ஒரே மாதிரி உணர்ச்சி உண்டாகாது. சிலருக்குத் திருச்செந்தூரில் மனம் கனிந்து பக்தி உணர்ச்சி மேலிடலாம். சிலருக்குத் திருவாவினன்குடியில் உணர்ச்சி விஞ்சி நிற்கலாம். சிலருக்கு ஏதேனும் சிறிய மலைக் கோயிலில் இறையுணர்வு

எழலாம். வேறு சிலருக்குக் கோயிலே இல்லாத எங்கேனும் அந்த நிலை வரலாம். எந்த இடத்தில் உணர்வு எழுமோ அந்த இடத்தில் மேலும் முயன்று விரும்பி வணங்கி அருளின்பம் பெற வேண்டும்.

ஆண்டாண்டு ஆயினும் ஆக; காண்தக
முந்துநீ கண்டுழி.

(நான் கூறிய அவ்வவ்விடங்களானாலும், பிற இடங்களானாலும் அவனை நினைந்து வழிபடுவதற்குரிய உணர்வைத் தூண்டுவதற்கு ஏற்றதாக முந்தி நீ கண்ட இடத்தில் - இன்னவாறு வழிபடுவாயாக என்று சொல்ல வருகிறார்.)

உணர்ச்சி கிளர்ந்து எழும்போது முருகனைத் தியானித்துப் பாராட்டினால் நல்ல அநுபவம் கிட்டும். நக்கீரர் இன்ன இடத்தில்தான் முருகனைக் காண முடியும் என்று வரையறை செய்து கூறவில்லை. ''உன் மனம் எங்கே நெகிழ்கிறதோ, எந்த இடத்தில் அவனைக் காணற்கு ஏற்ற இடம் இது என்ற கனிவு உண்டாகிறதோ அங்கே நில். அவனை வணங்க முற்படு'' என்று உபதேசிக்கிறார்.

''அந்த இடத்தில் உன்னுடைய விருப்பம் முகத்திலே மலர்ச்சியை உண்டாக்கும். அவனை ஏத்துவாயாக. கையினால் தொழுது புகழ்வாயாக. அவன் காலில் விழுந்து வணங்கு'' என்கிறார்.

காண்தக
முந்துநீ கண்டுழி முகன்அமர்ந்து ஏத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி.

(காண்பதற்குத் தக்க வண்ணம் முதலில் நீ அநுபவத்தால் உணர்ந்த இடத்தில் முகம் மலரத் துதித்துக்

கையால் கும்பிட்டு வாழ்த்தித் திருவடிகளில் விழுந்து வணங்கி - ஏத்துவாயாக என்று சொல்ல வருகிறார்.)

பிறகு முருகனை வாயாரப் பாடவேண்டும். அவனுடைய திருநாமங்களைச் சொல்லி உருகவேண்டும். நாமங்களைச் சொல்லி இறைவனை திருத்தாளில் பூத்தூவுவதையே அருச்சனை என்று சொல்வார்கள். அருச்சனை செய்வதனால் உள்ளம் குளிர்கிறது; நெகிழ்கிறது.

''அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆர.''

என்பது திருவாசகம். தொண்டர்களாகிய உழவர்கள் அருச்சனை என்னும் வயலுக்குள் அன்பு என்னும் விதையை விதைத்துப் பயிர் செய்து சிவபோகத்தை நுகர்கிறார்கள். அன்போடு அருச்சனை செய்தால் எல்லாப் பொறிகளும் ஒரு முகப்படுகின்றன.

---

## திருநாமங்கள்

நக்கீரர் முருகன் திருநாமங்களை அருச்சனை செய்வதற்கு ஏற்றபடி அடுக்கிக் கூறுகிறார். 'முருகனை இந்த நாமங்களைச் சொல்லி நீ வாயாரத் துதிப்பாயாக' என்று முருகனுக்குரிய நாமங்கள் இருபத்தாறைச் சொல்லுகிறார்.

முதலில் முருகனுடைய திருவவதாரத்தை உணர்த்தும் திருப்பெயரைச் சொல்கிறார்.

### கார்த்திகேயன்

முருகனுடைய திருவவதாரக் கதை இராமாயணத்திலும் பாரதத்திலும் கந்தபுராணத்திலும் வருகிறது. பரிபாடலில் வருகிறது. தமிழ்க் கந்தபுராணமும் அதை விரிவாகச் சொல்கிறது. அந்தக் கதைகளில் வேறுபாடு இருக்கிறது.

முருகன் சரவணப் பூம்பொய்கையில் தோன்றியவன். மிக மிக உயரமான இமயமலையின்மேல் இருப்பது அப்பொய்கை. மக்களுடைய மூச்சுக் காற்றே படாத சிகரத்தில் இருப்பது அது. அங்கே தருப்பை அடர்ந்த பொய்கையில் முருகன் உதித்தான். சரம் என்பது தருப்பையின் பெயர். அது அடர்ந்த காரணத்தால் சரவணம் என்ற பெயர் அந்தப் பொய்கைக்கு வந்தது.

தருப்பை தூய்மைக்கும் விரதத்துக்கும் கூரிய அறிவுக்கும் அடையாளம். இம்மூன்றும் உள்ளவர்களுக்கு

இனியவன் முருகன். அதனால் தருப்பைக் குளத்திலே அவதாரம் செய்தான். நீலம் என்பது தருப்பைக்கு ஆகு பெயர். நீலப் பைஞ்சுனையாகிய சரவணப் பொய்கையில் தோன்றியமையால் முருகனுக்குச் சரவணப் பெருமாள், சரவணபவன் என்று திருநாமங்கள் உண்டாயின. ஷடக்ஷர மந்திரமே அந்தத் திருநாமந்தானே?

சிவபெருமானுடைய வெளிப்படையான முகங்கள் ஐந்து. இவை நான்கு திசைகளில் நான்கும், மேல்நோக்கி ஒன்றும் உள்ளவை. இவற்றையன்றி மறைவாகக் கீழ் நோக்கிய அதோமுகம் ஒன்று உண்டு. மற்ற முகங்களே வெளிப்படையாக இருப்பதனால் சிவபெருமானுக்கு ஐம்முகன் என்ற திருநாமம் உண்டாயிற்று. முருகன் திருவவதாரம் உலகுக்கு இன்றியமையாதது என்பதை அறிந்த சிவபெருமான் அதோமுகத்தையும் வெளிப்படுத்தி ஆறுமுகநாதனாக இருந்து ஒவ்வொரு முகத்திலும் உள்ள நடுக்கண்ணாகிய ஞானக்கண்ணிலிருந்து ஒவ்வொரு பொறியை விட்டான். அந்தப் பொறிகளை உலகம் தாங்காது என்று அஞ்சித் தேவர் நடுங்க, இறைவன் ஏவலால் அக்கினி பொறிகளை ஏற்று வாயுவிடம் கொடுக்க, அவன் கொண்டுபோய்க் கங்கையிடம் சேர்த்தான். கங்கை ஆறு பொறிகளையும் சுமந்து சென்று சரவணப் பொய்கையில் உள்ள திட்டில் சேர்த்தது. அங்கே முருகன் திருவவதாரம் செய்தான்.

முதலில் ஐந்து பூதங்களில் ஒருவனாகிய அக்கினி ஏற்று வந்தான்; இறுதியில் சரவணப் பொய்கையை அடைந்தன பொறிகள். பொறிகள் முருகனான பிறகு கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் அங்கே வந்தார்கள். முருகனுக்கு அவர்கள் பாலூட்டி அன்பு செய்தார்கள். அக்கினி கொண்டு வந்தமையால் அக்கினி குமாரன் என்றும், கார்த்திகைமாதர்

வளர்த்ததனால் கார்த்திகேயன் என்றும் முருகன் பெயர் பெற்றான். கார்த்திகை மாதர்கள் தனித்தனியே சீராட்டும் பொருட்டு முருகன் ஆறு திருமேனி கொண்டான். இவற்றையெல்லாம் நக்கீரர் சொல்லும் முதல் திருநாமம் கூறுகின்றது.

நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப,
அறுவர் பயந்த ஆறமர் செல்வ!

(உயர்ந்த பெரிய இமயமலைச் சிகரத்தில் நீலநிறமுடைய தருப்பை வளர்ந்த பசிய சுனையாகிய சரவணப் பூம்பொய்கையில் ஐந்து பூதங்களின் அதி தெய்வங்களில் ஒருவனாகிய அக்கினி தேவன் முதலில் ஏற்றுச் சென்று கொடுக்க, முறையே சென்று தங்கி, ஆறு கார்த்திகை மாதர் பெற்று வளர்த்தவரைப் போலச் சீராட்ட, ஆறாகத் தங்கிய அருட் செல்வனே!)

இந்திரனுடைய வேண்டுகோளின்படி இறைவன் தன் தேசை அவனிடம் கொடுக்க அதனை அக்கினி தேவனிடம் ஈந்து அவன் வாயிலாக முனிபத்தினிமார் ஆறு பேர்களாகிய கார்த்திகை மாதர் உட்கொண்டு ஆறு குழந்தைகளைப் பெற்றுச் சரவணப் பொய்கையில் விட்டனர் என்று ஒரு பழங்கதை உண்டு. அந்தக் கதையை எண்ணி 'அறுவர் பயந்த' என்று சொன்னதாகக் கொள்வது ஒரு முறை.

முருகன் கார்த்திகை மாதரால் வளர்க்கப்பட்ட வனாதலின் கார்த்திகேயன் என்ற திருநாமம் உடையவன். கார்த்திகை என்பது ஆறு நட்சத்திரங்களின் கூட்டம், ஏழு முனிவர்களின் மனைவிமார் ஏழு நட்சத்திரங்களாயினர். வசிஷ்டருடைய பத்தினியாகிய அருந்ததி சப்தரிஷி நட்சத்திரக் கூட்டத்தில் வசிஷ்டருக்கு அருகே நட்சத்திர வடிவில் இருக்கிறாள். மற்ற ஆறு முனிவர்களின் மனைவிமாரும்

ஒன்றாகிக் கார்த்திகை நட்சத்திரமாக விளங்குகின்றனர். அந்த ஆறு பேரும் முருகனுக்குப் பாலூட்டும் பேறு பெற்றனர்.

முருகனுக்குப் பாலூட்டிய சிறப்பினால் அவர்கள் பெருமை அடைந்தார்கள். முருகனுடைய திருவவதார நட்சத்திரம் விசாகம். அந்த நட்சத்திரத்தில் முருகனுக்குச் சிறப்பான ஆராதனை நடக்கும். ஆயினும் கார்த்திகை நட்சத்திரம் முருகன் அடியார்களுக்கு மிகச்சிறந்த நாளாக விளங்குகிறது. அன்று விரதம் இருந்து முருகனை வணங்குகிறார்கள். தான் தோன்றிய நாளாகிய விசாக நட்சத்திரத்தை விடத் தன்னை வளர்த்த கார்த்திகை நட்சத்திரத்திற்கு மிகுதியான சிறப்பு உண்டாகும்படி செய்தான் முருகன். இது நன்றியறிவினால் உண்டான காரியம். கார்த்திகை மைந்தன் என்ற திருநாமம் மனிதன் நன்றியறிவுடன் இருக்க வேண்டும் என்பதை நினைவூட்டுகிறது.

## சிவகுமாரன்

'சரவணபவா, கார்த்திகேயா' என்ற முருகன் திருநாமத்திற்குக் காரணமான செய்திகளை நினைப்பூட்டிய நக்கீரர் அடுத்தபடி அவன் சிவகுமாரன் என்பதைச் சொல்ல வருகிறார்.

சிவபெருமான் கல்லால மரத்தின் கீழ்த் தென்முகம் நோக்கி யோகியாக அமர்ந்திருந்தான். அப்போது உலகம் யாவும் காம உணர்ச்சியின்றி நின்றது. தேவர்கள் காமனை ஏவி இறைவன்மீது மலரம்புகளை விடும்படி செய்தார்கள். தென்முகக் கடவுள் தன் நெற்றிக்கண்ணினால் காமனை எரித்தான். பிறகு பார்வதியம்மையை மணந்துகொண்டான். பிறகுதான் முருகனுடைய திருவவதாரம் நிகழ்ந்தது. கந்த புராணத்தில் இந்த வரிசையில் முருகன் திருவவதார வரலாறு வருகிறது.

முருகனுடைய திருவவதாரத்தை எண்ணிய நக்கீரர், அதற்குமுன் நிகழ்ந்த இரண்டையும் உடன் நினைத்தார். அவை இறைவன் தென்முகக் கடவுளாக இருந்ததும் இறைவி மலைமகளாகத் தோன்றியதும். அந்த இரண்டையும் முருகனோடு தொடர்பு படுத்துகின்றார், 'தட்சிணாமூர்த்திக்குப் புதல்வனே, பார்வதியின் குமாரனே' என்று.

ஆலின் அடியில் அமர்ந்திருந்த கடவுள் தட்சிணா மூர்த்தி. அவன் ஞானோபதேச மூர்த்தி. அவனுடைய ஞானக் கண்ணிலிருந்து குமாரன் அவதரித்தான். அதற்கு முன் அந்த ஞானக்கண் ஒளியிலே மாரன் ஒழிந்தான். மாரன் என்னும் இருள் அழியக் குமாரன் என்னும் சுடர் தோன்றியது; அது ஞானச்சுடர்; ஞான குரு மூர்த்தியாகிய ஆல்கெழு கடவுளின் புதல்வன்.

ஆல்கெழு கடவுட் புதல்வ!

(கல்லால மரத்தின் அடியிலே எழுந்தருளிய தென்முகக் கடவுளாகிய சிவபெருமானுடைய புதல்வனே!)

## மலைமகள் மகன்

தென்முகக் கடவுளின் புதல்வனாகிய முருகன் ஆறு சுடராகச் சென்று, சரவணப் பூம் பொய்கையில் விளையாடினான். ஆறு திருவுருவங்கொண்டு விளையாடல் புரிந்தான். அவன் ஓருருவில் இணைந்து தேவர்களுக்கும் உலகினருக்கும் பயன்படவேண்டும். அருளே வடிவாகிய சக்தியின் தொடர்பு இருந்தால்தான் உலகுக்குப் பயன்பட முடியும். ஆகவே சிவபெருமான் உமா தேவியாரை அழைத்துக்கொண்டு சரவணப் பொய்கைக் கரைக்கு வந்தான். அத்தேவியார் ஆர்வத்துடன் ஆறு குழந்தைகளையும் ஒருசேர அணைத்தார். அப்போது முருகன் ஒருருவாக இணைந்து ஆறு முகமும் பன்னிரண்டு திருக்கரங்களும் உடைய மூர்த்தி

ஆனான். உமாதேவியார் தம் பாலைக் கறந்து ஊட்டினரர். அப்படி இணைந்தபோது முருகனுக்குக் கந்தன் என்னும் திருநாமம் அமைந்தது.

"எந்தை சத்திகள் உயிரெலாம் ஒடுங்குறும் எல்லை
முந்து போலஒன் றாகியே கூடிய முறைபோல்
அந்தம் இல்லதோர் மூவிரு வடிவும்ஒன் றாகிக்
கந்தன் என்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்."

என்று கந்தபுராணம் கூறுகிறது.

இவ்வாறு முருகன் பார்வதியம்மையாரின் புதல்வனாக விளங்கினான்.

மால்வரை
மலைமகள் மகனே!

(பெருமையையுடைய பக்கங்களையுடைய இமயமலையின் மகளாகிய பார்வதியின் புதல்வனே! வரை - மலைப் பக்கம்; மூங்கில் வளர்ந்த என்றும் பொருள் கொள்ளலாம்.)

'பெருமையையுடைய மலையாகிய மலையரையன் மகளுடைய மகனே!' என்று பொருள் எழுதுவர் நச்சினார்க்கினியர்.

## கொற்றவை சிறுவன்

திருவவதாரத்தோடு தொடர்புடைய மூன்று திருநாமங் களைச் சொன்னார். மேலே முருகனுடைய வீரத்தை விளக்கும் திருநாமங்கள் இரண்டைக் கூறுகிறார்.

அவனுடைய வீரம் மிகச் சிறந்தது. அவனை எதிர்க்கும் பகைவர்கள் உயிர் பிழைப்பதில்லை. அவர்களுக்கு அவன் யமனைப்போல இருக்கிறான்.

''நிருதரார்க்கொரு காலா ஜயஜய''

என்று திருப்புகழில் பாடுவார் அருணகிரியார். நக்கீரர் அவனை,

மாற்றோர் கூற்றே!

என்று ஏத்தும்படி சொல்கிறார். 'பகைவர்களுக்கு யமனைப் போன்றவனே' என்பது அதன் பொருள்.

முருகன் புகுந்த போரில் அவனுக்குத்தான் வெற்றி என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அந்தப் பெருமானுடைய அன்னையே வெற்றியைத் தருபவள். அசுரர்களோடு போரிட்டு வெல்லும் இயல்பினள். அந்த நிலையில் அப் பிராட்டியைக் கொற்றவை என்று கூறுவது மரபு. அவளுடைய பிள்ளை முருகன் என்றால், தனியே அவனுக்கு வெற்றி உண்டு என்று கூறவேண்டுவதில்லை.

வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!

(வெற்றியையும் வெல்லும் போரையும் உடைய கொற்றவையின் திருமகனே!)

கொற்றவையைத் துர்க்கை என்று வடமொழியில் கூறுவர். வீரர்கள் போர்க்களத்தில் கொற்றவையை வழிபடுவார்கள். அந்தப் பெருமாட்டி தமக்கு வெற்றியை வழங்குவாள் என்பது அவர்களுடைய நம்பிக்கை. 'வெல் போர்க் கொற்றவை - தான் வெல்லும் போரைச் செய்யும் கொற்றவை; என்றது மகிடனைச் செற்றதனை' என்று கூறி, கொற்றவை என்பதற்கு வனதுர்க்கை என்று பொருள் எழுதுவர் நச்சினார்க்கினியர்.

## பழையோள் குழவி

உமாதேவியார் சாந்தமான வடிவும் இயல்பும் உடையவர். துர்க்கையோ இராஜசமும் வீரமும் கொண்ட

இயல்பு உடையவள். இருவேறு நிலையில் விளங்கும் அவ்விருவரும் பராசக்தியின் அம்சங்களே. முருகன் இவ்விருவருக்கும் புதல்வன். இவர்களுக்கெல்லாம் மூலமான பராசக்திக்கே அவன் திருமகன். அவளே எல்லாச் சக்தி உருவங்களுக்கும் மூலமான பழைய சக்தி; மிகமிகப் பழைய பராபரை; இராஜராஜேசுவரி, திரிபுர சுந்தரி என்று தேவியின் பக்தர்கள் கூறும் பராசக்தி அவள். அவள் இழைகளை அணிந்து பேரழகியாகத் திகழ்கிறாள். அவ்வாபரணங்கள் தெய்விகம் பொருந்தியவை; இயல்பாகவே அமைந்தவை.

முருகன் அந்தப் பேரழகியின் புதல்வன். ஆதலின் அவளுடைய அம்சமாகிய எல்லோருக்கும் புதல்வனா கிறான்.

இழைஅணி சிறப்பிற் பழையோள் குழவி!

(அணிகலன்களை அணிந்த சிறப்புடைய பழைய வளாகிய பராசக்தியின் குழந்தையே!)

அம்பிகையின் திருநாமங்களில் 'புராதநா' என்பதும் ஒன்று. ஸ்ரீ லலிதா சகஸ்ர நாமத்தில் 802-ஆவது திருநாமமாக ஒளிர்வது அது; பழையவள் என்பது அதற்குப் பொருள்.

மலைமகள் மகன், கொற்றவை சிறுவன், பழையோள் குழவி என்னும் மூன்றும் ஒரே கருத்தை மூன்று வகையில் கூறியவை.

## தேவசேனாபதி

முருகனுடைய வீரத்துக்கு எடுத்துக்காட்டாக இருப்பது அவன் சூரனோடு செய்த போர். தேவர்கள் தம் நிலையை இழந்து திண்டாட, அவர்கள் மீட்டும் தங்களுடைய வாழ்வைப் பெறும் பொருட்டு முருகன் போர் செய்தான். அந்தப் போர்

எல்லாப் போர்களிலும் பெரிய போர். ஆதலின் அதில் வெற்றி பெற்ற வீரன் எல்லோரிலும் பெரிய வீரன். ஆகையால் முருகன் யாவரினும் சிறந்த வீரன் என்பது தெளிவாகும். இதை முன்பும் பார்த்தோம்.

தேவர் படைகளுக்கெல்லாம் தலைவனாக இருந்தமை யால் அவனுக்குத் தேவசேனாபதி என்ற திருநாமம் உண்டாயிற்று. தேவர்களெல்லாம் வணங்கிப் போற்றும் படைத் தலைவன் அவன். அப்போது அவன் வேலாயுதத் தோடு வேறு பல படைக்கலங்களையும் ஏந்தினான். கோதண்டம் ஏந்தும் குமரனாகவும் விளங்கினான்.

வானோர் வணங்குவில் தானைத் தலைவ!

*(தேவர்கள் வணங்கிய, வில்லை ஏந்திய, படைத் தலைவனே!)*

இதற்கு, 'வானோராகிய தானையையும் வணங்கு வில்லையும் உடைய தலைவ' என்று பொருள் கொள்வர் நச்சினார்க்கினியர். அப்போது வணங்கு வில் என்பதற்கு வளைந்த வில் என்று பொருள் கொள்ள வேண்டும்.

முருகன் திருக்கரத்தில் வில்லும் உண்டு என்பதை,

''சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமும்
சூடுதோளும்.''

என்னும் திருப்புகழால் உணரலாம். தனுர்த்தர சுப்பிரமணிய மூர்த்தியின் திருவுருவத்தைச் சாய்க்காடு முதலிய தலங்களில் காணலாம்.

## மாலை மார்பன்

முருகன் வீரவிளையாடலை எப்போதும் செய்து கொண்டிருப்பதில்லை. தீய சக்திகளைப் போக்கும் பொருட்டு

வீரம் காட்டுவானேயன்றி அவன் எப்போதும் ஈரம் உடையவன்; அருளுடையவன். அவன் அணியும் மாலைகளில் வெற்றிக்குரியது வேறு, போகத்துக்குரியது வேறு. அவன் எப்போதும் போகத்துக்குரிய மாலையாகிய கடப்பந்தாரை மார்பில் அணிந்திருக்கிறவன் ஆகையால், 'அவனை மாலை மார்ப என்று ஏத்துவாயாக' என்று நக்கீரர் சொல்கிறார்.

### மாலை மார்ப!

சரவணபவனே, கார்த்திகேயனே, சிவகுமாரா, பார்வதி நந்தனா, துர்க்கா சுதா, பராசக்தி மகனே, தேவசேனாபதி, இன்பமாலை யணிவோய் என்று முருகனை ஏத்திப் புகழும்படி இதுவரையில் சொல்லி, மேலும் சில திருநாமங்களைச் சொல்ல வருகிறார் நக்கீரர்.

### நூலறி புலவன்

தமிழ் நாட்டில் புலவர்களுக்குப் பழங்காலத்தில் மிகுதியான மதிப்பு இருந்தது. அதற்கு ஏற்ற வகையில் அவர்கள் பண்பிலும் அறிவிலும் சிறந்து நின்றார்கள். அவர்களுக்கு அறிவின் பெருமையினால் புலவர் என்று பெயர் அமைந்தது; பண்பின் சிறப்பினால் சான்றோர் என்ற பெயர் அமைந்தது. சங்ககாலத்துப் புலவர்களை நல்லிசைச்சான்றோர் என்று குறிப்பது வழக்கம். மக்களுக்கு அவர்களிடத்தில் அத்தனை மதிப்பு நிலவியது.

சேர சோழ பாண்டியராகிய முடியுடை மன்னர் மூவருடைய ஆட்சியின்கீழ் தமிழ்நாடு இருந்து வந்த பழங்காலத்தில், சில சமயங்களில் அவர்களுக்குள்ளே போர் நிகழும். அப்போது ஒரு நாட்டில் உள்ளோர் மற்றோர் நாட்டுக்குப் போக மாட்டார்கள். போனால் ஒற்றரென்று

பற்றிக் கொள்வார்கள். ஆயினும் புலவர்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்களானாலும், எந்த ஊர்க்காரர்களானாலும் எங்கும் போகலாம். அவர்கள் பிறந்தது ஒரு நாடானாலும் ஓர் ஊரானாலும் எல்லா நாடுகளும் எல்லா ஊர்களும் அவர்களுக்கு உரியனவே ஆகும். இந்தக் காலத்தில் ஒரு நாட்டார் வேற்று நாடுகளுக்குப் போக வேண்டுமானால் அதற்கு அனுமதிச்சீட்டு வாங்க வேண்டும். புறப்படும் நாட்டு அரசியலாரும் அனுமதி வழங்க வேண்டும். போய்ச் சேரும் நாட்டு அரசியலாரும் அனுமதி தரவேண்டும். இல்லையானால் போக இயலாது. அந்த இரண்டு அனுமதிகளும் எல்லோருக்கும் எளிதில் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைத்தாலும் இடம், காலம் என்ற வரையறை இருக்கும். இன்ன நாட்டுக்குத் தான் போகலாம், இவ்வளவு காலமே தங்கலாம் என்று வரையறுத்து அனுமதி அளிப்பார்கள். எல்லா நாடுகளுக்கும் எப்போதும் போகும் அனுமதி எவருக்கும் கிடைப்பது இல்லை.

பழங்காலத்தில் இந்த நாட்டில் எல்லா இடங்களுக் கும் எல்லாக் காலங்களிலும் செல்வதற்குரிய தகுதியை ஒருவன் முயன்று பெறலாம். அது அரசியலாரிடம் பெறுவதன்று; தானே முயன்று அமைத்துக்கொள்வது. அதுவே புலமை. ஒருவன் கல்வியிற் சிறந்தவனானால் எந்த நாட்டுக்கும் போகலாம்; எந்த ஊருக்கும் போகலாம். அந்த நாட்டினிலே தங்கிவிடலாம்; அந்த ஊர்க்காரனே ஆகி விடலாம். இதையே வள்ளுவர் சொல்லுகிறார்.

> ''யாதானும் நாடாமல்; ஊராமால்; என்ஒருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு.''

என்பது இந்தக் கருத்தைச் சொல்கிறது.

புலவர்கள் தம்முடைய கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களால் சென்ற இடங்களிலெல்லாம் சிறப்பு

அடைவார்கள். புலவர்களைத் தெய்வம் போலவே எண்ணி மக்கள் வழிபட்டார்கள். கடைச் சங்கத்தில் இருந்த புலவர்களைக் கலைமகளின் அவதாரமாகவே கருதினர். அப்படியே புராணம் கூறுகிறது.

அதுமட்டும் அன்று. சங்கப் புலவர்களில் தெய்வங்களும் இருந்து தமிழுக்குச் சிறப்பை அளித்ததாக இறையனாரகப்பொருள் உரையில் வருகிறது. திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்ற மெறிந்த குமர வேளும், வாசு தேவனும் தலைச்சங்கத்தில் புலவர்களாக விளங்கினார்களாம். குமரகுருபரர் முருகனை,

"சங்கத் தமிழின் தலைமைப் புலவா."

என்று பாடுகிறார். கடவுளரையும் புலவர்களாகச் சொல் வதில் பெருமை காணுபவர்கள் இந்நாட்டினர் என்பதை இவை காட்டுகின்றன.

முருகன் ஞான பண்டிதன்; எல்லாம் அறிந்த சர்வக்ஞன். எல்லா மொழிகளும் அவன் அருளால் தோன்றியவை. வேதத்தை அருளியவன். பிரணவப் பொருளை உபதேசித்தவன். அகத்திய முனிவருக்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களை அறிவுறுத்தியவன்.

"சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே!"

என்று அருணகிரியார் பாடுகிறார். தென்னாட்டுக்கு வந்த போது சிவபிரானிடம் தமிழைக் கற்றுத் தமிழ் பேசும் ஆற்றலும் தமிழறிவும் வன்மையும் உடையவரான அகத்தியர், இங்கே வந்த பிறகு முருகனிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைச் சிக்கற ஓதிப் பெரும் புலவரானார்; பன்னிரண்டு மாணாக்கர்களுக்குத் தமிழ் கற்பிக்கவல்ல

பேராசிரியரானார். அகத்தியம் என்னும் முத்தமிழ் இலக்கணத்தை இயற்றும் அறிவாற்றல் அவருக்கு உண்டாயிற்று.

''குறுமுனிக்கும் தமிழுரைக்கும் குமரமுத்தம் தருகவே''

என்பதையும் காண்க.

இவ்வாறு பெரும் புலவர்களை உண்டாக்கும் அரும் பெரும் புலவனாகிய முருகனை வெவ்வேறு திருநாமங்களால் பாராட்ட வந்த நக்கீரர், அவனைப் புலவனாகவும் வைத்துப் போற்றுகிறார். தமிழ்நூற் புலவன் என்று குறிப்பிட்டுச் சொல்லாமல், எல்லா மொழிகளிலும் உள்ள நூல்களையும் அறியும் ஞானச்செல்வன் என்று பொருள் கொள்ளும்படி ஒரு திருநாமத்தைச் சொல்கிறார்.

நூல்அறி புலவ!

என்பதே அது. 'எல்லா நூல்களையும் அறிந்த பேரறிவாளனே' என்பது இத்தொடரின் பொருள். நச்சினார்க்கினியர், 'எல்லா நூல்களையும் அறியும் அறிவுடையவனே' என்றே பொருள் எழுதி யிருக்கிறார். வேறு உரையொன்று, 'வேதாகமங்கள் முதலிய சாத்திரங்களை ஓதாதுணர்த்தும் பண்டிதனே' என்று விளக்குகிறது. புலவரிற் சிறந்த நக்கீரர் முருகனையும் புலவனாகவே போற்றிப் பெருமிதம் அடைவதில் வியப்பு ஏதும் இல்லை.

## இலக்கண உரையை அறிந்தவன்

'நூலறி புலவ' என்பதை நக்கீரர் தம் வாழ்க்கையில் பெற்ற அநுபவம் ஒன்றை உளங்கொண்டு சொன்னதாகச் சொல்லவும் இடம் உண்டு. நூல் என்பதற்கு இலக்கணம் என்று பொருள் கொள்வது பழைய வழக்கம். ''முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி'' என்ற தொல்காப்பியப் பாயிரத்தில்,

நூல் என்ற சொல் இலக்கணத்தையே குறிக்கிறது. ''நூலே உரையே'' என்று வரும் தொல்காப்பியச் சூத்திரத்தில் அந்தப் பொருளில் நூல் என்ற சொல் அமைந்திருக்கிறது. இலக்கணத்தில் உள்ள சூத்திரங்களுக்கு நூற்பா என்ற பெயர் வந்ததற்கும் இதுவே காரணம்.

இலக்கணம் அறிந்த புலவன் மற்றவர்களிலும் சிறந்தவன். இலக்கணத்தாற் செப்பம் அமைந்த மொழி சீரிய மொழி.

''மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?''

என்று திருவிளையாடற் புராணம் தமிழின் சிறப்பை எடுத்துரைக்கிறது.

கடவுளரே இலக்கண நூல்களை இயற்றியதாகவும் அறிவுறுத்தியதாகவும் வரலாறுகள் வழங்குகின்றன. இறைவனுடைய உடுக்கையிலிருந்து பிறந்த ஒலிகளே மாகேசுவர சூத்திரங்களாயின என்பர். வடமொழியில் முருகன் அருளிய கௌமார வியாகரணம் என்ற நூல் ஒன்று உண்டு என்று கூறுவர். தமிழில் ஆலவாய் இறைவன் அருளிய அகப்பொருள் இலக்கணம் இறையனார் அகப் பொருள் என்ற பெயரோடு இன்றும் நிலவுகிறது. முருகன் தமிழ் இலக்கண நூல் ஏதும் இயற்றியதாகத் தெரியவில்லை. ஆயினும் இலக்கண உரையை மதிப்பிட்டவன் என்று ஒரு வரலாறு உண்டு. அது வருமாறு:

ஒரு சமயம் பாண்டி நாட்டில் பஞ்சம் உண்டாகிப் பன்னிரண்டாண்டுகள் இருந்தது. பஞ்சம் உண்டானவுடன் பாண்டியன் மிக வருந்தினான்; குடிமக்கள் அல்லலுற நேருமே என்று அஞ்சினான். அவர்களுக்கு வேறு வழி இல்லை. ஆனால் சங்கப் புலவர்கள் பஞ்சத்தில் துன்புறக் கூடாது

என்பது அவன் எண்ணம். அவர்கள் எந்த நாட்டுக்குச் சென்றாலும் மதிப்பும் வாழ்வும் கிடைக்கும். ஆதலால் அவர்களை வணங்கி, ''இந்தப் பஞ்சகாலத்தில் எங்களோடு இருந்து இன்னலைப் பகிர்ந்து கொள்ளும் அவசியம் உங்களுக்கு இல்லை. வளப்பமுள்ள நாடுகளுக்குச் சென்று சிலகாலம் வாழுங்கள். இந்த நாட்டில் பஞ்சம் தீர்ந்து மீட்டும் வளம் உண்டாகும் போது உங்களை அழைத்துக் கொள்கிறேன்'' என்று வேண்டிக்கொண்டான். அவர்கள் அப்படியே வெவ்வேறு நாடுகளுக்குச் சென்றனர்.

பன்னிரண்டு ஆண்டுகள் ஆனபிறகு பஞ்சம் நீங்கியது. மீட்டும் பாண்டி நாட்டில் வளம் பெருகியது. மறுபடியும் புலவர்களை அழைத்துச் சங்கம் கூட்டி வளர்த்து வர வேண்டும் என்ற ஆர்வம் பாண்டியனுக்கு எழுந்தது. பல நாடுகளுக்கும் ஓலை போக்கிப் புலவர்களை வருவித்தான். போன இடங்களில் உள்ளவர்களுடன் பழகி அங்கேயே விருப்பம் கொண்டு சிலர் தங்கி விட்டனர். பலர் திரும்பி வந்தனர். மீட்டும் சங்கத்தை நடத்தத் தொடங்கினான் பாண்டியன்.

அவனுக்கு நெடுநாட்களாக ஒரு விருப்பம் இருந்து வந்தது. இடையிலே பஞ்சம் வந்தமையால் அதை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. தமிழில் உள்ள இலக்கணம் மூன்று பிரிவாக உள்ளது. எழுத்து, சொல், பொருள் என்ற இந்த மூன்றையும் தொல்காப்பியம் கூறுகிறது. இவற்றில் பொருளிலக்கணம் சிறப்பானது என்று கூறுவர். பொருளின் வகையாகிய அகப்பொருள், புறப்பொருள் என்ற இரண்டில் அகப்பொருள் என்பது சிறந்தது. அதற்குத் தனியே ஓர் இலக்கண நூல் யாரேனும் தக்க புலவர் ஒருவரைக் கொண்டு இயற்றச்செய்யவேண்டும் என்ற ஆசை அரசனுக்கு இருந்தது. மீண்டும் சங்கம் உருவான இப்போது அதைச்

செய்விக்க முயன்றான். மீண்டு வந்த புலவர்கள் மூன்று இலக்கணங்களிலும் வல்லவர்களே. ஆயினும், தனியே புதிய இலக்கணம் எழுதச் சிறப்பான தகுதி வேண்டும். அப்படி உள்ள புலவர் ஒருவரும் அப்போது வந்து சேரவில்லை. அதனால் பாண்டியனுடைய விருப்பம் நிறைவேறாமல் குறையாகவே இருந்தது.

தன் குறைகளை ஆலவாயில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்வது பாண்டியன் வழக்கம். அப்படியே இந்தக் குறையையும் கூறி வேண்டினான். ''எம்பெருமானே! தமிழின் உயிராக உள்ளது அகப்பொருள் என்பார்கள். அதில் புதிய நூல் ஒன்று எழவேண்டும் என்ற என் விருப்பம் நிறைவேற வில்லையே! நின்னுடைய அருள் இருந்தால் எளிதில் அது நிறைவேறும். திருவருள் புரியவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

பல காலம் கழித்து அவன் விருப்பம் நிறைவேறியது. திருக்கோயிலில் பூசை புரியும் சிவாசாரியார் இறைவன் எழுந்தருளியிருக்கும் பீடத்தின் கீழே ஒரு நாள் திருவலகிடும் பொழுது ஏதோ கணகணவென்று ஒலி எழுந்தது. என்ன என்று பார்க்கும்போது சில செப்புத் தகடுகள் இருப்பதை அறிந்தார். அவற்றை எடுத்துப் பார்த்தபோது, அவற்றில் எழுத்துக்கள் இருந்தன. உடனே பாண்டியனிடம் அனுப்பினார். அவன் படித்துப் பார்த்தான். சூத்திர வடிவில் அமைந்த அகப்பொருள் இலக்கணமாக இருந்தது. அவனுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. இறைவன் தான் தன் வேண்டுகோளுக்கு இணங்கி அந்த நூலை அருளினான் என்று நம்பிக் கூத்தாடினான். அறுபது சூத்திரங்கள் அதில் இருந்தன.

இலக்கண சூத்திரங்களுக்கு உரை எழுதினால்தான் பொருள் புலப்படும். ஆகவே அந்த நூலுக்கு உரை எழுதச்

செய்யவேண்டுமென்று நினைத்த அரசன் தமிழ்ச் சங்கப் புலவர்களிடம் அளித்து உரை வகுக்கச் சொன்னான். சங்கத்தில் இருந்த நாற்பத்தொன்பது புலவர்களும் தனித் தனியே ஆராய்ந்து உரை எழுதி முடித்தார்கள். நாற்பத் தொன்பது உரைகள் வந்து விட்டன. அவற்றில் எதைக் கொள்வது, எதைத் தள்ளுவது? நாற்பத்தொன்பதையும் வைத்துக் கொண்டால் பெரிய போராட்டம் அல்லவா எழுந்துவிடும்?

தமிழ் நாட்டின் தலை சிறந்த புலவர்களாகிய நாற்பத்தொன்பது பேர் எழுதியவற்றின் தரத்தைத் தீர்மானித்து இதுதான் சிறந்தது என்று சொல்லும் தகுதி யாருக்கு இருக்கிறது? யார் சொல்லத் துணிவார்கள்? நூல் இல்லையே என்று கவலைப்பட்ட பாண்டியனுக்கு இப்போது உரைகள் இத்தனை வந்து விட்டனவே என்ற கவலை உண்டாகி விட்டது. இந்தச் சிக்கலை எப்படித் தீர்ப்பது?

மறுபடியும் ஆலவாய் இறைவனையே புகலடைந்தான் பாண்டியன். ''எம்பெருமானே! இவ்வளவு உரைகளில் யாருடையது சிறந்தது என்று தேர்ந்தெடுக்கும் திறம் தெரியாமல் கலங்குகிறேன். நீயே ஒரு வழியை அருளிச் செய்யவேண்டும்'' என்று கூறிப் போற்றினான். அப்போது அசரீரி வாக்கு ஒன்று எழுந்தது. ''இவ்வூரில் வணிகர் தெருவில் உப்பூரிகுடிகிழார் மரபில் உருத்திர ஜன்மன் என்ற பிள்ளை தோன்றியிருக்கிறான். ஐந்தாண்டு நிரம்பியவன். அவன் ஊமைப்பிள்ளை. முருகனுடைய அம்சம் உடையவன். அவனை அழைத்து வந்து ஆடையணி புனைந்து உயரிய ஆசனத்தில் இருத்திப் புலவர்களுடைய உரைகளை வாசிக்கச் சொல். யாருடைய உரையைக் கேட்டு அவன் ஆனந்தமடைந்து களிக்கூத்தாடுகிறானோ அதுவே சிறந்த உரை என்று கொள்க'' என்று அது கூறியது. அதுகேட்டு இறைவனை வணங்கி அரண்மனையை அடைந்தான் பாண்டியன்.

அப்பால் வணிகர் தெருவில் இருந்த உருத்திரஜன்மனை அழைத்து வந்து உயர்ந்த பீடத்தில் ஏற்றிப் புலவர்களையும் அழைத்து அவர்களுடைய உரைகளை வாசிக்கச் செய்தான். புலவர்கள் சிலர் வாசித்தபோது அந்தப் பிள்ளை அசையவே இல்லை; கோயில் விக்கிரகம் போல அமர்ந்திருந்தான். பாண்டியன் அதைக் கண்டு மனத்தில் கலக்கம் அடைந்தான். 'இந்தப் பிள்ளையோ ஊமை; இவன் இதைக் கேட்கிறானோ இல்லையோ?' என்று ஐயுற்றான். புலவர்கள் ஒருவர்பின் ஒருவராக உரையை வாசித்துக் கொண்டே போனார்கள். மருதன் இளநாகனார் என்னும் புலவர் தம் உரையை வாசித்தபோது உருத்திர ஜன்மன் சிறிதே உடல் குலுங்கி முறுவல் பூத்தான். அப்போது பாண்டியனுக்கு நம்பிக்கை உண்டாயிற்று. நக்கீரர் தம் உரையைப் படித்த பொழுது அடுத்தடுத்துப் புளகம் போர்க்க மகிழ்ச்சியைப் புலப்படுத்தினான்; அசைந்து ஆடினான். கடைசியில் அவர் உரையே சிறந்தது என்று யாவரும் முடிவு பண்ணினார்கள்.

அதுமுதல் இறையனாரகப் பொருளுக்கு நக்கீரர் எழுதிய உரையே வழங்கி வரலாயிற்று. அவ்வுரையில், 'மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனாரால் உரை கண்டு, குமாரசுவாமியாற் கேட்கப்பட்ட தென்க' என்று வருகிறது.

நூல் இயற்றியவர் தந்தை. அவருடைய இதயம் நன்கு அறிந்தவன் அவருடைய திருமகன். ஆதலால் இந்த உரைதான் நூலுக்கு ஏற்புடையது என்பதை அறிந்து புலப்படுத்தினான். இவ்வாறு இலக்கணத்தை அறிந்து தெளிவுறுத்தியதை எண்ணியே திருமுருகாற்றுப் படையில்,

நூலறி புலவ!

என்று அமைத்ததாகச் சொல்வதும் பொருத்தமாக இருக்கும்.

## பெரு வீரன்

உலகில் வரும் இடர்ப்பாடுகளைக் களைய வேண்டுமானால் நமக்குத் துணிவு இருக்க வேண்டும். இடர்களை எதிர்த்து நின்று வெல்வதற்கு அடிப்படையானது வீர உணர்ச்சி. உள்ளத்தில் வீரம் இல்லாதவன் எவ்வளவு பக்க பலம் உடையவனாக இருந்தாலும் செயலில் வெற்றி பெறமாட்டான். புறப்பகையை வெல்வதற்கு மிடலாகிய வீரமும், அகப் பகையை வெல்வதற்கு அறிவாகிய வீரமும் வேண்டும்.

முருகன் தன் அன்பர்களுக்கு வரும் இடையூறுகளைப் போக்கி அவர்களைப் பாதுகாப்பவன். இயற்கையாகவே நோயில்லா யாக்கையும் வலிமையும் உள்ள தேவர்கள் மகா வீரர்கள். அவர்களே அஞ்சும்படி அவர்களிலும் மிக்க வலிமையோடு இருந்தான் சூரபன்மன். அவனை எதிர்த்து வெல்லும் துணிவு அவர்களுக்கு உண்டாகவில்லை. முருகனிடம் புகலடைந்தபோது அவன் ஒருவனே அவர்களுக்குத் தலைமை தாங்கிப் போரை நடத்தினான். போரில் அமரர்களும் கலந்து கொண்டார்கள். முருகன் ஒருவன்தான் அத்தனை பேருக்கும் ஊக்கம் அளித்தான். தேவாசுர யுத்தம் மூண்டது. அதில் முருகன் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி நின்று வீரம் காட்டினான். அவனுடைய சிறப்பான வீரம் அந்தச் செருவில் நன்றாகப் புலப்பட்டது. வேறு யாரும் உவமை கூறமுடியாமல் ஒரு தனி வீரனாக நின்றான். ஆதலால் அவனை,

செருவில் ஒருவ!

என்று பாராட்டச் சொல்கிறார் நக்கீரர்.

அவன் புகுந்த போரின் முடிவு வெற்றிதான். அவன் பேரைச் சொல்லிப் புகுந்தவருக்கே வெற்றி கிடைக்கும்

என்றால் அவன் வெற்றி பெறுவதில் என்ன வியப்பு இருக்கிறது? வெற்றி பெறுவதற்கு ஏற்ற வீரமும், பொரும் செயல் திறமையும், இளமையும் உடையவன் அவன். ஆகவே,

பொருவிறல் மள்ள!

என்று போற்றுவாயாக என்கிறார் நக்கீரர். 'செருவில் ஒருவ' என்பதற்கு, 'போரில் யாவரும் ஒப்பு இல்லாதபடி நிற்பவனே' என்று பொருள். 'பொருவிறல் மள்ள' என்பதற்கு, 'பொருகின்ற வெற்றியினையுடைய இளைய வீரனே' என்பது பொருள். மள்ளன் என்பது வீரமும் இளமையும் உடையவன் என்பதைக் குறிக்கும். 'பொரு விறல் மள்ள' என்பதற்கு, 'வீரராயிருப்பார்க்கு வீரரா யிருப்பவனே' என்று ஒரு பழைய உரையாசிரியர் பொருள் கூறுகிறார்.

''பொருமறையார் கழல்வீரர் வீரன்''

என்பது சிவஞான சித்தியாரில் உள்ள முருகக் கடவுள் வாழ்த்து.

## அந்தணர் செல்வம்

வேதமும் வேள்வியும் ஆகிய இரண்டையும் பாதுகாக்கும் கடப்பாடு உடையவர்கள் அந்தணாளர்கள். அவ்விரண்டையும் காப்பாற்றி வருவதனால் யாவருமே நன்மை அடைகிறார்கள். கருவூலத்தைப் பாதுகாக்கும் காவலன் அந்தக் கருவூலம் தனக்கே உரியது என்று எண்ணமாட்டான். அதைக் காவல் புரிவதனால் பலருக்கும் பயன்படும் பொருள், தக்கபடி பயன் அளிக்க வகை உண்டாகிறது. வேதத்தை அடிப்படை நூலாகக் கொண்டது இந்து சமயம். இந்து மதம் என்பது புதிய பெயர். இதன் பழம் பெயர் வைதிக சமயம் என்பது. சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம் காணபத்தியம், சௌரம் என்ற வழி

பாடுகளும், அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் முதலிய சமய நெறிகளும் வேறு வேறாக இருந்தாலும் எல்லாவற்றிற்கும் பொதுவான நூலாக நிலவுவது வேதம். ஆதலால் சமய நெறிகள் குறைபாடின்றி நிலவ வேண்டுமானால் வேதத்தைக் காப்பாற்றல் அவசியம். அப்படியே வேள்வியினால் உலகத்துக்கே வளவாழ்வு உண்டாகிறது.

ஆதலின் வேதத்தையும் வேள்வியையும் இந்து மதத்தைச் சார்ந்த பல சமயத்தினரும் போற்றி வந்தனர். வேதநெறிக்குப் புறம்பான அவைதிகர்கள் அவற்றை ஏற்பதில்லை. ஞானசம்பந்தர் சைனர்களோடு வாது செய்யப் போகும்பொழுது ஆலவாய் இறைவனிடம் இசைவு வேண்டிப் பாடுகிறார்.

"வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாது செய்தழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுடன் ஆய பரமனே."

என்று கேட்கிறார். வேதமும் வேள்வியும் நமக்கு இன்றியமையாதவை. அவற்றை மறுத்து நிந்தனை செய்து உழன்றனர், அக்காலத்தில் பாண்டி நாட்டில் இருந்த சைனர்கள். அந்த நிலையை மாற்றப் புகுந்தார் ஞானசம்பந்தப் பெருமான்.

எனவே, அந்த இரண்டையும் காப்பாற்றும் அந்தணர்களைச் சமுதாயம் முழுவதும் மதித்துப் போற்றி வந்தது. அந்தத் தொழிலைச் செய்வதற்கு அவர்களுக்கு வலிமை வேண்டுமே! பணக்காரன் தன்னிடம் உள்ள பணத்தைக் கொண்டு பலரைக் காப்பாற்றுகிறான். அந்தணர்களும் ஒரு செல்வத்தைக் கொண்டே வேதத்தையும் வேள்வியையும்

பாதுகாக்கிறார்கள். அந்தச் செல்வம் எது? முருகனே அவர்களுக்குச் செல்வமாக இருக்கிறான். ஆகவே,

அந்தணர் வெறுக்கை!

என்று போற்றி வாழ்த்தச் சொல்கிறார் நக்கீரர். வெறுக்கை - செல்வம். இந்தத் தொடரை நினைந்தே அருணகிரிநாதரும் திருவகுப்பில்,

''வேதியர் வெறுக்கையும் அநாதிபர வஸ்துவும்''

என்று பாடியிருக்கிறார். அந்தணாளர்களிடம் முருகன் அன்புடையவன் என்பதை, அவனுடைய திருநாமங்களில் ஒன்றாகிய, ''ப்ராஹ்மணப்ரிய:'' என்பது விளக்கும்.

## அறிஞர் போற்றுபவன்

உலகத்தில் பணம் படைத்தவரினும் பலம் படைத்தவரினும் பதவி படைத்தவரினும் அறிவு படைத்தவரே சிறந்தவர்கள். பொருள்களின் தகுதியை அறிந்து மதிக்கும் ஆற்றல் அறிவுடையவர்களுக்கே உண்டு. அறிஞர்களிலும் பல வகையினர் உண்டு. ஒரு துறையில் வல்ல அறிஞர்கள் மற்றத் துறைகளில் உள்ளவற்றை அறியமாட்டார்கள். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்களையும் பற்றி அறிந்தவர்கள் இருக்கிறார்கள். இன்பம் அறித்தவர்களினும் பொருள் அறிந்தவர்கள் சிறந்தவர்கள். அவர்களினும் அறத்துறை அறிந்தோர் சிறந்தோர். வீட்டுநெறி அறிந்தவர்கள் எல்லாரினும் சிறந்தவர்கள். உண்மை அறிஞர் அவர்களே. அவர்களையே ஞானியர்கள் என்று கூறுவர். அவர்கள் பரம் பொருளை அறிந்தவர்கள். எல்லாப் பொருள்களினும் மேற்பட்டது பரம்பொருள். ஆகவே அதனை அறிந்தவர்கள் பிற பொருள்களை அறிந்த வர்கள் யாவரையும் விட மேலானவர்கள். அவர்களிடம் இருப்பது பரஞானம்.

அத்தகைய பேரறிவாளர்கள் முருகனை அறிந்து புகழ்கிறார்கள். அவர்கள் புகழ்கின்ற சொற்கள் மலைமலையாகக் குவிகின்றன. அந்தக் குவியல்மயமாக இருக்கிறான் முருகன்.

**அறிந்தோர் சொல்மலை!**

(மெய்யுணர்ந்தவர்களுடைய சொற்களெல்லாம் தொக்க தொகுதியாக விளங்குபவனே!)

சொற்கள் சிறிதும் தளராமல், தம் பொருளில் மாறாமல் ஈட்டமாக இருப்பதால் மலையென்றார். 'அறிந்தோர் சொற்களால் புகழ்பெறும் மலைபோன்றவனே' என்றும் பொருள் கொள்ளலாம். 'சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்' என்பது நச்சினார்க்கினியர் உரை.

## ஆடவரிற் சிறந்தோன்

ஆடவர்கள் வீரம் பொருந்தியவர்களாக இருந்தால் அவர்களை மகளிர் விரும்புவார்கள். தோளாண்மையினால் மங்கையர் மனத்தைக் கவர்வது வீரர் திறம்.

"மங்கையர்கள் தம்மனத்தை வாங்கும்
தடந்தோளான்."

என்பது நளவெண்பா. ஆண் மக்களுக்கு இன்றியமையாதது வீரம்; ஆண்களின் தன்மை என்னும் சொற் பொருளுடைய ஆண்மை என்ற சொல் வீரத்தைக் குறிப்பதனால் இது பெறப்படும். பெண்மை என்பது விருப்பம் என்ற பொருளுடையது. பெட்பு, மாதர் என்ற சொற்களுக்கு விருப்பம் அல்லது காதல் என்று பொருள். ஆண்மையை விரும்புவது பெண்மை; வீரத்தை விரும்புவது பெண்மை. வீர உருவமாக இருப்பவன் ஆடவன். அந்த வீரத்தை விரும்பும் வேட்கையின் உருவமாக இருப்பவள் பெண். முருகன் மகளிர்

விரும்பும் கணவனாக இருக்கிறான்; காரணம் அவன் சிறந்த ஆண்மையை உடையவர்களில் சிறந்தவனாக இருத்தல்.

தெய்வயானை, வள்ளிநாயகி என்னும் இருவருக்கும் கணவனாக விளங்கும் முருகன், வலியுடைய மைந்தர்களுக்குள் சிங்கம்போல விளங்குகிறான்.

**மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!**

மைந்தை உடையவர் மைந்தர். மைந்து - வலிமை. ஏறு என்பதற்கு இடபம் என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

ஆண்மகன் சமுதாயத்தில் பீடு நடை போட்டு உலவ வேண்டுமானால் அவனுடைய மனைவி கற்பிற் சிறந்த வளாக இருக்க வேண்டும்.

''புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை, இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.''

என்பது திருக்குறள். சிறந்த மங்கையர் இருவருக்குக் கணவனாக இருக்கும் சிறப்பினால், ஏனைய மைந்தர்களை விடச் சிறப்பாக மிடுக்கு நடை போடும் ஏறு போல இருக்கிறான் முருகன். அதனைக் கருதி இவ்விரண்டையும் இணைத்துச் சொன்னார் என்றும் கூறலாம்.

## வேலாயுதன்

முருகனுடைய வீரத்தை நினைப்பூட்டும் பல திரு நாமங்களைச் சொன்ன நக்கீரர், அந்த வீரனுக்குரிய பேரா யுதத்தை எண்ணுகிறார். முருகன் திருக்கரத்தில் வேற் படையை ஏந்தியிருக்கிறான். படைக்கலங்கள் பல உண்டு. அவற்றில் வில், வாள், வேல் என்பவை சிறந்தன. ஆயுதங்களில் அஸ்திரம், சஸ்திரம் என்று இரண்டு வகை

உண்டு. கையை விட்டுப் பிரயோகிக்கும் கருவிகள் அஸ்திரங்கள்; அம்பு போன்றவை. கையில் வைத்துக் கொண்டே தாக்குவன சஸ்திரங்கள்; தண்டம், உலக்கை போன்றன. வேல் அஸ்திரமாகவும் சஸ்திரமாகவும் பயன் படுவது. ஆதலால் அது வில், வாள், வேல் என்ற மூன்றில் சிறந்து நிற்கிறது. வெல் என்பதிலிருந்து பிறந்தது வேல் என்ற சொல். வெல்வதற்கு ஏற்ற கருவியாதலின் வேலாயிற்று. சிறந்த பெருவீரனகிய முருகன் படைக் கலங்களில் சிறந்த வேலை ஏந்தியிருக்கிறான். ஞானசக்தியையே அவன் வேலாக ஏந்தியிருக்கிறான். ஆதலால் ஞானசக்திதரன் என்ற திருநாமம் அவனுக்கு உண்டாயிற்று.

சிறந்த வேற்படையை முருகன் தன் பெரிய கையில் ஏந்தியிருக்கிறான். அவன் புஜபல பராக்கிரமம் உடையவன். அதற்கு ஏற்ற படைக்கலமும் கிடைத்து விட்டது என்றால் அவன் பெறும் வெற்றித் திருவுக்குக் கேட்க வேண்டுமா? வெற்றியே ஒரு செல்வம். அதனால் வரும் செல்வமும் பல பல. எந்தக் கையினால் வேலெடுத்து வெற்றி பெற்றானோ, அந்தக் கையினால் அவன் பிறருக்கு அச்செல்வத்தை ஈயவும் வல்லவன். வீரத்தால் வேலோச்சி வென்று பல செல்வத்தைக் கொண்டது அந்தக் கை; ஈரத்தால் பலருக்கு வழங்கும் பெருமை பெற்றதும் அந்தக் கையே. செல்வத்தை ஈட்டுவது மட்டும் செல்வருக்கு அழகு அன்று; அதைப் பிறருக்கு வழங்கும்போதுதான் அவர் உண்மையான செல்வராகிறார்; பலரும் அறியும் செல்வராகிறார். முருகன் அத்தகைய செல்வன்.

**வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!**

*(வேல் பொருந்திய பெரிய கைகளால் அமைந்த பெரிய செல்வத்தை உடையவனே!)*

'என்றது வேல் வெற்றியாற் பெற்ற அச்செல்வத்தை' என்று விளக்கம் எழுதுவார் நச்சினார்க்கினியர். சாலுதல் - நிறைதல்.

செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
அந்தணர் வெறுக்கை!அறிந்தோர் சொல்மலை!
மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!

என்று போற்றிப் பாராட்டும்படி எதிர்ப்பட்ட புலவனுக்கு உபதேசம் செய்கிறார் நக்கீரர்.

## குன்றம் எறிந்தவன்

பழைய காலத்து உரையாசிரியர்கள் சில தொடர்களை வழக்கமாகச் சொல்வார்கள். முருகனைக் குறிக்கும்போது 'குன்றம் எறிந்த குமரவேள்' என்று சொல்வார்கள். இறையனாரகப் பொருள் உரையில் தலைச் சங்கத்தில் இன்னார் இன்னார் புலவர்களாக இருந்து தமிழ் ஆராய்ந்தார்கள் என்று சொல்லுமிடத்தில் 'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும்' என்று வருகிறது. குன்றம் என்றது மலை வடிவத்தில் நின்ற கிரவுஞ்சாசுரனை. முருகன் தன் வேலால் அந்த மலையைப் பொடிப்பொடி ஆக்கினான். அது அவனுடைய வெற்றிக்குச் சிறந்த அடையாளமாயிற்று. அது புலவர்கள் போற்றும் வகையில் என்றும் குன்றாத கொற்றமாக நிலவுகிறது.

கிரவுஞ்சம் என்பது அன்றிற் பறவையின் பெயர். ஆணும் பெண்ணும் பிரியாமல் எப்போதும் இரட்டையாகவே இருக்கும் இயல்புடையவை அப்பறவைகள்; கிரவுஞ்ச மிதுனம் என்பார்கள். சிறந்த காதலர்களின் அன்புக்கு அன்றிலிணையை உவமை சொல்வது புலவர்களின்வழக்கம். அன்புக்கு அறிகுறியாக இருக்கும் அன்றிலின் உருவத்தில்

இருந்த அசுரன் கொடுமை செய்தான். பொல்லாதவர்கள் நல்லவர்கள் போலத் தோற்றம் கொண்டு, பிறரை ஏமாற்றிக் கொடுமை செய்வார்கள். இந்த இயல்பைக் கிரவுஞ்சாசுரன் கொண்டிருந்தான். அன்றில் வடிவில் மலையாக இருந்த அவன் எங்கும் பறந்தான். திடீரென்று ஓரிடத்தில் வந்து படிவான். அடியில் இருந்த மக்களும் பிறரும் நசுங்கி மாய்வார்கள். சிவ பெருமான் பறக்கும் மூன்று புரங்களை அட்டார். பறந்து சென்று படிந்து நின்று உலகுக்குத் துன்பத்தைத் தந்த கிரவுஞ்சமலையை முருகன் அட்டான்.

பழைய நூல்களில் கிரவுஞ்சமலையைப் பற்றிய செய்தி வேறு வகையாக இருக்கிறது. சூரன் கிரவுஞ்ச மலைக் குள்ளே புகுந்து கொண்டு எங்கும் திரிந்தானாம். அம் மலை அவனுக்குக் கவசம் போல இருந்ததாம். அம்மலையையும் சூரனையும் ஒரே சமயத்தில் ஊடுருவிச் செல்லும்படி முருகன் தன் வேலை ஏவினானாம்.

''ஒருதோகை மிசைஏறி உழல்சூரும் மலைமார்பும்
உடன்ஊடறப்
பொருதோகை சுரராச புரமேற விடுகாளை
புகழ்பாடுவாம்.''

என்று ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் பாடுகிறார். அதற்கு உரை எழுதிய பழைய உரையாசிரியர், 'சூர பன்மாவுக்கு மறைவாய் ஓடி வரலான மலையினுடைய மார்பும் சூரபன்மாத்தானும் ஒக்க ஒரே காலத்தில் ஊடுருவும்படி வேலேறுபடப் பொருதருளி' என்று எழுதுகிறார். ''கிளைபட் டெழுசு ரூரமும் கிரியும், தொளைபட்டுருவத் தொடுவே லவனே'' என்று அநுபூதிப் பாட்டில், கிரவுஞ்ச மலையையும் சூரன் மார்பையும் ஒருங்கே தொளைத்து அழித்த வேலின் பெருமையை அருணகிரி நாதரும் கூறுகிறார்.

முருகன் மலைக்குத் தலைவன்; முதல் திணையாகிய குறிஞ்சிக்குத் தலைவன். அதற்கு அவனே உரிமையாளன். விண்ணைத் தொட்டு நிமிர்ந்துள்ள மலைகளிலெல்லாம் அவன் கோயில் கொண்டுள்ளான். கோயில் இருப்பினும் இல்லையாயினும் அவனுடைய உரிமை போகாது. இதைப் பற்றி முன்பே பார்த்தோம். குன்றங்களுக்குத் தலைவனாக இருந்தாலும் கிரவுஞ்சமாகிய குன்றத்தை அழித்தான். தவறு செய்தால் அவன் யாரானாலும், எப்படித் தோற்றினாலும் அவனை ஒறுப்பது தலைவன் கடமை. ஆகவே, மலைகளுக்கு உரியவனாக இருக்கும் முருகன், 'இது மலையாயிற்றே; இதை அழிக்கக் கூடாது' என்று எண்ணவில்லை. உலகுக்குத் தீங்கு புரியும் கொடுமையையுடைய அதனை வேலால் எறிந்து அழித்தான்.

முருகன் கிரவுஞ்சத்தை அழித்த கொற்றத்தையும் குறிஞ்சி நிலத்துக்கு உரிமை பூண்டிருக்கும் சிறப்பையும் சொல்லிப் போற்றும்படி சொல்கிறார் நக்கீரர்.

குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!

(கிரவுஞ்சமலையை அழித்த குறையாத வெற்றிச் சிறப்பையுடைய, வானை முட்டுகின்ற உயர்ந்த மலைகளையுடைய குறிஞ்சி நிலத்துக்கு உரிய தலைவனே!)

### குறிஞ்சிக் கிழவன்

கிழமை என்பது உரிமை; அதை உடையவன் கிழவன். குறிஞ்சித்திணைக்கு உரியதலைவனாக இருப்பவன்முருகன்.

"சேயோன் மேய மைவரை உலகமும்"

என்பது தொல்காப்பியம். இந்த உரிமையை யாரும் பறிக்க முடியாது. அகப்பொருள் இலக்கணத்தைக் கூறும் நூல்களில்

எல்லாம் முருகனைக் குறிஞ்சிக்குரிய தெய்வம் என்று வரையறுத்துக் கூறியிருக்கிறார்கள் புலவர்கள். நூலை இயற்றியவர்கள் எந்தச் சமயத்தினராயினும் முருகனுக்குள்ள இந்த உரிமையைப் பறிப்பதில்லை. புத்தமித்திரர் என்ற பௌத்தர் தாம் இயற்றிய வீரசோழியம் என்ற நூலில் குறிஞ்சித்திணைக்குத் தெய்வம் முருகன் என்றே சொல்லுகிறார். அவர் விரும்பியிருந்தால், அதற்குப் புத்தன் தெய்வம் என்று சொல்லியிருக்கலாம். அகத்தியர் சிவபிரானிடம் தமிழ் கேட்டார் என்று நாம் சொல்வோம். பௌத்தராகிய புத்தமித்திரர் அவலோகிதன் என்னும் பௌத்த தெய்வத்தினிடம் கேட்டதாகப் பாடுகிறார். ''ஆயுங் குணத்தவ லோகிதன் பால்நின் றருந்தமிழ்கேட்டு'' என்று கூறுகிறார். அது போலக் குறிஞ்சி முதலியவற்றுக்கு வெவ்வேறு தெய்வங்களைக் கூறியிருக்கலாம். அவர் அந்தப் பிழையைச் செய்யவில்லை. குறிஞ்சிக் கிழவன் முருகனே என்று இலக்கணம் வகுக்கிறார்.

புறச்சமயமாகிய சைன மதத்தைச் சேர்ந்தவர் நாற்கவிராச நம்பி என்பவர். அவர் இயற்றிய அகப்பொருள் விளக்கம் என்ற நூல் புலவர்கள் மிகுதியாகப் பயிலும் நூல். அதிகம் சைனராகிய ஆசிரியர் குறிஞ்சிக்கு உரியவன் முருகனென்றே பாடினார். இத்தாலியிலிருந்து வந்த கிறிஸ்துவப் பாதிரி யாராகிய வீரமாமுனிவர் தாம் இயற்றிய தொன்னூலிலும் இந்த உரிமையை மாற்றவில்லை. யாரும் மாற்றத் துணியாத கிழமை முருகனுக்கும் குறிஞ்சிக்கும் அமைந்திருக்கிறது.

### அருணகிரியார் கூறுவது

கிழவன் என்ற சொல்லுக்குப் பழங்காலத்தில் உரிமையையுடையவன் என்ற பொருள்தான் இருந்தது. பிற்காலத்தில் முதியவனையும் கிழவன் என்று வழங்கும்

வழக்கம் உண்டாயிற்று, அருணகிரிநாதர் காலத்தில் அந்தப் பொருள் வந்து விட்டது. ''கிழவனாய்ப் புக்கு நின்று'', ''தொண்டு கிழவனின் ஆர்'' என்று திருப்புகழில் முதியவன் என்ற பொருளில் அச் சொல்லை ஆளுகிறார்.

முருகனுடைய திருநாமமாகிய குறிஞ்சிக் கிழவன் என்பதை எண்ணி அருணகிரிநாதர் நயமாக ஒரு பாட்டுப் பாடுகிறார். கந்தர் அலங்காரத்தில், 'இந்த உலகம் என்ன பைத்தியக்கார உலகமாக இருக்கிறது! முருகன் மாறாத இளமையுடையவன்; குழந்தை; இளங்குருத்துப் போன்ற பச்சிளங்குழந்தை, அவனைக் கிழவன் என்று சொல்கிறதே! அவன் பால் குடிக்கும் பச்சைக் குழந்தை; தொட்டிலில் வளரும் பருவக் குழந்தை; பாலுக்காக அழும் குழந்தை; இப்படி இருக்க, அவனைக் குறிஞ்சிக் கிழவன் என்று சொல்லலாமா?' என்று வேடிக்கையாகப் பாடுகிறார்.

''திருந்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்று ஓதும் குவலயமே''

என்பது கந்தர் அலங்காரம். திருமுருகாற்றுப்படையில் வரும் ''விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ'' என்ற தொடர் அருணகிரிநாதர் உள்ளத்தில் எழுப்பிய ஒலியே இந்தப் பாட்டு.

## புலவர் ஏறு

முருகன் அறிவுடையவர்களுக்கெல்லாம் தலைவன். புலமையுடையவர்களில் தலைமை பூண்டவன். அகத்திய ரென்னும் பெரும்புலவருக்குத் தமிழை அறிவுறுத்திய மாபெரும் புலவன். அவனை நல்ல மொழிகளால் எல்லோரும் புகழ்கிறார்கள்.

பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!

*(சாதி, சமயம், இனம், நாடு, மொழி ஆகியவற்றால் வெவ்வேறாக இருக்கும் பலவகையினரும் புகழ்கின்ற நல்ல மொழிகளுக்கு உரியவனாகிய புலவர்களுக்கு ஆண் சிங்கம் போன்றவனே!)*

'பலரும் புகழ்ந்து சொல்லும் நன்றாகிய சொற்களை யுடைய பரசமயத்திலுள்ளார்க்கு ஏற்றின் தன்மையை யுடையவனே' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதி, 'என்றது, கல்வி மதத்தையுடைய யானை போல்வார்க்குச் சிங்க ஏறு போல்வாய் என்றதாம்' என்று விளக்குவார். 'பரசமயத்தில் உள்ளார்க்கு ஏறு போல்வாய்' என்று சொன்னது, முருகனே ஞானசம்பந்தராக அவதரித்தார் என்ற கொள்கையை எண்ணிப் போலும். ஞானசம்பந்தரைப் பரசமய கோளரி என்று கூறுவர்.

முருகன் எல்லா மொழியிலும் வல்லவனாதலின் பலரும் புகழ்ந்தனர். புலவர் என்பதற்கு ஞானிகள் என்று ஒரு பொருள் உண்டு. ஞானியர்களுக்கெல்லாம் தலைவனாகிய ஞானபண்டிதனே என்று பொருள் கொள்வதும் பொருந்தும். தேவர்களுக்கும் புலவர் என்று பெயர் உண்டு. அதனால், 'தேவர்களுக்கெல்லாம் ஏறுபோன்ற தலைவனே' என்றும் பொருள் கொள்ளலாம். ''சுரலோக சிகாமணியே'' என்பது அநுபூதி.

## பெரும் பெயர் முருகன்

இனி அப்பெருமானுடைய திருநாமமாகிய முருகன் என்பதன் சிறப்பைச் சொல்ல வருகிறார்.

அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக!

மரபு என்பது இலக்கணம். 'பெறுவதற்கரிய இலக்கணங்களால் வந்த பெரிய திருநாமமாகிய முருகன்

என்னும் திருநாமத்தை உடையவனே!' என்பது இதற்குப் பொருள்.

முருகை உடையவன் முருகன். 'அந்தத் திருநாமத்தைப் பெறுவதற்குரிய மரபு அல்லது தகுதி யாவருக்கும் இல்லை. அது பெறுவதற்கு அரியது. அதைப் பெற்றவன் முருகன். அவன் திருநாமம் பொருளாலும் சுவையாலும் பயனாலும் மிகப் பெரியது; அது பெரும் பெயர்.

முருகனிடம் உள்ள அனந்த கல்யாண குணங்கள் ஒப்புச் சொல்லுதற்கு இயலாத நிலையில் உள்ளன. முருகு என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. நிகண்டுகளில் அவற்றைக் காணலாம். எல்லாவற்றையும் தொகுத்துக் காட்டும் தமிழ்ப் பேரகராதியில், இளமை, மணம், அழகு, தெய்வத் தன்மை, வெறியாட்டு வேள்வி, திருவிழா, பூத்தட்டு, தேன், கள், எலுமிச்சை, அகில், எழுச்சி, விறகு, காதணிவகை என்ற பொருள்கள் உள்ளன.

இவற்றில் தலைமையானவை மணம், தெய்வத் தன்மை, இளமை, அழகு என்பவை. இந்த நான்கையும் குறிப்பாக நக்கீரரே பின்பு திருமுருகாற்றுப்படையில் கூறுகிறார். ''மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி'' என்று 290-ஆம் அடியில் சொல்கிறார்; மணமும், தெய்வத்தன்மையும், இளமையும், நலமாகிய அழகும் அவன் தன் திருவுருவத்திலே காட்டுவான் என்று கூறுகிறார்.

இந்த நான்கு மரபுகளும் கடவுள் திருவுருவங்களில் வேறு யாருக்கும் அமையாத வகையில் முருகனிடம் சிறந்து நிற்கின்றன. அழியாத ஞான மணமும், அருளென்னும் தெய்வத்தன்மையும், என்றும் அழியாத இளமையும், என்றம் மாறாத பேரழகும் உடையவன் முருகன். அவன் ஞான ஸ்கந்தன். கருணைகூர் முகங்களாறுடைய பேரருளாளன்.

என்றும் அழியாத இளமைக்காரன். ஆயிரம் கோடி காமர் அழகெலாம் திரண்டு ஒன்றாகி மேவினாலும் இணையாகாத வடிவழகன். ஆகவே அவன் இயல்புகள் பிறரால் பெறுவதற்கு அரியன. அத்தகைய முருகு அவனிடம் இருப்பதனால் அவன் திருநாமம் வேறு யாருக்கும் பெறற்கு அரியதாயிற்று. பரிபாடலும் 'பெரும் பெயர் முருக!' என்று அவனைப் பாராட்டும்.

முருகன் என்னும் திருநாமம் பல பொருள்களையும் தன்னுள் அடக்கி நிற்கிறது. ஞானபண்டிதா, அருளாளா, பாலசுப்பிரமணியா, சுந்தரமூர்த்தி, பக்தர்களுக்குத் தேனாகும் இறைவா, வேள்விக் காவலா என்று பல திருநாமங்கள் கூறிப் பெறும் பயனை அந்தத் திருநாமம் ஒன்றை ஓதிப் பெறலாம். அதனால்தான் அருணகிரிநாதர் அது சொல்லால் ஒன்றாக நின்றாலும் அதைத் திருநாமங்கள் என்று சொல்கிறார்.

''மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள்.''

(கந்தர் அலங்காரம்)

மரபு என்பதற்கு வரலாறு என்பது ஒரு பொருள். பிறரால் பெறுவதற்கரிய வரலாற்றையும் பெரிய பெயரையும் உடைய முருகனே என்றும் பொருள் கொள்ளலாம். பெயர் என்பதற்குப் பொருள் என்றும் ஒரு பொருள் உண்டு. நச்சினார்க்கினியர் அந்தப் பொருளைப் பொருத்தி உரை கூறுகிறார். 'பிறருக்குப் பெறலரிய முறைமையினையுடைய பெரும் பொருளை யுடைய முருக' என்று பொருளெழுதி 'பெரும் பொருளென்றது வீட்டினை' என்று விளக்குவார். முத்திச் செல்வத்துக்குத் தலைவனாக நின்று அதனை அடியார்களுக்கு வழங்குபவன் முருகனாத லின் இவ்வாறு பொருளுரைத்தார்.

குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக!

## பேரிசையாளன்

செல்வத்தைப் பெற்றவர்கள் அதனால் வரும் இன்பங்களை நுகர்வதோடு நின்றால் சிறப்பன்று. ''செல் வத்துப் பயனே ஈதல்'' (புறநானூறு) என்று சொல்வார்கள். எத்தனைக்கு எத்தனை செல்வம் இருக்கிறதோ, அத்தனைக்கு அத்தனை அறம் புரிய வேண்டும். அதனால் புகழ் பரவும். ''ஈவார்மேல் நிற்கும் புகழ்'' என்பது திருக்குறள்.

பெரிய செல்வர்கள் தம்முடைய செல்வத்தை நுகர்வதோடு நின்றிருந்தால் அந்தச் செல்வம் அழியும்; அவர்களும் மாய்ந்து போவார்கள்; அவர்கள் பெயரும் அவர்களுடன் மறைந்து போகும். ஆனால் அழிந்தொழியும் செல்வத்தைக் கொண்டு அறம் புரிபவர்கள், அந்தச் செல்வம் போனாலும் அவர்கள் மறைந்தாலும் அவர்கள் புகழ் மறையாமல் வாழும். உலகில் வாழும் போது அவர்களுக்கு இசை பெருகும். அப்பாலும் புகழ் நிற்கும்.

''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
ஊதியம் இல்லை உயிர்க்கு.''

என்று திருவள்ளுவர் கூறுவது இங்கே நினைப்பதற்குரியது.

சிறிதளவு பொருளைக் கொண்டு அறம் செய்பவ னுடைய புகழ் ஓரளவு பரவும். பல காலம் நிற்கும் அறங்களைப் புரிபவன் புகழ் நீடித்து நிற்கும். பலருக்குப் பயன்படும் அறங்களைப் புரிபவன் புகழ் பரந்து விரியும். மிகச் சிறந்த பொருளைப் பலருக்குப் பலகாலம் பயன்படும்படி வழங்குபவன் புகழ் நீண்டு பரந்து நிற்கும்.

முருகன் புகழ் அப்படிப் பரவியிருக்கிறது. அவன் தன்பால் அடியார் எது வேண்டி வந்தாலும் அதனை ஈயும் வள்ளல். அவனால் அளிக்க முடியாத பொருள் ஏதும் இல்லை. இந்த அளவுதான் அளிப்பான் என்ற எல்லையும் இல்லை. அவன் வரம்பிகந்த செல்வம் உடையவன். பிறரால் வழங்குவதற்கு அரிய செல்வம் ஒன்று அவனிடம் உண்டு. அதுதான் முத்தி யென்னும் செல்வம். அதனை வேறு யாரிடமிருந்தும் பெறமுடியாது. அதைத் தருவதால் அவன் புகழ் மேன்மேலும் பரவிக் கொண்டே இருக்கிறது.

முருகனுடைய வள்ளன்மையையும் அதனால் விளையும் புகழையும் புலப்படுத்தும் திருநாமத்தை அடுத்தபடி கூறுகிறார் நக்கீரர்.

நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபே ராள!

(தன்பால் விரும்பி வந்தவர்களுக்கு அவர் விரும்பியதைத் தந்து நிரம்ப நுகரச் செய்யும், பெரிய புகழை உடையவனே!)

நசை என்பது விருப்பம். முருகனை அணுகினால் வேறு யாராலும் வழங்க முடியாத பெருஞ் செல்வத்தைப் பெறலாம் என்ற விருப்பத்தோடு அவனை அணுகுகிறார்கள் அன்பர்கள். ஆகையால் அவர்களை நசையுநர் என்றார். இந்த அடிக்கு, 'வீட்டைப் பெறவேண்டுமென்று நச்சி வந்தார்க்கு அதனை நுகர்விக்கும் பெரிய புகழை ஆளுதலையுடையாய்' என்று உரை எழுதுவர் நச்சினார்க்கினியர்; 'பேரிசை என்று மாறுக' என்றும் எழுதுவர்.

## ஆர்த்துதல்

ஆர்த்தும் என்பதற்கு ஆரச் செய்யும் என்பது பொருள்; ஆர்தல் - நிறைதல், நுகர்தல்; இங்கே அவ்விரண்டையும்

இணைத்துப் பொருள் கொள்ளுதல் சிறப்பு. தன்னை அண்டி வந்தாருக்கு யாதொரு குறைவும் இன்றி நிரம்ப வழங்கி அதனை முற்றும் நுகரச் செய்பவன் முருகன். தன்பால் வந்து கேட்டவனுக்குப் பிறரிடம் மறுபடியும் சென்று கை நீட்டாமல் நிறையக் கொடுப்பது வண்மையாளர் இயல்பு.

> ''இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
> குலனுடையான் கண்ணே உள.''

என்ற குறளின் உரைகளில் ஒன்றாகிய, 'அதனைப் பின்னும் பிறன் ஒருவன்பாற் சென்று உரையா வகையால் கொடுத்தல்' என்பதை இங்கே நினைத்துப் பார்க்க.

> ''செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
> பெருமான் முகம்பார்த்த பின்னர் - ஒருநாளும்
> பூதலத்தோர் தம்மைப் பொருள்நசையாற் பாராவாம்
> காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்.''

என்ற பழம் பாடலும் இக்கருத்தை உரைப்பது காண்க.

குறைவிலா நிறைவாக இருக்கும் இறைவன் ஒருவனே குறைவின்றி நிரம்பக் கொடுப்பவன். மற்றவர்கள் தாங்களே குறையுடையவர்களாதலின் பிறருக்குக் குறைவின்றிக் கொடுக்கும் ஆற்றல் அவர்களிடம் இராது. ஆதலின் ஆர்த்தும் பெருமையை உடையவனாகிய முருகனைப் போற்றச் சொல்கிறார் நக்கீரர்.

நுகரச் செய்யும் என்பது ஆர்த்தும் என்பதற்கு உரிய மற்றொரு பொருள். பொருளை வழங்கினாலும் அந்தப் பொருளினால் வரும் போகத்தைப் பொருளுடையவன் பெறுவான் என்று சொல்வதற்கில்லை. புலவனுக்கு யானையைக் கொடுத்தால் அவன் அதைக் கொண்டு என்ன செய்வான்? யானையைக் கட்டித் தீனி போடுவது எப்படி?

அதனால் பழங்கால வள்ளல்கள் யானையை வழங்கும் போது அந்த நிலைக்கு ஏற்ற செல்வத்தையும் வழங்கு வார்கள்.

ஒரு புலவனுக்குச் செல்வன் ஒருவன் தேரை ஈந்தான். அதில் எப்படி ஏறுவது என்று அந்தப் புலவனுக்குத் தெரியவில்லை. அவன், ''இப்படி ஏறவேண்டும்'' என்று சொல்லிக் கொடுத்தானாம். ''ஏறென்று ஏற்றி'' என்று கூறுகிறார் புலவர்.

பொன்னும் மணியும் பிற பொருளும் இருந்தாலும் அவற்றால் வரும் இன்பத்தை நுகரும் வாய்ப்பு எல்லோருக்கும் கிடைப்பதில்லை. நுகர்வதற்கும் ஒரு புண்ணியம் வேண்டும்.

''பொன்னானாய் மணியானாய் போகம் ஆனாய்.''

என்று அப்பர் சுவாமிகள் பாடுவார். இறைவனே போகமாகவும் இருந்து அருள் செய்கின்றானாம்.

முருகன் தன்பால் வருகிறவர்களுக்கு நிரம்பக் கொடுப்பதோடு அதை அவர்கள் நன்கு நுகரவும் செய்வான். இந்தக் கருத்தை 'ஆர்த்தும்' என்ற சொல் புலப்படுத்துகிறது.

உயர்ந்த செல்வத்தைக் குறைவறக் கொடுத்து அதனை நுகரும்படி செய்யும் வள்ளலுடைய புகழ் சிறியதாகவா இருக்கும்? அதனால்தான் முருகனை, 'இசை பேராள' என்றார்.

## அலந்தாரைக் காப்பவன்

முருகன் கருணைப் பெருங்கடல். துன்புறும் உயிர்களைக் காப்பாற்ற வேண்டும் என்னும் பேரருளாளன். பிறரால் துன்புற்று வேறு ஒரு துணையும் இன்றி ஆற்றலழிந்து நிற்கும் அநாதைகளை அருள் கூர்ந்து காப்பாற்றும் பெருமான். தேவர்கள் பலமுடையவர்கள். ஆயினும் அசுரேந்திரனாகிய

சூரனால் அவர்களுடைய ஆற்றல்கள் அழிந்தன. நிர்க்கதியாக நின்றார்கள். அவர்களை முருகன் காப்பாற்றினான். இவ்வாறு இடுக்கண் அடைந்து கதியற்று வந்தவர்களைக் காக்கும் செயலைப் பல முறை முருகன் ஆற்றியிருக்கிறான். அவன் அலந்தோர்க்கு அளிப்பவன்.

அவன் செக்கச்சிவந்த நிறமுடையவன். அதனால் சேய் என்ற திருநாமம் அவனுக்கு வந்தது. அத்தகைய அழகுத் திருமேனியில் மதாணி முதலிய பொன்னணிகளை அணிந் திருக்கிறான். அன்பர்கள் அவனை அலங்கரித்துப் பார்க்க வேண்டும் என்னும் ஆர்வமுடையவர்கள். அவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்க அவன் அணிகலன்களை அணிகிறான்.

அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்!

(துன்புற்று நிர்க்கதியாக வந்தவர்களுக்கு அருள் வழங்கிக் காப்பாற்றும், பொன் அணிகலன்களை அணிந்த, செவ்வண்ண மேனிப் பெருமானே!)

கைபுனைந்து இயற்றாத அணிகலன்களைத் தேவரும் கடவுளும் அணிந்திருப்பதாகச் சொல்வது மரபு. "நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழை"யைத் தேவ மகளிர் அணிந்திருப்பதாக முதலில் நக்கீரர் சொல்லியிருக்கிறார். அம்பிகையை, "இழையணி சிறப்பிற் பழையோள்" என்று கூறியதையும் பார்த்தோம்.

## பரிசிலரைத் தாங்குபவன்

இனி முருகனுடைய வீரத்தையும் அதனால் விளையும் கொடைத் திறத்தையும் சொல்ல வருகிறார்.

வீரமுடையவர்களுடைய தோள் திண்ணியதாக இருக்கும். மார்பு அகன்றிருக்கும்; அதனால் மார்புக்கே

அகலம் என்று பெயர் வந்தது. பரந்த மார்பு வீரத்துக்கு அறிகுறி. முருகன் பெரு வீரமும் அகன்ற மார்பும் உடையவன். எத்தனையோ போர்களில் வெற்றி கண்ட மார்பு அது. போரில் அஞ்சி ஒதுங்காமல் பகைவர்களின் முன் நின்று மார்பு நிமிர, விழுப்புண் பட்டாலும் தளராமல் பொருதல் வீரர்களுக்கு அழகு. 'நான் என்று மார்தட்டும் பெருமாள்' முருகன். ஆகவே அந்தத் திருமார்பை, ''மண்டு அமர்க் கடந்த வென்றாடு அகலம்'' என்று சிறப்பிக்கின்றார் ஆசிரியர். வஞ்சியாமல் எதிர் நின்று கொல்வதைக் கடத்தல் என்பர். முருகன் அவ்வாறு போர் புரிகிறவன்.

இவ்வாறு பகைவரோடு போர் செய்வதனால் முருகன் வெற்றியை அடைகிறான். அந்த வெற்றியினால் கிடைக்கும் பொருள்களை அவன் தன்னை வேண்டி நிற்பவர்களுக்கு வழங்கி விடுகிறான். தனக்கென்று பாதுகாத்து வைத்துக் கொள்வதில்லை. சூரனிடமிருந்து மீட்ட தேவலோகத்தை அவன் இந்திரனுக்கே வழங்கிவிட்டான்.

வள்ளல்கள் தம்முடைய பெரு வீரத்தால் பெற்றவற்றைத் தம்மிடம் வந்து இரக்கும் புலவருக்கும் பாணருக்கும் அளித்து விடுவார்கள். முருகன் தன் மார்பின் வீரத்தால் பெற்றவற்றைத் தன்னை நாடி வரும் பரிசிலருக்கு வழங்கி விடுகிறான். அவன் இத்தகைய செயல்களால் ஓங்கி நிற்கிறான். உருவத்தாலும் உயர்ந்து நெடியவனாக இருக்கிறான்.

> மண்டுஅமர்க் கடந்தநின் வென்றுஆடு அகலத்துப்
> பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்!

(மேல் நெருங்கி வருகின்ற போர்களை வஞ்சியாமல் எதிர் நின்று முடித்து நின்னுடைய வென்று அடுகின்ற மார்பினால் (வரும் செல்வத்தைக் கொண்டு) பரிசிலர்களைப்

பாதுகாக்கும் அழகையுடைய நெடிய வேளே! மண்டு - நெருங்கும். கடந்த - வஞ்சியாமல் எதிர்நின்று கொன்ற. வென்று ஆடு - வெற்றி பெற்று அடுதலையுடைய. அகலம் - மார்பு. பரிசிலர் - பரிசில் பெறவேண்டும் என்ற எண்ணத் தோடு வரும் இரவலர். தாங்கும் - பாதுகாக்கும். உரு - அழகு.)

இவ்வாறு மார்பின் வலிமையால் பெற்ற செல்வத்தைப் பரிசிலருக்கு ஈவதாகச் சொல்வது ஒரு மரபு. கொண்கானங் கிழான் என்ற வள்ளலை மோசிகீரனார் என்பவர் புகழும் போது,

"இலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்
கொண்பெருங் கானத்துக் கிழவன்
தண்டார் அகலம் நோக்கின மலர்ந்தே"

(புறநானூறு, 153)

என்று பாடுகிறார். 'மண்டை அகலம் நோக்கி மலர்ந்த' என்ற கருத்து: கொடுக்கும் பொருள் மார்பின் வலியான் உளதாமாகலின், அகலம் நோக்கின் என்றதாகக் கொள்க' என்று அதன் பழைய உரையாசிரியர் விளக்குகிறார்.

போரிலே பெற்ற செல்வத்தைப் பரிசிலருக்கு வழங்கிப் பாதுகாக்கும் பண்பை உடையவன் முருகன். இதனால் அவன் வீரமும் கொடைத்திறமும் ஒருங்கே புலனாகின்றன.

'மண்டமர் கடந்த வென்றாடு நின் அகலத்துப் பொலம் பூண் சேஎய்' என்று கூட்டி, 'மிக்குச் செல்கின்ற போர்களை முடித்த வென்றடுகின்ற நினது மார்பிடத்தே பொன்னாற் செய்த பேரணிகலங்களை அணிந்த சேய்' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர்.

உருகெழு என்பதற்கு, பகைவர்களுக்கு அச்சத்தை உண்டாக்குகின்ற என்றும் பொருள் கொள்ளலாம்.

## மிகப் பெரியவன்

முருகனை யாவரும் துதிக்கிறார்கள். அவனுடைய பெயர் எங்கும் பரவுகிறது. மிகப் பெரியவர்களெல்லாம் அவனை ஏத்துகிறார்கள். அவன் எலலோரையும் விடப் பெரியவன் அல்லவா? அவன் பெயர் பெரியது; புகழ் பெரியது; அவனை ஏத்துபவர்களும் பெரியவர்கள். பதவியால் பெரிய பிரமன் முதலியோர் அவனை ஏத்து கிறார்கள். ஆற்றலால் பெரிய இந்திரன் அவனை ஏத்துகிறான். தவத்தால் பெரிய முனிவர்கள் அவனை ஏத்துகிறார்கள். அருளால் பெரிய சிவபெருமானே ஏத்துகிறான். அழகால் பெரிய மன்மதன் ஏத்துகிறான். கல்வியால் பெரிய அகத்தியரும் பிறரும் ஏத்துகின்றனர். இப்படிப் பல துறைகளிலும் பெரியவர்கள் ஏத்தும் பெரிய புகழையும் பெயரையும் உடைய கடவுள் முருகன்.

பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்!

(தேவரும் முனிவரும் பிறருமாகிய பெரியவர்கள் துதிக்கின்ற பெரிய திருநாமத்தையுடைய கடவுளே!)

இயவுள் என்பது மிக அரிய சொல். அதற்குத் தலைவன் என்றும் கடவுள் என்றும் பொருள் உரைப்பர்.

## சூர சங்காரன்

முருகன் வீரன் என்பதை அடிக்கடி நினைப்பூட்டுகிறார் நக்கீரர். உலகத்திலுள்ள மக்கள் அச்சத்தில் அழுந்தித் துயருறுகிறார்கள். பசிக்கும், பகைக்கும், வறுமைக்கும், பிணிக்கும அஞ்சி அஞ்சிச் சாகிறார்கள். தமக்குப் பெருந்துணை ஒன்று இருக்கிறது என்ற நினைவு வந்தால் அந்த அச்சம் போகும். வீரம் மிக்க ஒருவனுடைய துணை இருக்கிறது. என்பதை உறுதியாக எண்ணி நம்பினால் நம்

அச்சம் போய்விடும். அதனால் முருகனுடைய வீரத்தையும், அதனால் அவன் பெரிய பகைகளை வென்ற தீரத்தையும், அதனால் மற்றவர்கள் பெற்ற நன்மையையும் பன்முறை வெவ்வேறு வகையில் எடுத்துச் சொல்கிறார் ஆசிரியர். இப்போது சூரனை வென்ற வீரத்தை நினைப்பூட்டுகிறார். முன்பும் சொன்னாலம் மீட்டும் மீட்டும் வற்புறுத்தினால் தான் தம் உள்ளத்தில் பதியும் என்று கருதிச் சொல்கிறார்.

சூரன் தனக்குள்ள வரம் முதலிய பலத்தினாலும், தன்னுடைய தம்பிமார் தனயன் ஆகியோர் துணை உண்டென்ற மிடுக்கினாலும், அறுபத்தாறு கோடி அசுரர் படையாக வருகிறார்கள் என்ற செருக்கினாலும் முருகனை எதிர்த்து வந்தான். முருகன் அவனுடைய செருக்குக்குக் காரணமானவற்றை ஒவ்வொன்றாகக் குலைத்து அழித்தான். பெரிய மரத்தில் முதலில் கிளைகளையெல்லாம் வெட்டி விட்டுப் பிறகு அடிமரத்தை வெட்டுவது போல, அவனுடைய தம்பிமாரையும் படைகளையும் அழித்துப் பிறகு அவனைக் கொன்றான். அவனுடைய குலத்தை வேரோடு களைந்தான். அவனுடைய சுற்றத்தார் அனைவரும் அழிந்தனர். அவ்வாறு அழித்த பெரிய வலிமையை உடையவன் முருகன்.

**சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி!**

(சூரனது குலத்தை அடியோடு அழித்த மார்பை யுடைய மிக்க வலிமையைப் பெற்றவனே! மருங்கு - குலம். மொய்ம்பு - மார்பு.)

இங்கும் வீரத்தின் சிறப்பைப் புலப்படுத்த மார்பைச் சொன்னார். மொய்ம்பு. என்பதற்கு வலிமை என்ற பொருளும் உண்டு. போரிலே புக்கு வெல்லும் வீரத்தை மொய்ம்பென்றும், பிற வலிமைகளை மதவலி என்றும் கூறினார் என்றும் கொள்ளலாம்.

பின்னால் வரும் 'போர் மிகு' என்ற தொடரை முன்னாலே கூட்டி, 'போர்மிகு மொய்ம்பின் சூர்மருங்கு அறுத்த மதவலி' என்று கொண்டு, 'போர்த் தொழிலிலே மிகுகின்ற மொய்ம்பாலே சூரபன்மாவின் குலத்தை இல்லையாக்கின மதவலி என்னும் பெயரை உடையாய்' என்று உரை எழுதுவர், நச்சினார்க்கினியர்.

## போர்மிகு பொருநன்

இவ்வாறு நிகழும் போர் எதுவாயினும் அதில் மிக்குத் தோன்றும் பெருவீரன் முருகன். வீரனுடைய வலிமையைப் போரில்தான் பார்க்க முடியும். போர் என்று சொன்னாலே வீரர்களுடைய தோள் பூரிக்குமாம்.

''போரென்ன வீங்கு பொருப்பன்ன
திரள்கொள் திண்டோள்.'' (பூக்கொய் படலம்)

என்று கம்பர் கூறுவர்.

இத்தகைய பெருவீரன் தலைவனாகிய முருகன்.

போர்மிகு பொருந! குரிசில்!

(போரிலே சிறந்து விளங்கும் வீரனே! தலைவனே! பொருபவன், பொருநன், குரிசில் என்பதற்கு உபகாரி என்றும் பொருள் கொள்ளலாம்.)

'போரை மிகப் பொர வல்லவனே' என்பது ஒரு பழைய உரை.

பொருநன் என்பதற்கு, 'உவமிக்கப்படுவாய்' என்று பொருள் எழுதுகிறார் நச்சினார்க்கினியர். 'பொருவப் படுமவன் பொருநன் என நின்றது' என்று விளக்குவார். தனக்குப் பிறர் ஒருவர் உவமையாகாது, தான் பிறருக்கு உவமையாகும் பெருமையுடையவன் என்றபடி.

அழகுக்கும் வீரத்துக்கும் முருகனை உவமை கூறுவது சான்றோர் மரபு.

''முருகொத் தீயே முன்னியது முடித்தலின்''

(புறநானூறு, 56)

என்று நினைத்த காரியத்தை நிறைவேற்றும் பெரு வலிமைக்கும்,

''முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ.''

(பெரியபுராணம்)

என்று அழகுக்கும்,

''கந்தனை யனையவர் கலைதெரி கழகம்''

(கம்பராமாயணம்)

என்று இளமைக்கும் அறிவுக்கும் புலவர்கள் முருகனை உவமையாக எடுத்தாளுவதைக் காணலாம்.

இவற்றையெல்லாம் எண்ணியே நச்சினார்க்கினியர், 'உவமிக்கப்படுவாய்' என்று உரை கூறினார்.

'இவ்வாறு யான் அறிந்த அளவினாலே இருபத்தாறு திருநாமங்களைச் சொன்னேன். இவற்றோடு அவன் பெயர்களும் புகழும் நின்றுவிடவில்லை. இப்போது எனக்குத் தோன்றிய அளவுக்குச் சொன்னேன். இவற்றை நீ விடாமல் சொல்லி முருகனைத் துதிப்பாயாக' என்று கூறுகிறார் நக்கீரர்.

'நீ எங்கே அவனைக் கண்டாயோ அங்கே அவனைக் கையால் தொழுது காலில் விழுந்து வணங்கி இந்தத் திருநாமங்களைச் சொல்லி ஏத்துவாயாக!' என்று கூறி, மேலே இன்னது செய்ய வேண்டும் என்று அறிவுறுத்து கிறார்.

எனப்பல

யான்அறி அளவையின் ஏத்தி ஆனாது.

(என்று பலவகையாக நான் அறிந்த (உனக்குச் சொன்ன) இந்த அளவிலே சொல்ல வேண்டியவற்றை விடாமல் சொல்லித் துதித்து. ஆனாது - நில்லாமல்; அமையாமல்.)

'என்று யான் அறிந்து நினக்குக் கூறிய அளவாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப் புகழ்ந்து' என்பது நச்சினார்க்கினியர் உரை.

## அளப்பரியவன்

முருகனுடைய புகழையும் பெயர்களையும் சொல்லிக் கொண்டே போகலாம். அதற்கு முடிவே இல்லை. ஆனாலும் அவற்றை ஓரளவில் நிறுத்தி, மேற்கொண்டு பெற வேண்டிய பயனை அடைய வேண்டும் அல்லவா? ஒருவருடைய புகழையெல்லாம் சொல்லி அவரை விளிப்பதோடு அமையாமல் தான் வந்த காரியம் இன்னது என்று சொல்லி விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும். அழகிய அருச்சனை போல அமைந்த இருபத்தாறு நாமங்களைச் சொன்ன பிறகு, முருகனிடம் சமர்ப்பிக்கும் விண்ணப்பத்தையும் அறிவுறுத்த வருகிறார் நக்கீரர்.

முருகனுடைய திருநாமங்களைச் சொல்லி ஏத்திய பிறகு, வந்த காரியத்தைச் சொல்லி விண்ணப்பிக்கச் சொல்கிறார் நக்கீரர்.

''எம்பெருமானே, உன் புகழையும் ஆற்றலையும் கருணைச் சிறப்பையும் முற்றும் அறிந்து எல்லை காண்பவர் யார்? உலகில் உள்ள உயிர்கள் சிற்றறிவுடையன. அவை நின் பெருமையை எப்படி அறிய முடியும்? உன்னுடைய வடிவத்தைத்தான் முற்றும் அறிந்து கொள்ள முடியுமா?

அந்தப் பேருருவத்துக்கு அளவு இன்னதென்று வரையறுக்க யார் இருக்கிறார்கள்? ஆகையால் உன்னை அளந்து முற்றும் தெரிந்து கொள்ள வந்தேன் என்று எளியேன் சொல்ல வரவில்லை. நின்னுடைய திருவடிக் காட்சி தந்தால் போதும். அதை எண்ணியே வந்தேன்'' என்று அவனிடம் விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

நின்அளந்து அறிதல் மன்னுயிர்க்கு அருமையின்
நின்அடி உள்ளி வந்தனென

(நின்னை அளந்து அறிவது உலகில் நிலைபெற்ற உயிர்களுக்கு அருமையாதலால் நின்னுடைய திருவடியைத் தரிசனம் செய்ய எண்ணி வந்தேன். உள்ளி - எண்ணி.)

''நின் திருவடியைப் பெற வேண்டும் என்று எண்ணி வந்தேன்'' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதுவர்.

இறைவனுக்கு அப்பிரமேயன் என்பது ஒரு பெயர். எதனாலும் அளக்கப்படாதவன் என்பது பொருள். அளவைகளுக்கு அப்பாற்பட்டவன் அவன். ஆதலின் அவனை முற்றும் உணர யாராலும் இயலாது. அதனால் நமக்கு ஒரு குறையும் இல்லை.

குடத்தில் நீர் எடுக்கச் செல்லும் பெண் ஆறு முழுவதையும் எடுத்து வருவதில்லை. தான் எடுத்துச் சென்ற குடத்தை நிரப்பிக் கொண்டு வருகிறாள். அதுபோல நாம் இறைவன் திருவுரு முழுவதையும் காணவேண்டு மென்பதில்லை. அவன் திருவடி தரிசனம் செய்தாலே போதுமானது. அது புறக் கண்ணால் பார்ப்பவருக்குத் தாமரையாகத் தோன்றிப் பிறகு அகக் கண்ணால் பார்க்கும் போது ஞானமாகத் தோன்றி இறுதியில் வீடாகவே இருக்கும்.

''தொண்டர்கண்டு அண்டிமொண்டு உண்டிருக்கும்
சுத்த ஞானம்என்னும்
தண்டையம் புண்டரிகம் தருவாய்.''

என்று அருணகிரிநாதர் கூறுவர்.

அடியையே இலட்சியமாக உடைமையால் அன்பர்களுக்கு அடியார் என்ற பெயர் வந்தது.

## ஒப்பார் இல்லாதவன்

பிறகு முருகனைப் பார்த்து, ''எம்பெருமானே, நினக்கு ஒப்பார் யாரேனும் இருந்தால் அவரை அணுகலாம் என்று தோன்றும். நீயோ தனக்கு உவமை இல்லாதவனாக இருக்கிறாய். நீ ஞானபண்டித சாமி; ஞானமே வடிவானவன். நின் ஞானத்துக்கு ஒப்பான ஞானம் வேறு யாரிடத்தில் இருக்கிறது? ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஞானமூர்த்தி நீ. ஆதலின் என் குறை இன்னதென்று நீ அறிந்திருப்பாயே!'' என்று சொல்லும்படி சொல்கிறார் நக்கீரர்.

நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமையோய்!

(நின்னோடு ஒப்பார் இல்லாத ஞானமுடையவனே!)

இறைவன் முற்றறிவுடையவன். அவனே ஞானம்: ஞானமே அவன்.

''நீயான ஞான விநோதம்''

என்பது கந்தர் அலங்காரம்.

''ஞானத் தான்உரு வாகிய நாயகன்.''

என்பது கந்தபுராணம்.

'இவ்வாறு நீ அவனுடைய திருநாமங்களைச் சொல்லி, அவனுடைய திருவடி தரிசனத்துக்கு வந்ததாக விண்ணப்

பித்துக் கொண்டிருக்கும் போதே அவன் கருணை புரிய வந்து விடுவான். நீ எண்ணிக் கொண்டு போனவற்றையெல்லாம் சொல்லித் தீர்க்க வேண்டும் என்ற ஆசை உனக்கு இருக்கலாம். ஆனால், அம்மா என்று கதறியவுடனே ஓடிவந்து அணைக்கும் அன்னையைப் போன்றவன் அவன், நீ சொல்வதற்கு முன்பே அருள்பாலிக்க வந்து விடுவான்.'

எனக்
குறித்தது மொழியா அளவையின்,

(என்று கூறி நீ எண்ணியவை அனைத்தையும் சொல்லாமல் இருக்கும்போதே.)

## உடன் இருப்போர் செயல்

எவ்வளவோ தூரம் நடந்து வந்த பக்தனுக்கு, முருகன் எங்கே இருப்பானோ, எப்படி இருப்பானோ, அவனைக் காண முடியுமோ என்று ஏங்கும் நிலை உண்டாகிறது. அந்த நிலை உண்டாக நியாயம் இல்லை. ஏனென்றால் முருகனுக்கு அருகில் இருக்கும் ஏவலாளர்கள், அந்த அன்பனுக்கு உதவி செய்ய முந்துகிறார்கள். 'இவன் நல்லவன்; அருள் புரிய வேண்டும்' என்று சொல்வார்களாம்.

முருகனைச் சுற்றியுள்ள தொழும்பர்கள் வெவ்வேறு வடிவத்துடன் இருப்பார்கள். அவர்களுக்கு முருகனுடைய பக்தர்களின் கூட்டம் மேலும் மேலும் வளரவேண்டுமென்று ஆசை. ஆகையால் எந்தப் பக்தன் வருகிறானோ என்று வழிமேல் விழி வைத்துப் பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

முருகனை முழுவதும் காணாதவன் பக்தன், ஏதோ ஓரிடத்தில், முருகன் இருக்கும் இடம் இது என்ற உணர்வைப் பெறுகிறான். அப்போது அந்த இடத்திலேயே முருகனைத் துதித்து விண்ணப்பித்துக் கொள்கிறான். அதைக் கேட்ட

முருகனுடைய அடித்தொண்டர்கள் வந்தவனுடைய இயல்பை ஊகித்து அறிந்துகொள்வார்கள்; விழாவெடுக்கும் இடத்தில் முருகன் எழுந்தருளி யிருப்பதை அறிந்து அவனை அணுகி, வந்த பக்தனைப் பற்றிச் சொல்வார்கள். ''இவன் உன் கருணைக்குப் பாத்திரமானவன்; இரங்கத் தக்கவன்; அதில் சிறிதும் ஐயம் இல்லை. இவன் அறிவு வாய்ந்த புலவன்; உன்னிடம் ஒன்றைப் பெறும் பொருட்டு இங்கே இரவலனாக வந்திருக்கிறான். நீ பெரு வள்ளல், கேட்டவற்றை யெல்லாம் வழங்குபவன் என்பதை அறிந்து உன் புகழை விரும்பி இங்கே வந்திருக்கிறான்; இனிமை யான சொற்களைச் சொல்லிக்கொண்டு வந்துள்ளான். நல்ல வார்த்தைகளைக் கூறுகின்றான். பல பல நல்ல பெயர்களை நன்றாகச் சொல்லித் துதிக்கிறான். இவனுக்கு அருள் புரிய வேண்டும்'' என்று அவர்கள் முருகனிடம் விண்ணப்பித்துக் கொள்வார்கள்.

குறித்துடன்
வேறுபல் உருவில் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி,
அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தி.

(நீ எண்ணியதை அறிந்த உடனே, வேறு வேறான பல வடிவங்களையுடைய குறிய பல ஏவலாளர்கள் விழா நிகழ்த்தும் இடத்தில் சிறப்புண்டாகும்படியாகத் தோன்றி, முருகனைநோக்கி, ''இவன் இரங்கத்தக்கவன்; அறிவு வாய்ந்த இரவலன்; ஈகையால் வந்த நின் புகழைக் கேட்டு விரும்பி இனியவையும் நல்லவையுமாகிய சொற்களையும் திருநாமங்களையும் நன்றாகப் பலபலவாகக் கூறித் துதித்து வந்தான் பெருமானே'' என்று சொல்ல. கூளியர் - ஏவலாளர். சாறு - விழா. முதுவாய் இரவலன் - அறிவு வாய்ந்த புலவன்.)

'கூளியர் குறித்துத் தோன்றி, அளியன், பெரும, நின் வண்புகழைக் கூற நயந்து இனியவும் நல்லவுமாக ஏத்தி வந்தோன் என்று கூறவென முடிக்க' என்பது நச்சினார்க் கினியர் காட்டும் முடிவு. கூளியர் என்பதற்குச் சேவித்து நிற்பார் என்று பொருள் கூறுவார் அவர்.

பெரிய மனிதர்கள் இரங்கக் கூடியவர்களாக இருந்தாலும் அவர்களைச் சார்ந்து சூழ்ந்திருப்பவர்கள் எளிதில் யாரும் அப் பெரிய மனிதர்களை அணுக விட மாட்டார்கள். அதனால்தான், ''சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரங் கொடுக்க மாட்டான்'' என்று பழமொழி எழுந்தது. இது பெரும்பான்மையான உலகியல்.

ஆனால் முருகனுடன் இருக்கும் ஏவலர்களாகிய தொண்டர்கள் அப்படி இல்லை. யார் வந்தாலும் முருகனிடம் அழைத்துச் செல்வார்கள். ''யான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'' என்ற மனப் பாங்குடையவர்கள் அவர்கள்.

முருகனுடைய அருள் வெள்ளம் வழங்கி வற்றுவ தன்று. எவ்வளவு பேர் வந்தாலும் வரட்டும் என்ற எண்ணம் கொண்டிருக்கிறார்கள், உடனிருக்கும் ஏவலர் சூழாத்தினர். ஆகவே வந்த புலவனைக் கண்டவுடன் முருகனிடம் ஓடிச் சென்று விண்ணப்பித்துக் கொள்கிறார்கள்.

அதற்கு மேல் முருகன் தன் திருக்காட்சியைக் காட்ட வருகிறான்.

## அணுக்கத் தொண்டர்கள்

முருகனிடம் இருந்து அவனுடைய குற்றேவல் செய்யும் தொண்டர்களுக்குத் தம் தலைவனாகிய முருகனுக்கு உலகு முழுவதுமே அடியாராக வேண்டும் என்ற ஆசை. சக்கரவர்த்தி

ஒருவனுடன் இருக்கும் கூட்டத்தினர் உலகம் முழுவதும் தம்முடைய மாமன்னர் செங்கோல் ஓச்சவேண்டுமென்று விரும்புவது இயல்பே. ஆனால் இந்தக் குறும்பல் கூளியரின் விருப்பத்தில் ஒரு வேறுபாடு உண்டு. மாமன்னரைச் சேர்ந்தவர்களுக்குத் தம் மன்னர் ஆணை எங்கும் பரவ வேண்டும் என்பதே நோக்கம். இங்கே முருகனுடன் உள்ளவர்களுக்கோ, உயிர்க் கூட்டங்கள் யாவும் உய்ய வேண்டும் என்ற ஆவல். முன்னது அதிகார ஆசையின் விளைவு; பின்னது கருணையின் விளைவு.

முருகனுடன் இருந்து அணுக்கத் தொண்டு புரியும் பேறு எல்லோருக்கும் கிடைப்பது அன்று. இறைவன் திருவருளைப் பெற்று நுகர்வதில் நான்கு வேறு நிலைகள் உண்டு. அவன் அருட் செங்கோல் நடத்தும் இடத்தில் இருத்தல்; இது சாலோக பதவி, அவனுக்கு அண்மையில் இருந்து தொண்டு புரிதல்; இது சாமீபம், அவனுடைய உருவமே பெற்று விளங்குதல்; இது சாரூபம், அவனுடன் இரண்டறக் கலத்தல்; இது சாயுஜ்ய பதவி, சாயுஜ்யம் என்பதே முத்தி நிலை. ஓரரசனுடைய குடிமகனாக இருத்தல், அவனுடைய அரண்மனையில் பணியாளனாக இருத்தல், எப்போதும் சிறந்த அணிவகைகளோடு அவன் போகும் இடங்களுக்கு உடன் போய் உடன் உண்டு வாழ்தல், அவனுடன் ஒன்றிப் பட்டத்தரசியாக இருந்து இன்புறல் என்ற வேறு நிலைகளுக்கு இவற்றை ஒப்பிடலாம்.

'வேறுபல் உருவில் குறும்பல் கூளியர்' என்று நக்கீரர் குறிப்பிடும் தொண்டர்கள் முருகனுடைய அணுக்கத் தொண்டர்கள்; சாமீப்ய பதவி பெற்றவர்கள். அவர்கள் வரவர மேல்நிலையை அடைய நிற்பவர்கள்; சாரூப சாயுஜ்ய பதவி பெறப் போகிறவர்கள். அவர்கள் உயர் பதவியை அடைந்தால் அவர்களுக்கு இப்போது உள்ள பதவியை நிரப்ப ஆட்கள்

வேண்டாமா? இனி வரும் அன்பர்கள் அந்த நிலையை அடைவார்கள். முருகனை அடைந்து பலர் வாழ்ந்து, வரவர மேல் நிலையை அடைய வேண்டு மென்பது இப்போது உள்ள அணுக்கத் தொண்டர்களின் ஆர்வம்.

## வந்தவன் தகுதி

அவர்கள் இறைவனிடம் சென்று, வந்த புலவனுடைய தகுதியை எடுத்துச் சொல்கிறார்கள். அவர்கள் எவ்வாறு வந்தவனுடைய தகுதியைச் சொல்கிறார்கள்? எடுத்தவுடன் ''இவன் நின்னுடைய அருளுக்கு உரியவன்'' என்கிறார்கள். ''அளியன்தானே'' என்பதற்கு இரங்குவதற்குரியவன் என்பது பொருள். முருகனுடைய கருணைக்குப் பாத்திரமாக வேண்டுமானால் அவனுக்கு உரிய இலக்கணம் என்ன? கண்ட மாத்திரத்தில் பிறருடைய உள்ளத்தில் இரக்கத்தை உண்டாக்கும் பண்பு இருக்க வேண்டும், இறைவன் திருவருளுக்காக ஏங்கி நிற்க வேண்டும். அந்தத் தகுதி இந்தப் புலவனிடம் இருக்கிறது.

அடுத்தபடி அவன் 'முதுவாய் இரவலனாக' இருக்கிறான். முது என்பது பழுத்த அறிவு; அதைப் பெற்றவன் அவன். தான் பெறாத ஒன்றைப் பெறுவதற்காகத் தன் ஏழைமை தோற்றும்படி, தனக்கு இல்லாத பொருளைக் கொடுக்கும் வள்ளலை நோக்கி இரக்கும் பொருட்டு வந்திருக்கிறாள். அறிவு வாய்ந்திருத்தல் ஒரு தகுதி; இரவலனாக இருத்தல் மற்றொரு தகுதி. நம் நிலையையும், நாம் அடையவேண்டிய பொருள் இன்னதென்பதையும், அப்பொருள் இன்னாரிடம் உள்ளது என்பதையும், அதனை அடையும் வண்ணம் இன்னதென்பதையும் அறிந்து கொண்டவனே அதைப் பெறும் முயற்சியை மேற் கொள்வான். உலகின் இயல்பு, உயிரின் இயல்பு, இறைவன்

இயல்பு ஆகியவற்றை நன்கு அறிந்தவனே, இப்போது உள்ள அவல நிலையினின்றும் விலகி மேல் நிலையை அடைய வேண்டும் என்ற ஆர்வத்தைப் பெற முடியும். உண்மை இன்னதென்று தெளிவாக அறிந்தவனே மெய்ப்பொருளை அடைவதற்குரிய துறையில் இறங்குவான்.

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.''

என்பது குறள். கற்று மெய்ப்பொருள் காண்பதே அறிவு.

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.''

என்று கூறுவார் திருவள்ளுவர். அந்த மெய்யறிவை உடையவரே ஈண்டு மீண்டும் வாராத நெறியில் தலைப்படுவார்கள்.

இங்கே வந்த புலவன் அத்தகைய மெய்யறிவு உடையவன்; முதுவாய் இரவலன்.

புலவர், கூத்தர், பாணர் என்னும் கலைஞர்கள், தம்முடைய திறமையை உணர்ந்து பாராட்டிப் பரிசளிக்கும் வள்ளல்கள் எங்கே இருக்கிறார்கள் என்று தேடிச் சென்று அவர்களை அடைவார்கள். இரவலர் என்று அவர்களைச் சொல்லுவது வழக்கம். அவர்களைப் போலவே இந்தப் புலவனும், 'இன்பம் எங்கே? அதை வழங்கும் வள்ளல் எங்கே?' என்று தேடி வந்திருக்கிறான்; வள்ளலிடம் ஒன்றை இரக்க வந்திருக்கிறான். ஆகவே இவனும் இரவலன்தான்.

மற்றவர்கள் இரக்கும் பொருள்கள் எல்லாவற்றையும் விடச் சிறந்த பொருளை இரந்து பெற வேண்டும் என்று வந்தவன் இவன், அருள் என்னும் பொருளுக்கு ஈடாக வேறு ஏதும் இல்லை. அது கிடைத்தால் எல்லாம் பெறலாம். இறைவன் திருவருள் இருந்தால் சிறு துரும்பும்

அகிலாண்டங்களையும் படைக்கும் வன்மையைப் பெறும். அதைப் பெறும் பொருட்டு அறிவு வாய்ந்த புலவனாகிய இந்த இரவலன் வந்திருக்கிறான்.

இவன் தான் புலவன் என்ற மிடுக்கோடு வரவில்லை. புலமை, செருக்கு உண்டாவதற்கும் காரணமாகும். உடல் வலிமையினாலும் செல்வத்தினாலும் கல்வியினாலும் செருக்கு உண்டாகும். அவ்வாறு உண்டாகும் செருக்குகளுள் கல்விச் செருக்கு வலிமையுள்ளது. உடல் வலிமை அழிந்தாலும், செல்வம் அழிந்தாலும் அந்த இரண்டிலும் உண்டாகும் செருக்குப் போய்விடும்; அவை விரைவில் அழியத் தக்கவை. ஆனால் கல்வியோ, பிறவி தோறும் தொடர்ந்து வருவது.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து."

என்பது திருக்குறள். ஆகவே கல்வியினால் உண்டாகும் செருக்கு எளிதில் போகாது. நாய்க்கு வெறி பிடித்தால் அதை எளிதில் அடித்துக் கொன்று விடலாம். யானைக்கு மதம் பிடித்தால் அதை அடக்குவது எளிதல்லவே!

இங்கே வந்துள்ள புலவன் கல்விச் செருக்கு இல்லாமல் பணிவுடன் வந்திருக்கிறான். இரவலனாகத் தன் எளிய நிலை புலனாகும்படி வந்திருக்கிறான். 'உடையார் முன் இல்லார்' ஏக்கற்று நிற்பதுபோல் வந்து நிற்கிறான். முருகன் திருவருள் கிடைக்குமோ என்று ஏங்கி வந்திருக்கிறான்.

"இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே."

என்றபடி, அவ்வாறு ஏங்குபவர்களுக்குத்தான் இறைவன் அருள்பாலிப்பான், இந்த ஏக்கம் தோன்றப் புலவன் நிற்பதனால் இவனை இரவலன் என்று முருகனுடன் உள்ள அணுக்கத் தொண்டர்கள் கூறுகிறார்கள்.

இரங்கத்தக்கவன், அறிவு வாய்ந்தவன், செருக்கின்றி நின் அருளுக்காக ஏங்கி நிற்பவன் என்ற கருத்தையெல்லாம் உள்ளடக்கி,

அளியன் தானே முதுவாய் இரவலன்

என்று கூறுகிறார்கள்.

'இத்தகையவன் நீ பெறலரும் பரிசிலைத் தருவா யென்று பலரும் புகழ்வதைக் கேட்டுத் தானும் அதனைப் பெறவேண்டும் என்று வந்திருக்கிறான்' என்று புலவனுடைய உள்ளக் கிடக்கையை எடுத்துரைக்கிறார்கள்.

''உங்களுக்கு அது எப்படித் தெரியும்?'' என்று முருகன் கேட்கலாம் அல்லவா?

''இவனுடைய நிலையும், இனியனவும் நல்லனவு மாகிய உன் புகழைப் பல படியாகச் சொல்லும் உரையும் இவன் இயல்புகளை உணர்த்துகின்றன'' என்று அவர்கள் சொல்லாவிட்டாலும், அந்தக் கருத்துத் தோன்றும்படி பேசுகிறார்கள்.

வண்புகழ் என்பது வண்மையினால் வந்த புகழ். வள்ளல்கள் எங்கே இருக்கிறார்கள் என்று நாடும் இனத்தைச் சேர்ந்தவனாதலால் முருகனுடைய வண் புகழை அறிந்து நடந்து வந்திருக்கிறான். இவன் புலவனாதலால் இனியனவும் நல்லனவுமாகிய சொற்களைச் சொல்லித் துதிக்கத் தெரிகிறது. இவற்றைக் கண்டு கூளியர்,

வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தி

(பெருமானே, இனியவையும் நல்லவையுமாகிய பல வார்த்தைகளைச் சொல்லித் துதித்து, நின் வல்லமையா

லுண்டான புகழை விரும்பி வந்தான் என்று கூற.) என்று சிபாரிசு செய்கிறார்கள்.

வேறு எதையும் வேண்டாமல் இறைவனுடைய அருள் ஒன்றையே வேண்டி வந்தவர்களுக்கு எல்லா உதவிகளும் கிடைக்கும் என்ற உண்மையை இதனால் அறிகிறோம். புலவன் தன் விருப்பத்தை வெளிப்படையாகக் கூறுவதற்கு முன்பே அவனுடைய உள்ளக் கிடக்கையை உணரும் ஆற்றல் அணுக்கத் தொண்டர்களுக்கு இருக்கிறது. தலைவனாகிய முருகன் நல்லவன்; அவனுடன் இருக்கும் அணுக்கத் தொண்டர்களும் நல்லவர்கள்.

குருநாதன் பரம கருணையினால் தன்னை அடைந்த மாணாக்கன் தன்னைப் போல் சிறந்த அநுபூதியைப் பெற வேண்டுமென்று எண்ணி ஆவன செய்வான். அவனிடம் உள்ளதைப் போன்ற கருணை இந்தக் குறும்பல் கூளியர் களுக்கு இருக்கிறது.

---

# பெறலரும் பரிசில்

அணுக்கத் தொண்டர்கள், வந்த புலவன் நிலையையும் தகுதியையும் முருகனிடம் விண்ணப்பித்துக் கொண்டவுடன் அவன் என்ன செய்கிறான்? அவனுடன் உள்ள தொண்டர்களுக்கே இத்தனை அருள் இருக்கும் போது அவனுடைய பேரருளைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? அவன் உடனே அருள் புரிய எழுந்தருளுகிறான். தன்னுடைய பொருளை வாங்கிக் கொள்ள யாரேனும் இரவலன் வரமாட்டானா என்று எதிர்பார்த்து நிற்பது ஈகையாளன் இயல்பு. தன் குழந்தை பால் குடிக்காமையால் பால் கட்டிக்கொண்டு வருந்தும் தாய் அக்குழந்தைக்குப் பாலூட்ட விரைவது போல இறைவன் விரைகிறான்.

### உயர்நிலை

அவன் உலகம் கடந்த பேருருவினன். பேராற்றல் வாய்ந்தவன். எல்லோருக்கும் மேலான தெய்வம் இவன் என்பதை அந்தக் கோலமே காட்டும். அகடித கடனா சக்தியாகிய திறல் விளங்கும் விசுவரூபம் உடைய பெம்மான். வையத்துக்கும் வானத்துக்கும் எட்டாமல் நிமிர்ந்து நிற்பவன். வானம் ஓங்கி ஓங்கி எல்லை காண முடியாமல் செல்கிறது. அவன் திருவுருவமும் அப்படியே உயர்ந்து வானைத் தோய்ந்து எல்லை காண முடியாமல் விளங்குகிறது. அத்தகையவன் இப்போது தன்னை நாடி வந்த புலவனுக்கு அருள் செய்ய வருகிறான். அவனுடைய இயல்பான நிலையில் அவனை

அணுகுவது என்பது இயலாத காரியம். அவன் அடி நிழலை அடைந்து நிற்கலாம். அவன் விசுவரூபத்தைக் காண முடியாது. காண முயன்றால் அச்சமே உண்டாகும். பலகாலம் கண்ணனோடு தோழனாகப் பழகி நின்ற அருச்சுனனே அப்பெருமான் விசுவரூபம் எடுத்து நின்ற போது, ''அப்பனே! அச்சமாயிருக்கிறது. இதை அடக்கிக் கொள்'' என்று புலம்பினானாம். ஆகவே, மிக்க திறல் விளங்கும் தன் விசுவரூபத்தை வானிலே உயரவிட்டு நிற்கும் முருகன், புலவன்தன் அடி நிழலை அடைந்து நிற்பதை அறிகிறான். தன் உயர்ந்த நிலை புலவனால் அடைவதற்கரியது மட்டும் அன்று, அவனுக்கு அச்சத்தையும் உண்டாக்கும் என்பதை அறிந்து அதைச் சுருக்கிக் கொள்கிறான். இது அவனுடைய கருணையின் விளைவு.

தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇ.

(தெய்வத் தன்மை வாய்ந்த பராக்கிரமம் விளங்குகின்ற உருவத்தோடு ஆகாயத்தை அளாவிய உயரத்தை உடைய முருகன் நீ உள்ள இடத்துக்கு வந்து அடைந்து காண்பவருக்கு அச்சத்தைத் தரும் நெடிய கோலத்தை அடக்கிக் கொண்டு,

தெய்வத்தன்மை சான்ற திறலாவது, அகடிதகடனா சாமர்த்தியம்; இறைவன் எல்லாம் வல்லவன் அல்லவா? தழீஇ - சுருக்கி; உள் அடக்கி.)

சிலப்பதிகாரத்தில் இப்படி ஒரு செய்தி வருகிறது; சாத்தன் என்னும் தெய்வம் தன் இயல்பான பேருருவைக் காட்டினால் கண்டு அஞ்சுவாள் என்று தேவந்தி என்பவளுக்கு அவள் கண் கொள்ளும்படியாக அழகிய திருவுருவத்தோடு வந்தானாம்.

"பூவந்த உண்கண் பொறுக்கென்று மேவித்தன்
மூவா இளநலம் காட்டி."

(சிலப். 9:34-5)

தன்னிடம் வந்தவனுடைய உள்ளப்பாங்கை அறிந்து அவனுக்கு ஏற்ற வகையில் முகமலர்ச்சியும் இன் சொல்லும் உடையவனாக அவனை அணுகி ஈவது வள்ளலுக்குரிய இலக்கணம். அகமும் முகமும் மலர்வது, வந்தவன் இங்கே உதவி கிடைக்கும் என்று கண்ட மாத்திரத்திலே மகிழும் பொருட்டு. முருகன் இந்த இலக்கணம் நிரம்பியவன். தன்னை நாடி வந்தவன் தன் தோற்றத்தைக் கண்டு அஞ்சாமல் இருக்க வேண்டும் என்று விரும்பிப் பேராற்றல் உடைய பெருந்திரு உருவத்தை அடக்கிக் கொள்கிறான். அது மட்டுமா? வருபவன் கண்டு உள்ளம் உருகும்படியான திருக்கோலம் கொள்கிறான். இந்த இரண்டு திருவுருவும் அவனுக்கு அநாதி காலமாக உள்ளவை. ஒன்று பெருந்திரு வடிவம்; மற்றொன்று எழில் திருவடிவம். ஒன்றில் ஆற்றல் தோன்றும்; மற்றொன்றில் அழகு தோன்றும். ஒன்றினால் அச்சம் உண்டாகும்; மற்றொன்றினால் அன்பு தோன்றும். ஒன்று மறத்தை அழிப்பது; மற்றொன்று அன்பை வளர்ப்பது. ஒன்று மறக் கருணையின் வெளியீடு; மற்றொன்று அறக் கருணையின் விளைவு. ஒன்று துஷ்ட நிக்கிரகத்தின் பொருட்டு அமைவது; மற்றொன்று சிஷ்ட பரிபாலனத்துக்கு அமைந்தது. ஒன்று உக்கிரமூர்த்தி; மற்றொன்று சாந்த மூர்த்தி. ஒன்று வீரம் காட்டுவது; மற்றொன்று ஈரம் காட்டுவது. ஒன்று பகைவரை அச்சுறுத்துவது; மற்றொன்று அன்பருக்கு இனிப்பது.

இந்த இரண்டில் முன்னையதை அடக்கிக் கொண்டு பின்னைய திருக்கோலத்தில் எழுந்தருளுகிறான் முருகன். இரண்டு கோலமும் ஒரு தாளின் இரு பக்கம் போன்றவை.

இரண்டும் பழமையானவை; அநாதியாக உள்ளவை. அருள் புரிய வருகின்ற முருகன் ஈரத் திருக்கோலங்கொண்டு எழுந்தருளுகிறான். அப்போதுதான் அவனுக்கு முருகன் என்னும் திருநாமம் வந்ததற்குரிய காரணம் புலப்படுகிறது. அந்தத் திருக்கோலம் எவ்வாறு இருக்கும்? அதைச் சொல்ல வருகிறார் நக்கீரர்.

## முருகுத் திருக்கோலம்

முருகன் தன் முருகுத் திருக்கோலத்தைக் காட்டு கிறான். அது பழமையானது; அநாதியாக விளங்குவது.

> ''ஆதியொடும் அந்தம் ஆகிய நலங்கள்
> ஆறுமுகம் என்று தெரியேனே''

என்பர் அருணகிரிநாதர். அந்தக் கோலம் எல்லாவற்றுக்கும் முதலில் இருப்பது, எல்லாவற்றுக்கும் முடிவாகவும் இருப்பது. அந்தப் பழைய திருக்கோலத்தோடு முருகன் வருகிறானாம்.

> பண்டைத்தன்
> மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி.

மிகப் பழையதாகிய தன் அழகுத் திருவுருவத்தை முருகன் காட்டுகிறான்.

முருகன் என்பது முருகை உடையவன் என்ற பொருளை உடையது. முருகு என்பதற்குப் பலபொருள் உண்டென்பதைப் பார்த்தோம். அவற்றில் தலைமை யானவை நான்கு - மணம், தெய்வத்தன்மை, இளமை. அழகு என்பவை அவை. நக்கீரர் இந்த நான்கையும் சிறப்பாக எடுத்துச் சொல்கிறார். முருகன் தன்னை நாடி வந்த புலவனுக்கு மணங்கமழ் கோலத்தைக் காட்டுகிறான்; தெய்வத் திருக்கோலத்தைக் காட்டுகிறான்; இளமை உருவத்தைக் காட்டுகிறான்; எழில் நலம் நிரம்பிய

வடிவத்துடன் எழுந்தருளுகிறான். ''மணம் கமழ் தெய்வத்து இளநலம்'' என்ற சொற்களில் இந்த இயல்புகளைக் காணுகிறோம்.

முருகன் இருக்கும் இடமெல்லாம் மணம்கமழும். அவன் வாழும் குறிஞ்சி நிலம் மலர்கள் நிரம்பியது. அவற்றின் மணம் எங்கும் விரவியிருக்கும். அவனுடைய திருக்கோயிலில் வேலனும் ஆடும் மகளும் மலர்களைக் கொணர்ந்து பூசை போடுவார்கள். அங்கும் மலர் மணம் நிரம்பியிருக்கும். மலர்கள் நிரம்பிய இடத்தை வருணிக்கும் போது, ''இது வெறிக்களத்தை ஒத்திருக்கிறது'' என்று சொல்வது சங்ககாலப் புலவர்களின் வழக்கம். முருகனுக்குப் பூசை செய்து ஆடும் ஆட்டத்தை வெறியாட்டு என்றும், பூசை போடும் இடத்தை வெறிக்களம், வெறியயர் களம் என்றும் சொல்வார்கள். முருகனை வழிபடும் இடங்களிலெல்லாம் மலர்கள் மிகுதியாக இருக்கும் என்பது இதனாற் புலனாகும்.

முருகனும் செஞ்சாந்து அணிந்து பல மலர் மாலைகளை அணிந்து விளங்குகிறவன். அதனால் அவன்பால் நறுமணம் மலிந்து தோன்றும். அன்றியும் இயற்கையான தெய்விக மணம் உடையவன் அவன்.

> ''கந்தமுறு நின்மேனி காணாத கயவர்கண்
> கலநீர் சொரிந்த அழுகண்.''

என்று அருட்பிரகாச வள்ளலார் பாடுவார்.

இவற்றையன்றி ஞானமே திருமேனியாகிய அவனிடம் ஞான மணம் வீசும். ஞானத்தை மணமென்று கூறுவது ஒரு வழக்கு.

> ''ஒருஞான வாசம் வீசி''

என்பது திருப்புகழ். மலர் மணமும் திவ்ய கந்தமும் ஞான வாசனையும் ஒருங்கே வீசும் முருகன் திருக்கோலம் மணம்

நிரம்பியது என்று சொல்வதில் மிகை ஏதும் இல்லை. அதனால் அதை 'மணம் கமழ்' கோலமாகச் சொல்கிறார் நக்கீரர்.

அடுத்துத் தெய்வத்தன்மை வாய்ந்த கோலம் என்கிறார். தெய்வத்தின் தன்மை யாது? அருளே தெய்வத்தின் தன்மை. அருள் வேறு, அவன் வேறு என்று பிரிக்க வொண்ணாதாயினும் விவகாரத்தில் அப்படித் தனித்தனியே சொல்லி அநுபவிப்பது பக்தர்களுக்கு இயல்பு.

''நீமறந்தா யெனினும் இவ் வகிலமெலாம்
அளித்திடும்நின் அருள்மறவா தென்றே.''

என்று அருட்பிரகாச வள்ளலார் பாடுவதைக் காண்க.

தெய்வத்தினிடம் உள்ள அருள் தன்மை கண்டே அன்பர்கள் அடைந்து போற்றுகிறார்கள். முருகனிடம் அந்த அருள் மிகுதியாக இருக்கிறது.

எல்லா உயிர்களுக்கும் தனு கரண புவன போகங் களைத் தந்து பாதுகாப்பது இறைவன் திருவருள். அது பொதுவானது. தன்னை வழிபட்டு உருகும் அன்பர்களின் பக்குவம் அறிந்து இன்பம் வழங்கும் அருள் சிறப்பான அருள். தன் குழந்தைகள் எல்லோருக்கும் உணவு அளிக் கிறாள் தாய்; அது பொதுவான அன்பு. இளங்குழந்தையை எடுத்து அணைத்து முத்தமிடுகிறாள். அது போன்றே இறைவனுடைய பொதுவருளும் சிறப்பருளும் இருக்கின்றன. சிறப்பருளினும் சிறந்த பேரருள் ஒன்று உண்டு. தன்னைப் பகைத்தவனுக்கும் நலம் செய்யும் கருணை அது.

முருகன் அந்தப் பெருங்கருணை உடையவன். தன்னைப் பகைவனாகக் கருதிப் போரிட்ட சூரபன்மனை மயிலும் சேவலுமாக்கி ஆட்கொண்டான். போர்க்களத்தில் தன்னுடைய விசுவரூப தரிசனத்தை அவ்வசுரனுக்கு

அளித்தான். அது கண்டு உருகிய சூரனே, ''இப்பெருமான் போரென்று ஒரு வியாஜத்தை வைத்துக் கொண்டு எனக்கு அருளல்லவா செய்ய வந்திருக்கிறான்?'' என்று சொல்லி வியப்படைகிறான்.

''அண்ணலார் குமரன் மேனி
அடிமுதல் முடியின் காறும்
எண்ணிலா ஊழி காலம்
எத்திறம் நோக்கி னாலும்
கண்ணினா லடங்கா துன்னிற்
கருத்தினா லடங்கா தென்பால்
நண்ணினான் அமருக் கென்கை
அருளென நாட்ட லாமே.''

என்கிறான். 'அருளென நாட்டலாமே' என்று உறுதியாகக் கூறுகிறான். இது முருகனுடைய பேரருள் திறத்தை நன்கு எடுத்துக் காட்டும்.

அருளின் மிகுதியை, கருணை கூர்வதை, ''கருணை கூர்முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும்'' என்று பாராட்டுவார் கந்தபுராண ஆசிரியர். கூர்தலாவது உள்ளது சிறத்தல்.

அடுத்தபடி வருவது அவனுடைய இளமை. அவன் என்றும் மாயாத இளமையை உடையவன்.

''என்று மகலாத இளமைக்கார.''

என்பது திருப்புகழ். என்றும் பொன்றாத இளமையை உடையவனாதலால் அவனைப் பிள்ளையார் என்று பழந்தமிழுரைகள் கூறுகின்றன. தெய்வத் திருக்கூட்டத்தில் அவன் இளையவன். சிவபிரானுடைய மக்களுள் இளையவன்.

அவனுடைய அழகைப் பற்றிச் சொல்லத் தொடங்கினால் அது மிக மிக விரியும். அழகுக்கு உவமை சொல்லும் போது முருகனைச் சொல்வது புலவர் வழக்கம்.

''கந்தனை யனையவர் கலைதெரி கழகம்''

என்பது கம்பர் வாக்கு.

''என்றும் இளையாய் அழகியாய்''

என்பது பழம் பாட்டு. முருகனுடைய பேரழகில் ஈடுபட்டு மயங்கிய சூரபன்மன் வியந்து பாராட்டுகிறான்.

''ஆயிர கோடி காமர்
அழகெலாம் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள்
விமலமாம் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா
தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
உவமையார் வகுக்க வல்லார்.''

என்று அவன் கூறுவதாகக் கந்தபுராணத்தில் காண்கிறோம். ஈடும் எடுப்பும் இல்லாத அவன் பேரழகைக் கண்டு பகைவனே மயங்கினான் எனின், மற்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

ஆகவே, முருகன் இணையற்ற மணமும் ஈடற்ற அருளும் ஒப்பற்ற இளமையும் உவமையற்ற எழிலும் உடையவன் என்பது தெளிவாகிறது. இத்தனை முருகுகளும் ஒன்று திரண்ட கோலமுடையவனாதலின் முருகன் என்ற பெயருக்கு அவன் எவ்வாற்றானும் பொருத்தமுடைய வனாக விளங்குகிறான். இந்த நான்கும் மிகச் சிறந்து ஒருங்கே இணைந்த திருக்கோலம் வேறு இல்லை. அதனால்தான்

இவ்வளவு இலக்கணங்களும் பொருந்திய தால் வந்த இத்திருநாமம் பிறரால் பெறுவதற்கரியது என்று முன்பே நக்கீரர் கூறினார்.

''அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக''

என்று கூறியதை முன்பே பார்த்தோம்.

இத்தகைய மணமும் அருளும் இளமையும் அழகும் இணைந்து கண்ணையும் கருத்தையும் கவ்வும் அற்புதக் கோலத்தைத் தரிசிக்கும்படி முருகன் புலவனுக்குக் காட்டுவானாம்.

பண்டைத்தன்
மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி.

## அன்பு மொழி

கண்குளிர இந்தக் கோலத்தைக் காட்டும்போதே காது குளிர அன்பு நிரம்பிய மொழிகளை முருகன் கூறுவானாம்.

சாமானிய அதிகாரி ஒருவனைக் கண்டாலே மக்களுக்கு அச்சம் உண்டாகிறது. தேவாதி தேவனும் சர்வ சக்திமானும் ஆகிய முருகனைக் காணும்போது முதலில் யாருக்குமே அச்சம் உண்டாகும். 'நாம் எத்தனையோ குற்றங்களைச் செய்திருக்கிறோமே!' என்ற நினைவு வரும். 'நமக்கு இறைவன் அருள் செய்வானா? அதற்குரிய தகுதி நமக்கு இருக்கிறதா?' என்றெல்லாம் எண்ணி அஞ்சும் நிலை உண்டாகும். பிரபஞ்சத்தில் உழன்று பட்ட துன்பங்க ளெல்லாம் நினைவுக்கு வரும். உடம்பு நடுங்கும். வாய் குழறும்.

இதைக் கருணாநிதியாகிய முருகன் உணர்வான். ''பயப்படாதே அப்பா!'' என்று முதலில் அபயம் அருள்வான். அது மட்டுமா? போன புலவன், 'நம்மை இவன் அறிந்து

கொள்வானா? நமக்கு உள்ள ஆர்வத்தை இவன் தெரிந்து கொண்டிருப்பானா? நம் குறையை எப்படி எடுத்துச் சொல்வது?' என்று நினைப்பான். முருகனோ, ''அப்பா நீ வருவது எனக்கு முன்பே தெரியும்'' என்று சொல்வான். 'உன்னைப் பற்றி எனக்குத் தெரியும். நீ சொல்ல வேண்டாம். உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன். நீ அஞ்சாமல் இரு. உனக்கு வேண்டியன வெல்லாம் கிடைக்கும்' என்று சொல்லாமல் சொல்வானாம். அந்த வார்த்தைகளில்தான் எத்தனை அன்பு! அவை எத்தனை நம்பிக்கையூட்டும் ஆறுதல் மொழிகள்! எத்தனை நல்ல மொழிகள்! தன் குழந்தையைக் கண்ட தாய் பேசுவது போல முருகன் பேசுவான்.

அஞ்சல் ஓம்புமதி; அறிவல்நின் வரவுஎன
அன்புடை நன்மொழி அளைஇ.

(அஞ்சுவதை விட்டுவிடு; உன் வரவை முன்பே அறிவேன் என்று அன்புடைய நல்ல மொழிகளைச் சொல்லி.)

அவன் இனிமேல் பரிசில் தரப் போகிறான். அதற்கு முன்பு கிடைக்கும் நன்மைகள் சாமானியமா? அவன் அழகுத் திருக்கோலக்காட்சி கிடைக்கிறது. உயிரையே குளிர்விக்கும் அருள் மொழி கிடைக்கிறது. அதற்கு மேலும் அவன் அளிக்கும் பரிசு ஒன்று உண்டு. அதைச் சொல்ல வருகிறார் நக்கீரர்.

## பரிசில்

திருமுருகாற்றுப்படை முருகனுடைய திருவருளைப் பெற்று இன்பம் துய்க்கவேண்டும் என்னும் நாட்டமுடைய புலவன் ஒருவனுக்கு, அப்பெருமானுடைய அருளைப் பெறும் வழி இது என்று அவனருளைப் பெற்ற வேறு ஒரு புலவன் கூறும் வாய்பாட்டில் அமைந்தது. முருகன் இருக்கும்

இடங்களையும் அவற்றின் இயல்புகளையும் கூறி, அவனை எவ்வாறு அணுக வேண்டும் என்பதையும் கூறிய பிறகு, அவனை அடைந்தால் இன்ன பரிசில் கிடைக்கும் என்பதையும் கூற வந்தார் நக்கீரர். இன்ன பரிசில் கிடைக்கும் என்பதுதான் ஆற்றுப்படையில் தலைமையானது; பயனைக் கூறுவது அல்லவா? முருகனை அணுகினால் கிடைக்கும் பயன் எதுவோ அதுதான் பரிசில்.

அதை நக்கீரர், ''விழுமிய பெறலரும் பரிசில்'' என்று சிறப்பிக்கிறார்.

உலகிலுள்ள மக்களை அணுகினால் பொன் தருவார்கள்; பொருள் தருவார்கள்; ஆடை தருவார்கள்; அணி தருவார்கள்; நிலம் தருவார்கள்; இலம் தருவார்கள்; இவை யாவும் சில காலம் இருந்து அழியும் தன்மையுடையவை. எவ்வளவு பெரிய செல்வனாக இருந்தாலும் அவனுக்கும் ஏதேனும் குறை இருக்கும். குறை இல்லாதார் யாரும் இல்லை. குறையுடையாரிடம் பெறும் பரிசில் குறையுடைய தாகவே இருக்கும். குறைவிலா நிறைவுடையாரே குறைவிலாப் பரிசிலைத் தர வல்லவர்.

குறைவிலா நிறைவுடையவனாகவும், தனக்கு உவமை இல்லாதவனாகவும் இருப்பவன் இறைவன். அவன் தரும் பரிசிலை வேறு யாரும் தர முடியாது. அதுவே எல்லாவற்றிலும் உயர்ந்த பரிசில். வேறு எங்கும் பெறுவதற்கரிய பரிசில் அது. அதனால் அதனை, ''விழுமிய பெறலரும் பரிசில்'' என்கிறார் நக்கீரர்.

## சீவன் முத்தி

அந்தப் பரிசில் யாது? இறைவனேயன்றி வேறு யாராலும் தருவதற்கரிய முத்தியே அப்பரிசில். முத்தியிலும் இருவகை உண்டு; ஒன்று சீவன் முத்தி; மற்றொன்று விதேக

முத்தி. இந்த உடம்பு உள்ளபோதே முத்தியின்பத்தை நுகர்ந்து வாழ்வது சீவன் முத்த நிலை; உடம்பை விட்ட பிறகு பெறுவது விதேக முத்தி. முருகன் தன்னை அண்டி வழிபட்ட அன்பனுக்கு உடனே பரிசிலைத் தருவான்; உடம்பை விடச்செய்து விதேக முத்தியை அருள்வது அன்று; உடம்பு இருக்கும்போதே பசுகரணங்களெல்லாம் பதிகரணமாக மாறப்பெறும் சீவன் முத்தியைத் தருவான். ஈடும் எடுப்பும் இல்லாத நிலை அது.

இந்த உலகத்தைச் சுற்றியிருக்கும் கடல் கருமையாக இருளின் நிறத்தைப் படைத்திருப்பது; சூரியன் முதலிய சுடர்கள் இல்லாதபோது உலகமே இருளில் மூழ்கிக் கிடப்பது. மாயிருள் ஞாலம் அல்லவா? இதன் அகத்திலும் இருள்; புறத்திலும் இருள் நிறக்கடல். அகம்புறமென்னும் இரண்டிடங்களிலும் இருள் நிரம்பிய உலகத்தில் வாழும் பொழுதே ஒளி படைக்கும்படி அருள் செய்வான் முருகன்.

என்றும் இறவாத பெருநிலையை, மரணமிலாப்பெரு வாழ்வை, அவன் வழங்குவான். நமக்குச் சமானம் யாரும் இன்றி, நாமே தனித் தலைவராகத் தோன்றும் வகையில் இன்பம் அருளுவான். மற்ற வள்ளல்களிடம் சென்றார் யாரும் இத்தகைய பரிசிலைப் பெறாதவர்களாக நிற்க, முருகனை அடைந்தவன் மட்டும் மற்றவரோடு சேராமல் தனியே சிறந்து நின்று தோன்றும்படி அப்பெருமான் திருவருள் பாலிப்பான்.

விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகத் தோன்ற, விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி

(இருளின் நிறத்தைப் பெற்ற கடல் வளைந்து சூழ்ந்த உலகத்தில் என்றும் அழிவே இல்லாமல், நீ ஒருவனே

தலைவனாகத் தோன்றும்படி, எல்லாவற்றுக்கும் மேலான, வேறு எங்கும் பெறுவதற்கு அரிய பரிசிலாகிய சீவன் முத்தியை அருளுவான்.

விளிவு - அழிவு. இன்று - இன்றி. விளிவின்று ஒரு நீ ஆகத் தோன்ற என்ற கூட்டவேண்டும். முந்நீர் - கடல்; ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற மூன்று இயல்புகளையும் உடைமையால் இப்பெயர் அமைந்ததென்றும், ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீர் என்ற மூன்று நீர்களையும் உடைமையால் அமைந்ததென்றும் கூறுவர். வளைஇய - வளைந்த. ஒரு நீ ஆக - ஒப்பற்ற நீயேயன்றிப் பிறர் யாரும் இல்லை ஆக. விழுமிய - விழுப்பமான; சிறந்த. நல்குமதி - கொடுப்பான். மதி என்பது பெரும்பாலும் முன்னிலை யோடுதான் வரும்; இங்கே அருமையாகப் படர்க்கையோடு வந்தது.)

'இருண்ட நிறத்தையுடைய கடல் சூழ்ந்த உலகத் திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி, சீரிய பிறராற் பெறுவதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்' என்று நச்சினார்க்கினியர் உரை கூறினார். 'ஞானம் பெற்ற சீவன் முக்தர்கள் தம்மை அண்டியவர்களின் அறியாமையை மாற்றி ஞானம் வழங்கி வீடுபெறச் செய்யும் இயல்பை உடையவராவதை எண்ணி, பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்' என்று அவர் கூறினார்.

"பெத்தான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை."

என்று இறைவன் உமாபதி சிவாசாரியாரைப் பணித்ததாக ஒரு வரலாறு உண்டு. அதை இங்கே எண்ணிப் பார்த்தால் இவ்வியல்பு புலனாகும்.

'இனி மதி பலவுடன் எனக் கூட்டி, அறிவுகள் பலவுடனே பரிசில் நல்கும் என்று கூறுவாரும் உளர்' என்று வேறு ஒரு சாரார் உரையையும் நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டினார்.

## மரணமில்லாப் பெருவாழ்வு

சங்ககாலப் புலவர் நக்கீரர். வேதங்களும் வேத முடிவாகிய உபநிடதங்களும் தமிழ் நாட்டில் அக்காலத்தி லும் பெருக வழங்கி வந்தன. கடவுட் கொள்கையும் முத்தி நெறியும் சீவன் முத்தியைப்பற்றிய கருத்துக்களும் அந்தப் பழங்காலத்திலேயே தமிழ் மக்களுக்கு உரியனவாக இருந்தன. வேதம், ''அம்ருதம் இஹபவதி'' என்று சொல்கிறது; 'இவ்வுலகத்திலேயே சாவாமையைப் பெறலாம்' என்கிறது. இந்த உடம்போடு என்றும் இருக்கும் நிலையன்று அது. இந்த உடம்பில் இருக்கும்போதே முத்தியின்பத்தை அடையும் நிலை. மரணமிலாப் பெருவாழ்வு என்பது அதுதான்.

ஏனையோர் மரணம் அடைவது ஓருடம்பை விட்டு மற்றோர் உடம்புக்குப் போகும் பயணம். அது சிறை மாற்றம் போன்றது. சீவன் முத்தர்கள் காலமாவது மரணம் அடைவதாகாது. அவர்கள் இந்த உடம்பை விட்டால் நேரே வீடு அடைகிறார்கள்; பூரணம் அடைகிறார்கள். அதனால் ஞானிகள் உடலை நீத்தால் சித்தியடைந்தனர் என்றும், பூரணமடைந்தனர் என்றும் கூறுகிறோம். அவர்கள் உடம்பை விடுவது, கைதி சிறையினின்றும் விடுதலை பெறுவது போன்றது. மற்றவர்கள் உடம்பை விடுவது பிறிதொரு சிறைக்குப் போவதற்காக முன்பே இருக்கும் சிறையை விடுவது போன்றது. அதுதான் மரணம். இனி இங்கே வந்து பிறவாமல் ஜீவயாத்திரை நிறைவடைய இந்தச் சரீரத்தை

உதறிவிட்டுப் போகும் ஞானியர் மரணம் அடைவதில்லை; அவர்கள் பரிபூரணம் அடைகிறார்கள். அவர்கள் இவ்வுடம்பில் வாழும் வாழ்வு மரணமிலாப் பெருவாழ்வு. நக்கீரர் சொல்கிற, 'விளிவின்று ஒரு நீயாகத் தோன்ற' என்று கூறும் நிலையும் அதுதான்.

இந்த உடம்பு இருக்கும் போதே முத்திநிலை கூடும் என்பதைச் சங்க நூல்களில் வேறிடத்தும் காணலாம்.

"தவம்செய் மாக்கள் தம்உடம்பு இடாஅது
அதன்பயம் எய்திய அளவை மான."

என்று பொருநராற்றுப்படையில் வருகிறது. 'தவம் செய்யும் ஞானிகள் தம் உடம்பைக் கீழே போட்டு விடாமலே அந்தத் தவத்தின் பயனாகிய முத்தியின்பத்தை அடைந்த முறையை ஒப்ப' என்பது இதன் பொருள். இதனால் உடம்பை விடாமலே அந்த இன்பத்தை அடையும் நிலை ஒன்று உண்டு என்பது புலனாகும். அதுவே சீவன் முத்திநிலை.

"நன்றாய் ஞானம் கடந்துபோய்
நல்இந் திரியம் எல்லாம்ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பி லதனை உணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள்
செற்றுக் களைந்து பசைஅற்றால்
அன்றே அப்போ தேவீடாம்;
அதுவே விடு வீடாமே."

என்று நம்மாழ்வார் கூறும் நிலையும் இதுவே என்று தோன்றுகிறது.

மாங்குடி மருதனார் என்னும் புலவர் மதுரைக் காஞ்சி என்ற நூலைப் பாடியிருக்கிறார். திருமுருகாற்றுப் படையை

முதற் பாட்டாகக் கொண்ட பத்துப் பாட்டில் ஆறாவது பாட்டாக அமைந்திருப்பது அது.

மதுரை மாநகரில் உள்ள மக்களின் இயல்புகளையும் அவர்கள் வாழும் இடங்களையும் பற்றி விரிவாக வருணிக்கிறார் அவர். அங்கே,

''நிலம்அமர் வையத்து ஒருதாம் ஆகி
உயர்நிலை உலகம் இவணின் றெய்தும்
அறநெறி பிழையா அன்புடை நெஞ்சிற், பெரியோர்''

என்று ஒரு வகையினரைப் பற்றிக் கூறுகிறார். 'நால்வகை நிலங்கள் அமர்ந்த உலகத்தே ஒன்றாகிய பிரமம் தாங்களேயாய், உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகத்தை இவ்வுலகிலே நின்று சேரும், தருமத்தின் வழி ஒரு காலமும் தப்பாத பல்லுயிர்கட்கும் அன்புடைத்தாகிய நெஞ்சாலே, சீவன் முத்தராயிருப்பார்' என்று நச்சினார்க்கினியர் உரை வகுத்தார். 'ஒருதாம் ஆகி உயர் நிலை உலகம் இவணின் றெய்தும்... பெரியோர்' என்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். திருமுருகாற்றுப்படையில் 'உலகத்து ஒருநீயாகித் தோன்ற' என்று வரும் பகுதியிலுள்ள சொல் நடையோடு அது ஒத்திருப்பதை உணரலாம். உயர்நிலை உலகம் என்பதற்குத் தேவருலகம் என்று நச்சினார்க்கினியர் பொருள் உரைத்தாலும், 'எல்லாவற்றினும் உயர்ந்த நிலையாகிய வீட்டுலகம்' என்று பொருள்கொள்வதே சிறப்பு. வீட்டை, ''வரனென்னும் வைப்பு'' என்றும், ''வானோர்க்குயர்ந்த வுலகம்'' என்றும் திருவள்ளுவர் கூறுவதனாலும் இதனை உணரலாம்; 'இங்கே இருந்தபடியே உயர்நிலை உலகமாகிய முத்தியநுபவத்தை அடையும் பெரியோராகிய சீவன் முத்தர்' என்று பொருள் கொள்வதற் குரியது. முன்பு காட்டிய மதுரைக் காஞ்சிப் பகுதியில்

அவர்கள் ஒரு தாம் ஆகித் தோன்றுபவர்கள். இங்கே பெறலரும் பரிசில் பெறும் புலவனும் 'ஒருநீ யாகத் தோன்றி' நிற்பான். எனவே, இங்கே குறிப்பிட்டது சீவன் முத்த நிலை என்று சொல்வதில் தவறு இல்லை.

முருகனை வழிபட்டு அன்பு செய்யப் புகுந்தவன் ஒருவன், அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களுக்குச் சென்றும், அவனுடைய சைதன்யம் பொருந்தியிருக்கும் இடங்களுக்குச் சென்றும் யாத்திரை செய்தும், அதனால் உள்ளம் தெளிவடைந்து பக்குவம் பெறும்போது, முருகன் தன் காட்சியை அப்போது அவ்விடத்தில் காட்டிச் சீவன் முத்த நிலையை அருளுவான் என்பது இதுவரையிற் கூறியவற்றால் தெளிவாகிறது.

''பெறலரும் பரிசிலைத் தருவான்; அப்படித் தருபவன் பழமுதிர்சோலை மலைகிழவோன்'' என்று இந்த வாக்கியத்துக்கு எழுவாயை வைப்பவர்போல மற்றொரு படை வீட்டை யுடையான் என்பதைப் புலப்படுத்துகிறார் நக்கீரர்.

---

# பழமுதிர் சோலைமலை

பழமுதிர்சோலை மலைகிழவோனைச் சொல்ல வரும் நக்கீரர் அந்த மலையின் இயற்கையெழிலை விரிவாகச் சொல்கிறார். அந்த மலைக்கு உரியவன் என்ற அளவிலே முருகனைக் குறிப்பிடுகிறார்.

பழமுதிர் சோலைமலை வளத்தைக் கூறும்போது தனித்தனிக் கட்சியாகச் சொல்லாமல் எல்லாவற்றையும் ஒரு தொடர்பு உண்டாகும்படி அமைத்துக் காட்டுகிறார். மலையின் மேலிருந்து கீழே இழிந்துவரும் அருவியை வருணிக்கத் தொடங்கி, அது வரும் வழியில் நிகழ்வன வற்றைச் சொல்லும் முறையில் படிப்படியாக அந்த அந்த இடங்களில் உள்ள மரங்களையும் விலங்குகளையும் பறவைகளையும் காட்டுகிறார்.

திருமுருகாற்றுப்படையில் வரும் முதலாவது படை வீடாகிய திருப்பரங்குன்றத்தின் எழிலைச் சொல்லும் போது வண்டைத் தொடர்புபடுத்தி, அது வயலில் தாமரையில் துஞ்சி விடிந்தவுடன் கீழிருந்து மேலே சென்று இன்பம் துய்ப்பதாகச் சொல்லும் முறையில் அந்த அழகைப் புலப்படுத்துகிறார். இங்கே மேலிருந்து கீழே வரும் அருவியோடு நம்மை அழைத்துச் சென்று இடையிடையே நிகழும் காட்சிகளைக் காட்டுகிறார். தொடக்கத்தில் ஏறும் வண்டை வைத்து இயற்கையை வருணிக்கும் நக்கீரர் இறுதியில் இறங்கும்

அருவியைக் கொண்டு மலையின் எழிலை விரிக்கிறார். இது ஓர் அழகான உத்தி.

## அருவியின் தோற்றம்

மலையின் உச்சியிலே அருவியின் மூலமாகிய சிறு சிறு பகுதிகள் இருக்கின்றன. அவையெல்லாம் திரண்டு ஒன்றாகிப் பேரருவியாக வீழ்கின்றன. அந்தச் சிறிய சிறிய அருவிகள் வெள்ளை வெளேரென்ற துணியாலான கொடிகள் அங்கங்கே அசைவது போலத் தோற்றுகின்றன. இந்த உயரத்திற்குக் கீழே அருவி பெருந்தாரையாகி வேகம் பெற்று இழியத் தொடங்குகிறது.

பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி,

(பல சிறிய அருவிகள் ஒருங்கே பல்வேறு துணிக் கொடிகளைப் போல வளைந்து அசைந்து. துகில் - கொடி. நுடங்கி - அசைந்து.)

### மரங்கள்

இப்போது அருவி கீழ்நோக்கி வருகிறது. அருகிலுள்ள பொருள்களையெல்லாம் அடித்துக் கொண்டு வருகிறது. மலையின்மேல் அகில் வளர்ந்திருக்கிறது. சந்தன மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ளன. இரண்டும் மணமுள்ள பொருள்கள். மிகவும் உயரத்தில் உள்ளவை இவை. அகிலைப் பறித்து அருவி சுமந்து கொண்டு வருகிறது. சந்தன மரங்களின் அடிகளையெல்லாம் வீழ்த்தி உருட்டிக்கொண்டு வருகிறது. அந்த நிலைக்குக் கீழே பல ஆண்டுகளாக மூங்கில்கள் வளர்ந்திருக்கின்றன; ஆழமாக வேரூன்றி யிருக்கின்றன; மலர்களைத் தாங்கியபடி மெல்ல அசைகின்றன. அந்த மூங்கில்களை மோதி உலுக்குவதால் பூக்கள் உதிர்கின்றன.

மூங்கில்களையே வேரோடு பறித்துக் கொண்டு வருகிறது அருவி.

அகில்சுமந்து,
ஆர முழுமுதல் உருட்டி, வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு.

(அகில் கட்டைகளைச் சுமந்து, சந்தன மரத்தின் அடிப்பாகத்தை உருட்டி, சிறு மூங்கிலின் பூவையுடைய அசைகின்ற கொம்பு பூவில்லாமல் மொட்டையாகும்படி, அதன் வேரைப் பிளந்து.

ஆரம் - சந்தனம். முழுமுதல் - அடிமரம். வேரல் - சிறு மூங்கில். அலங்கு - அசையும். சினை - கிளை. புலம்ப - மலர் இல்லாமல் தனியாக இருக்க.)

மலர் நிறைந்த சூழ்நிலை இது. மக்கள் அதிகமாக நடையாடாத இடம். இங்கே மலைப் பக்கத்தில் பெரிய பெரிய தேனடைகள் இருக்கின்றன. வானளாவிய உயர்ந்த மலைப்பகுதிகள் அவை. வட்ட வட்டமாக உள்ள அந்தத் தேனடைகளில் தேன் நிரம்ப உள்ளது. ஆதலால் சிவப்பாக இருக்கின்றன. அவை சூரிய மண்டலத்தைப் போலக் காட்சி அளிக்கின்றன. குளிர்ந்த மணம் நிரம்பிய தேன் அவற்றில் இருக்கின்றது. அருவி விழுகிற வேகத்தில் அதன் நீர்வீச்சு அந்தத் தேனடைகளின் மேல் மோதுவதனால் அவை சிதைகின்றன. தேனும் அருவியிலே வீழ்ந்து கலக்கிறது.

விண்பொரு நெடுவரைப் பருதியின் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய.

(வானை முட்டுகின்ற உயர்ந்த மலைப்பக்கத்தில் வண்டுகள் அடை அடையாக வைத்த குளிர்ந்த நறுமணம் வீசிப் பரவியிருக்கும் தேனடைகள் சிதைய.

பொரு - முட்டும். நெடுவரை - உயர்ந்த மலைப் பக்கம். பருதியின் - சூரியனைப்போல. அலர் - விரிந்து பரந்த. இறால் - தேனடை.)

மணமுள்ள பொருள்களும் சுவையுள்ள பொருள்களும் அருவியிலே கலந்து வருகின்றன. அங்கே மலைக் காடுகளில் வெவ்வேறு மரங்கள் ஓங்கித் தழைத்து வளர்ந்திருக்கின்றன. ஒரு பக்கம் ஈரப் பலா மரங்கள் முதிர்ந்த கனிகளுடன் நிற்கின்றன. மற்றொரு பக்கம் சுரபுன்னை மரங்கள் நிரம்பப் பூத்துக் குலுங்குகின்றன. இந்த அருவி பலா மரத்தை மோதிப் பழுத்து வெடித்த பழங்களிலிருந்து சுளைகள் உதிர்ந்து விழச் செய்கின்றது. அவை அருவியிலே கலக்கின்றன. சுரபுன்னையின் மேல் மோதி அதிலுள்ள மலர்களை உதிர்க்கின்றது. அந்த மலர்களும் அருவியிலே வருகின்றன.

நன்பல
ஆசினி முதுசுளை கலாவ, மீமிசை
நாக நறுமலர் உதிர.

(நல்லனவாகிய பல ஈரப் பலாக்களின் முதிர்ந்த சுளைகள் உதிர்ந்து கலக்கவும், மேலே உள்ள சுரபுன்னையின் மணம் வீசும் மலர்கள் உதிரவும். ஆசினி - ஈரப்பலா. கலாவ - கலக்க. நாகம் - சுரபுன்னை.)

## விலங்குகள்

மரங்களையும் தேனடைகளையும் சிதைத்து வரும் அருவி பின்னும் கீழே இறங்கி வரும்போது அங்குள்ள மரங்களில் இருக்கும் குரங்குகள் அஞ்சுகின்றன. உடம்பு முழுவதும் கருமையான குரங்குகளும், முகம் மாத்திரம் கருமையாக இருக்கும் குரங்குகளும் மரத்துக்கு மரம் தாவி விளையாடுகின்றன. அருவி வேகமாக வரும்போது அதன்

திவலைகளும் துளிப் படலமும் தம்மேல் வீசுவதனால் அந்தக் குரங்குகள் நடுங்குகின்றன. அங்கே யானைகள் உலாவுகின்றன. அவற்றின் முகத்தில் பொறிப் பொறியாகப் பூவைப் போன்ற புள்ளிகள் இருக்கின்றன. கருமையான பெண் யானைகள் அருவி வீசும் துளிகளால் குளிர் அடைந்து நடுங்குகின்றன.

யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசி.

(கருங் குரங்குகளோடு கரிய முகத்தையுடைய ஆண் குரங்குகள் நடுங்கவும், பூவைப் போன்ற புள்ளிகளையுடைய நெற்றியையுடைய கரிய பெண்யானைகள் குளிர்ச்சி அடையும் படியும் வீசி.

யூகம் - கருங்குரங்கு. மாமுகம் - கரிய முகம். முசு - ஒரு வகைக் குரங்கு. கலை - ஆண். பனிப்ப - நடுங்க. இரும் பிடி - கரிய பெண் யானை. குளிர்ப்ப - குளிர்ச்சி அடையும்படி.)

அங்கங்கே ஆண் யானைகள் இறந்துபட்டதனால் அவற்றின் தந்தங்கள் கிடக்கின்றன. பல காலம் வாழ்ந்த யானைகளின் தந்தங்களாதலின் அவை முதிர்ந்து முத்துடையனவாக இருக்கின்றன. முத்துப் பிறக்கும் இடங்களில் யானையின் தந்தமும் ஒன்று. அந்தத் தந்தங்களை அலைத்துக் கொண்டு வருகிறது அருவி. மலையில் பலவகை மணிகள் பிறக்கும். 'மலைதரு மணியே' என்று சொல்வது வழக்கு. அந்த மணிகளையும் அலசிக் கொண்டு அருவி வரும்போது அவை பளபளக்கின்றன; அவற்றின் வண்ணங்கள் எடுப்பாகத் தெரிகின்றன.

மலைகளில் பொன்னும் கொடி கொடியாகப் பாறையினிடையே ஓடிக் கிடக்கும். அருவி வேகமாகப்

பாறையினூடே வரும்போது அந்தப் பொன்னையும் அரித்து வருகிறது; பொன்னின் பொடியைக் கொழித்துக் கொண்டு வருகிறது.

மணமுள்ள பொருள்களும் சுவையுள்ள பொருள்களும் அருவியிலே சேர்ந்து வருகின்றன என்பதை பார்த்தோம். இப்போது மதிப்புள்ள பொருள்களையும் அருவி இழுத்துக் கொண்டு வருகிறது. முத்துடைய தந்தத்தையும் மணியையும் பொன்னையும் அல்லவா அடித்துக் கொண்டு வருகிறது? ''இப்பொன் நீ இம்மணி நீ இம்முத்து நீ'' என்பதில், இறைவனைப் பாடும் அப்பர் சுவாமிகள் மதிப்புடைய பண்டங்களாக அவன் இருப்பதைப் பொன், மணி, முத்து என்று கூறிப் புலப்படுத்து கிறார். அந்த மூன்று அரும் பண்டங்களையும் அரித்துக் கொண்டு வருகிறது அருவி.

பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா.

(பெரிய ஆண் யானைகளின் முத்தையுடைய வெண்மையான தந்தங்களை வாரிக்கொண்டு, குதித்து, நல்ல பொன்னும் மணியும் தம் நிறம் நன்றாக ஒளிரும்படி செய்து, பொன்னைக் கொழித்துக் கொண்டு.

வான்கோடு - வெள்ளைத் தந்தம். தழீஇ - தழுவி; இழுத்துக் கொண்டு. கிளர - நன்றாகத் தோன்ற.)

## வேறு மரங்கள்

இப்போது அருவி மலையின் பாதிக்குக் கீழே வந்து விட்டது. மேலே சந்தனம், ஈரப் பலா, சுரபுன்னைகள் இருக்கின்றன. இங்கே கீழ் மட்டத்தில் வாழை மரங்கள் வளர்ந்திருக்கின்றன. தென்னை மரங்களும் இருக்கின்றன.

வாழை மரங்கள் முறிந்து விழுகின்றன. அருவிக்குப் பழைய வேகம் இல்லை. இனிமேல் சிறிது தூரத்தில் கீழே சமநிலம் இருக்கிறது. முன்னை வேகமாக இருந்தால் வாழை மரத்தை அடியோடு பறித்துக் கொண்டல்லவா வரும்? இப்போது அவை ஒடிந்து ஒடிந்து விழுகின்றன. தென்னை மரங்களில் இளநீர்க் குலைகள் நிறைய இருக்கின்றன. அருவி வீசுகிறதனால் அந்தக் குலைகள் உதிர்கின்றன. வேகம் மிகுதியாக இருந்தால் தென்னை மரங்களையே சாய்த்திருக் கும். அங்கே மரங்களில் மிளகு கொடி படர்ந்திருக்கிறது. கொத்துக்கொத்தாகக் காய்த்திருக்கிறது மிளகு. அந்தக் கொத்துக்கள் அருவி தாக்குவதால் கீழே சாய்கின்றன.

வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாய

(வாழையின் அடிமரம் முறியவும், தென்னை மரத்தின் மேலான இளநீர்க் குலைகள் உதிரவும் தாக்கி, மிளகு கொடியில் காய்க் கொத்துக் கீழே சாயவும்.

முழுமுதல் - அடிமரம். துமிய - ஒடிய. தாழை - தென்னை. கறிக்கொடி - மிளகு கொடி. துணர் - காய்க் கொத்து.)

## பறவைகள்

அடுத்தபடி அங்கே உற்ற பறவைகள் அஞ்சுகின்றன. மயில்கள் கூட்டங் கூட்டமாக அங்கே உலவுகின்றன. புள்ளியையுடைய கலாபத்தைப் பெற்ற அவை ஒய்யாரமாகத் தோகைகளை விரித்துக் கொண்டு நடன மாதர்போல மெத்தென்று நடக்கின்றன. அருவி கிர்கிர்ரென்று வீசவே அவை அஞ்சி ஓடுகின்றன. காட்டுக் கோழிகள் அங்கே இருக்கின்றன. பெட்டைக் கோழிகள் குஞ்சுகளுடன்

உலாவுகின்றன. அவையும் அருவியைக் கண்டு திக்குக்கு ஒன்றாக ஓடுகின்றன.

பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரிய.

(பொறிகளையுடைய மேற்புறத்தையும் மெத்தென்ற நடையையும் பெற்ற மயில்கள் பல ஒருங்கே அஞ்சவும், காட்டுக் கோழிகளின் வலிமையை யுடைய பேடைகள் ஓடிப் போகவும்.

பொறி - புள்ளி. மடநடை - மென்மையான நடை. வெரீஇ - அஞ்சி; அஞ்சவென்று கொள்ள வேண்டும்; எச்சத் திரிபு. வயப் பெடை - வலிமையையுடைய பெண் பறவை. இரிய - கெட்டு ஓட.)

## பிற விலங்குகள்

பின்னும் அருவி கீழே வருகிறது. இந்தப் பகுதிகளில் காட்டுப் பன்றிகளும் கரடிகளும் காட்டு மாடுகளும் இருக்கின்றன.

கரடிகளின் மயிர் பனமரத்தின் சிலாம்புகளைப் போல இருக்கிறது. பனமரத்தின் உள்ளே சோறு போல உள்ள பகுதியில் உள்ள சிலாம்புகள் விறைப்பாக இருக்கும். கரடியின் மயிர் அப்படி இருக்கிறது. அவற்றின் கால்கள் வளைந்தவை. அருவியின ஓட்டத்திற்குப் பயந்து காட்டுப் பன்றிகளும் கரடிகளும் ஓடிப் பாறைகள் பிளந்து முழையாக உள்ள இடங்களுக்குள்ளே போய் ஒளிந்து கொள்கின்றன. காட்டுப் பசுக்களில் காளை மாடுகள் இருக்கின்றன. கரிய கொம்பையுடையவை அவை. அவையும் அஞ்சி மலையே எதிரொலிக்கும்படி முழங்குகின்றன.

கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்ப.

(காட்டுப் பன்றியோடு கரிய பனமரத்தின் உள் சோற்றிலே உள்ள புன்மையான சிலாம்பைப் போன்ற நிறம் பெற்ற மயிரையுடைய உடம்பையும் வளைந்த அடியையும் பெற்ற கரடிகள் பெரிய மலையின் பிளப்பிலே உள்ள குகைகளிலே சென்று சேரவும், கரிய கொம்பையுடைய காட்டுமாடுகளின் காளைகள் முழங்கவும்.

கேழல் - காட்டுப்பன்றி. வெளிறு - வெள்ளையான உட்சோறு. சாய் - சிலாம்பு. குரூஉ - நிறம். குடாவ - வளைந்த அடி. உளியம் - கரடி. கல் - மலை. விடர் - பிளப்பு. அளை - குகை; முழை. கோடு - கொம்பு. ஆமா - காட்டுப் பசு. ஏறு - காளை. சிலைப்ப - முழங்க.)

இவ்வாறு உயரத்திலிருந்து வரும் அருவி அங்கங்கே உள்ள மரங்களையும் மலரையும் தேனையும் கனியையும் அடித்துக் கொண்டு, பல்வேறு மரங்களை அலைத்தபடி, முத்தும் மணியும் பொன்னும் பளபளக்கும்படி அவற்றை அரித்து, அங்கங்கே உள்ள பறவைகளையும் விலங்கு களையும் நடுங்கும்படி செய்து கொண்டு வருகிறது. அதன் ஓசை இடைவிடாமல் ஓமென முழங்குகிறது.

விட்டுவிட்டு வரும் ஓசையை அரிக்குரல் என்றும், தொடர்ந்து இழைந்து ஒலிக்கும் ஒலியை இழுமெனோசை என்றும் சொல்லுவது வழக்கு. இங்கே மலையின் முகட்டிலிருந்து வரும் அருவியின் ஓசை இடையீடு இல்லாமல் இழுமென முழங்கிக் கொண்டே இருக்கிறது.

மேலிருந்து கீழே இறங்குவதனால் இந்த ஓசை உண்டாகிறது. இழுமென இழிதரும் இத்தகைய அருவியையுடையது பழமுதிர் சோலை மலை. அதற்குத் தலைவனாக, உரிமையுடையவனாக, இருப்பவன் முருகன்.

சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

(மலையின் உச்சியாகிய நெடுந்தூரத்திலிருந்து இடையீடில்லாமல் இழுமென்ற ஓசையுடன் இறங்கிவரும் அருவியையுடைய பழமுதிர் சோலைமலையை உடையவனாகிய முருகன்.

மலைகிழவோன் நல்குமதி என்று வாக்கியத்தை முடிக்க வேண்டும்.

சேண் - நெடுந்தூரம். இழிதரும் - இறங்கிவரும். கிழவோன் - உரியவன்; தலைவன்.)

இதற்குமுன் ஐந்து இடங்களில் முருகன் இருப்பதை, அவ்விடங்களில் இருத்தலும் உரியன் என்று சொன்னவர், ஆறாவது படைவீடாகிய பழமுதிர்சோலைமலையில் அவன் இருக்கிறான் என்ற முறையில் சொல்லாமல் பழமுதிர் சோலைமலை கிழவோன் பெறலரும் பரிசிலைத் தருவான் என்ற முறையில் சொல்லி முடிக்கிறார். அப்படிச் சொன்னாலும் முருகன் பழமுதிர் சோலையிலும் எழுந்தருளியிருக்கிறான் என்று சொன்னதாகவே கொள்ள வேண்டும்.

இவ்வாறு சொல்வதை உடம்படுபுணர்த்தல் என்ற உத்தியாகச் சொல்வர். ஒரு செய்தியைத் தனியே எடுத்துச் சொல்லாவிட்டாலும், சொல்லுகின்ற முறையில் அந்தச் செய்தி புலப்படும்படி சொல்வதே அது.

## பழமுதிர் சோலைமலை

பழமுதிர் சோலைமலை என்னும் தலம் மதுரைக்கு அருகில் உள்ளது. அதை இப்போது அழகர்மலை என்று சொல்வார்கள். திருமாலிருஞ் சோலைமலை என்றும் வழங்குவர். பழங்காலத்தில் இங்கே முருகன் கோயிலும் திருமால் கோயிலும் ஒருங்கே இருந்திருக்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் 'புண்ணிய சரவணம்' என்ற தீர்த்தம் இங்கே இருந்ததாக ஒரு செய்தி வருகிறது. சரவணம் என்பது முருகனோடு தொடர்புடையது. முருகன் திருவவதாரம் செய்த இடம் சரவணப் பொய்கை ஆதலின் அவன் எழுந்தருளியிருக்கும் தலங்களில் சரவணப் பொய்கை என்ற பெயருள்ள தீர்த்தம் இருப்பதைக் காணலாம். பழனியில் அந்தப் பெயரோடு ஒரு தீர்த்தம் இருக்கிறது.

ஆகவே, பழமுதிர் சோலைமலையில் புண்ணிய சரவணம் என்ற தீர்த்தம் இருப்பது அங்கே முருகன் திருக்கோயிலும் இருந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டுகிறது. ஆறு படை வீடுகள் என்று நெடுங்காலமாக வரும் வழக்கில் இந்த மலையையும் சேர்த்தே வழங்கு வதைக் கொண்டும் இத்தலத்தில் முருகன் கோயில் இருந்ததை உய்த்துணரலாம். அழகர் மலை பற்றிய மான் மியத்தில் முருகன் திருமாலைப் பூசித்ததாக ஒரு வரலாறு வருகிறது. அதனாலும் முருகன் இத்தலத்துக்கு எழுந்தருளிய தாக வழங்கும் கருத்துக்கு வலிமை உண்டாகிறது.

---

## தொகுப்பு

நக்கீரர், முருகன் திருவருளைப் பெறவேண்டும் என்று விரும்பிய பக்தன் ஒருவனுக்கு, அப்பெருமானை இங்கே காணலாம் என்று கூறி, அவனை இன்னவாறு வழிபட வேண்டும் என்பதையும் சொல்லி அவனால் கிடைக்கும் பயனையும் சொல்கிறார். ஒரு புலவனை மற்றொரு புலவன் ஆற்றுப் படுத்துவதாக அமைந்திருத்த லின் இதற்குப் புலவராற்றுப்படை என்றும் ஒரு பெயர் உண்டு.

### வேறுபாடு

பொதுவாக ஆற்றுப்படைகளை, யார் பயன்பெறச் செல்கிறார்களோ அவர்கள் பெயரால் வழங்குவது வழக்கம். பாணரை ஆற்றுப்படுத்தினால் பாணாற்றுப் படையெனப் பெயர் பெறும்; கூத்தரை ஆற்றுப்படுத்தினால் கூத்தராற்றுப் படை என்று பெயர். இது யாரிடத்தில் ஆற்றுப் படுத்துகிறார் களோ, அவரைக் கொண்டு பெயர் பெற்றிருக்கிறது. மற்ற ஆற்றுப்படைகளில் ஆற்றுப் படுத்துகிறவன், ‘நான் உன்னைப்போல வறியவனாக இருந்தேன். அந்த வள்ளலை அடைந்து நலம் பெற்றேன்’ என்று கூறுவது வழக்கம். அத்தகைய பகுதி இந்த நூலில் இல்லை. நேரே முருகனை நாடிச் செல்வானுக்கு, நீ இப்படிச் செய்ய வேண்டும் என்று அறிவுறுத்தும் வகையில் தொடங்கிவிடுகிறார் நக்கீரர்.

ஆற்றுப்படை என்ற பிரபந்தத்தின் வடிவத்தில் இது அமைந்தாலும் நக்கீரருடைய கருத்து முருகனுடைய பெருமையை வெளியிட வேண்டும் என்பதே.

## வழிபடுவோர்

கடைச்சங்க காலம் என்பது ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது. அந்தக் காலத்தில் முருகனைப் பற்றிய எண்ணங்கள் தமிழ் நாட்டில் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை அறிய இந்த நூல் துணையாக இருக்கிறது. பல வேறு நிலைகளில் உள்ளவர்கள் முருகனை வழிபட்டுப் பயன்பெறும் காட்சிகளைக் காணுகிறோம். சமுதாயத்தில் இடத்தாலும், நிலையாலும், தொழிலாலும், பழக்க வழக்கங்களாலும் கீழ் நிலையில் உள்ளவர்களா யினும் மேல் நிலையில் உள்ளவர்களாயினும் யாவருமே முருகனை வழிபடுகிறார்கள்.

அவனை வணங்கி வரம் வேண்டுவதற்கு வரும் கூட்டத்தில் சிவபெருமான் இருக்கிறார். திருமால் இருக்கிறார். இந்திரன் இருக்கிறான். முப்பத்து முக்கோடி தேவர்களின் தலைவர்களாகிய முப்பத்து மூன்று தேவர்கள், பதினெண்கணங்கள் அவர்களோடு செல்கிறார்கள். கந்தருவர்களும் அவர் மகளிரும் யாழ் வாசித்து அவனைப் பாடுகிறார்கள். யாவரும் பிரமனை விடுதலை செய்ய வேண்டுமென்று வரம் கேட்பதற்காகத் திருவாவினன் குடிக்கு வருகிறார்களாம்.

தேவலோகத்து மடந்தையர் தம்முடைய அழகை மிகுவிக்கும் மலர்களைத் தரும் குறிஞ்சிநிலக் கடவுளென்று அவனைப் பாடி ஆடுகிறார்கள். அழகு பொங்கும் அம்மகளிர் அவனைப் பாடுவது மட்டும் அன்று. அழகில்லாத பேய் மகளும் முருகனுடைய வீரத்தைப் பாராட்டிப் பாடுகிறாள்.

இவர்கள் வழிபடுவதைக் கற்பனைக் கண்ணால் கண்டு நமக்குக் காட்டுகிறார் நக்கீரர்.

இவ்வுலகில் உள்ளவர்களில் முனிபுங்கவர்கள் அவனை வழிபடுகிறார்கள். இடையில் மரவுரியும் தலையில் வெளுத்த சடைமுடியும் உடையவராக, விரதமிருந்து மெலிந்த உடம்பினராக உள்ள அவர்கள் கற்றவர்களும் அறியாத அறிவை உடையவர்கள்; கற்றவர்களுக் கெல்லாம் வரம்பாக நிற்பவர்கள். அவர்கள் முருகனை வணங்கும் கூட்டத்தில் முன்னே நிற்கிறார்கள். அந்தணாளர்கள் முருகனைப் போற்றுகிறார்கள். அவர்கள் செய்யும் வேள்விகளை முருகன் ஏற்றுக் கொள்கிறான்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்களுக்கு முருகன் பெருமையை எடுத்துக் காட்டி அப்பிரானைப் பூசை செய்வதே தன் தொழிலாகக் கொண்டிருக்கிறான் வேலன். அவன் தன் கையில் வேலை வைத்திருப்பதால் அப் பெயரைப் பெற்றான். குன்றுகளில் உள்ள வேடர்கள் கள்ளைக் குடித்துச் சிறு பறைகளைக் கொட்டி முருகனை வாழ்த்திக் குரவைக் கூத்து ஆடுகிறார்கள். குறமகளும் அவனைப் பயபக்தியுடன் வழிபடுகிறாள். அவனுடைய கோயிலில் கொடியேற்றி விழாவை நடத்துகிறார்கள். கடுகை அரைத்து அப்புகிறார்கள். பூவை அங்கங்கே இட்டுப் பூசிக்கிறார்கள். தூபம் காட்டிப் பூசை செய்கிறார்கள். குறிஞ்சிப் பண்ணைக் குறமகள் பாடுகிறாள். அங்கே முருகன் ஆவேச உருவத்தில் வெளிப்படுகிறான்.

பழமுதிர்சோலை மலையில் அருவி எவ்வாறு மேலிருந்து கீழே வரும்போது எல்லா வகையான நிலைகளையும் கடந்து வருகிறதோ, அவ்வாறு முருகனும்

சிவபிரான் முதல் பேய் இறுதியாகவுள்ளவர்கள் வழிபடும் தெய்வமாகவும், முனிபுங்கவர் முதல் குறவர் வரையில் பூசிக்கும் பரம்பொருளாகவும் நிலவுகிறான்.

## புராண வரலாறுகள்

அவன் நீலப்பைஞ் சுனையாகிய சரவணப் பொய்கையில் திருவவதாரம் செய்ததும், ஆறு கார்த்திகை மாதரால் வளர்க்கப் பெற்றதும், நான்முகனைச் சிறையிலிட்டதும், கிரவுஞ்ச மென்னும் மலையைப் பிளந்ததும், சூரனை அழித்ததும் தேவயானையைத் திருப்பரங்குன்றத்தில் திருமணம் செய்து கொண்டதும், வள்ளிநாயகியோடு எழுந்தருளியிருப்பதுமாகிய புராண வரலாறுகளை நக்கீரர் நினைப்பூட்டுகிறார்.

## முருகுத் திருக்கோலம்

முருகன் என்னும் திருநாமத்துக்குரிய பொருளைக் குறிப்பாக ஓரிடத்தில் கூறுகிறார். மணம், தெய்வத் தன்மையாகிய அருள், இளமை, அழகு என்னும் நான்கும் இணையில்லாத வகையில் நிரம்பியவன் முருகன்.

''மணங்கமழ் தெய்வத்து இளநலம்.''

என்பதில் அவற்றைக் குறிப்பிடுகிறார். இந்த முருகுத் திருக்கோலம் பழமையானது. ''பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலம்'' என்கிறார். அவனுக்கு மிகப் பெரிய விசுவரூபம் உண்டு. அதைக் கண்டவர் அஞ்சுவர். ''அணங்குசால் உயர்நிலை'' என்று அதனைச் சுட்டுகிறார். அவ்வளவு பெரிய திருவுருவம் இருப்பினும், பணிபவர்கள் பால் உள்ள பெருங் கருணையால் அவன் அதை மறைத்துக் கொண்டு அழகனாக வருகிறான்.

## அங்க அடையாளங்கள்

அவனுக்கு ஆறு முகமும் பன்னிரண்டு திருக்கரங் களும் இருக்கின்றன. உலகிலுள்ள இருளையெல்லாம் போக்கிச்சுடர் விடுகின்றது ஒரு முகம்; அதற்கு ஏற்ற கைகளில் ஒன்று சூரியனுடைய வெப்பத்தைத் தாங்கிச் செல்லும் முனிவர்களுக்கு அருள்புரிய, மற்றொரு கை இடையிலே இருக்கிறது. ஒரு முகம் வணங்கிய அன்பர் களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்கிறது; அதற்காக அவன் யானையின் மீது எழுந்தருளியிருக்கும்போது ஒரு கையைத் துடைமேல் வைத்து, மற்றொரு கையில் அங்குசத்தைப் பிடித்திருக்கிறான். அந்தணர் செய்யும் வேள்வி களுக்குப் பாதுகாப்பாக நிற்கும் முகமும், அவ்வேள்வி களைக் குலைக்க அசுரர் வந்தால் அவர்களை அழிக்க வேலெடுத்த கையும் கேடயம் கொண்ட கையுமாக அவன் விளங்குகிறான். ஒரு முகம் நுட்பமான கருத்துக்களை விளக்கும்போது ஒரு கை மோன முத்திரையோடு விளங்க, மற்றொரு கை மார்பிலுள்ள மாலையைப் பற்றியிருக்கிறது. மற்றொரு முகம் அசுரரை மாய்த்து வென்று களவேள்வி செய்கையில், ஒரு கை மேலே சுழன்று ஆவன செய்யும்படி ஏவ, மற்றொரு கை மணியை ஒலிக்கிறது. வள்ளி நாச்சியாரோடு இன்பம் கொள்ளும் ஒரு முகத்துக்கு ஏற்ப மழை வளம் சுரக்கச் செய்யும் ஒரு கையும், தேவலோக மடந்தையருக்கு மண மாலை வழங்கும் ஒரு கையும் விளக்குகின்றன. இப்படி ஆறுமுக நாதனாகப் பன்னிருகைப் பரமனாக அவன் தோற்றம் அளிக்கிறான்.

அவனுடைய திருவடி அடைவாரைத் தாங்குகிறது. அவனுடைய இடையில் சிவந்த ஆடை ஒளிர்கிறது. அவன் மார்பில் கடம்பு மாலை இலங்குகிறது; முத்துமாலை அசைகிறது. அவனுடைய காதுகளில் குழையும், தலையில் மணிமுடியும் சுடர்கின்றன. அவன் காந்தளங் கண்ணியை

முடிமேல் அணிந்திருக்கிறான். அவனுடைய திருமேனி சிவப்பு நிறமுடையது; கதிரவனைப் போன்ற ஒளி வீசுவது.

## உறையும் இடங்கள்

இத்தகைய திருக்கோலத்தையுடைய முருகன் திருக் கோயில்கள் உள்ள ஆறு படைவீடுகளில் எழுந்தருளி யிருக்கிறான். கோயில் இல்லாத ஆற்றிலும், குளத்திலும், மன்றத்திலும், பொதியிலிலும், சதுக்கத்திலும், சந்தியிலும் இருக்கிறான். அவன் இல்லாத இடம் இல்லை. எங்கே அன்பர்கள் உணர்வு பெற்று நின்று வாழ்த்திப் போற்று கிறார்களோ, அங்கே அவன் எழுந்தருளி உடனே கருணை பாலிப்பான்; வேறு யாராலும் வழங்க முடியாத முத்தியின்பத்தை வழங்குவான்.

இவ்வாறு முருகனுடைய அருளைக் கூறும் இந்த நூல், அந்தக் காலத்து மக்கள் இயல்பையும், இயற்கை வளத்தையும் கவிச்சுவை பொங்கப் புலப்படுத்துகிறது.

இந்த அரிய நூலைப் பாராயணம் செய்யும் பழக்கம் நெடுநாட்களாக இந்த நாட்டில் இருந்து வருகிறது.

“நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால்.”

என்று வரும் பாட்டு நாள்தோறும் பாராயணம் பண்ணும் மரபையும் அதன் பயனையும் தெரிவிக்கிறது.

இது சங்க நூற் சோலையின் முன்னே முதலில் திகழும் கற்பக மரமாகவும், பன்னிரண்டு திருமுறைகளின் இடையே திகழும் சோதி மரமாகவும் விளங்குகிறது.

காலத்தை எதிரிட்டு நின்று பொலியும் திரு முருகாற்றுப்படை எல்லாருக்குமே முருகன் திருவருளைப் பெறுவதற்குத் துணை செய்யும் வழிகாட்டி.

# திருமுருகாற்றுப்படை

## 1. திருப்பரங்குன்றம்

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்,
கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்,
மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்காழ அல்குல்
கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவர்இழைச்
சேண்இகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணைஈர் ஓதிச்

செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாட் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகள்அறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்
நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென்று ஏத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர்அர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பும் மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்,
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதிற் பிணர்மோட்டு

உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி ஆடிய கூர்உகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க
இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின், பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே;
செருப்புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர் அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றுஅமர்ந்து உறைதலும் உரியன்; அதாஅன்று.

## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டும் மருங்கிற் கடுநடைக்
கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழமேல் கொண்டு
ஐவேறு உருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்உறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகைஅமை பொலம்குழை
சேண்விளங்கு இயற்கை வாள்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்நேர்பு எழுதரு வாள்நிற முகனே:
மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்துஇனிது ஒழுகிக்
காதலினி உவந்து வரம்கொடுத் தன்றே; ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்விஓர்க் கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருளை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே; ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந் தன்றே; ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு

வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்:
விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை; உக்கம் சேர்த்தியது ஒருகை;
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசைஇயது ஒருகை;
அங்குசம் கடாவ ஒருகை, இருகை
ஐயிரு வட்டமொடு எஃகுவலந் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய, ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, ஒருகை
பாடின் படுமணி இரட்ட, ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட - ஆங்கப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்இயம் கறங்கத் திண்காழ்
வயிர்எழுந்து இசைப்ப வால்வளை ஞரல
உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்புஆ றாக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே; அதா அன்று.

## 3. திருவாவினன் குடி

சீரை தைஇய உடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்,
மாசுஅற இமைக்கும் உருவினர், மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்புஎழுந்து இயங்கும் யாக்கையர், நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர், இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்

கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினம் கடந்த காட்சியர், இடும்பை
யாவதும் அறியா இயல்பினர், மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசில் தூஉடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்நரம்பு உளர,
நோய்இன்று இயன்ற யாக்கையர், மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர், அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர், இன்நகைப்
பருமம் தாங்கிய பணிந்துஏந்து அல்குல்
மாசில் மகளிரொடு மறுஇன்றி விளங்கக்
கடுவொடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிற்று
அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்அணி நீள்கொடிச் செல்வனும், வெள்ஏறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்,
நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக

ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்
பகலில் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீ இயர்
மீன்பூத் தன்ன தோன்றலர், மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர். வளியிடைத்
தீஎழுந் தன்ன திறலினர், தீப்பட
உரும்இடித் தன்ன குரலினர், விழுமிய
உறுகுறை மருங்கின்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாஇல் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவி னன்குடி அசைதலும் உரியன்; அதாஅன்று.

## 4. திருவேரகம்

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமை நல்லியாண்டு
ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதுஅறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து
ஆறுஎழுத்து அடுக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கின் நவிலப் பாடி,
விரைஉறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்; அதாஅன்று.

## 5. குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்காய் இடைஇடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்,
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடுஅமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர,
விரல்உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வால்இணர் இடைஇடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ,
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன், சிவந்த ஆடையன், செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்,
கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்,
குழலன், கோட்டன், குறும்பல் இயத்தன்,
தகரன், மஞ்ஞையன், புகரில் சேவலம்
கொடியன், நெடியன், தொடிஅணி தோளன்,
நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்,
முழவுஉறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே; அதாஅன்று.

## 6. பழமுதிர் சோலை மலை

சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீ இ
ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்,
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்,
வேலன் தைஇய வெறிஅயர் களனும்,
காடும், காவும், கவின்பெறு துருத்தியும்,
யாறும், குளனும், வேறுபல் வைப்பும்,
சதுக்கமும், சந்தியும், புதுப்பூங் கடம்பும்,
மன்றமும், பொதியிலும், கந்துடை நிலையினும்,
மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பி ஐதுஉரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுஉடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணைஅற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நல்நகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழ்இசை அருவியொடு இன்னியம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்
ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்

கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே;
ஆண்டாண்டு ஆயினும் ஆக, காண்தக
முந்துநீ கண்டுழி முகன்அமர்ந்து ஏத்திக்
கைதொழுஉப் பரவிக் காலுற வணங்கி,
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ,
ஆல்கெழு கடவுட் புதல்வ, மால்வரை
மலைமகள் மகனே, மாற்றோர் கூற்றே,
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ,
இழைஅணி சிறப்பிற் பழையோள் குழவி,
வானோர் வணங்குவில் தானைத் தலைவ,
மாலை மார்ப, நூலறி புலவ,
செருவில் ஒருவ, பொருவிறல் மள்ள,
அந்தணர் வெறுக்கை, அறிந்தோர் சொல்மலை,
மங்கையர் கணவ, மைந்தர் ஏறே,
வேல்கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ,
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ,
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே,
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக,
நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபே ராளு,
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்.
மண்டமர் கடந்தநின் வென்றுஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்.
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்,

சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி,
போர்மிகு பொருந, குரிசில், எனப்பல
யான்அறி அளவையின் ஏத்தி, ஆனாது,
நின்அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்
நின்அடி உள்ளி வந்தனென்; நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமை யோய்எனக்
குறித்தது மொழியா அளவையிற் குறித்துடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறுஅயர் களத்து வீறுபெறத் தோன்றி,
அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெரும,நின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி,
அஞ்சல் ஓம்புமதி, அறிவல்நின் வரவுஎன
அன்புடை நன்மொழி அளைஇ, விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகித் தோன்ற, விழுமிய
பெறல்அரும் பரிசில் நல்குமதி; பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆர முழுமுதல் உருட்டி வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர ஊகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்

இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

---

## வெண்பாக்கள்

### பயன்

எந்தக் கடவுளுடைய துதியாக இருந்தாலும் அதற்கு ஒரு பயனைச் சொல்வது மரபு. வடமொழியில் அதைப் பலசுருதி என்று சொல்வார்கள். தமிழில் சில துதி நூல்களுக்குப் பயன் கூறப்பட்டிருக்கும். திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்களில் ஒவ்வொன்றுக்கும் பயன் உண்டு. பதிகத்தின் இறுதிப் பாட்டாகிய திருக்கடைக்காப்பில், 'இதனை ஓதுவார் இன்ன பயனைப் பெறுவார்' என்று சம்பந்தப் பெருமானே பாடியுள்ளார்.

"அருநெறியமறை வல்ல முனியகன்
பொய்கை யலர்மேய
பெருநெறியபிர மாபுர மேவிய
பெம்மா னிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர் ஞானசம்
பந்த னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை
தீர்தல் எளிதாமே."

என்பதுபோல வரும் திருக்கடைக்காப்புப் பாசுரங்களைப் பார்த்தால் இது விளங்கும். எல்லா நூல்களிலும் பயன்கூறும் பாடல்கள் இல்லாவிட்டாலும் சிலவற்றில் இருக்கின்றன.

நூல்களைப் பாராயணம் செய்யும் அன்பர்கள் இறுதியில் பயனைச் சொல்வது ஒரு பழக்கம். திருமுருகாற்றுப் படை இந்த நாட்டில் பல காலமாகப் பாராயண நூலாக இருந்து வருகிறது. அதைப் பாராயணம் செய்த அன்பர்கள் அதற்குப் பயனாகச் சில கவிகள் இருந்தால் நலமாக இருக்கும் என்று எண்ணினார்கள். பக்தி கனிந்த உள்ள முடைய புலவர் ஒருவர் சில வெண்பாக்களை இயற்றிப் பலருக்கும் கூறினார். பிறகு எல்லாரும் திருமுருகாற்றுப் படையைப் பாராயணம் செய்து முடித்தவுடன் அந்த வெண்பாக்களையும் சேர்த்து ஓதும் வழக்கம் வந்தது.

## புராணக் கதை

இந்தப் பாடல்களை நக்கீரரே பாடினாரென்றும் அவ்வாறு பாடுவதற்கு ஒரு காரணம் உண்டென்றும் பழைய திருவிளையாடற் புராணத்தில் உள்ள வரலாறு கூறுகிறது. திருமுருகாற்றுப்படையை, ''பழமுதிர் சோலை மலைகிழவோனே'' என்று நக்கீரர் பாடி முடித்தவுடன் முருகன் தோன்றிப் பூதத்தை வேலால் சங்காரம் செய்து நக்கீரர் முதலியோரை விடுதலை செய்தான். பிறகு, ''நம்மைக் கிழவன் என்று கூறினையே!'' என்று சொல்லி மறைந்தானாம். உடனே நக்கீரர், ''குன்றம் எறிந்தாய்'' என்று பாடத் தொடங்கி, ''என்றும் இளையாய் அழகியாய்'' என்று பாடினார். உடனே முருகன் அநுக்கிகம் செய்து, ''இந்த நூலை யார் பாராயணம் செய்கிறார்களோ அவர்களுக்கு வேண்டிய வரங்களை வழங்குவோம்'' என்று அருள, நக்கீரர் மீண்டும் மதுரையை அடைந்தாராம். இந்தச் செய்தியைக் கூறும் பாடல்கள் வருமாறு:

''உயர்வற உலகம் உவப்பஎன் றெடுத்தாங்
கொண்டமிழ்த் தண்டலம் உவப்ப

வியனுற உரைப்பக் கேட்டலும் அடைந்து
வெற்பகம் திறக்கவேல் விட்டு
நயனொடும் எடுத்து வினைகள்தீர்த் தருளும்
நன்சுனை காட்டிநீ ராட்டி
அயிலுடை நம்மைக் கிழவனென் றனையென்
றாலயத் தடைந்தனன் காண."

"இனிதொர்கவி குன்றமெறித் தாயெ னப்பின்
என்றும்இளை யாய்அழகி யாய்என் னுங்கால்
மனமகிழ்ந்தீ தியார்பகர்வார் அவர்க்கு வேண்டும்
வரங்கொடுப்போம் மதுரையிற்போ கென்னப்போந்து
கனமலிசங் கத்துரைப்பக் கேட்டி யாரும்
களிகூர்ந்தார் தமிழ்முருகன் அருளைவாழ்த்திப்
பனுவல்திரு முருகாற்றுப் படையென் றோங்கிற்
றெனநயந்து."

இவ்வாறு பழைய திருவிளையாடற் புராணம் திருமுருகாற்றுப்படை தோன்றிய வரலாற்றை வேறுபடக் கூறும்.

"பழமுதிர் சோலை மலைகிழவோனே" என்று திருமுருகாற்றுப்படை முடிகிறது. அங்குள்ள 'கிழவோனே' என்னும் சொல்லை எண்ணியே இந்த வரலாறு எழுந்திருக்க வேண்டும். இடையிலும், "விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ" என்று ஓரடி வருகிறது.

கிழவன் என்ற சொல்லுக்கு முதியவன் என்ற பொருள் பழங்காலத்தில் இல்லை. அது பிற்காலத்தில் தோன்றியது. தொல்காப்பியத்திலும் சங்க நூல்களிலும் அச்சொல் உரிமையுடையவன் என்ற பொருளில்தான் வருகிறது. கிழமை - உரிமை, நட்பு. காதலுடைய கணவனைக் கிழவன் என்று கூறுவர். இதை முன்பும் பார்த்தோம்.

பிற்காலத்தில் கிழவன், கிழவி என்னும் சொற்கள் முதுமையையுடையவர்களைக் குறிக்கும் சொற்களாகவும் வழங்கத் தொடங்கின. பழைய திருவிளையாடலைப் பாடியவர் காலத்தில் அந்தப் பொருள் வந்துவிட்டது. அதனால் இந்த வரலாற்றை அமைத்தார். சில திருவிளை யாடற் புராணப் பிரதிகளில் இந்தப் பாடல்கள் இல்லை என்று அதனைப் பதிப்பித்த டாக்டர் ஐயரவர்கள் எழுதி யிருக்கிறார்கள்.

அருணகிரிநாதர் காலத்துக்கு முன்பே கிழவன் என்பதற்கு முதியவன் என்ற பொருள் வந்துவிட்டது. ஆதலின் 'இளங் குழந்தையாகிய முருகனைக் கிழவனென்று கூறுகிறதே உலகம்' என்று நயமாக ஒரு பாடலைக் கந்தர் அலங்காரத்தில் அவர் பாடியிருக்கிறார். அதை முன்பு பார்த்தோம்.

''குன்றம் எறிந்தாய்'' என்று தொடங்கும் வெண்பா முதலாகப் பத்து வெண்பாக்கள் திருமுருகாற்றுப்படைக்குப் பின்னே காணப்படுகின்றன. பத்துப் பாட்டைப் பதிப்பித்த ஐயரவர்கள் இந்த வெண்பாக்களையும் பதிப்பித்துள்ளார்கள். அங்கே அவர்கள் எழுதியுள்ள குறிப்பு ஒன்று உண்டு. 'அடியில் உள்ள பாடல்கள், பத்துப் பாட்டும் சேர்ந்துள்ள பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லாமல் திருமுருகாற்றுப் படை மட்டும் உள்ள புதிய ஏட்டுப் பிரதிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் இருந்தமையால் தனியே பதிப்பிக்கப் பெற்றன' என்பது அது.

ஆகவே, இந்தப் பாடல்கள் பழைய பிரதிகளில் இல்லையென்று தெரிய வருகிறது. அதனாலும் இவற்றின் நடை, உள்ளுறை ஆகியவற்றாலும் இவை பிற்காலத்தில் எழுந்தவை என்பது தெளிவாகும்.

இவை காலத்தினால் பிற்பட்டவை என்பதனால் இவற்றின் மதிப்புக் குறையாது. பக்திச் சுவை செறிந்த

பாடல்கள் இவை; கேட்பவர்களின் மனத்தை உருக்கும் வகையில் அமைந்தவை. ஆதலின் இவற்றைத் திருமுருகாற்றுப்படையோடு சேர்த்துப் படிப்பதனாலும் பாராயணம் செய்வதனாலும் நன்மை உண்டாகும். இவ்வாறு மூலநூல் செய்த ஆசிரியர் வேறாகவும், பயன் கூறும் ஆசிரியர் வேறாகவும் இருப்பது புதிதன்று.

இந்தப் பத்துப் பாடல்களில் முருகனை முன்னிலைப் படுத்தியும் படர்க்கையாக வைத்தும் பாடும் பாடல்கள் இருக்கின்றன. 9-ஆவது வெண்பா திருமுருகாற்றுப் படையைப் 'பூசையாக் கொண்டே புக'லும்படியும், 10-அம் பாடல் இதனை ஓதினால் வரும் பயனையும் கூறுகின்றன.

## 1. உள்ளத்தில் உறை

இனி அந்த வெண்பாக்களைப் பார்க்கலாம்.

குன்றம் எறிந்தாய்! குரைகடலில் சூர்தடிந்தாய்!
புன்தலைய பூதப் பொருபடையாய்! - என்றும்
இளையாய்! அழகியாய்! ஏறூர்ந்தான் ஏறே!
உளையாய்என் உள்ளத் துறை.

(கிரவுஞ்ச மலையை வேலை வீசி எறிந்து அழித்தவனே, ஒலிக்கின்ற கடலிலே புகுந்து மறைந்த சூரபதுமனைக் கொன்றவனே, சிவந்த தலையையுடைய பூதங்கள் நிறைந்த, போர் செய்யும் படைகளை உடையவனே, என்றும் மாறாத இளமையையுடையவனே, என்றும் மாறாத அழகையுடையவனே, இடப வாகனத்தில் ஊரும் சிவ பெருமானுக்கு ஆண் சிங்கம் போன்ற மைந்தனே, நீ என்றும் என் மனத்தே இருக்கும் துணையாக எழுந்தருளுவாயாக.

எறிதல் - அழித்தல். சூர் - சூரன். புன்தலை - செம் மயிரையுடைய தலை. என்றும் என்பதை அழகனாய்

என்பதனோடும் கூட்டிப் பொருள் செய்க. உளை - உள்ளாய். உலையாய் உள்ளாயாகி. உறை - தங்குவாயாக.)

முருகனுடைய வீரத்தையும் அழகையும் பாராட்டும் பாடல் இது. 'குன்றமெறிந்த குமரவேள்' என்று குறிப்பிடுவது பண்டையாசிரியர் வழக்கம். அவன் கிரவுஞ்சாசுரனை வேலாற் பொடியாக்கிப் பிறகு கடலில் மாமரமாக மறைந்து நின்ற சூரனைக் கொன்றான். ஒரே சமயத்தில் குன்றத்தையும் சூரனையும் முருகனுடைய வேல் பிளந்தது என்று ஒரு வழக்கு உண்டு.

முருகன் பூதப்படையை உடையவன். அருணகிரி நாதர் பூத வேதாள வகுப்பில் அதைச் சொல்கிறார். சிவபிரான் பூதப் படையை உடையவன்; ''பூதஞ்சூழப் பொலிய வருவார்'' என்பது தேவாரம். முருகனும் அவ்வாறே பூதங்களால் சூழப்பெற்றவன்.

முருகன் என்ற பெயரே அழகும் இளமையும் உடையவன் என்ற பொருளையுடையது. அவனுடைய இளமையும் அழகும் என்றும் அழியாதவை. ''என்று மகலாத இளமைக்கார'' என்று அருணகிரிநாதர் பாடுவார். அப்ராக்ருதமான சௌந்தர்யமாதலின் அது என்றும் அழியாததாயிற்று.

சிவபெருமான் ஏற்றின்மேல் ஊர்ந்து வருகிறான். அவனுடைய மைந்தன் முருகன். சிங்கக் குட்டி போன்ற மைந்தன், ஆதலால் 'ஏறூர்ந்தான் ஏறே' என்றார்.

பக்தியினால் முருகனைத் தியானிப்பவர்கள் யாவரும் அவனுடைய திருவுருவ தரிசனம் பெறுவதில்லை. அவனே அருள் கொண்டு தன் உருவைக் காட்டினால் காணலாம். ''காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே'' என்பது அப்பர் திருவாக்கு. அவன் அப்படிக் காட்டும் போது

மின்னற்கீற்று அடித்தது போலத் தோன்றி மறைந்தால் பயன் இல்லை; என்றும் உள்ளமே கோயிலாகக் கொண்டு தங்கிவிட வேண்டும்.

சில செல்வர்கள் பல இடங்களுக்குப் போவார்கள். அப்படிப் போகின்ற இடங்களில் மாளிகைகள் இருக்கும். அங்கெல்லாம் அவர்கள் வருவார்கள், தங்குவார்கள், போய்விடுவார்கள். ஆனால் அவர்கள் நிரந்தரமாகத் தங்கியிருக்கும் மாளிகை அவர் சொந்த ஊரில் இருக்கும். 'என் உள்ளத்தைச் சில காலம் தங்கும் இடமாகக் கொள்ளாமல், எப்போதும் இங்கே இருக்கிறவன் என்று சொல்லும்படி தங்கியிருக்க வேண்டும்' என்று வேண்டிக் கொள்ளுகிறார். 'இங்கேயே இருக்கிறவன் நீ என்று சொல்வதற்கேற்றவனாய் என் உள்ளத்தில் உறைய வேண்டும்' என்கிறார். உளையாய் - உள்ளாயாகி.

என்றும் இளமையும் அழகும் வீரமும் கொண்ட வனாக முருகன் திருக்கோலம் கொண்டதே அன்பர்களின் மனத்தில் தியான மூர்த்தியாக உறையத்தான். ஆகவே அவனுடைய திருக்கோலத்தை எண்ணி, என் உள்ளத்தில் உறை என்றார்.

## 2. வீரன் கைவேல்

என்றும் இளையபிரானை நோக்கி, ''என் உள்ளத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும்'' என்று வேண்டிய அன்பர், மேலே முருகன் திருக்கையில் உள்ள வேலாயுதத்தைப் பற்றிச் சொல்ல வருகிறார். மூன்று வெண்பாக்களில் வேலைப் பற்றியே கூறுகிறார்.

முருகன் வேற்படையை எறிந்தே தான் ஆற்றிய வீரச் செயல்களில் பெரும்பாலானவற்றைப் புரிந்தான். அவன் கிரவுஞ்ச மலையைப் பொடிப்பொடி யாக்கினான். அவனுடைய திருக்கை வேலே அந்தக் காரியத்தைச் செய்தது.

மாயையின் மகனாகிய சூரனையும் அவனுடன் சேர்ந்திருந்த அசுரர்களையும் வலி குன்றும்படி போரிட்டதும் அந்தத் திருக்கை வேல்தான். அறியாமை அல்லது அஞ்ஞான மயமாக நின்றவர்கள் அசுரர்கள். வேலோ ஞான சக்தி. அஞ்ஞான சக்தியை அழிப்பதற்கு ஞான சக்திக்குத்தான் வலிமை இருக்கிறது. ஆதலின் அஞ்ஞானப் பரப்பாகிய அசுரர்களோடு செய்த போரில் வேல் அவர்களை அடியோடு அழித்து வெற்றியுடன் விளங்கியது.

சூர சங்காரம் நடந்தது மிகப் பழைய காலம். அந்தப் பண்டைக் காலத்தில் வீரச் செயல்களை ஆற்றிய வேல், தன்னுடைய ஆற்றலால் அமரர்களுக்கு வந்த இடர்களை யெல்லாம் களைந்தது. தங்கள் நாட்டையும் வீட்டையும் பதவியையும் இழந்து, அசுரேந்திரனாகிய சூரனுக்கும் அவனுடைய ஏவலர்களுக்கும் அஞ்சி நடுங்கினார்கள் தேவர்கள். அசுரர்களால் அவர்கள் பட்ட இன்னல் கொஞ்ச நஞ்சம் அல்ல. முருகனுடைய வேல் அசுரர்களைக் கட்டழித்ததனால் அமரர்களின் இடர்கள் தீர்ந்தன.

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங்கு அமரர்இடர் தீர்த்ததுவும்... வேல்.

இது பழைய கதை, ஆனால் அந்த வேல் இன்றும் தொழிற்படுகிறது; பக்தர்களுக்குப் பாதுகாப்பாக நின்று உதவுகிறது.

''துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும் எனக்கொர்துணை யாகும்.''

என்று அருணகிரியார் வேலைப் பாராட்டுவார். அடியார் களுக்கு வேல் துணையாக விளங்குவது.

''தனித்துவழி நடக்குமென திடத்துமொரு வலத்துமிரு
புறத்துமரு கடுத்திரவு பகல்துணைய தாகும்.''

என்பதும் அருணகிரியார் வாக்கு. அன்பர்களை விட்டு நீங்காமல் உடனிருந்து துணை செய்வது வேல்.

நக்கீரர் முதலிய ஆயிரம் பேரைக் குகையில் அடைத்து வைத்தது கற்கிமுகி என்ற பூதம். நக்கீரர் திருமுருகாற்றுப் படை பாடியவுடன் முருகன் வேலாயுதத்தை ஏவினான். அது பூதத்தைக் கொன்று குகையை இடித்து அதில் சிறைப்பட்ட வர்களுக்கு விடுதலை வழங்கிப் காப்பாற்றியது.

"பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்குமொரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குகையை இடித்துவழி காணும்"

என்பது வேல் வகுப்பு.

– இன்றுஎன்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
... வேல்

முருகன் பெருவீரன். அவன் கையில் இருப்பதனால் தான் வேலுக்கு இத்தனை பெருமை உண்டாயிற்று. படைக்கலம் சிறந்ததாக இருந்தால் போதாது. அதை ஏந்துகிறவர்கள் விறலுடையவர்களாக இருக்க வேண்டும்.

"வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு"

என்று கேட்கிறார் திருவள்ளுவர். வல்லவனாக இருந்தால் அவன் கையில் எந்த ஆயுதம் அகப்பட்டாலும் அது சிறப்படையும். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பது அதைத்தானே சொல்கிறது? வீரனாகிய முருகன் கையில் இருப்பதனால் வேலுக்குப் பெருமை உண்டாயிற்று. முருகன் சத்தியமே வடிவானவன். சத்தியம் அவனை விட்டு நீங்காது. அவன் விடும் வேல் உறுதியாகப் போய் வைரிகளை அழிக்கும்.

மெய்விடா வீரன்கை வேல்

இப்படிப் பழைய கதையையும் புதிய கதையையும் இணைத்து வேலின் பெருமையைப் புலப்படுத்துகிறார் புலவர்.

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங்கு அமரர்இடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்.

(கிரவுஞ்சமென்னும் மலையை எறிந்து அழித்ததும், அசுரர்களின் வலிமையெல்லாம் குறைந்து அழியப் போர் செய்ததும், அந்தப் பழங்காலத்தில் தேவர்களுடைய இன்னல்களைப் போக்கியதும், இன்றைக்கு என்னைக் கைவிடாமல் பாதுகாத்து நின்றதும், மலைக் குகையில் நக்கீரர் முதலியவர்களைக் காத்ததும், மெய்யை அகன்று நில்லாத வீரனாகிய முருகனுடைய திருக்கரத்தில் உள்ள வேல்.

குன்றம் - கிரவுஞ்சமலை. அன்று: பண்டறி சுட்டு. கைவிடாது என்பது விகாரமாயிற்று. பொதும்பு - குகை.)

## 3. கொற்ற வேல்

இன்னும் அந்த வேல் எத்தகையது?

அது வீரத்துக்கு இருப்பிடமான ஆயுதம்; வீரர்கள் சிறப்பாகக் கைக்கொள்ளும் படைக்கலம்; வீரத்துக்கே அறிகுறியானது. படைக்கலன்களில் சிறந்தவை வில், வாள், வேல் என்பவை. அந்த மூன்றிலும் சிறந்தது வேல்.

வேலின் நுனியில் இலை இருக்கும். அதற்கு நீண்ட காம்பு இருக்கும். ஆகவே அது நெடுவல்; தாரைவேல்.

சூரன் தேவர்களைச் சிறையில் இட்டான். அவனையும் அவனுடன் துணையாக நின்ற அசுரர்களையும் அழித்துத் தேவர்களை மீட்ட அருஞ்செயலைச் செய்தது அந்த வேல்.

முருகன் செவ்வண்ண முடையவன். வேள் என்னும் பெயர் மாரனுக்கும் குமாரனுக்கும் பொதுவான பெயர். மாரனுடைய நிறம் கருமை; அவன் கருவேள். குமாரன் செந்நிறம் படைத்தவன்; அவன் செவ்வேள். அவனுடைய திருக்கரத்தில் உள்ள அழகிய வேல் இது.

சூரபதுமன் கடலிலே மறைந்து போனான். அப்போது அந்தக் கடலில் வேலை விடுத்தான் முருகன். கடல் நீரைச் சுவறச் செய்துவிட்டது வேல். சூரன் தோன்றினான். முதலில் கடல் நீரிலே குளித்து நின்றது அவ்வேல். வேல் சென்ற இடமெல்லாம் வெற்றியை நிலைநாட்டும்; ஆதலின் வெற்றிவேல் என்றே அதை வழங்குவர்.

வீரவேல், தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல், செவ்வேள் திருக்கைவேல், - வாரி
குளித்தவேல், கொற்றவேல்.

பழைய காலத்தில் வழங்கிய கதை ஒன்று உண்டு. சூரன் தனக்கு அரணாக ஒரு மலையை மேற்கொண்டு அதனுள்ளே புகுந்து எங்கும் திரிந்தான் என்றும், முருகன் தன் வேலை வீசிக் குன்றும் சூரன் மார்பும் ஒருங்கே ஊடுருவும்படி துளைக்கச் செய்தான் என்றும் அந்தக் கதையிலிருந்து தெரிய வருகிறது.

"..... கார்வந்து
உறங்குசிகைப் பொருப்பும்சூர் உரப்பொருப்பும்
பிளப்ப...
மறங்குலவு வேல்எடுத்த குமரவேள்."

என்பது திருவிளையாடற் புராணம். கிரவுஞ்சமாகிய மலையையும் சூரனுடைய மார்பாகிய மலையையும் ஒருங்கே

பிளந்தது வேல் என்ற கருத்தை இதிற் காணலாம். 'சூர்மார்பும் குன்றும் துளைத்த வேல்' அது. இத்தகைய சிறப்புடைய வேல் நமக்குத் துணையாக இருக்கிறது. இனி நமக்குப் பயம் ஏது?

வீரவேல், தாரைவேல், விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல், செவ்வேள் திருக்கைவேல், - வாரி
குளித்தவேல் கொற்றவேல், சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை.

(வீரத்தையுடைய வேல், நீட்சியையுடைய வேல், தேவர்களின் சிறையை மீட்ட தீரத்தையுடைய வேல், செய்ய நிறமுடைய முருகப்பெருமான் திருக்கரத்தில் உள்ள வேல், கடலில் குளித்துச் சூரனைத் தேடிய வேல், வெற்றி தரும் வேல், சூரனுடைய மார்பையும் கிரவுஞ்ச மலையையும் ஒருங்கே துளைத்த வேல் நமக்குத் துணையாக இருக்கிறது.

தாரை - நீட்சி. வாரி - கடல். கொற்றம் - வெற்றி.

வேல் சடமானாலும் வீரம் முதலிய பண்புகளை அதன் மேல் ஏற்றிச் சொன்னது இலக்கணை.)

## 4. இடும்பைக் குன்று

மனிதனுக்கு ஓயாத கவலை; ஒழியாத துன்பம். அவனுடைய துன்பத்துக்கு ஒரு கணக்குப் போட்டுப் பார்ப்பதென்பது இயலாத காரியம். ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம்; அவனுடைய துன்பத்தை எண்ண முடியாது. அது குவியல் குவியலாக அடர்ந்து நிற்கிறது. நாளாக ஆகத் துன்பம் கரைந்து போகும் என்ற எண்ணத்துக்கும் இடம் இல்லை. தீர்க்காத கடன் வட்டியும் முதலுமாக ஏறிக்கொண்டு போகிறது போலத் துன்பம் மலையாக உயர்ந்து அழுத்துகிறது.

மனிதன் பிறந்து குழந்தையாக விளையாடும்போது துன்பம் அதிகம் இருப்பதில்லை. அவனுக்கு வேண்டியவற்றை அவன் தாய் தந்தையர் அளித்து வளர்க்கிறார்கள். அவனோ குருவி போல அடுத்த வேளைக்கு இது வேண்டுமே என்ற கவலையே இல்லாமல் விளையாடித் திரிகிறான், குழந்தைகளுக்குப் பொறுப்பு இல்லை; கவலை இல்லை; குறை இல்லை; வஞ்சகம் இல்லை; ஆகவே துன்பம் குறைவு. மனிதனுக்கு வயசு ஆக ஆக அவனைத் துன்பங்கள் சூழ்ந்து கொள்கின்றன. வரவர அவனுக்குப் பல உறவினர்களும் நண்பர்களும் உண்டாகி விடுகிறார்கள். அதனால் தனக்காக அவன் படும் துன்பங்களோடு அவர்களுக்காக வேறு துன்பங்களை அடைய வேண்டி நேர்கிறது. உடைமைகளைச் சேர்த்துக் கொள்கிறான். அவற்றாலும் துன்பம் மண்டுகிறது. எத்தனைக்கு எத்தனை பிறரோடும் பிற பொருளோடும் தொடர்பு வைத்துக் கொள்கிறானோ, அத்தனைக்கு அத்தனை அவனுக்குத் துன்பங்களே வந்து சூழ்கின்றன. இருக்கும் பொருள்களைக் காப்பாற்ற வேண்டுமே என்ற துன்பம்; அவை பழுதுபட்டால் செப்பம் செய்ய வேண்டுமே என்ற கவலை, இல்லாத பொருள்களுக்காக ஏங்கி நிற்பது ஒரு துன்பம்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்."

என்பார் திருவள்ளுவர். தொடர்பு அற அறத் துன்பமும் அறும், தொடர்பு மிகுதி ஆக ஆகத் துன்பமும் மிகுதியாகும்.

ஆகவே ஒவ்வொரு நாளும் மனிதனை அழுத்து வதற்குத் துன்பங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. அவற்றை நீக்க வழி என்ன? மலைபோலத் துன்பங்களைத் தாங்கிக் கொண்டு திணறும் அவல நிலையை மாற்ற உபாயம் இல்லையா?

துன்பம் என்பது மனத்தில் உண்டாகும் உணர்வு. இன்பமும் அத்தகையதே. பல பற்றுக்களை உடைய மனம் கவலைக்கு ஆளாவது இயல்பு. அறியாமையினால் இந்தப் பற்று உண்டாகிறது. அறியாமை அல்லது அஞ்ஞானம் ஒழிந்தால் மனத்திலே கவலை நில்லாது.

"இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை."

என்ற நிலை உண்டாகும். அஞ்ஞானத்தைப் போக்கி விட்டால் கவலை ஒழியும், துன்பம் நீங்குமென்றால் அதைப் போக்கும் வழி யாது என்று ஆராய வேண்டும்.

அஞ்ஞானம் அறியாமை. அதற்கு மாற்று ஞானம் அல்லது அறிவு. மெய்யறிவு தலைப்பட்டால் மனம் தெளிவு பெறும்; பற்றற்று நிற்கும்; கவலை ஓயும்; இன்பம் பாயும். இறைவன் திருவருளால் அந்த ஞானம் வர வேண்டும். அது அஞ்ஞானக் குவியலைப் போக்கி விடும்; இடும்பை மலையை எரித்து விடும்.

முருகப் பெருமானுடைய திருக்கையில் இருப்பது வேற்படை. அது ஞானத்தின் திருவுருவம்; ஞானசக்தி; நீண்டு அகன்று கூர்மையாக உள்ள அறிவின் அடையாளம். அசுரர்கள் அவிச்சை அல்லது அறியாமையின் உருவம். அறியாமையை இருள் என்றும் கூறுவர். இருளில் பொருள்களின் வடிவமும் வண்ணமும் தெரியாமல் இருப்பது போல, அறியாமை காரணமாக உண்மை புலனாகாமல் இருக்கும். இருளிலே செயல் புரிபவர் அசுரர்கள்; நிசாசரர்கள் என்பது அவர்களுக்குப் பெயர். அவர் உடல் கறுப்பு; உள்ளம் கறுப்பு; செய்கை கறுப்பு. அவர்களுக்குரிய காலம் ஒளியில்லா இரவு. முருகனுடைய வேல் அசுரர்களை மாய்த்தது; இது புறத்தே அமைந்த வீரச் செயல். அறியாமையை அழித்துத் தூய இன்பத்தை நிலை நாட்டும் ஞானமாதலின் ஒளியுடைய வேலாக நிற்கிறது.

அதைத் தியானித்தால் நெஞ்சில் இருள் போகும்; கவலை நீங்கும்; துன்பம் ஒழியும்.

இதைப் புலவர் சொல்ல வருகிறார்.

''முருகா, நீ அறியாமையே வடிவான அசுரர்களை ஞான சக்தியாகிய வேலாலே பொடிபடுத்தினாய். கொலையேயன்றி வேறு செய்தறியாத ஆயுதத்தைச் சூரன் கையில் வைத்திருந்தான். அவன் படை ஒளியற்றது. அவனை நீ தடிந்தாய். அவன் அகங்கார வடிவாக நின்றவன். அவனுக்குத் துணையாக மமகார வடிவமாக நின்றவன் மலையுருவம் கொண்ட கிரவுஞ்சாசுரன். கிரவுஞ்ச மலையை நீ வேல் கொண்டு பிளந்தாய். அது மாயமான மலை; பெரிய மலை; வன்மையான மலை. அதைப் பொடிபடுத்திய வேல் இப்போது உன் கையில் ஒரு வேலையும் இல்லாமல் இருக்கிறதே! அதற்கு ஒரு சிறு வேலை தருகிறேன். அதை நீ ஏவியருளவேண்டும். தேவர்கள் அஞ்சிய பெரிய மலையைப் பொடிபடுத்திய அதற்கு நான் சொல்லும் குன்றை அழித்தல் மிகவும் எளிய செயல். நீ உன் கை வேலை ஏவி இந்தக் குன்றையும் அழிப்பது உன் கருணைக்கு ஏற்ற செயல்; எளிய செயல். எனக்கோ இதனால் பெரிய நன்மை உண்டாகும். அது என்ன குன்று என்றா கேட்கிறாய்? என்னுடைய துன்பமென்னும் குன்றைத்தான் சொல்கிறேன். இதைப் போக்க என்னால் முடியவில்லை. வேறு யாராலும் இதை அழிக்க முடியாது. மலையைப் பொடியாக்கிய உன் கை வேலுக்கே இது தக்க செயல். ஆகவே சூர்தடிந்த கொற்றவனே! கிரவுஞ்சமலை உருவும்படி நீ விட்ட வேலை என் இடும்பைக் குன்றின்மேல் ஏவுவது மிகவும் பொருத்தமான காரியம். இதைச் செய்தருளி என்னைத் துன்பத்தினின்றும் விடுவித்துப் பாதுகாக்க வேண்டும்.''

இப்படி வேண்டிக் கொள்கிறார்.

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்குக்
கொன்னவில்வேல் சூர்தடிந்த கொற்றவா! - முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

(கொலையே பயின்ற ஆயுதத்தை உடைய சூரபன்மனைச் சங்காரம் செய்த பெருமானே! முன்பு பனியாலே மூடப்பெற்ற உயர்ந்த கிரவுஞ்ச மலையில் புகுந்து உருவும்படி ஏவிய ஒப்பற்ற வேலை, இன்னும் ஒருமுறை என்னுடைய துன்பமாகிய குன்றை ஒழிப்பதற்கு விடுவது தக்க செயலாகும்.

இடும்பை - துன்பம். கொல் நவில் வேல் - கொலையே பயின்ற வேல். வேல் என்பது இங்கே ஆயுதத்தைக் குறித்தது; வேற்படை என்றும் சொல்லலாம். சூர் - சூரபன்மன். தடிந்த - அழித்த. நெடுங்குன்றம் - உயர்ந்த மலையாகிய கிரவுஞ்சம். தொட்ட - வீசிய. தனி - ஒப்பற்ற. வாங்கத்தகும் - வாங்கினால் அச்செயல் மிகவும் பொருத்தமானதாக இருக்கும். அந்த மலையைப் பிளந்த வேலுக்கு இந்தக் குன்றைப் பிளப்பது ஏற்புடையது என்றபடி.)

முருகனுடைய திருவருளால் அறிவு பெற்றுத் தெளிவு உண்டானால் கவலையும் துன்பமும் நீங்கும். இருள் நிறைந்த மனத்திலே கப்பிக் கொண்ட துன்பங்களைப் போக்க நம் உள்ளத்தில் அவன் திருக்கை வேலை அவனருளால் தியானம் செய்ய வேண்டும் என்பது கருத்து.

## 5. பன்னிருகைப் பெருமாள்

மனிதன் தன்னுடைய மனக்கவலையைப் போக்கிக் கொள்வதற்கு யார் யாரையோ பின்பற்றி ஏமாந்து போகிறான். தன்னைவிடப் பணக்காரர்களால் தன்னுடைய வறுமை

போகும் என்று நம்பி அவர்களை அணுகுகிறான். ஆனால் அவனுடைய எண்ணம் நிறைவேறுவதில்லை. தன்னைவிடப் பலம் உடையவர்களால் தன்னுடைய பகையச்சம் தீருமென்று அவர்களை அணுகுகிறான். அவர்களும் அவனுடைய அச்சம் முழுவதையும் போக்கும் வலிமை உடையவர்களாக இருப்பதில்லை. கல்வி நிறைந்தவர்களால் தன்னுடைய அறியாமையைப் போக்கிக் கொள்ளலாம் என்று எண்ணி முயற்சி செய்கிறான். அந்த முயற்சியிலும் முழு வெற்றியை அவன் அடைகிறதில்லை. இது மட்டும் அன்று. ஏதேனும் ஒரு பொருளால் தனக்குக் குறைவு இருப்பதை எண்ணி அதை நிறைவு செய்வதற்குத் தன்னைவிட அப்பொருளை மிகுதியாக உடையவனை நாடினால், அவனும் ஒருவகைக் குறைபாடு உடையவ னாகவே இருக்கிறான். குறைவில்லாத நிறைவுடையோனாக யாரையும் காணமுடியவில்லை. ஒவ்வொருவனும் தன்னுடைய குறையை நிரப்பிக் கொள்வதற்குத் தன்னினும் சிறந்த ஒருவனை நாடிக் கொண்டே இருக்கிறான்.

குறைவே இல்லாமல் முழு நிறைவுடன் யாரேனும் இருந்தால் அவனால் நமக்கு வேண்டிய எல்லாவற்றையும் நிரப்பிக் கொள்ளலாம். அறிவு, ஆற்றல், செல்வம் என்னும் மூன்றும் மனிதனுக்கு இன்றியமையாத சக்திகளாகும். இந்த மூன்றினால் தனி மனிதனும் சமுதாயமும் வளம் பெற்று வாழலாம். இவற்றை நிறைவாகப் பெற வேண்டுமானால் குறைவிலா நிறைவையுடைய ஒருவனை அணுக வேண்டும். அப்படி யாராவது இருக்கிறார்களா? ஆம், இருக்கிறான்; ஒரே ஒருவன்தான் இருக்கிறான். அவன் தான் இறைவன்.

'குறைவிலா நிறைவே' என்று மாணிக்கவாசகர் இறைவனைக் கூறுகிறார். அவனுடைய திருவருள் இருந்தால் நம்முடைய மனம் நிறைவு பெறும். மனம் நிறைவு

பெறுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று அதிக ஆசைப்படாமல் இருப்பது; மற்றொன்று இறைவன் திருவருளைப் பெறுதல். மனிதன் தன்னுடைய உள்ளத்தில் ஆசையை வளர்த்துக்கொண்டே வந்தால் அதனை அடக்குவது எளிதன்று. ஆசை என்பது பெரிய தீ. அதற்கு இரை போடப் போட அது மேலும் மேலும் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டேயிருக்கும். ஆதலால் அதைக் கட்டுப் படுத்தி வைக்கவேண்டும். நமக்கு எது இன்றியமையாததோ அதைப் பெறுவதற்கு விரும்புவது தவறு அன்று. அளவுக்கு மிஞ்சிப் பொருளை அவாவினால் அது நிறைவேறாது. இறைவனுடைய திருவருளில் நம்பிக்கை உள்ளவன் தனக்கு வேண்டியதை அளவோடே பெற விரும்புவான். இறைவன் அவனுடைய நியாயமான விருப்பத்தை அறிந்து நிறைவேற்ற முன்வருவான்.

ஆசையை அடக்குதலும் இறைவனிடம் நம்பிக்கை வைத்துப் பக்தி பண்ணுதலும் குறைவிலா நிறைவு அடைவதற்கும் மனக்கவலை போக்குவதற்கும் உரிய வழிகளாகும்.

> ''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> மனக்கவலை மாற்றல் அரிது''

என்பது திருக்குறள்.

கானல் நீரை நம்புவதுபோலக் குறைவுடைய மனிதர்களை நம்பி வாழ்கிறவர்களுக்கு நிச்சயமாக ஏதேனும் ஒரு சமயத்தில் அவர்களுடைய பலவீனம் புலனாகும். ஆகையால் இறைவனிடம் முழு நம்பிக்கை வைத்து வாழ்வதற்கு முயல வேண்டும். இறைவனே நேரே வந்து நமக்கு உதவி புரிய மாட்டான். அவனுடைய திருவருளால் அவ்வப்போது தக்கவர்களுடைய துணை கிடைக்கும்.

வீட்டில் உள்ள மின்சார மூலப் பொத்தானை அமுக்கினால் விளக்குகளும் மற்றவைகளும் இயங்கத் தொடங்கும். அது அதற்கு ஏற்ற பொத்தானையும் அமுக்க வேண்டும். மூலக் கருவியை இயக்க மறந்துவிட்டால் உள்ளே உள்ள எதனையும் பயன்படுத்திக் கொள்ள முடியாது, இறைவனுடைய திருவருள் மூலக்கருவியைப் போன்றது. மற்ற முயற்சிகள் அங்கங்கே உள்ள பொத்தானை அமிழ்த்துவது போன்றது. இந்த இரண்டுமே மனிதனுடைய முயற்சியைப் பயனுறச் செய்கின்றன. இறைவனுடைய திருவருளில் நம்பிக்கை இல்லாவிட்டால் அவனிடம் மனமாரப் பக்தி செய்யமுடியாது. அவனே எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்வான் என்ற தீவிர நம்பிக்கையுடன் யார் அவனை அணுகுகிறார்களோ அவர்களுக்கு அவனுடைய துணை நிச்சயமாகக் கிடைக்கும்.

'நீயலால் சரண் ஒன்றில்லை' என்று புகும் அன்பர் களுக்கு இறைவன் தன் கருணையை ஒளிக்கமாட்டான்.

இந்த எண்ணங்களை எல்லாம் கொண்ட அன்பர் முருகனிடத்தில் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்;
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்.

தன்னை நம்பினவர்களுக்கு அருள் செய்து துன்பத்தை நீக்கும் பேராற்றல் உடையவன் முருகன். யாரேனும் ஒருவர் நமக்கு உதவி செய்தால், 'கைகொடுத்து உதவினான்' என்று சொல்கிறோம். ஒருவன் பலத்தினாலும் பிறவற்றாலும் சிறந்து நின்றால், 'அவன் கை ஓங்கி நிற்கிறது' என்று சொல்கிறோம். செயல்களைக் காட்டுவதற்குக் கை ஓர் அடையாளம். ஆற்றல் இல்லாதவனைக் 'கையாலாகாதவன்' என்று சொல்லும் வழக்கும் இதனை அறிவிக்கும். நாம்

இரண்டு கைகளை உடையவர்களாக இருக்கிறோம். நம்மினும் பல மடங்கு ஆற்றல் பெற்ற தெய்வங்களுக்கு நான்கு கைகள் இருப்பதைப் பார்க்கிறோம். கைகள் ஆற்றலுக்கு அடையாளம். ஆதலின் ஆற்றல் மிக்க தெய்வங்களின் திருவுருவங்களில் அந்தக் கோலத்தைக் காண்கிறோம்.

முருகனோ பன்னிரண்டு திருக்கரங்களை உடையவன். ஆறு திருமுகங்களைப் பெற்றவன் அவன்; நான்கு திசைகளையும் மேலும் கீழும் ஆகிய இரண்டையும் சேர்த்தால் ஆறு திசைகளாகின்றன. முருகன் அந்த ஆறு திசைகளிலும் கண் ஓட்டத்தைச் செலுத்தும் ஆறு முகங்களை உடையவன். எங்கே எது நிகழ்ந்தாலும் அவனுடைய கண் பார்வைக்கு அகப்படாமல் இருக்க முடியாது என்பதையே இது காட்டும். அதுபோலவே தன்னுடைய திருவருளில் நம்பிக்கை வைத்துத் தன்னை அண்டுகிறவர்கள் எங்கே இருந்தாலும் அவர்களுக்கு உதவி செய்து கை கொடுக்க அவன் முந்துவான். மற்ற எந்தத் தெய்வத் திருக்கோலத்தி லும் இல்லாதபடி பன்னிரண்டு திருக்கரங்களை உடையவன் அவன். அதனால் அவன் ஆற்றல் மிகச் சிறந்தது என்பது தெளிவாகும். அப்படியே பிறருக்கு வழங்கும் வண்மையும் மிகமிகச் சிறப்பானது. ஆகையால் அவனை நம்பினால் எப்படியும் நமக்கு வேண்டியது கிடைக்கும்; இடர் தீரும். அவன் பன்னிருகைக் கோல அப்பன் அல்லவா?

அவன் பேராற்றல் உடையவன் என்பதை அவன் செய்த திருவிளையாடல்களால் உணர்ந்து கொள்ளலாம். எல்லாத் தேவர்களும் தங்களுடைய நிலையை இழந்து துன்புற்று, சிறைப்பட்டு வாடும் நிலை ஒரு சமயம் வந்தது. அறுபத்தாறு கோடி அசுரர்களுக்குத் தலைவனாக, ஆயிரத் தெட்டு அண்டங்களுக்கு அரசனாக, வரத்தினால் பெற்ற வலிமையும் படைகளால் பெற்ற பலமும் நிரம்ப உடையவனாக இருந்தான்

சூரபன்மன். அவனே வானவர் களின் வளங்களைக் கைப்பற்றிக் கொண்டு கொடுமை செய்தான். முருகன் அவனையும் அவனுடைய படைகளை யும் அழித்துத் தேவர்களுக்கு வந்த இன்னல்களைத் தீர்த்தருளினான். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரைத் தேவாசுர யுத்தம் என்று சொல்வார்கள். இதிகாசங் களாலும் புராணங்களாலும் அறியும் பெரும் போர்களில் மிகப் பெரிய போராக இருப்பது இந்தத் தேவாசுர யுத்தம். இதனால் துன்புற்ற தேவர்களுக்கு மிகவும் பேராற்றல் உடைய ஒருவனால்தான் நன்மை கிடைக்கும். அதை அருளியவன் பன்னிருகைப் பெருமான். இதுவும் அன்பருக்கு நினைவில் வருகிறது.

## பன்னிருகைக் கோலப்பா!

அடுத்தபடி முருகப் பெருமானுடைய திருக்கையில் விளங்கும் வேலின் ஞாபகம் வருகிறது. பேராற்றல் உடைய முருகனுடைய கையில் ஞானசக்தியாகிய வேல் விளங்கு கிறது. புறப் பகையாகிய அசுரர்களையும் அகப்பகையாகிய ஆசுர சம்பத்துக்களையும் அடியோடு ஒழிக்கும் கருவியாக நிற்பது முருகன் கைவேல். அவனுடைய பேராற்றலைப் பன்னிரு கைகளும் வேலாயுதமும் நன்கு விளக்குகின்றன. இவற்றை உடையவனை நம்பினால் பிறகு வேறு யாரிடம் செல்லவேண்டும்? வானோர்களுக்கு உண்டாகிய கொடிய வினையைத் தீர்த்து அருள் செய்த முருகனை நம்பினவர் களுக்கு வேறு ஒருவனிடம் சென்று நிற்க வேண்டிய அவசியமே இராது.

இந்தக் கருத்துக்களை எல்லாம் மனத்தில் கொண்ட அன்பர் அவற்றை வைத்துப் பாடுகிறார்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்;
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் – பன்னிருகைக்

கோலப்பா! வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா! செந்தி வாழ்வே!

(உன்னைத் தவிர வேறு யாரையும் எனக்குத் துணையாக நம்ப மாட்டேன்; வேறு ஒருவரை அடியேன் பின்னின்று வழிபட மாட்டேன்; பன்னிரண்டு திருக்கரங் களையுடைய அழகுக் கோலத்தைப் பெற்ற முருகனே, தேவர்களுடைய கொடுமையான பாவத்தைப் போக்கி, அவர்களுக்கு நலம் செய்தருளும் வேலாயுதப் பெருமானே, திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே!

கோல அப்பா என்பது தொகுத்தல் விகாரத்தால் கோலப்பா என்று ஆயிற்று. கொடிய வினை என்பது அவர்கள் பட்ட பரிபவத்துக்கு மூல காரணத்தைச் சொன்னபடி. செந்தி - திருச்செந்தூர்; முருகப் பெருமான் சூரனோடு போர் செய்து வென்ற பிறகு வெற்றி மாலை சூடி அபிஷேகம் செய்து கொண்ட இடம் திருச்செந்தூர். அதனால் ஜயந்தி என்ற பெயர் ஏற்பட்டது. அதுவே செந்தி என்று ஆயிற்று. அது பின்பு செந்தில், செந்தூர் என மருவி வந்தது.)

## 6. திருநாமப் பயன்

அடியவர்களுக்கு உதவி செய்வதற்கு முந்துபவன் முருகன். அவன் ‘அடியார்க்கு நல்ல பெருமாள்’; ‘பக்தருக்கு வாய்த்த பெருமாள்’; தன் அடியார்கள் வேண்டியவற்றை வேண்டிய போது வேண்டியவாறே நல்குபவன். அவர் களுடைய இன்னலைப் போக்கி நன்னலம் வழங்க அவன் எப்போதும் காத்திருக்கிறான்.

அடியவர்கள் முருகனுடைய திருவுருவத்தைத் தியானித்து அவன் திருநாமத்தைச் சொல்லி அவனை வழிபட்டு இன்பம் காணுகிறவர்கள். அவனுடைய திருநாமத்தை இடைவிடாது சொல்கிறவர்கள் இன்பம் வந்தாலும், துன்பம் வந்தாலும் ‘முருகா, முருகா!’ என்று

சொல்லுகிறவர்கள். வழுக்கி விழுந்தாலும் அவனுடைய திருநாமத்தையே சொல்வார்கள்.

"வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்."

பன்முறை சொல்வதை ஓதுதல் என்பர். முருகனுடைய திருநாமத்தைப் பலமுறை சொல்வதில் அன்பர்கள் இன்பம் காணுவார்கள். வேதத்தை ஓதுவது போலவும் தோத்திரங்கள் ஓதுவது போலவும் அடுத்தடுத்து முருகா, முருகா என்று சொல்லி அதனால் நாவில் தேன் ஊறியது போன்ற இன்பத்தைப் பெறுவார்கள். உள்ளத்தில் முறுகிய அன்பு இருக்குமானால் இறைவனுடைய திருநாமம் சொல்லச் சொல்ல இனிக்கும். எந்தச் சொல்லைச் சொன்னால் உள்ளம் குழைகிறதோ அந்தச் சொல்லினால் நாவில் ஓர் இனிமை உண்டாகும்.

இனிய உணவு வகைகளைப் பற்றி ஒருவர் பேசிக் கொண்டிருக்கிறார். அப்போது அதைக் கேட்பர்கள் நாவில் நீர் ஊறும். சொல்பவர்கள் நாவில் நீர் ஊறுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். தின்னும் பண்டங்களில் நமக்கு உள்ள ஆழ்ந்த பற்றே இதற்குக் காரணம். தின்னும் பண்டத்தை உண்ணும்போது நாவில் நீர் ஊறுவது பெரிது அன்று; அதை முன்னாலே காணும் போது ஊறுவதும் வியப்பு அன்று. அதன் பெயரைக் கேட்டாலும் சொன்னாலும் நீர் ஊறுகிறதே, அது வியப்பு அல்லவா? ஆனால் அது வியப்பாக நமக்குத் தோன்ற வில்லை. பலகாலும் பழகிவிட்டமையால் அதில் புதுமை இல்லை.

ஆனால், அன்பர் முருகா என்று சொல்லும்போது அவர் வாய் இனிக்கும் என்பதை நம்மால் நம்ப முடிய வில்லை. அந்தத் துறையில் முறுகிய பழக்கம் இருந்தால் இதை அநுபவத்தில் உணரலாம்.

இறைவனுடைய திருநாமத்தை அடிக்கடி சொல்வத னால் அன்பர்கள் புதிய சக்தியைப் பெறுகிறார்கள்.

இறைவனுக்குத் திருவுருவம், திருநாமம் என்னும் இரண்டும் இருக்கின்றன. மனத்தை உடைய மக்களின் பொருட்டே அவன் அவற்றை உடையவனாக இருக்கிறான். குணம் குறி கடந்தவனாக, ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லாதவனாக இருப்பினும் அன்பர்கள் தியானித்தும் வாழ்த்தியும் தன்னை அணுகும் பொருட்டு வடிவமும் நாமமும் உடையவனாக வருகிறான். அவனுடைய திருவுருவத்தை எல்லோரும் எப்போதும் காணமுடியாது. நாம் வழிபடும் விக்கிரகங்கள் அவனுடைய தேசுத் திருவுருவத்தை நினைப்பூட்டும் அடையாளங்கள். அவற்றையே நாம் வேண்டிய காலங்களில் வேண்டிய இடங்களில் பார்க்க முடியாது. அப்படிப் பார்த்தாலும் அவை இறைவனுடைய தெய்விகத் திருவுரு வத்தின் பிரதிநிதிகள்.

திருநாமம் அத்தகையதன்று. அது வேறு ஒன்றினுடைய பிரதிநிதி அன்று. எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் முருகா என்ற திருநாமத்தை உச்சரிக்கலாம். அவனுடைய திருநாமத்தின் படமோ, நிழலோ அன்று அது. சாட்சாத் அவனுடைய திருநாமமே அது. ஆகவே இறைவன் திருவுருவத்தைவிட அவன் திருநாமம் நம்மிடம் நேரே வந்து நாவில் நிற்கிறது; எந்தச் சமயத்திலும் எந்த இடத்திலும் நாம் அன்புடன் இயம்பும்படி அமைந்திருக்கிறது.

இந்தக் காரணத்தினால் அடியவர்கள் முருக நாமத்தை நாவால் அடிக்கடி உச்சரிக்கிறார்கள். அதில் இன்பம் காண்கிறார்கள். அவர்கள் துன்புற்ற போது முருகா என்றால் ஆறுதல் பிறக்கிறது. இன்புறும்போது முருகா என்றால் அந்த இன்பம் மிகுதியாகிறது. வழி நடக்கும் போது முருகா என்றால் வழித்துணை பெற்றது போன்ற தைரியம் உண்டாகிறது.

முருகா என்று சொல்லிச் சொல்லிப் பழக்கப்பட்டு இன்பம் காணுகிறவர்களுக்கு முருகன் அருள்புரிய முந்து வான். அந்தக் குரல் அன்பருடைய இதயகமலத்திலிருந்து எழுவது என்பதை அவன் நன்கு அறிவான். நுனி நாக்கினால்

சம்பிரதாயத்துக்குச் சொல்லி அவனை ஏமாற்ற முடியாது. காணாமல் போன தன் கன்றுக் குட்டியைக் கண்டபோது 'அம்மா' என்று தாய்ப்பசுவின் அடி வயிற்றிலிருந்து வருகிற ஒலிபோல; அன்பர்களின் இதயத்திலிருந்து திருநாம ஒலி எழும்பும். அந்த ஒலியில் உள்ள அன்பையும் குழைவையும் உணர்ச்சியையும் முருகன் அறிவான். அவன் அந்த இதயத்தில் கோயில் கொண்டிருக்கிறான் அல்லவா?

திருநாமத்தை அன்பர் கூறும்போது அது பெருமுழக்கமாக இருக்கும் என்பது அன்று. அந்தக் குரலினூடே பக்தி இழையும், ஆர்வம் ததும்பும். இன்ப அநுபவம் ஒலிக்கும். அதை முருகன் உணர்ந்து கொள்வான். இதயம் முழுவதும் மலர்ந்து அன்புத்தேன் பொங்க அதன் தாரையே நாமமாக வரும். ஒரு முறை வந்தாலே முருகன் முன்னே வந்து நின்று விடுவான்.

"முருகா எனவோர் தரம்ஓ தடியார்
முடிமேல் இணைதாள் அருள்வோனே!"

என்பது திருப்புகழ். நிரம்பியிருக்கும் ஏரியில் ஒரு கீற்றுக் கீறினால் போதும்; வெள்ளம் பாயத் தொடங்கிவிடும். அதுபோல ஒருமுறை திருநாமத்தைச் சொல்லும்போதே உள்ளே பொங்கும் அன்பு வெள்ளம் பாய்ந்து வரும்.

இவ்வாறு திருநாமத்தை தேனூற நின்று உச்சரிக்கும் அன்பர்களுக்கு முருகன் எப்படி எப்படி நலம் செய்கிறான்? இதைப் பக்தர் ஒரு பாட்டில் சொல்கிறார்.

அத்தகைய அடியவர்களுக்கு ஏதேனும் அச்சம் உண்டானால் முருகன் அவர்கள் ஆறுதல் பெறும்படி தன்னுடைய ஆறு முகங்களைக் காட்டி அருளுவான். முருகன் அடியார்கள் எதற்கும் அஞ்ச மாட்டார்கள். கோழைகளே சிறியதற்கெல்லாம் அஞ்சுவார்கள். இறைவன் அருள் துணை உண்டு என்ற உறுதியோடு இருப்பவர்கள் எளிதில் அஞ்சுவதில்லை. அவர்கள் அஞ்சும்படி வருவது ஏதும் இந்த

உலகில் இல்லை. அவர்கள் வறுமைக்கு அஞ்ச மாட்டார்கள்; நோய்க்கு அஞ்ச மாட்டார்கள். ஒரு கால் அவர்களும் அஞ்சும்படி ஏதேனும் வருமானால் அப்போது முருகன் அவர்கள் அஞ்சும் முகங்களுக்கு எதிரே ஆறு முகங்களுடன் தோன்றி இன்னலைப் போக்கி நலம் செய்வான்.

பக்தர்களும் அஞ்சும் துன்பம் ஒன்று உண்டு. அதுதான் மரணம். மிகப் பெரியவர்களெல்லாம் அதற்கு அஞ்சுவார்கள். மனிதனுக்கு உண்டாகும் அச்சங்களில் வேறு யாராலும் மாற்ற முடியாத அச்சம் இறப்பினால் உண்டாகும் அச்சம். எந்த உயிரும் அதற்கு அஞ்சும். அவ்வாறு தன் அடியார்கள் மரண நேரத்தில் அஞ்சு முகம் காட்டினால் முருகன் எழுந்தருளி வந்து தன் ஆறுமுகத்தைக் காட்டி மரண பயத்தைப் போக்கியருளுவான்;

''எனை நாடிவந்த, கோள்என் செயும்
கொடுங் கூற்றென் செயும்.''

என்ற தைரியம் உண்டாகும்படி செய்வான்.

வறுமை, பிணி, பகை முதலியவற்றால் வரும் அச்சங்களைப் போக்கச் செல்வரும் மருத்துவரும் வீரரும் இருக்கிறார்கள். ஆனால் காலனால் வரும் அச்சத்தைப் போக்க இறைவன் ஒருவனால்தான் முடியும். ''மாற்றரும் கூற்றம்'' என்று தொல்காப்பியம் சொல்லுகிறது. அந்தக் கொடிய பயத்தை, முருகா என்று ஓதும் அடியவர்களுக்குப் போக்கும் கருணைக் கடல் முருகன்.

அஞ்சு முகம்தோன்றின் ஆறு முகம்தோன்றும்...
முருகாஎன்று ஓதுவார் முன்.

ஆறுமுகம் என்ற தொடரே, கண்டவர்கள் அச்சம் நீங்கி ஆறுதல் பெறுவதற்குக் காரணமான முகம் என்ற பொருளையும் உடையதாக இருக்கிறது. தாயுமானவரும் அஞ்சு முகத்தையும் ஆறு முகத்தையும் நினைக்கிறார்.

"அஞ்சுமுகம் காட்டாமல் ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ?"

முருகா என்று ஓதுபவர்கள் வாழ்க்கையில் இடர்ப் பாடுகள் உண்டாகலாம்; மனத்தில் போராட்டம் எழலாம்; உலகத்தில் வளைய வருவதனால் அதன் வாசனை வந்து சூழ்ந்து கொண்டு துன்புறுத்தலாம்; நல்ல எண்ணங்களும் தீய எண்ணங்களும் போராடிக் கொண்டு வாழ்க்கையை அலைக்கழிக்கலாம்.

மனிதர்களுடைய மனமே ஒரு போர்க்களந்தான். தீய எண்ணங்களாகிய ஆசுர சம்பத்துக்களும், நல்ல எண்ணங் களாகிய தேவ சம்பத்துக்களும் இடைவிடாமல் போராடிக் கொண்டே இருக்கின்றன. தீய எண்ணங்களை அடக்கி வென்று நிற்பவன் நற்செயல்களைச் செய்கிறான். அல்லாதவன் தீ நெறியில் செல்கிறான். மனத்தில் நிகழும் இந்தப் போராட்டத்தில் நல்லது வெற்றி பெற வேண்டுமானால் வலிய துணை ஒன்று வேண்டும். துணை வலியினால் போரில் வெல்வது அரசர்களுக்கு வழக்கம். மனிதனும் மனத்தில் நடக்கும் போராட்டத்தில் வெற்றி பெறப் பெருந்துணை ஒன்றை நாட வேண்டும். அப்போதுதான் அமைதி உண்டாகும்.

முருகா என்று ஓதும் அடியார்களுக்கு இத்தகைய போராட்டம் நேராது; நேர்ந்தால் முருகன் வடிவேல் தோன்றிப் போராட்டத்தைப் போக்கும். தேவாசுரர்களிடையே போர் நிகழ்ந்தபோது முருகன் வேலை ஏவி வெற்றி பெற்றான். அது சென்ற இடமெல்லாம் வெற்றியே நிலவும். வேல் ஞான சக்தியாதலின் அறியாமையால் நிகழும் போராட்டங்களில் ஒளியைப் புகுத்தி வெற்றி உண்டாகும் படி அது துணை நிற்கும். பழைய வெம்மையான சமரில் எப்படி வேல் தோன்றி வெற்றியைப் பெறச் செய்ததோ, அப்படியே மனத்தில் நிகழும் வெவ்விய போராட்டங் களிலும் அது தோன்றி அச்சத்தைப் போக்கும்.

வெஞ்சமரில் அஞ்சல்என வேல்தோன்றும்

மற்றவர்களெல்லாம் முருகா என்று சொல்லும் போது அது நா அளவில் நிற்கும். பக்தர்களோ நெஞ்சிலே முருகனை நிறுவி அவன் நாமத்தைச் சொல்கிறார்கள். அவர்கள் பலகாலும் முறையிடும்படி பார்த்துக் கொண்டிருக்க மாட்டான் முருகன். ஒருமுறை நினைத்தாலே தன் இரண்டு திருவடிகளையும் காட்டி இன்னலைப் போக்க முற்படுவான்.

வைணவர்களில் ஒரு சாரார் திருமாலை ஒரு முறைக்கு மேல் வணங்குவதில்லை. ஒரு நமஸ்காரம் செய்த அளவிலே பெருமாள் கடனாளியாகி விடுகிறாராம். உடனே பக்தருடைய செயல்களை நிறைவேற்றப் புகுகிறாராம். அதற்கு மேல் வணங்கினால் திருமால் தலையில் பெரும்பாரத்தை ஏற்றிய அபசாரம் உண்டாகிவிடுமாம். இறைவனுடைய எளிமையையும் பெருங்கருணையையும் நினைப்பூட்டுகிறது இந்த வழக்கம்.

அவ்வாறே தன்னை இடைவிடாது தொடர்ந்து திரு நாமத்தைக் கூறி அன்பு செய்யும் அடியவர்களுக்குக் குறிப்பறிந்து அருள் புரிய ஓடி வருவான் முருகன். அவர்கள் ஒரு முறை நினைத்துவிட்டால் உடனே வந்து தன் இரண்டு திருவடித் தாமரைகளையும் காட்டுவான். அவன் காட்டு வான் என்று சொல்லாமல் அவைகளே வந்து தோன்றும் என்று சொல்கிறார் அன்பர். பழகிய வழியில் நாம் நினைக்காமலே நம் கால் போவது போல அவை செல்லுமாம்.

நெஞ்சில், ஒரு கால் நினைக்கின் இருகாலும் தோன்றும்.

முருகா என்று ஓதும் அடியவர்களுக்கு அஞ்சுவது இல்லை; மனப்போராட்டம் இல்லை; எப்போதும் முருகன் திருவடித் துணை உண்டு. இதையே பாட்டுச் சொல்கிறது.

அஞ்சு முகம்தோன்றின் ஆறு முகம்தோன்றும்;<br>
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்;- நெஞ்சில்

ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்;
முருகாஎன்று ஓதுவார் முன்.

(சமர் - போர். 'வெஞ்ச மரந்தோன்றின் வேல் தோன்றும்' என்பதும் ஒரு பாடம்.)

## 7. நம்பிக்கை

குடும்பத்துடன் வாழும் மனிதர்களுக்கு ஆண்டவன் குடும்பத்துடன் வாழும் தெய்வமாகத் தோற்றுகிறான். அவரவர்களுடைய மனப்பாங்குக்கு ஏற்பத் தன்னுடைய திருவுருவத்தைக் காட்டும் பேரருளாளன் இறைவன். போலீஸ்காரனுடைய மகனுக்கு, ஆற்றலுள்ள யாருமே போலீஸ்காரராக இருக்க வேண்டுமென்ற ஞாபகம் இருக்கும். அதுபோல் குடும்பத்தில் உழன்று சுழலும் மனிதனுக்கு ஆண்டவனும் அப்படி இருந்தால் தன்னால் அணுகுவதற்கு உரியவனாக இருப்பான் என்ற எண்ணம் உண்டாகும். ஆண்டவனும் அப்படியே ஒரு குடும்பியாகத் தோற்று கிறான். அது தோற்றம் மாத்திரமேயன்றி உண்மையில் அவன் குடும்பத்தில் அகப்பட்டவன் அல்லன். உலகம் முழுவதும் ஒரு குடும்பம். அதற்குத் தலைவனாக இருப்பவன் முருகன். என்றாலும் அவனுக்கும் தந்தை, தாய், மாமன், மனைவி என்று உறவினர்கள் இருக்கிறார்கள்.

உலகத்தினருக்கு எல்லாம் துணையாக இருந்து தாங்குகிற எம்பெருமானுக்குத் துணை தேவையில்லை. அவனது அருள் ஒன்றே எல்லாவற்றையும் பாதுகாத்து நலம் செய்கிறது. அவன் உருவம் இல்லாதவன்; என்றாலும் மனிதனது உளளத்தில் புக உருவத்தோடு வருகிறான். அவன் குணம் இல்லாதவன்; என்றாலும் மக்களுடைய உள்ளத்தில் புகுவதற்குக் குணங்களை உடையவனாகிறான். அவனுடைய புகழைப் பேசுவதற்கும், அவனுடைய திருநாமத்தைச் சொல்வதற்கும் ஏற்ற வகையில் அவனது கதை விரிவாக அமைந்திருக்கிறது; திருநாமங்களும் பல இருக்கின்றன.

கதைகளில் சொல்லப்படுகிற வீர விளையாடல்களும், கருணைச் செயல்களும் விரிந்து விரிந்து செல்கின்றன. புராணங்களும், இதிகாசங்களும் இறைவனுடைய புகழைப் பல படியாகப் பாராட்டுகின்றன. அந்த அந்தச் செயல்களை எல்லாம் அவன் செய்தானா என்று ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம் அன்று.

ஒருவனைப் பற்றிப் பேசுவதானால் அவனைப் பற்றிய செய்திகள் பலவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு செய்தியும் இல்லாமல், ஒரு நாமமும் இல்லாமல், ஒரு குணமும் இல்லாமல் இறைவன் இருந்தால் அவனைப் பற்றிப் பேசவோ, நினைக்கவோ நமக்கு வாய்ப்புக் கிடையாது.

ஒரு சின்ன ஊசியை எடுக்க வேண்டுமானால் ஒரு தனி மனிதன் எளிதில் எடுத்து விடலாம். ஆனால் அதைப் பல பேர் சேர்ந்து எடுக்க வேண்டுமென்று எண்ணினால் ஒரு பெரிய தென்ன மரத்தில் அந்த ஊசியைச் செருகி எல்லோரும் சேர்ந்து அந்தத் தென்ன மரத்தைத் தூக்கலாம். அப்போது எல்லோரும் அந்த ஊசியைத் தூக்கினவர்கள் ஆவார்கள். பலர் தூக்குவதற்குரிய கனம் இல்லாமல் இருக்கும் ஊசி நீளமும் கனமும் உள்ள தென்ன மரத்தில் சேர்ந்து பலரும் தூக்கும் நிலையில் இருக்கிறது. அதுபோல் குணம், குறி, வாழ்க்கை நிகழ்ச்சிகள் படைத்த மனிதனுக்கு இறைவனைப் பற்றிப் பேசுவதற்கும் பல நேரம் சிந்திப்பதற்கும் உரியன வாகப் பல கதைகள் வேண்டியிருக்கின்றன. பல நிகழ்ச்சிகள் அவசியம் வேண்டுமென்று தோன்றுகிறது. ஆகவே புராணங்களும் இதிகாசங்களும் கூறும் இறைவனைப் பற்றிய கதைகள் எல்லாம் அவனைப் பற்றிச் சிந்திப்பதற் கும், அவனுக்குள்ள குணங்களை எண்ணி எண்ணி இன்புறுவதற்கும், அறத்தின் வழியே வாழ்ந்து மறத்தைப் போக்குவதற்கும் பயன்படுவன.

முருகன் பல உறவினர்களை உடையவன் என்பதை இந்தப் பக்தர் நினைவுக்குக் கொண்டு வருகிறார். அவன்

திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகன். திருச்செந்தூருக்குச் செந்தி என்பது ஒரு பெயர்.

முருகனே! செந்தி முதல்வனே!

முருகனுக்கு மாமன் மாயோனாகிய திருமால். அருணகிரிநாதப் பெருமான் முருகனைக் குறிப்பிடும் பலவிடங்களில் இன்னாருடைய மருகன் என்பதை மிகச் சிறப்பாகக் கூறுவார். முருகன் பரமேசுவரனுக்கு மகனாக விளங்குகிறான்.

மாயோன் மருகனே! ஈசன் மகனே!

அவனுக்கு ஓர் அண்ணனும் இருக்கிறான். முகத்திலிருந்து தொங்கும் துதிக்கையைப் பெற்றவன் அவன்; யானை முகன்.

ஒருகைமுகன் தம்பியே!

குடும்பத்தோடு வாழும் மக்களின் நிலைகளை எல்லாம் தெரிந்து அவர்களுக்கு வாழ வழிவகுத்து முன்னேறச் செய்கிறான் இறைவன். குடும்பத்தில் உழல்கின்றவர்களுக்குத் தங்கள் குடும்பத்தைப் பற்றிய சுகதுக்கங்கள் நன்கு தெரியும். இறைவனும் அவற்றை நன்கு தெரிந்தவனைப்போல விளங்குகிறான்.

பலருக்கும் உறவினனாக இருக்கும் முருகப் பெருமான், யார் தன்னை நம்புகிறார்களோ அவர்களுக்கு நலம் செய்வான். இறைவனிடத்தில் ஈடுபாடு என்பது, அவனுடைய திருவருள் நிச்சயமாகக் காப்பாற்றும் என்ற நம்பிக்கையின் அடித்தளத்தில் எழுவது. இந்த நம்பிக்கை இல்லாவிட்டால் எத்தனைதான் வழிபாடு நடத்தினாலும் பயன் இராது.

"மந்திரமும் தேவும் மருந்தும் குருவருளும்
தந்திரமும் ஞானத் தவத்துறையும் - யந்திரமும்
மெய்யென்றால் மெய்யாக மேதினியி லேவிளங்கிப்
பொய்யென்றால் பொய்யாகிப் போம்."

என்பது ஒரு பழம் பாட்டு. பக்திக்கு நம்பிக்கையே அடிப்படையாக இருக்க வேண்டும். மதத்திற்கு நம்பிக்கை என்ற பொருளை உடைய 'ஃபெய்த்' (Faith) என்ற சொல்லை மேல்நாட்டார் வழங்குகிறார்கள்.

அறிவினால் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள முடியாது. சிலவற்றை நம்பித்தான் ஆக வேண்டும். ஒரு மூட்டை அரிசி முழுவதையும் உண்போம் என்ற நம்பிக்கையில்தான் ஒருவன் வாங்கிக்கொண்டு வருகிறான். நெடுந்தூரம் நடப்பவன் பூமி பிளந்து நாம் கீழே போவோம் என்று எண்ணமாட்டான். நம்பிக்கையின்மேல் தான் நம்முடைய முயற்சிகள் எல்லாம் நிற்க வேண்டும். உலக வாழ்வில் சிறிய செயல்களுக்கே இத்தனை நம்பிக்கை வேண்டுமென்றால் இறைவன் திருவருளைப் பெற இந்த நம்பிக்கை முறுகி நிற்க வேண்டும். மலையே குலைந்தாலும், வானமே இடிந்தாலும், பூமியே பிளந்தாலும் இறைவன் நம்மைக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை அழுத்தமாக இருப்பவன் உண்மையான பக்தன் ஆவான்.

இந்தப் பக்தர் முருகனைப் பார்த்துச் சொல்கிறார். ''இத்தனை உறவினர்களிடத்திலே பாராட்டுப் பெறும் அழகனாக இருக்கிற எம்பெருமானே, இளையவனே, தண்டை அணிந்த அழகிய உன் திருவடிக் கோலத்தை எப்போதும் நம்பிக்கையோடு தொழுது வாழ்வேன்'' என்று சொல்கிறார். இறைவனுடைய திருவடியில் நம்பிக்கை வைப்பதன் மூலம் அவனுடைய உறவும் அருளும் உண்டாகின்றன. முருகப் பெருமானுடைய தண்டைத் தாள் அவனுடைய இளமையையும் அழகையும் ஒருங்கே புலப்படுத்தும் அடையாளமாக நிற்கிறது.

இவ்வாறு ஈடுபட்ட பக்தர், அந்தப் பெருமானுடைய புகழ்களை எல்லாம் பேசும் முறையில் அவனுடைய உறவினர்களையும் அவனது தாளை நம்பிக்கையோடு வழிபடும் முறையையும் இந்தப் பாட்டில் சொல்கிறார்.

முருகனே! செந்தி முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே! - ஒருகைமுகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே! கைதொழுவேன் நான்.

(ஒருகைமுகன் - முகத்திலிருந்து தொங்கும் தும்பிக்கையை உடைய கணபதி.)

## 8. நல்ல இடம்

இறைவனையே முழுவதும் நம்பும் அடியவர்களுக்கு அவன் வேண்டியவற்றை அருளிப் பாதுகாப்பான். அவனிடம் முழுநம்பிக்கை வைப்பதற்கு அடையாளம் மற்றவற்றில் நம்பிக்கை இல்லாமல் இருப்பது. மற்றவர்களை நம்புவதனால் பயனில்லை என்பதை நன்கு உணர்ந்து, இறைவனுடைய பற்று ஒன்றே யாவற்றையும் தரும் என்ற உறுதியுடையவர்கள் சிறந்த பக்தர்கள்.

''மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாத மேமனம் பாவித்தேன்.''

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் சொல்கிறார். எல்லாப் பொருளிலும் பற்றும் நம்பிக்கையும் வைத்துச் சில சமயங்களில் இறைவனை நம்புவதாகச் சொல்வதில் பயனில்லை.

திரௌபதி கதையே இதற்குச் சான்று. அதை முன்பு பார்த்தோம்.

பிறர் உதவி கிடைக்கும் என்று நம்பும் வரைக்கும் இறைவன் அருள் புரிய வரமாட்டான். ''எல்லாப் பற்றையும் விட்டொழிந்து என்னையே புகல் புகுந்தவர்களுடைய நலத்தை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று கண்ணன் கீதையில் சொல்கிறான். இறைவனையன்றிப் பற்று இல்லை என்று இருப்பாருக்கு அவன் உறுதியாக அருள்புரிவான்.

அவனுக்கு நாம் அடிமை, அவன் நம்மைக் காப்பாற்றும் கடப்பாடு உடையவன் என்பதை உள்ளத்தில் உறுதியாகக் கடைப்பிடிக்க வேண்டும். கைக் குழந்தையை அதன் தாய் எப்போதும் கவனித்துக் கொள்கிறாள். தானே நடந்து தானே உண்ணும் அளவுக்கு வளர்ந்த குழந்தைகளைப் பற்றித் தாய் மிகுதியாகக் கவலைப்படுவதில்லை. நாம் இறைவனையே நம்பும் இளங் குழந்தையாக ஆகிவிட வேண்டும்.

''நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே.''

என்று இருக்க வேண்டும். அப்போது நம்முடைய பொறுப்பு முழுவதும் அவனைச் சாரும். நமக்கு அவ்வளவு திடமான நம்பிக்கை இருப்பதில்லை. அதனால் மனம் தடுமாறு கிறோம்.

முருகனிடத்தில் உறுதியான பற்று வைத்து, நாம் அவனையன்றி வேறு யாரையும் சரணமடையவில்லை யாதலின் அவன் நம்மைப் பாதுகாப்பான் என்ற நம்பிக்கையை உடையவர் இந்த அடியவர்.

''உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்;
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்.''

என்று புகுந்தவர் அல்லவா? ஆதலின் முருகனுக்கு நம்மைக் காக்கும் கடப்பாடு உண்டு என்று உரிமை கொண்டாடுகிறார்.

''நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.''

என்று திருநாவுக்கரசர் கூறுகிறார். என்னைப் பாதுகாத்தல் அவனுடைய கடமை என்ற நம்பிக்கையை உடையவர் அவர். ''என் தாய் எனக்கு எல்லாம் தருவாள்'' என்று குழந்தையும், ''என் நாயகர் எனக்கு வேண்டியவற்றை யெல்லாம் தருவார்''

என்று மனைவியும் நம்பி வாழ்வது போல, ''இறைவன் எனக்கு வேண்டியன தந்து காப்பாற்றுவான்'' என்று இருத்தல் பக்தர்க்கு இயல்பு. ஆகவே இந்த அடியாரும் முருகனை நோக்கியே இதைக் கூறுகிறார்.

கடமைப்பட்டவர் தம் கடமையைச் செய்யாது ஒழிந்தால், அதை வேறு யாரும் செய்ய முற்படமாட்டார்கள். அவரவர்களுக்கு வெவ்வேறு கடமைகள் உள்ளன. இறைவனுக்கோ அடியார்களுக்காகவே செய்யும் வேலைகளேயன்றி வேறு ஏதும் இல்லை. நாம் நம்முடைய பொறுப்பை உணர்ந்து ஒழுகாவிட்டாலும், அவன் தன் பொறுப்பைத் தட்டிக் கழிப்பதில்லை.

இறைவன் இன்னும் போதிய அளவுக்கு நமக்கு அருள் செய்யவில்லை என்ற ஏக்கம் பக்தர்களுக்கு இருக்கும். பொருள் படைத்த பேர் எப்படித் தம்மிடம் உள்ள பொருளைக் கொண்டு திருப்தி அடையாமல் மேலும் மேலும் பொருள் பெற ஏங்குவார்களோ, அப்படியே அருள் படைத்தவர்களும் ஏங்குவார்கள்.

"செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்குமனத் தடியேன் உடையாய்நின் அடைக்கலமே.''

என்று ஏங்குவார் மணிவாசகர்.

இந்த ஏக்கமே பக்திக்கு அறிகுறி. முருகனுடைய திருவருள் முற்றக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கத்தில் முறையிட வருகிறார் அடியவர்.

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா?

என்கிறார். 'என்னைப் பற்றிய கவலை எனக்கு இல்லாமல் நீயல்லவா எனக்காகக் கவலைப்படுகிறவன்? அத்தகைய வன்

இப்போது புறக்கணிக்கலாமா?' என்று கேட்கிறார். அவனுக்குத் தம்மைக் காக்கும் கடப்பாடு உண்டு என்று உரிமையோடு பேசுகிறார்.

முருகனை 'அறுமுகவா!' என்கிறார். முருகன் எங்கும் திருமுகமாய் எங்கும் திருக் கண்களாய் நின்று எல்லாவற்றை யும் உணர்பவன்.

"எங்கும்
கண்ணாகக் காண்கின்ற கதியே."

என்பார் இராமலிங்க சுவாமிகள். முருகன் எல்லாத் திசைகளிலும் முகமுடையான். அவன் பார்வைக்குத் தப்பும் பொருள் ஏதும் இல்லை. 'நான் முறையிடாமலே என் இடர்ப்பாடுகளை அறிந்துகொள்ளும் ஆற்றல் உடையவன் நீ. எல்லாத் திசைகளிலும் திருமுகங்களும் கண்பார்வையை யும் படைத்த உனக்கு என் துயர் கண்ணிற் படவில்லை என்று சொல்வது முறையல்லவே' என்ற குறிப்போடு அவனுடைய ஆறு முகங்களைச் சுட்டிக் கூறினார்.

முருகன் திருமார்பில் கடப்ப மாலையை அணிந்திருக் கிறான். போகத்துக்குரிய மாலை அது. போர்க்குரிய கண்ணி வேறு; போகத்துக்குரிய மாலை வேறு. முருகனுடைய கண்ணி காந்தள். அமைதியாக வள்ளி நாயகியோடும் தேவ யானையோடும் எழுந்தருளியிருக்கும்போது கடப்ப மாலையை அணிந்துகொண்டு விளங்குவான். இறைவ னுக்குப் போகமும் யோகமும் அவசியமல்லவாயினும் உலகத்தார் மனைவி மக்களுடன் வாழ்ந்து இன்ப வாழ்வு வாழ வேண்டும் என்பதற்காக அவன் போகியைப் போல் விளங்குகிறான். அவன் அப்படி இல்லாதொழிந்தால் உலகம் இன்பவாழ்வு இன்றி வீணாகிவிடும்.

'நீ போகியாக விளங்கி அதற்குரிய அங்கங்களை அணிந்து கொண்டு எழுந்தருளியிருக்கிறாய். யாவரையும்

வாழ்வில் இன்பம் காணும்படி பாதுகாப்பேன் என்பதற்கு அறிகுறியாக அவ்வாறு இருக்கிறாய். அப்படி உள்ள நீ என்னைக் காப்பாற்றாமல் இருக்கலாமா?' என்ற கருத்தை உள்ளடக்கி அவன் தாரைக் குறிக்கிறார்.

பூக்கும் கடம்பா!

(பூத்திருக்கும் கடம்ப மலர் மாலையை அணிந்தவனே.)

இதற்கு வேறு ஒரு வகையாகவும் பொருள் கொள்ள லாம். முருகன் கடம்ப மரத்தில் எழுந்தருளியிருப்பவன். ''புதுப்பூங் கடம்பினும்'' அவன் உறைகிறான் என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது.

எனவே, 'மலர்ந்த கடம்ப மரத்தில் எழுந்தருளி யிருப்பவனே' என்றும் இங்கே பொருள் கொள்ளலாம்.

அவனை, 'அறுமுகவா' என்றும் 'பூக்கும் கடம்பா' என்றும் விளித்தவர், அவனுடைய இயல்பான திருநாமத்தை கூறுகிறார்; ''முருகா'' என்றும் அடுத்து, ''கதிர்வேலா!'' என்றும் கூறுகிறார்.

முருகன் ஞானசக்தியைக் கையில் ஏந்தி யிருக்கிறவன். தன்னை அண்டினாருடைய துயரத்தைப் போக்கும் அற்புதக் கருவி அது.

''சூர்மார்பும் குன்றும், துளைத்தவேல்
உண்டே துணை.''

என்று புகுந்தவர் இந்த அடியார். முருகன் என்னும் அரும் பெறல் மரபிற் பெரும் பெயரும் கதிர்வேலாகிய தனிப்படையும் உடையவன் கந்தவேள். வேலே விளங்கு கையான். வேலுக்கும் அவனுக்கும் உள்ள உரிமையை அவனுடைய மூலத் திருவுருவத்தில் வேலையும் இணைத்து அமைக்கும் வழக்கத்திலிருந்து உணரலாம். திருச்செங்கோடு முதலிய தலங்களில் வேலேந்திய முருகனைத் தரிசிக்கலாம்.

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா? - பூக்கும்
கடம்பா! முருகா! கதிர்வேலா!

(பரம் - பாரம்; பொறுப்பு.)

அடுத்தபடி முருகனுடைய இரக்கத்துக்குப் பாத்திரம் தாம் என்பதைச் சொல்கிறார்.

தம்மைத் தாமே உயர்த்திக் கொள்ளும் செருக்கு ஆகாதோ இது என்று தோன்றும். முருகனுடைய இரக்கத்துக்கு ஏற்ற இடம் இது என்று தம்மைச் சுட்டிச் சொல்கிறார். ''கொடிய பசியுடையவன் நான்; சோறு போடுவதற்கு ஏற்ற பாத்திரம் நான்'' என்று பசியுடையவன் சொல்வது போலவும், ''நோயால் வருந்துகிறவன் நான்; என்னை நீங்கள் கவனித்து மருந்து கொடுக்கவேண்டும்; உங்கள் மருத்துவத்துக்காக நிற்பவன் நான்; உங்கள் உபகாரத்தை எதிர் நோக்கி இருப்பவன்'' என்று பிணியுடையவன் சொல்வது போலவும் நிற்பது இது.

'இரங்காய்இனி' என்பதனால், 'உன்னுடைய இரக்கத்துக்கு உரியவன் யான்' என்பதைக் கூறியவரானார். துன்பம் உடையவரிடமும் குறையுடையவரிடமும் இரங்குபவன் முருகன். ஆகவே தம்முடைய குறையைக் குறிப்பிட்டு, 'எனக்கு அருள் செய்யவேண்டும்; அதற்கு ஏற்ற பாத்திரம்' என்று சொல்லிக் கொள்வது அகந்தையின்பாற் படாது. ''நான் பெரிய பக்தன்; என்னை நீ ஆட்கொள்ள வேண்டும்'' என்று சொன்னால் அது செருக்கு மணக்கும் கூற்றாகும். ''இரங்கத் தக்க நிலையில் இருக்கின்றவன் நான்; உன்னையன்றி வேறு புகல் இல்லை. உன் கருணைக்கு உரியவன் நான்'' என்கிறார். ''நான் ஏழை ஐயா! ஏழைக்கு இரங்க வேண்டும் ஐயா! உங்கள் தர்மத்துக்கு ஏற்ற இடம் இது ஐயா!'' என்று பிச்சைக்காரன் ஒருவன் கெஞ்சினால் அவனைச் செருக்குடையவன் என்று சொல்லலாமா? தன் பெருமையைத்

தானே கூறிக் கொள்வது செருக்கு. தன் சிறுமையையும் இடர்ப்பாடுகளையும் கூறுவது செருக்கு அன்று.

''நல்ல இடங்காண்'' என்று சொல்கிறாரே! தம்மை நல்லவரென்று சொல்லிக் கொண்டதல்லவா அது? - இப்படி ஒரு கேள்வி எழலாம். நல்ல என்பது மிக்க என்ற பொருளில் வந்தது. 'நல்ல பசி' என்னும்போது பசியின் மிகுதியையே நல்ல என்ற அடை குறிக்கிறது. 'நல்ல வெயில்' என்பது அதன் மிகுதியைக் குறிப்பிப்பதே அன்றி, அது நல்லது என்பதைக் குறிப்பிப்பதன்று. 'உன்னுடைய இரக்கத்துக்கு ஏற்ற இழிநிலை என்னிடம் இருக்கிறது. அது மிக்க இழிந்த நிலை' என்று நினைக்கும்படி செய்கிறது, நல்ல என்ற அடை.

'உன்னுடைய இரக்கத்தைப் பெறுவதற்கு ஏற்ற ஏழைகள் பலர் இருக்கலாம். நானோ அவர்களிலும் மிக்க ஏழை. அவர்கள் நீ இரங்குவதற்குரிய இடம்; நானோ நல்ல இடம்' என்று சொல்கிறார். தம்முடைய தைனியத்தின் மிகுதியைச் சொல்கிறாரே யன்றித் தம் பெருமையைக் கூறவில்லை. 'நான் பாவியினும் பெரும்பாவி' என்று சொல்வது எப்படியோ அப்படி அமைந்தது இது.

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம்? அறுமுகவா! - பூக்கும்
கடம்பா! முருகா! கதிர்வேலா! நல்ல
இடங்காண் இரங்காய் இனி.

## 9. முறை

திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்பவர்கள் அந்நூல் முடிந்தவுடன் இதுகாறும் சொல்லி வந்த வெண்பாக்களைக் கூறித் துதி செய்வார்கள். அப்படி அமைந்த வெண்பாக்கள் எட்டுக்குப் பின்னால் இரண்டு வெண்பாக்கள் திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்யும் முறையையும் அதனால் உண்டாகும் பயனையும் கூறுகின்றன. அவற்றை இனிப் பார்க்கலாம்.

திருமுருகாற்றுப்படையைத் திருப்பரங்குன்றத்தைச் சேர்ந்த குகையில் இருந்து நக்கீரர் பாடினார் என்பது ஒரு வரலாறு. ஆதலால் ஒன்பதாவது வெண்பாவில் திருப்பரங் குன்றத்தை நினைக்கிறார், இதைப் பாடிய அன்பர். திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பன்னிருகைப் பெருமானுடைய பாதத்தை அணுகி அன்பர்கள் கரம் குவிப்பார்கள். அவனுடைய சந்நிதானத்தை அடையும் போதே அவன் பாதத்தை லட்சியமாகக் கொண்டு தரிசித்துக் கரத்தைக் குவித்துக் கொண்டே செல்வார்கள். பின்பு கண்ணார அவன் திருமேனியழகைக் கண்டு இன்புறுவார்கள். அதுபோல, ''ஏ, நெஞ்சமே, நீயும் செய்வாயாக'' என்று நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார் அன்பர்.

கை கூப்பிக் கண்குளிரக் கண்டபிறகு, மிக்க ஆர்வத்துடன் திருமுருகாற்றுப்படையைச் சொல்ல வேண்டுமாம். தமிழ் நயம் கெழுமிய அழகான பாடல் அது. நீர் கொண்டு அபிடேகம் செய்து பூக்கொண்டு அருச்சித்துப் பழம் முதலியன கொண்டு நிவேதித்துப் பலவகை உபசாரங் களுடன் பூசை செய்வதற்கு எல்லாராலும் இயலாது. அவ்வாறு செய்ய முடியாவிட்டாலும் முருகனிடத்தில் பேரன்புடன் திருமுருகாற்றுப்படையை ஓதினால் போதுமாம். முருகன் சந்நிதானத்தில் இந்த நூலைப் பாராயணம் செய்வது பூசை செய்வதற்குச் சமானமாகும். சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பார்த்து, ''அருச்சனை பாட்டே யாகும். ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக'' என்று சொன்னதாகப் பெரிய புராணம் கூறுகின்றது. அங்கே தமிழ்ப் பாட்டைப் பாடுதல் அருச்சனையோடு ஒத்தது என்ற கருத்தைக் காண்கிறோம். அதுபோலவே இங்கும் திருமுருகாற்றுப் படையைப் பாராயணம் செய்வதுவே பூசைக்குச்சமானமானது என்று அன்பர் கூறுகிறார்.

பரங்குன்றில் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு – சுருங்காமல்

ஆசையால், நெஞ்சே, அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

(என் நெஞ்சே, திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளி யிருக்கும் பன்னிரண்டு திருக்கரங்களை உடைய தலைவனாகிய முருகப்பெருமானுடைய திருவடியைக் கைகளைக் குவித்து வணங்கிக் கண்கள் குளிரும்படியாகத் தரிசித்துச் சிறிதும் குறைவுபடாமல் மிக்க ஆர்வத்துடன் அழகிய திருமுருகாற்றுப்படையைப் பூசை செய்வதாக எண்ணிக்கொண்டு பாராயணம் செய்வாயாக.

அணி முருகாற்றுப்படை - முருகனுக்கு அணிகலனாக உள்ள முருகாற்றுப்படை என்றும் கொள்ளலாம்.)

மனம் ஒருமித்து இறைவனுடைய வடிவத்தில் ஈடுபட்டுப் பலவகை உபசாரங்களைச் செய்வதே பூசையாகும். நம்முடைய கரசரணாகதி அவயவங்கள் இறைவ னுடைய வழிபாட்டில் ஒன்று பட்டு இயங்குவதற்காகச் செய்வது பூசை. அவனுடைய புகழைக் கூறும் நூல்களைப் பாராயணம் செய்யும்போது மனம் ஒருமைப்பட்டு இறைவ னுடைய திருவுருவத்தையும் புகழையும் நினைக்கும் நிலை உண்டாகும். அதுவும் பூசையினால் கிடைக்கும் பயனைத் தருவதாகும். இதனை எண்ணியே திருமுருகாற்றுப்படைப் பாராயணத்தை யும் பூசை என்று அன்பர் கூறுகிறார்.

## 10. பயன்

அடுத்தபடி அவ்வாறு புகலுவதால் இன்ன பயன் உண்டாகும் என்று சொல்ல வருகிறார். இந்த நூல் நக்கீரரால் உரைக்கப் பெற்றது என்பதனையும் தெரிவிக்கிறார்.

நமக்கு வரும் துன்பங்கள் பல. அவற்றைப் போக்கிக் கொள்வதற்குத் தக்கபடி பாதுகாப்புச் செய்துகொள்ள வேண்டும். வறுமையைப் போக்குவதற்குப் பொருளும், பகையை அழிப்பதற்குப் படைக்கலமும், நோயைத்

தீர்ப்பதற்கு மருந்தும் உதவும். இந்த மூன்றும் ஒரு சேரக் கிடைத்தாற்போல முருகனுடைய திருவருள் கிடைக்கப் பெற்றால் எந்தத் துன்பமும் நம்மை அடையாது. அவன் அருளைப் பெறுவதற்குத் தக்க வழி எது? திருமுருகாற்றுப் படையை நாள்தோறும் பாராயணம் செய்தால் நம்மை எல்லா இடர்களிலிருந்தும் காப்பாற்றிக் கொள்ளலாம்.

கவசம் என்ற பெயரில் வடமொழியிலும் தென் மொழியிலும் சில நூல்கள் உண்டு. இந்திராட்சி சிவகவசம், விஷ்ணு கவசம் முதலியன வடமொழியிலும் கந்தர் சஷ்டி கவசம், சண்முக கவசம் முதலியன தமிழிலும் உள்ளவை. நோய், வறுமை, பகை முதலியவற்றினின்றும் காப்பாற்று வதற்காகவே அவை எழுந்தன. திருமுருகாற்றுப்படையின் அமைப்பு, கவச நூல்களைப் போல் இல்லாவிட்டாலும், அதைப் பாராயணம் செய்வதனால் அன்பர்களுக்கு உறுதியான பாதுகாப்பு ஏற்படும். ஆகவே, அந்த நூலும் ஒரு வகையில் கவசம் என்றே கொள்ளத்தகும். இந்தப் கருத்தையும் அன்பர் கூறுகிறார்.

தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஒருவன் திருமுரு காற்றுப்படையைப் பாராயணம் செய்தால், அவன் முன்னால் முருகப் பெருமான் எழுந்தருளி வந்து தரிசனம் தந்து, அவனுடைய மனக் கவலையைத் தீர்த்தருள்வான். அவன் மனத்தில் நினைத்த விருப்பங்களை எல்லாம் நிறைவேற்றுவான். இவ்வாறு அன்பர் பத்தாவது பாடலைப் பாடி முடிக்கிறார்.

நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தான்நினைத்த எல்லாம் தரும்.

(நக்கீரர் திருவாய் மலர்ந்தருளிய நல்ல திருமுருகாற்றுப் படையை ஒருவன் தன்னைப் பாதுகாக்கும் பொருட்டு

ஒவ்வொரு நாளும் பாராயணம் செய்து வந்தால், அவனுக்கு முன்னால் அழகையுடைய, பெருமை மிக்க முருகன் எழுந்தருளி வந்து அவனுடைய மனக் கவலையைத் தீர்த்தருளி, அவன் நினைத்த எல்லாவற்றையும் வழங்குவான்.

'நன் முருகாற்றுப்படையை' என்றார், பிறவிப் பிணியைத் தீர்க்கும் தன்மையுடையதாதலால். "கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅர் எனின்" என்னும் குறளில் நற்றாள் என்பதற்கு, 'பிறவிப் பிணியைத் தீர்க்கும் திருவடி' என்று பரிமேலழகர் உரை விரித்தார். அந்த நன்மையையே இங்கும் கொள்ள வேண்டும். தற்கோல - தன்னைக் காப்பாற்றிக் கொள்ள. முன் - பாராயணம் செய்பவனுக்கு முன்னாலே. கோலம் - அழகு. தான் என்றது பாராயணம் செய்பவனை. இடரை நீக்கி இன்பத்தைத் தருவான் என்றபடி.)

எனவே திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்பவர்களுக்கு முருகப் பெருமானுடைய திவ்யதரிசனமும், இடர் நீக்கமும், நினைத்த விருப்பங்கள் கைகூடுவதும் கிடைக்கும் என்பதை இந்தப் பாடல் தெரிவிக்கின்றது.

திருமுருகாற்றுப்படை சங்க நூல் வரிசையுள் ஒன்றாகிய பத்துப்பாட்டில் முதலில் நிற்பது. அதனோடு சைவத்திருமுறைகளில் ஒன்றாகிய பதினோராம் திருமுறையில் தொகுக்கப் பெற்ற நூல்களில் ஒன்றாகவும் விளங்கு கிறது; பன்னிருவர் பாடிய நாற்பத்தொரு நூல்களைக் கொண்ட அத் தொகுதியில் 18-ஆவது நூலாகக் கோக்கப் பெற்றுள்ளது. நக்கீரர் பாடியனவாகப் பதினோராந் திருமுறையில் பத்து நூல்கள் உள்ளன. அவற்றில் ஒன்பதாவதாக இருப்பது இது. மற்ற ஒன்பது நூல்களும் சங்க காலத்தில் எழுந்தனவா என்பதில் ஆராய்ச்சியாளர்களுக்குள் கருத்து வேறுபாடு உண்டு. ஆனால் திருமுருகாற்றுப்படை நக்கீரர் திருவாக்கு என்பதை யாரும் ஐயுறுவதில்லை. சைவத் திருமுறைகளில்

சேர்க்கப் பெற்ற நூல்களுள் மிகவும் பழமையாக உள்ளது திருமுருகாற்றுப்படையே என்று உறுதியாகச் சொல்லலாம்.

சங்க நூல்களுக்கும் சைவ நூல்களுக்கும் இணைப்புப் பாலம் போல விளங்கும் இந்தத் தெய்விக நூல் என்றும் மங்கலமாய் ஒளிர்கிறது. சங்க நூல்கள் இடையில் சில காலம் வழக்கு ஒழிந்து மறைந்து நின்றன. தமிழ்ப் பெரும் புலவராகிய மகா மகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் அவதாரம் செய்து அந்த நூல்களை வெளிக் கொணர்ந்தனர். அதன் பிறகு தமிழ்நாடு முழுவதும் அவை பரவலாயின. அவர்கள் காலத்துக்கு முன் சில காலம் சங்க நூல்கள் ஒளி மழுங்கி யிருந்தன. ஒரே ஒரு நூல் மட்டும் மற்ற நூல்களைப் போல மங்காமல் ஒளிர்ந்தது. அதுவே திருமுருகாற்றுப் படை. சைவத் திருமுறைகளில் கோக்கப் பெற்றிருந்தமை அதற்கு ஒரு காரணம். மிகப் பழங்காலந்தொட்டே இது பாராயண நூலாக இருந்தது மற்றொரு காரணம். வேதங்கள் வாய்மொழி யாகவே வந்து நிலவுவது போலத் திருமுருகாற்றுப்படையும் பாராயண நூலாக இருந்தமையால் எந்தக் காலத்தும் மறைவின்றி மங்கலின்றி வழங்கி வந்தது. இதற்குப் பலர் உரை எழுதினர்.

அப்படிப் பாராயணம் செய்பவர்களுக்கு நூல் முடிந்தவுடன் முருகனை நேரே துதித்துப் பாடவும், பயன் இன்னதென்று நினைத்துக் கொள்ளவும் பத்து வெண் பாக்களை யாரோ அன்பர் பாடி வைத்தார். அவை தெளிவான நடையில் பக்தியை எழுப்பும் வகையில் அமைந்தமையால் திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்பவர்கள் அவற்றையும் சேர்த்துக் கூறலானார்கள். இந்த வகையில் அந்த வெண்பாக்களும் திருமுருகாற்றுப்படையோடு ஒட்டிக் கொண்டன.

—நிறைந்தது —

# அருஞ்சொற் பொருள்

அகம் - இடம்
அகலம் - மார்பு
அகவ - முழங்க
அசைதல் - தங்குதல்
அஞ்சல் - அஞ்சுதல்
அஞ்சிறை - அகத்திலே உள்ள சிறகு
அஞ்சுவரு - அச்சத்தை உண்டாக்கும்
அட்டி - வைத்து
அடுக்கம் - மலைப்பக்கம்
அடுதல் - கொல்லுதல்
அணங்கு - வருத்தம்
அணி - அலங்காரம், அழகு
அணைத்த - கூட்டிக் கட்டிய
அதாஅன்று - அதுமட்டும் அன்று
அந்தரம் - ஆகாயம்
அப்பி - பூசி
அம் - அழகிய
அமர் - போர்
அமர்ந்து - இருந்து, பொருந்தி, விரும்பி
அமர்ந்தது - விரும்பியது
அமரர் - தேவர்
அமை - மூங்கில்
அமைவர - பொருந்த
அயர் - நடத்தும், செய்யும்
அயர - ஆட
அரமகளிர் - தெய்வப் பெண்கள்
அரி - வண்டு
அரை - அடிமரம்
அல்குல் - பெண்களின் இரகசிய உறுப்பு
அலங்கு - அசையும்
அலந்தோர் - வருந்துவோர்
அலர் - பரந்த
அலைக்கும் - மோதும்
அலைவாய் - திருச்செந்தூர்
அவிர் - ஒளிவீசும்
அவிர்தல் - விளங்குதல்
அவுணர் - அசுரர்
அழல் - நெருப்பு
அளவை - அளவு
அளிக்கும் - வழங்கும்
அளியன் - இரங்கத் தக்கவன்
அளை - குகை
அளைஇ - சொல்லி
அறன் - தருமம்
அறிவல் - அறிவேன்
அறுநான்கிரட்டி - நாற்பத் தெட்டு
அறுவர் - கார்த்திகை மாதர்
அன்ன - ஒத்த
ஆகம் - மார்பு
ஆங்கு - அங்கே, போல, அவ்வாறு
ஆசினி - வேர்ப்பலா
ஆடு களம் - வெறியாடும் இடம்
ஆடை - உடை
ஆண்டு - அவ்விடம்
ஆமா - காட்டுப் பசு
ஆய்ந்த - ஆராய்ந்த
ஆர்த்தன்ன - ஒலித்தாற் போன்ற
ஆர்த்தும் - நிரம்பத்தரும், நுகரச் செய்யும்
ஆர்வலர் - மிக்க அன்புடையவர்
ஆரம் - சந்தனமரம், மாலை
ஆல் - ஆலமரம்
ஆல்கெழு கடவுள் - தட்சிணா மூர்த்தி
ஆற்றுப்படுத்த - வரும்படி செய்த
ஆறு - வழி
ஆறெழுத்து - ஷடக்ஷரம்
ஆனாது - நில்லாமல்
இகந்து - கடந்து
இகல் - பகை, மாறுபாடு
இசை - ஒலி, புகழ்
இசைப்ப - ஒலிப்ப
இடித்தன்ன - இடித்தாற் போன்ற

இடுபு - இட்டு, வைத்து
இடும்பை - துன்பம்
இடை - நடு
இணர் - பூங்கொத்து
இணை - ஒத்திருக்கும்
இணைத்த - இரட்டையாகக் கட்டிய
இணைப்பு - கட்டுதல்
இமிழ் - ஒலிக்கும்
இமைக்கும் - விளங்கும்
இமைப்ப - மின்ன
இமைப்பு - விளங்குவது
இயக்கி - ஒலித்து
இயங்கும் - அசையும்
இயல்பு - இலக்கணம்
இயல - ஏற்றபடி
இயலுதல் - புரளுதல்
இயவுள் - கடவுள்
இயன்ற - அமைந்த
இரட்டி - இரண்டு பங்கு
இரட்டும் - மாறி மாறி ஒலிக்கும்
இரவலன் - யாசகன்
இரிய - ஓடிப்போக
இரீஇ - வைத்து
இரு - கரிய
இருபிறப்பாளர் - அந்தணர்
இருமூன்று - ஆறு
இழிதரும் - இறங்கி வருகின்ற
இழுமென் - இடைவிடாது தொடர்ந்து வரும்
இழை - அணிகலம்
இறால் - தேன்கூடு
இன்று - இல்லாமல்
இன்னே - இப்போதே
இனி - இப்பொழுது
இனிய - இனிமையான வார்த்தைகள்
ஈசன் - சிவபெருமான்
ஈர் - நெய்ப்பு
உக்கம் - இடை
உகிர் - நகம்
உச்சி - தலை
உட்க - அஞ்ச
உடன் - ஒருங்கே
உடீஇ - உடுத்து
உடுக்கை - உடை
உடை - ஆடை, உடைக்கின்ற, உடைய
உத்தி - தலைக்கலன்
உயர்த்த - உயர்த்திய
உயரிய - தூக்கிய
உயிர்க்கும் - மூச்சுவிடும்
உரம் - வலிமை
உரிஞ்சிய - அரைத்த
உரியன் - உடையவன்
உரிவை - தோல்
உரு - அச்சம், அழகு, உருவம், நிறம்
உரும் - இடி
உருவம் - நிறம்
உரை - உரைத்த பொடி
உலறிய - உலர்ந்த
உவந்து - மகிழ்ந்து
உவப்ப - மகிழ
உழி - இடம்
உள்ளி - நினைந்து
உளர்ப்பு - வலிய மலர்த்துதல்
உளர - மீட்ட
உளியம் - கரடி
உளை - தங்கி இருப்பாய், பஞ்சு போன்றதும்
உற - பொருந்த
உறழ் - ஒத்த
உறுநர் - வந்து அடைபவர்
உறை - தங்கு, துளி
உறைதல் - தங்குதல்
உறையும் - தங்கும்
ஊழி - ஆயுள்
ஊன் - தசை
எஞ்சிய - மிஞ்சி நின்ற
எடுத்த - மேலே கட்டிய
எடுத்து - தூக்கிக் காட்டி

எய்திய - அமைந்த
எய்யா - அறிய முடியாத
எயிறு - பல்
எருத்தம் - கழுத்து
எல் - கதிரவன்
எழுந்தன்ன - எழுந்தாற் போன்ற
எறிதல் - ஆயுதத்தை வீசி அழித்தல்
எறிந்தாய் - வீசி அழித்தவனே
என்பு - எலும்பு
ஏத்தி - வாழ்த்தி
ஏந்து - உயர்ந்த
ஏம் - ஏமம்; இன்பம்
ஏர்பு - எழுந்து
ஏரகம் - சுவாமிமலை
ஏறு - ஆண்சிங்கம், காளை
ஐது - மெல்லியது
ஐயர் - முனிவர்
ஐயவி - வெள்ளைக் கடுகு
ஐவர் - ஐம்பூதத் தலைவர்
ஒடுங்கிய - மறைந்த
ஒரு - ஒப்பற்ற
ஒருகைமுகன் - கணபதி
ஒருவன் - ஒப்பற்றவன்
ஒள் - ஒளியோடு கூடிய, நல்ல
ஒழுகல் - செய்து வருதல்
ஒன்பதிற்றிரட்டி - பதினெட்டு
ஓடை - நெற்றிப்பட்டம்
ஓதி - கூந்தல்
ஓம்புமதி - விட்டுவிடு
ஓர்க்கும் - நினைக்கும்
ஓவு - இடையிலே நிற்றல்
கச்சு - இடையிற் கட்டுவது
கடந்த - நீக்கிய
கடவிய - கடமைப்பட்ட
கடு - நஞ்சு
கடுக்கும் - ஒக்கும்
கடுநடை - வேகமாகிய நடை
கடுப்ப - ஒப்ப
கண்டா அங்கு - பார்த்தது போல
கண்டுழி - கண்ட இடத்தில்
கண்ணி - தலையிலணியும் அடையாளச் சிறுமாலை
கணம் - கூட்டம்
கணவீரம் - அலரி
கணை - திரட்சி
கதிர் - ஒளி, கிரணம்
கதுப்பு - கூந்தல்
கந்து - ஆதீண்டு குற்றி, கட்டுத் தறி
கம - நிறைவு
கமஞ்சூல் - நிறைந்த கருப்பம்
கமழ்தல் - மணம் வீசுதல்
கருவு - கோபித்தல்
கல் - பாறை, மலை
கலாவ - கலக்க
கலை - ஆண் குரங்கு
கவிழ் - கீழ்நோக்கிய
கவின் - அழகு
கவின்று - அழகு பெற்று
கவைஇ - சூழ்ந்து
கவைஇய - சூழ்ந்த
கழல் - வீரகண்டை
கழல்கண் - கழல்வதைப் போன்ற கண்
கழி - மிக்க
கழிப்பிய - கழித்த
கள் - தேன்
களம் - இடம், போர்க்களம்
களன் - இடம்
களிறு - ஆண்யானை
கறங்க - முழங்க
கறி - மிளகு
கா - சோலை
காசு - மணி
காட்சி - அறிவு, தோற்றம்
காண்தக - காணும்படி
காண்வர - காண
காதல் - விருப்பம்
காந்தள் - ஒருவகைப் பூ
காமரு - அழகிய

கார் - மேகம்
கார்கோள் - கடல்
கால் - அடிமரம், காம்பு, காற்று, தடவை
காழ் - வடம், வயிரம்
காழகம் - உடை
கானம் - காடு
கானவர் - வேடர்
கிழவன் - உரிமை உடையவன்
கிழவோள் - உரியவன்
கிள்ளுபு - கிள்ளி
கிளர் - மிக்க, எடுத்துக்காட்டும்
கிளர்ந்தன்ன - எழுந்தாற் போன்ற
கிளர - தோன்ற
கிளை - சுற்றத்தார், பக்கத்தில்
கீண்டு - பிளந்து
குடந்தம்பட்டு - கும்பிட்டு
குடவயின் - மேற்குத் திசையில்
குடாவடி - வளைந்த கால்
குண்டு - ஆழம்
குரிசில் - உபகாரி, தலைவன்
குருதி - இரத்தம்
குரூஉ - நிறம்
குரை - முழங்கும்
குல்லை - கஞ்சா
குலை - கொத்து
குழை - காதணி
குளவி - காட்டு மல்லிகை
குளன் - குளம்
குளித்த - மூழ்கிய
குளிர்ப்ப - குளிர்ச்சியடைய
குறடு - கட்டை
குறிஞ்சி - குறிஞ்சி நிலம், குறிஞ்சிப் பண்
குறித்த - சொல்லிய
குறித்தது - எண்ணியது
குறித்து - உணர்ந்து
குறும்பொறி - உதரபந்தனம்
குறை - வேண்டும் காரியம்
குன்று - திருப்பரங்குன்றம்
கூகை - கோட்டான்
கூடல் - மதுரை
கூதாளம் - ஒருவகை மலர்
கூப்பி - குவித்து
கூளியர் - ஏவலர்
கூற்றம் - இயமன்
கெழு - பொருந்திய
கேழ் - நிறம்
கேழல் - காட்டுப்பன்றி
கேள்வி - உபதேசம்
கைவிடா - கைவிடாமல்
கொட்டி - பூசி
கொட்பு - சுழற்சி
கொடு - வளைந்த
கொடுத்தன்று - கொடுத்தது
கொண்மார் - கொள்ளும் பொருட்டு
கொல்நவில் - கொலைத் தொழில் பயின்ற
கொலைஇய - கொலைபுரியும்
கொழியா - அரித்து
கொள்கை - கற்பு, சங்கற்பம், விரதம்
கொற்றம் - வெற்றி
கோடு - ஊது கொம்பு, தந்தம், விலங்கின் கொம்பு
கோதை - மாலை
கோபம் - இந்திரகோபப் பூச்சி
கோமான் - தலைவன்
கோல - பாதுகாக்க
கோலம் - அழகு
சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடும் இடம்
சந்தி - தெருக்கள் கூடும் இடம்
சமம் - போர்
சமர் - போர்
சாந்து - சந்தனம்
சாய் - சிலாம்பு
சாயல் - மென்மை
சால் - அமைந்த
சாற்றினால் - பாராயணம் செய்தால்

சாறு - விழா
சான்ற - அமைந்த
சிதறி - தூவி
சிமயம் - சிகரம்
சிலம்ப - எதிரொலிக்க
சிலம்பகம் - மலைப்பக்கம்
சிலம்பு - மலைச்சாரல்
சிலைப்ப - முழங்க
சிறுகுடி - குறிஞ்சி நிலத்து ஊர்
சினை - கிளை
சீர் - அழகு, புகழ்
சீரை - மரவுரி
சீறடி - சிறிய அடி
சீறிதழ் - சிறிய இதழ்
சுட்டி - கருதி
சுட்டிய - குறித்த
சுடர் - ஒளி, விளக்கு
சுரும்பு - வண்டு
சுளை - பலாச்சுளை
சூர் - அச்சம், சூரபத்மன்
சூர்த்த - அச்சத்தைத் தரும்
சூரரமகளிர் - தெய்வப் பெண்கள்
சூல் - கருப்பம்
செச்சை - வெட்சி
செந்தி - திருச்செந்தூர்
செய்யன் - சிவந்த நிறம் உடையவன்
செய்வினை - வேலைப்பாடு
செய்யு - செய்தல்
செயலை - அசோகு
செயிர் - குற்றம்
செரீஇ - செருகி
செரு - போர்
செல் - இடி
செலல் - செல்லுதல்
செலவினர் - நடையை உடையவர்
செலவு - நடை
செவ்வேள் - முருகன்
செற்றம் - ஹிம்சை
செறிய - அடங்க
செறுநர் - போர் புரிவார், பகைவர்
சென்னி - தலை
சென்னியன் - தலையை உடையவன்
சேஎய் - முருகன்
சேண் - வானம், மலையுச்சி, நெடுந்தூரம்
சேர்பு - சேர்ந்து
சேவடி - சிவந்த திருவடி
சேறல் - செல்லுதல்
சொல்மலை - சொற்களின் தொகுதியாக இருப்பவன்
ஞரல - ஒலிக்க
ஞாண் - நூல்
ஞாயிறு - சூரியன்
ஞாலம் - உலகம்
தகடு - புற இதழ்
தகர் - ஆடு
தகை - மாலை
தட - விசாலமான
தடக்கை - வளைந்த கை, விசாலமான கை
தடிந்த - அழித்த, கொன்ற
தடிதல் - அழித்தல்
தண் - குளிர்ந்த
தண்டை - கால் அணி
தத்துற்று - குதித்து
தலை - முதல்
தலைஇய - பெய்த
தலைக்கொண்ட - தன்னிடத்திற் கொண்ட
தலைத்தந்து - முதற்கைகொடுத்து
தழீஇ - தழுவி
தழை - தழை ஆடை
தற்கோல - தன்னைக் காப்பாற்றிக் கொள்ள
தனி - ஒப்பற்ற
தா - கேடு
தாங்கிய - பாதுகாத்த
தாங்கும் - பாதுகாக்கும்

தாது - மகரந்தப்பொடி
தார் - மாலை
தாரை - நீட்சி
தாழ் - கீழே தொங்கிய
தாழ்ந்த - தொங்கிய
தாழ்பு - தங்கி
தாழை - தென்னை
தாள் - காம்பு, கால், தண்டு
தானை - சேனை
திங்கள் - சந்திரன்
திசை - பகுதி
திண் - உறுதியான
திணி - செறிந்த
திதலை - தேமல்
திரு - இலக்குமி, செல்வம்
திருந்து - திருத்தமான
திலகம் - நெற்றிப் பொட்டு
திவவு - நரம்புக் கட்டு
திளைப்ப - அசைய
திறல் - வலிமை
தீது - குற்றம்
துகள் - குற்றம்
துகில் - மெல்லிய ஆடை
துஞ்சி - உறங்கி
துணங்கை - கைகோத்து ஆடும் கூத்து
துணர் - கொத்து
துணை - ஒத்தல்
துணையற - அளவு ஒக்க
துணையோர் - தோழிமார்
துமிய - முறிய
துயல்வர - அசைய
துயல்வரும் - அசையும்
துருத்தி - ஆற்றின் இடையிலுள்ள தீவு
துவர - முற்றும்
துனி - வெறுப்பு
தூ - தூய
தூஉய் - தூவி
தூங்க - ஆட, தொங்க
தூம்பு - தொளை
தெய்வ உத்தி - சீதேவி என்னும் தலைக்கலன்
தெய்வம் - தெய்வத்தன்மை; அருள்
தெறியா - தெறித்து
தேக்கள் - தேனாலாகிய கள்
தேம் - வாசனை
தேய்த்த - இல்லையாக்கிய
தேய்த்து - அழித்து
தேய்வை - அரைத்த சந்தனம்
தேறல் - தெளிவு
தைஇய - அணிந்த, அமைத்த, அலங்கரித்த
தொகுதி - கூட்டம்
தொட்ட - வீசிய
தொட்டு - தோண்டி
தொடி - தோள்வளை, வளை
தொடுத்த - வைத்த
தொண்டகம் - குறிஞ்சி நிலத்துப் பறை
தொல்குடி - பழைய கோத்திரம்
தொழூஉ - தொழுது
தோய் - அளாவிய
தோன்றலர் - தோற்றத்தை உடையவர்
நகர் - கோயில், நகரம்
நகை - ஒளி, இன்பம்
நசை - விருப்பம்
நசையுநர் - விரும்பி வந்தவர்
நம்பகிலேன் - நம்பமாட்டேன்
நயந்து - விரும்பி
நயன் - அன்பு
நரம்பு - யாழ் நரம்பு
நரை - வெண்மை
நல்குமதி - கொடுப்பான்
நலம் - அழகு
நவில் - சொல்லும்
நவின்ற - பயின்ற
நவின்று - பயின்று
நளி - செறிந்த
நறு - மணமுள்ள
நறை - வாசனை

நறைக்காய் - சாதிக்காய்
நன்னர் - நன்மை
நனி - நன்றாக
நாகம் - சுரபுன்னை
நாட்டம் - கண்
நாவல் - நாவல் மரம்
நாற்றி - தொங்கவிட்டு
நான்முகன் - பிரமன்
நிணம் - தசை
நியமம் - கடைவீதி
நிரைத்த - வரிசையாகக் கோத்த
நிலை - இடம், உருவம், பதவி
நிலைஇய - நிலைத்த, நிலைபெற்ற
நிவந்த - உயர்ந்த
நிவப்பு - உயரம்
நிறீஇ - நட்டு
நிறுத்து - வாசிக்கச் செய்து
நீடு - உயர்ந்த
நீல் - நீலம்
நுசுப்பு - இடை
நுடங்கி - அசைந்து
நுண் - நுட்பமான
நுதல் - நெற்றி, மத்தகம்
நுதி - நுனி
நூல் - இலக்கணம், புத்தகம்
நூற்றுப்பத்து - ஆயிரம்
நெடு - உயரமான
நெடுமை - உயரம்
நெடுவேள் - முருகன்
நேர்பு - பொருந்தி, பொருத்தி
நேர்வு - புரளுதல்
நோக்கு - பார்வை
நோன்றாள் - வலிய கால்
பகடு - பெருமை
பகல் - சூரியன், நாள்
பட - இறக்க, உண்டாக, தோன்ற, பொருந்த
படரும் - செல்லும்
படு - ஒலிக்கும், பிளந்த, விழும்
பண்பு - இயல்பு
பணிந்து - தாழ்ந்து
பணை - பெருமை, மூங்கில்
பதினொரு மூவர் - முப்பத்து மூன்று தேவர்
பயந்த - பெற்ற
பயில் - நெருங்கியுள்ள
பரம் - பாரம்
பரவி - துதித்து
பராரை - பருத்த அடிமரம்
பரிசிலர் - பரிசு வாங்குவதற்குரிய இரவலர்
பருதி - சூரிய மண்டலம்
பருமம் - மேகலை
பல்லியம் - இசைக் கருவிகள்
பலி - பூசைக்குரிய பண்டம்
பனி - குளிர்ச்சி, பனிக்கட்டி
பனிப்ப - நடுங்க.
பார் - பாறை, பூமி
பால் - பகுதி
பாவை - பொம்மை
பிடி - பெண்யானை
பிண்டி - அசோக மரம்
பிணர் - சுரசுரப்பு
பிணிமுகம் - முருகனுடைய யானை
பிணை - மான்
பிணையல் - மாலை
பிரப்பு - கூடை நிறைய வைக்கும் தானியம்
பிறழ் - ஒன்றுக் கொன்று மாறுபாடான, கோணலான
பின்னை - பிறகு
புகர் - குற்றம்
புகன்று - அறைகூவி
புகை - தூபம்
புட்டில் - தக்கோலக் காய்
புடைக்கும் - அடிக்கும்
புரி - செய்யும், முறுக்கிய சரடு
புரையுநர் - ஒப்பவர்

புரையும் - ஒக்கும்
புலம் - இடம்
புலம்ப - தனியாக நிற்க
புலமையோய் - ஞான முடையவனே
புலரா - உலராத
புலவன் - அறிவுடையவன், தேவன்
புள் - பறவை
புறம் - மேல்பக்கம்
புன்மை - பொலிவின்மை
புன்தலை - சிவந்த தலை
புனைந்து - அலங்கரித்து
பூ - பொலிவு
பூட்கை - வலிமை
பூண் - ஆபரணம்
பூத்தன்ன - தோன்றினாற் போன்ற
பூந்துகில் - பூவேலை செய்த ஆடை
பெடை - பெண்பறவை
பெயர் - செல்வம்
பெயரா - வீசி
பெயரிய - பெயர்பெற்ற
பெயல் - பெய்யும் மழை
பெரிதும் - நீண்ட காலம்
பெரீஇயர் - பெற்றவர்
பெறலரும் பரிசில் - பெறுவதற்கரிய பரிசு
பெறுதி - பெறுவாய்
பேராளன் - பெரியவன்
பேழ் - ஆழமான
பைங்கொடி - பச்சிலைக் கொடி
பொதி - சேர்த்து வைக்கும்
பொதியில் - பலரும் கூடும் சபை
பொதும்பு - குகை
பொதுளிய - செறிந்த
பொரு - முட்டும்
பொருத - மோதிய
பொருநர் - போர் செய்வார்
பொருநன் - உவமிக்கப் படுபவன், வீரன்
பொலம் - பொன்
பொற்ப - பொலிய
பொறி - பீலி, புள்ளி
போழ் - பிளக்கும்
மகரப் பகுவாய் - மகரவாய் என்னும் ஆபரணம்
மஞ்ஞை - மயில்
மடநடை - மெத்தென்ற நடை, மென்மையான நடை
மடம் - மென்மை
மடவரல் - மென்மையை உடையவள்
மண்டி - மேற்சென்று
மண்டு - மேல்செல்லும்
மண்ணி - அலங்காரம் செய்து
மண்ணுறுத்து - அலங்கரித்தமைத்து
மணி - இரத்தினம்
மத - வலிமை
மதவலி - மிக்கவலிமை
மதன் - அறியாமை, வலிமை
மதி - அறிவு, சந்திரன்
மந்தி - பெண் குரங்கு
மரபு - இலக்கணம், கடமை, முறை
மரபுளி - சம்பிரதாயத்தினின்றும்
மரன் - மரம்
மராஅத்து - கடம்ப மரத்தின்
மராஅம் - வெண்கடம்பு
மருங்கு - அளவு, இடை, குலம், பக்கம்
மருப்பு - கொம்பு
மருது - மருதமரம்
மழை - மேகம்
மள்ளன் - இளையவன், வீரன்
மறி - ஆடு
மறு - குற்றம்
மறுகு - வீதி
மறை - மந்திரம்
மன்றம் - மரத்தடியில் உள்ள மேடை
மன் உயிர் - நிலைபெற்ற உயிர்
மனன் - மனம்
மா - கரிய, பெரிய, மாமரம்
மாண்டலைக் கொடி - கோழிக் கொடி

மால் - பெருமை
மாலோன் - திருமால்
மாற்று - தடுத்தல்
மிசை - மேலே
மிலைந்த - அணிந்த
மின் - மின்னல்
மீ - மேலே
மீமிசை - மிக மேலே
மீன் - நட்சத்திரம்
முகந்தன்ன - முகந்தாற் போன்ற
முகன் - முகம்
முகிழ் - அரும்பு
முகை - அரும்பு
முச்சி - உச்சிக்கொண்டை
முசு - குரங்கு
முடி - கேசம்
முடிமார் - முடிப்பவர்
முடை - நாற்றம்
முத்தீ - மூன்று வேள்வித் தீ
முதல் - அடிமரம், தலைவன்
முது - அறிவு
முந்து - முன்னாலே
முரண் - மாறுபாடு
முரணினர் - தெய்வமில்லை என்பவர்
முருக்கி - போக்கி
முருகியம் - முருகனுக்குகந்த வாத்தியங்கள்
முருகு - முருகன்
முழவு - மிருதங்கம்
முழு - முற்றிய
முழுமுல் - அடிமரம், முழுமையான மரம்
முற்றிய - முடித்த
முறி - தளிர்
முன்னி - எண்ணி
முன்னிய - நினைத்த
முன்னீ - கடல்
மூசா - மொய்க்காத
மெய் - உண்மை
மேவர - முன்னாலே வர
மேவலர் - உடையவர்
மேவரு - விரும்பிச் செல்லும்
மேனி - உடம்பின் நிறம்
மைந்தர் - வலிமையை உடையவர்
மொய்ம்பு - பலம்,மார்பு
மோடு - வயிறு
யாக்கை - உடம்பு
யாண்டு - வருடம்
யாத்து - கட்டி
யாவதும் - சிறிதும்
யாழ் - வீணை
யாறு - நதி
யூகம் - கருங்குரங்கு
வகை - கூறுபாடு
வசிந்து - வசியம் செய்து
வடு - தழும்பு
வண்புகழ் - கொடையால் வந்த புகழ்
வணங்கு - வளைந்த
வதுவை - மணமாலை
வந்தனென் - வந்தேன்
வய - வலிமை
வயிர் - ஊது கொம்பு
வயின் - பக்கம்
வரம்பு - எல்லை
வரி - கோடு
வரிப்புனைபந்து - வரிந்து புனையப்பட்ட பந்து
வரை - மலை, மூங்கில்
வலம் - வெற்றி
வலம்புரி - தலைக்கலன்களில் ஒன்று, வலத்தே சுழித்த சங்கு
வலவயின் - வலப்பக்கம்
வலன் - வலம்
வலி - வலிமை
வழாஅ - தவறாத
வழாஅது - தவறாமல்
வழிபட - வணங்க
வள் - பெரிய, வளமான

வளி - காற்று
வளை - சங்கு
வளைஇ - வளையச் சுற்றி
வளைஇய - வளைந்த
வனப்பு - அழகு
வாங்கிய - வளைந்த
வாங்கு - உள்வளைந்து
வாய் - பொருந்திய
வாயவிழ்ந்த - மலர்ந்த
வாரணம் - கோழி
வாரி - கடல்
வால் - வெண்மையான
வாழ்வு - வாழ்பவன்
வாள் - ஒளி, கத்தி
வானோர் - தேவர்
விசும்பு - வானம்
விடர் - பிளப்பு
விடுபு - விட்டு
விடை - ஆட்டுக்கிடாய்
விண் - ஆகாயம்
வியல் - அகலம்
விரிந்தன்று - விரிந்தது
விரை - நறுமணம்
விரைஇ - கலந்து
விரைஇய - கலந்து
விரைசெலல் - விரைந்து செல்லுதல்
விளிவு - அழிவு
விழவு - உற்சவம்
விழு - மேலான
விழுமிய - மேலான
விறல் - வெற்றி
வினை - செயல், பாவம்
வீறு - வேறான சிறப்பு
வெட்சி - ஒரு பூ; விருட்சி என்று இப்போது வழங்கும்; சிவந்த நிறம்உடையது.
வெரீஇ - அஞ்சி
வெருவர - அஞ்ச
வெளிறு - மரத்தின் உட்சோறு
வெற்பு - மலை
வெறி - வெறியாட்டு
வெறுக்கை - செல்வம்
வெள்ளில் - விளாமரம்
வென்று அடு - வஞ்சியாமல் எதிர் நின்று கொல்லும்
வேங்கை - ஒரு மரம்
வேட்டன்று - வேள்வி செய்தது
வேண்டியாங்கு - வேண்டியபடி
வேண்டுநர் - வேண்டிக் கொள்வோர்
வேய் - மூடிய
வேலன் - பூசாரி
வேழம் - யானை
வேள் - முருகன்
வேள்வி - யாகம்
வை - கூர்மை
வைகறை - விடியற்காலை
வைப்பு - இடம்



கி.வா.ஜ. அவர்களுக்கு சிறு வயதிலேயே தமிழ் இலக்கியங்கள் மீது பற்று ஏற்பட்டது. டாக்டர் உ.வே. சுவாமிநாதையர் அவர்களுடைய தலை மாணாக்கராக இருந்து தமிழ் பயின்று, அவர்களது அருந்தமிழ் பணிக்கும் துணை நின்று, 'கலைமகள்' மாதப் பத்திரிகையின் ஆசிரியராக ஐம்பதாண்டுகளுக்கு மேல் பணி யாற்றியுள்ளார்.

தமிழ் ஆராய்ச்சி, இலக்கியம், பக்தி இலக்கியங்கள், கவிதைகள், நாடோடிப் பாடல் கள், பழமொழிகள் என இவரே எழுதியும், தொகுத்தும் அளித்துள்ள நூல்கள் இருநூற்றுக் கும் மேற்பட்டனவாகும்.

குறிப்பாக, இலக்கணத்துக்கு விளக்கம் தருவதில் வல்லவர். சிலேடையாய்ப் பேசுவதில் இவருக்கு நிகர் இவரே.

எந்த இலக்கிய நூலிலே சந்தேகம் ஏற்படினும் உடனடியாக விளக்கம் கி.வா.ஜ. அவர்களிடமிருந்து கிடைக்கும் என்பதைத் தமிழ் அறிஞர்கள் பலரும் அறிவர்.

இவர், பல காலமாக உள்ள ஐயங்களைப் போக்குகின்ற வகையில், 'கலைமகள்' மாத இதழில் பதிலளித்து வந்தார். இவை என்றென்றும் நமக்குப் பயன் விளைக்கக் கூடும்.